# விநாயக புராண வசனம்

ஸ்ரீ ராம ஜயம்
வைகாசி மீ 29உ
ஆனந்த வரு

சு. அ. இராமசாமிப் புலவர்

கழக வெளியீடு : கஉசசு

# விநாயக புராண வசனம்



ஆசிரியர் :

கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1973

சுப்பிரமணிய அருட்டிரு சதாசிவ இராமசாமிப் புலவர் (1907)

 1973 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

*Branches* :

Tirunelveli-6 Madurai-1 Coimbatore-1
Kumbakonam

Ed I Dec 1965
Reprint: Nov 1973

Q24:25
N73

VINAYAKA PURANA VASANAM

Thiruvaranganar Achakam, Madras-13. (I/2)

# முன்னுரை

பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிடியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மற்சமம், காருடம், பிரமாண்டம் என்னும் பதினெண் புராணங்களையும் அவற்றிற் கூறப்பட்டுள்ள நாலிலக்கத் தெண்ணூயிரங் கிரந்தங்களோடு முன்காலத்தில் நந்திதேவர் சிவபெருமானிடத்திலிருந்து அறிந்தார். அதனை அவர் சனற்குமார முனிவருக்குக் கூறினர். சனற்குமார முனிவர் வியாசருக்கு விளம்பினர். வியாசர் அதனை உலகெங்கும் பரப்பினர். வேறு பல முனிவர்கள் முற்கூறிய பெரும் புராணங்களின் சிறு பிரிவுகளாகச் சனற்குமார புராணம், நாரசிங்க புராணம், நந்தி புராணம், சிவதரும புராணம், துருவாச புராணம், நாரதீய புராணம், கபில புராணம், அவுசன புராணம், சௌமிய புராணம், வாருண புராணம், காளிக புராணம், வாசிட்டம், இலிங்க புராணம், மானவ புராணம், சௌர புராணம், பராசரீய புராணம், மாரீச புராணம், சாம்பேச புராணம், பார்க்கவ புராணம் என்னும் பதினெண் புராணங்களைச் செய்தார்கள்.

இப்புராணங்களெல்லாம் வடமொழியில் இலக்கஞ் சுலோகங்களாக விருக்கின்றன. இவற்றுள் பார்க்கவ புராணம் என்பது மிகச் சிறந்ததாகும். இப்புராணத்தில் ஆனைமுகக் கடவுளுடைய பெருமை மிகவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது இதனைப் பார்க்கவ புராணம் எனவுங் கூறுவார்கள். இவ்விநாயக புராணத்தை முன்னுளில் நான்முகன் சிவபெருமானிடத்தில் கேட்டு வியாசருக்குக் கூறினுன். வியாசமுனிவர் அதனைப் பிருகு முனிவருக்குக் கூறினர். பிருகு முனிவர் இப்புராணம் எல்லாருக்கும் பயன்படவேண்டும் என்னும் நோக்கத்தோடு உபாசன காண்டமென்றும் இலீலா காண்டமென்றும் இரண்டு காண்டங்களாக அமைத்து அவ்விரண்டையும் இருநூற்

றைம்பது பிரிவுகளாக்கிப் பன்னிரண்டாயிரஞ் சுலோகங்களால் ஒரு புராணமாக முடித்தார். அப்புராணம் பிருகு முனிவராற் செய்யப்பட்டமையின் அவருடைய பெயரைக் கொண்டே பார்க்கவ புராணம் என வழங்கப் பெறுகிறது. இது வடமொழித் திரிபால் அமைந்த பெயர்.

இப் தராணத்தில் தேவர்கள் முதலிய அளவற்ற பேர் ஆனைமுகக் கடவுளை அன்போடு வழிபடுகிறார்கள் அவ்வாறு வழிபடுகிறவர்கட்கு ஆனைமுகக் கடவுள் வெளிப்பட்டு அவர் கட்குப் பேரருளைப் புரிகின்றார். இந்நூல் முழுவதினும் ஆனைமுகக் கடவுளுடைய பெருமையே விரிவாகக் கூறப்படுகின்ற படியால் இப் புராணத்தை மிகுந்த அன்போடு படிப்பவர்கட்குங் கேட்பவர்கட்கும் அறம் முதலிய நான்கு பேறுகளும் எளிதில் உண்டாகின்றன.

முன் காலத்தில் பிருகு முனிவர் தம்மை யடுத்த சோம காந்தன் என்னும் அரசனுக்கு, நான்முகன் வேத வியாசருக்குக் கூறிய முறைப்படி உரைத்தருளினார். இதனை அவ்வரசன் அன்போடு கேட்ட பெருமையால் தன்னுடைய தீவினைகளெல்லாம் ஒழியப்பெற்று ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தை யடைந்து சிறப்புற்றான்.

வடமொழியில் இருந்த இப் புராணத்தினைத் திருவாவடுதுறை யாதீனத்தின்கண் எழுந்தருளியிருந்த கச்சியப்ப அடிகள் ஆறாயிரத்து இருநூற்று இருபத்தைந்து பாடல்களாகப் பாடியருளினார். கச்சியப்ப அடிகளாகிய இவர் கவிராட்சச கச்சியப்ப முனிவர் எனவுங் கூறப்பெறுவார். பாடல்கள் பெரும் பான்மையும் கடினமான போக்கில் அமைந்து புலமைத் திறம் அமைந்தார்கட்கு மட்டுமே விளங்கும் நிலையின.

இப்புராணத்தினை உரை நடையில் எழுதி அனைவருக்கும் பயன்படச் செய்ய விரும்பிய வைதிக சைவசித்தாந்த சண்ட மாருதம் சோமசுந்தர நாயகர் கச்சியப்ப அடிகளின் செய்யுளைத் தழுவியும் வடமொழிப் போக்கைப் பின்பற்றியும் "விநாயகப் பிரபாவ தீபிகை" என்னும் பெயரோடு எழுதி ஆங்கிலம்

1902ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினர். அஃது உபாசன காண்டம் ஒன்றற்கே காணப்படுகிறது இவ்வுரை நடையும் மிகக் கற்றோர்க்கேயன்றி மற்றையோர்க்குப் பயனின்று; பிற் காலத்திலும் சிலர் மேற்படி உரை நடையையுஞ் செய்யுளையும் ஒட்டியே உரைநடையெழுதி வெளியிட்டனர். இவையும் பொதுவாக மக்கட்குப் பயன்படக் கூடியனவல்ல. தற்கால மக்கள் மிக எளிமையாகவும் சுருக்கமாகவும் உள்ள நூல்களையே பெரிதும் விரும்பிப் பாராட்டிப் படித்துப் பயனடைகின்றமையின் அதற்கேற்ப இவ்வுரைநடை நூலை அமைத்துள்ளேன். எளிய நடையில் சுருக்கமாக எழுதியிருத்தலின் இந்நூலினை அனைவரும் விரும்பிப்படித்து விநாயக புராணப் பலனை யடைவார்களென் பதற்குச் சிறிதும் ஐயமின்று. சுருக்கமாக எழுதினும் சிறந்த கருத்துக்கள் நழுவாவண்ணம் விழிப்புடன் எழுதியுள்ளேன். என் உரைநடை நூல்களை விரும்பிப் படிப்போர் இதனையும் படித்து இன்புறுவார்களாக!

*பைந்தமிழ்ப்பண்ணை*
*கருப்பக்கிளர்*
*தஞ்சை மாவட்டம்*
*10-12-65*

**சு. அ. இராமசாமிப் புலவர்.**

## விநாயக புராண நூற்பயன்

நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலமாய்
நிரஞ்சனமாய் நினைவுக் கெட்டாச்
சத்தியமாய்த் தற்பரமாய்த் தத்துவமாய்ச்
சச்சிதா நந்த மாகி
அத்துவிதப் பொருளாகி யகண்டபரி
பூரணமாய் அமல ஞானம்
மெத்தியவுள் ளகத்தமர்ந்த விநாயகமான்
மியந்தவத்தோர் விரும்பிக் கேட்பார். (க)

விருத்திரனைக் கொன்றானு நான்முகனு
மதுவுயிரை வீட்டி னானும்
உருத்திரனும் வழிபடுமா றோங்குமொரு
தனிமுதலாய் உலகுக் கெல்லாம்
கருத்தனுமாய் விளையாடுங் கணபதிமான்
மியங்கணக்கில் பிறவி தோறும்
பொருத்தமுறத் தவம்புரியார் விரும்பினுமற்
றவர்செவியிற் புகாதோர் நாளும். (உ)

எவனுடைய ஆணையினால் பிரமனுக்குச்
சிருட்டியுமெவ் வுயிரும் வாழ
உவணமுயர்த் தவற்களிப்பு முருத்திரனுக்
குலகமெலா மொடுக்கும் வீறும்
பவனனுக்கு வீசுதலும் பாற்கரற்குச்
சரித்தலும்பன் னாளும் வைகும்
அவனுடைய மான்மியத்தை நாத்திகர்பா
தகர்முதலோ ரறிய மாட்டார். (௩)

மறையிடத்து மரியயனிந் திரனாதி
யமரர்மதி யிடத்துந் தோன்றா
துறையுமொரு பொருடன்னை வழிபடுவோர்
தமக்கருளா லுருவு கொண்டு
நிறையவரங் கொடுத்தசரித் திரமனைத்தும்
விளக்கிநிலை பேறு செய்த
குறைவறுமிப் புராணத்தைக் குறித்தவர்க்கு
நாற்பயனுங் கூடு மன்றே. (௪)

---

# உ ள் ளு றை

## முதலாவது உபாசனு காண்டம்

## இரண்டாவது லீலா காண்டம்



———

உ

திருச்சிற்றம்பலம்

# விநாயக புராண வசனம்

## காப்பு

திங்களணி சடைப்பெருமான் பூசை யாற்றித்
திரிமதிலுங் கடந்திடமுன் னின்முன் யாவன்
தங்குகடற் புவிவரைப்பில் நெடியோ னுதி
சகலருக்கும் ஊறுதவிர்க் கின்முன் யாவன்
அங்கவன்மெய்ச் சரிதமொழி பெயர்ப்ப வேண்டி
அவனடியே சரணுக அடுத்து ளேற்கு
மங்கலசின் மயமதுரத் தமிழ்ச்செம் பாடல்
வாரிமட மடையுடைத்து வளரு மன்றே.

## கடவுள் வாழ்த்து

### ஆனைமுகக் கடவுள்

அகரமென அறிவாகி உலகம் எங்கும்
அமர்ந்தகர உகரமக ரங்கள் தம்மால்
பகருமொரு முதலாகி வேறு மாகிப்
பலவேறு திருமேனி தரித்துக் கொண்டு
புகரில்பொருள் நான்கினையும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல் லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டு கொள்ளும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம். (க)

## சித்திபுத்தி

கருணைமதம் பொழிமுகத்துக் கணேசரவர்
　　தமக்கறிவுந் தொழிலு மான
அருளெனுமுண் மையையெவரும் அறியவவர்
　　உமையினவ தரித்த ஞான்றும்
ஒருமுனியோம் பியதழலின் அவதரித்த
　　ஞான்றும்உட னுகித் தோன்றித்
திருவுளத்தின் வழிநிற்கும் சித்திபுத்தி
　　எனுமிவர்தாள் சென்னி சேர்ப்பாம். (உ)

## பரசிவம்

பூமாது தனைமணந்த புயல்வண்ணப்
　　பெருமாளும் புலவர் போற்றும்
நாமாது தனைமணந்த நான்முகனும்
　　போர்மாதும் நயக்கும் எண்டோட்
கோமானுந் தானேயென் றுணர்த்துதற்கே
　　பிரணவகுஞ் சரமாய்த் தோன்றி
மாமாவின் முகத்தானை உயிர்த்தானை
　　வினைந்திறைஞ்சி வழுத்து வாமே. (௩)

தேரேறி வரும்பரிதி மண்டிலத்துஞ்
　　செழுமதிமண் டிலத்துஞ் சீர்கொண்
டேரேறி வருங்கனன்மண் டிலஞ்சத்தி
　　மண்டிலத்தும் எண்க ணுனும்
நீரேறி வருமரியு முருத்திரனு
　　மகேச்சுரனும் நிலவச் செய்து
காரேறி வருமவர்தம் உளத்தமரெண்
　　குணத்தானை நயந்து வாழ்வாம். (௪)

## சிற்சத்தி

சத்தியாய் விந்து வாய்மனோன் மணியாய்த்
தயங்கிய மகேசையாய் உமையாய்
வித்தில வடந்தாழ் முகிழ்முலைத் திருவாய்
நெடும்புகழ் வாணியாய் வேறும்
எத்திறம் இறைவன் நின்றனன் அவனுக்
கியைதர அத்திறம் நின்று
மெத்திய உயிரின் மலவிருள் கெடுத்து
விளங்குபூ ரணியையேத் தெடுப்பாம். (௬)

## கூத்தப்பிரான்

மூத்தமகன் இடத்தார்வம் ஈன்றெடுத்த
பிதாமகற்கு முதிரு மாற்றால்
பூத்தபொழில் சென்னைநகர்ப் புகுந்துபிர
சன்னமுகப் புத்தே ளன்பர்
ஏத்தெடுப்பப் பிரசன்ன மாயிருக்கும்
ஆலயத்துள் எய்தி மன்றுள்
கூத்தியற்றும் இளைப்பாறுஞ் சிதம்பரே
சுரர்மலர்த்தாள் குறித்து வாழ்வாம். (௬)

## சிவகாம சுந்தரி

சீதளசந் திரகலையும் தினகரன்வெம்
மையும்கனலிற் செறிந்த தேசும்
போதளவு நறுமணமும் போலிறைவன்
குணமான புனிதை வேறாய்க்
கோதளவும் உயிர்சிவத்தைக் காமுறவே
சிவகாமங் கொண்டு நின்ற
காதளவுங் கருந்தடங்கட் சிவகாம
சுந்தரியைக் கருத்துள் வைப்பாம். (எ)

## முருகக் கடவுள்

மரந்துளைத்த கணையானும் சோவெறிந்த
திறலானும் மதிக்குந் தோறும்
சிரந்துளக்க அலைகடலும் சேணிகந்த
பெருவரையுந் திறத்திற் குன்றக்
கரந்துளக்குங் குறுமுனிக்குங் கருத்தின்மயல்
பூட்டியகை தவஞ்சால் வெற்பின்
உரந்துளைத்த சேயிலைவேல் வலனுயர்த்த
இளையவனை உளத்துள் வைப்பாம். (அ)

## சென்னை மல்லீசுரர்

ஒன்றாகிப் பலவாகி உருவாகி
அருவாகி உபய மாகி
நன்றாகித் தீதாகி நான்மறைக்கும்
எட்டாத நலத்த தாகித்
தொன்றாகிப் புதிதாகிச் சுடராகி
இருளாகித் துகள்தீர்ந் தன்பர்
சென்றாடுஞ் சுவைக்கடலாம் சென்னைமல்லீ
சுரர்மலர்த்தாள் சேர்ந்து வாழ்வாம். (கூ)

## பிரமராம்பிகை

ஆரணனு நாரணனும் ஆரணத்துக்
கெட்டாத அரனும் என்னும்
காரணர்கள் மூவரையும் தரித்துயர்த்த
அடையாளங் காட்டு மாபோல்
சீரணவுந் திருவயிற்றின் மூவரைவார்ந்
தழகெறிக்குஞ் செல்வத் தாயைப்
பேரணவுஞ் சென்னைநகர் பிரமராம்
பிகைமயிலைப் பேசி வாழ்வாம். (க0)

# முதலாவது உபாசனா காண்டம்

## 1. சோமகாந்தன் வனம்புகத் துணிந்தது

### நூன்முகம்

நைமிசாரணியத்தில் முனிவர்கள் பலர் தவஞ் செய்து கொண்டிருந்தனர். சூதமகாமுனிவர் நைமிசாரணியத் திற்குச் சென்றார். தவஞ் செய்துகொண்டிருந்த முனிவர்கள் சூதமுனிவரை வணங்கித் தங்கட்கு நல்வினையை உண் டாக்குவதாகிய புராணங்களைப் புகன்றருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். அம் முனிவர்களுடைய வேண்டு கோளுக் கிணங்கிய சூதமுனிவர் அவர்கட்கு விநாயக புராணத்தை உரைக்கலானார்.

### சோமகாந்தன்

உலகிற் புகழ்பெற்று விளங்கும் சௌராட்டிரம் என்னும் நாட்டில் தேவநகரம் என்னும் பெயரையுடைய சிறந்த நகரம் ஒன்று உள்ளது. அந்நகரில் சோமகாந்தன் என்னும் பெயரையுடைய அரசன் ஒருவன் அரசியற்றிக் கொண்டிருந்தான். அவ்வரசன் பகைவர்களை வென்று புறங்காண்பவன். உயிர்களிடத்திற் கொள்ளும் அருட் பெருக்கில் கடலைப் போன்றவன். நல்லறிவில் தேவ குருவாகிய பிரகற்பதியை வென்றவன். பொறுமையில் நிலத்தை வென்றவன். தன்னுடைய ஒளிப் பெருக்கால் கதிரவனை வென்றவன். புகழால் முழுத் திங்களைப் புறமுதுகு கண்டவன். கட்டளையால் வடவைத் தீயை வென்றவன். ஆற்றலால் மேருமலையை வென்றவன்.

மனத்திண்மையினுல் இமயமலையை வென்றவன். வீணைத் தொழிலால் மிதுன கின்னரங்களை வென்றவன். கொடையினுல் முகிலை வென்றவன். கட்டழகில் காமனை வென்றவன். செல்வச் சிறப்பில் குபேரனை வென்றவன். இன்பச் சிறப்பில் இந்திரனை வென்றவன். அறிவில் ஆதிசேடனை வென்றவன். அம் மன்னன் நான்கு மறைகளையும் நன்குணர்ந்த அறிவினுல் அறநெறிமுறை தவருதவனுய் அரசாட்சி செய்துகொண் டிருந்தான். அவ்வரசனுக்கு அமைச்சர்கள் ஐவர் இருந்தனர். அவர்களுடைய பெயர் உருவவான், வித்தியாதீசன், கெமங்கரன், ஞானகம்மியன், சுப்லன் என்று வழங்கின. ஆருயிரந் தேர்களும், பதினுயிரம் யானைகளும், இருபதினுயிரங் குதிரைகளும், கணக்கற்ற காலாட் படைகளும் அவ்வரசனுக்கிருந்தன. அவ்வரசனுடைய மனைவியின் பெயர் சுதன்மை. அவளுடைய வயிற்றில் அரசனுக்கு மகன் ஒருவன் பிறந்திருந்தான். அவனுடைய பெயர் ஏமகண்டன். ஏமகண்டன் பதினுயிரம் யானைகட்குள்ள ஆற்றலைப் பெற்றிருந்தான்.

அரசனுக்கு நோய்

எல்லா வகையான சிறப்புகளோடும் அரசன் அரசாட்சியை இனிது நடத்திக் கொண்டிருக்கிற காலத்தில் பழவினையின் பயனுய் அரசனுக்குத் தொழுநோய் உண்டாகியது. அந்நோய் எத்தகைய மருத்துவத்தினுலுந் தீராமல் அரசனுக்கு மிகுந்த தொல்லையை உண்டாக்கிக் கொண்டிருந்தது. ஒருநாள் அரசனுக்கு நோயின் கொடுமை மிகுதியாயிற்று. அவன் அதனைப் பொறுக்க முடியாமல் வருந்தினுன். ஒருநாள் அரசிருக்கை மண்டபத்திற்கு வந்து அமைச்சர் முதலியவர்களை அழைப்பித்தான். அவர்களைப் பார்த்து, "அமைச்சர்களே! நான் இதுவரையில் பகைவர்களையெல்லாம் வென்று அரசாட்சியை அறநெறி பிறழாமல் செலுத்தினேன். தேவர்கட்கெல்லாம் மனநிறைவு உண்டாகுமாறு வேள்விகள் பலவற்றைச் செய்து முடித்தேன். உறவினர்களனைவரும் நலமாக வாழச் செய்தேன்.

மக்கட்குப் பலவகையான நன்மைகளைச் செய்தேன். என்னைப் பற்றி வருத்தும் இந்நோயைப் போக்கிக்கொள் வதற்கு யாதொரு வழியையுங் காணாதவனாக இருக் கிறேன். முன்பு என் உடலொளியானது திங்களின் ஒளியைப்போல் திகழ்ந்திருந்தபடியினால் சோமகாந்தன் என்னும் பெயரைப் பெற்றேன். அவ்வாறு சிறப்புற் றிருந்த என் உடலில் இவ்வாறு கொடிய நோய் வந்து வருத்துமாயின் இவ்வுடலை வலுக்கட்டாயமாகவாவது போக்கிக் கொள்ளுதல் வேண்டும். நல்ல இன்பங்களை யெல்லாம் நுகர்ந்த நான் இப்பொழுது இவ்வாறு வருந்திக் கொண்டிருத்தல் கூடாது. பலவாறு உரையாடுவதால் பயன் என்ன? இனிமேல் காட்டையடைந்து தவஞ் செய் திருத்தலே நன்மையை உண்டாக்குவதாகும். என்னுடைய மகனாகிய ஏமகண்டன் என்னினுஞ் சிறந்த மேன்மைகளை உடையவனாக இருக்கிறான். அவன் அரசாட்சியை நன்றாக நடத்துவான்'' என்று சொன்னான்.

### அமைச்சர்கள் வருத்தம்

அரசன் கூறியவற்றையெல்லாம் அமைச்சர் முதலி யோர் கேட்டார்கள். அதனால் அவர்களுக்கு மனம் வருந் தியது. அச்சமயத்தில் அரசன் நோயால் உண்டாகிய வருத்தத்தினாலும் துன்பத்தினாலும் தளர்ந்து மூர்ச்சை யடைந்தான். அமைச்சர்கள் அந்தச் சமயத்தில் அரச னுக்குச் செய்ய வேண்டிய மருத்துவங்களைச் செய்து அரச னுடைய மூர்ச்சையைப் போக்கினார்கள். அரசன் ஒருவாறு மூர்ச்சை தெளிந்து உணர்ச்சி பெற்றான். அமைச்சர்கள் அரசனைப் பார்த்து ''அரசே! தாங்கள் இதுவரையில் எங்களை யெல்லாம் மிகுந்த அன்போடு பாதுகாத்து வந்தீர்கள். இப்பொழுது நோயினால் வருந்திக் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்கிறீர்கள். தங்களை மட்டுங் காட்டுக்கு அனுப்பிவிட்டு நாங்கள் வீட்டில் இருந்து நல்வாழ்க்கை நடத்துவது தகுதியாகுமா? தங்களுடைய மகனாகிய ஏம கண்டர் அறிவு முதலிய நலங்களில் சிறந்து திகழ்கின்றார்.

அவர் தாம் ஒருவராகவே இருந்து அரசாட்சியைச் சீருடனுஞ் சிறப்புடனும் அறமுறைப்படி நடத்தவல்லவர். அவர் செய்யும் அரசாட்சிக்கு மற்றவர்களுடைய துணை வேண்டியதில்லை. நாங்களுந் தங்களோடு காட்டிற்கு வர உறுதி செய்திருக்கிறோம். தங்களுடைய பிள்ளையை அரசராக உடனே ஏற்படுத்தலாம்'' என்று கூறினார்கள்.

அரசியின் வருத்தம்

அரசனுடைய மனைவியாகிய சுதன்மையானவள் நிகழ்ந்தவற்றையெல்லாங் கேள்வியுற்றாள். அவள் விரைவாக வந்து அரசனைக் கண்டு வணங்கினாள். ''என்னுடைய ஆருயிர்த் தலைவனே! இருதலைப் பறவைக்கு உயிர் ஒன்றே போல இதுவரையில் நம்மிருவருக்கும் உயிர் ஒன்றாக இருந்துகொண்டிருக்கிறது. நான் இப்பொழுது தங்களை மட்டுங் காட்டுக்குச் செல்ல அனுப்பிவிட்டுத் தனிமையில் இருந்து எவ்வாறு உயிர் வாழ்வேன்? கற்புடைய பெண்கள் தங்களுடைய கணவர் உயிரோடிருக்கும் வரையில் தாங்களும் உயிர் பெற்றிருந்து அவர்கள் இறக்குங் காலத்தில் தாங்களும் இறத்தலுமான கற்புநிலையை உடையவர்களாக இருப்பார்களாயின் அவர்கள் இப் பிறப்பில் புகழையடைவதோடு மறுபிறப்பில் விண்ணுலக இன்பம் முதலியவற்றையும் பெறுவார்கள் என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். அம்முறைப்படி யானும் தங்களோடு காட்டிற்கு வந்து உடனுறைவதன்றி ஒருகணமேனும் தனித்திருக்க மாட்டேன்'' என்று கூறி வருந்தினாள்.

மகன் வருத்தம்

அரசனுடைய மகனாகிய ஏமகண்டன் தன் தந்தையினுடைய செய்திகளைக் கேட்டு உள்ளம் வருந்தி அரசன் இருக்குமிடத்திற்கு வந்தான். தந்தையைக் கண்டு வணங்கினான். தந்தையைப் பார்த்து, ''என் அருமைத் தந்தையே! ஞாயிற்றையும் திங்களையும் பிரிந்த விண்ணைப் போலவும், தீயும் ஆவும் இல்லாத வேள்வியைப் போலவும், கணவனையும்

பிள்ளைகளையும் பிரிந்த காரிகையரைப் போலவும், அரசையும் அமைச்சையும் பெருத நகரத்தைப் போலவும் என்னை அருமையாகப் பெற்ற உங்கள் இருவரையும் பிரிந்த பிறகு நான் எவ்வாறு இருந்து அரசாட்சி செய்வேன்? மக்கட்குள்ள கடமை யாதென்ருல் தம்மைப் பெற்ற தாய்தந்தையர் இருக்குங் காலத்தில் உடனிருந்து அவர்களைத் தெய்வமாகப் போற்ற வேண்டும். அவர்கள் இறந்த காலத்தில் அவர் கட்குத் தென்புலத்தார் கடனைச் செய்து தங்களுடைய கடமையை நிறைவேற்ற வேண்டும். நிலையற்ற இன்பங்களை விரும்பிச் சிறு தன்மையுடைய அரசாட்சியை அடைந்து இறுமாந்திருத்தல் கூடாது. நான் செல்வத்தை ஒரு பொரு ளாக மதிக்கவில்லை. ஆகையால் உங்களோடு காட்டுக்கு வர முடிவு செய்திருக்கிறேன்'' என்று கூறினுன்.

### மைந்தனுக்கு அறிவுரை

அமைச்சர்கள் மனைவி மகன் ஆகியோர் கூறிய செய்தி களையெல்லாம் அரசன் கேட்டான். ஏமகண்டனைப் பார்த்து, ''என்னுடைய அருமை மகனே! நீ சிறுபிள்ளை யல்லன். அறிவிற்குறைவான மொழிகளை ஏன் பேசுகிருய்? நூன் முறைப்படி 'தாய்தந்தையர்கள் இருக்கும்போது அவர்களைத் தெய்வமாகப் போற்றி வழிபட்டு வருதல் வேண்டும். பிறகு செய்யத் தக்க தென்புலத்தார் கடன் முதலியவற்றைச் செய்தல் வேண்டும்' என்று நீ கூறியது உண்மையானதே. தாய்தந்தையர்கள் கூறுவதை மறுக்காமல் நடந்து கொள்வ தன்றே பிள்ளைகட்கு முதன்மையான கடமை? இதனை அறிந்து நடந்து கொள்பவன் எவனே அவனே சிறந்த மைந்தனுகப் போற்றப்படுகிருன். ஆகையால், என்னுடைய கட்டளைப்படி அமைச்சரோடு உடனிருந்து அரசாட்சியை நன்கு செய்து கொண்டு வருவாயாக. அதுவே எனக்கு நீ செய்ய வேண்டிய முதன்மையான கடமையாகும்'' என்று பலவாறு கூறி அவனை அழைத்துக் கொண்டு தன்னுடைய இருப்பிடத்திற்குச் சென்ருன்.

## 2. அரசியற்கை

ஒழுக்கமுறை உரைத்தல்

ஏமகண்டனை அழைத்துக்கொண்டு சென்ற சோமகாந்தன் அவனைத் தன் முன்னுல் உட்காரச் செய்து அரசியல் முறை ஒழுக்கநெறி முதலியவற்றை எடுத்துக்கூறி அறிவுறுத்தத் தொடங்கினுன். ''மைந்தனே! ஒழுக்கமுறைகளும் அறநெறியும் பெரியோர்களால் அளவின்றிக் கூறப்பட்டுள்ளன. அவையெல்லாவற்றையும் உனக்கு இப்பொழுது கூருமல் சிலவற்றை மட்டுங் கூறுகின்றேன். விடிய ஐந்து நாழிகைக்குப் படுக்கையை விட்டு எழுந்து வேருேர் இடத்திற்குச் செல்லுதல் வேண்டும். கொடிய தீவினைகளையெல்லாம் நீருக்கும் திருநீற்றினை யணிந்து ஆசிரியனையுங் கடவுளையும் உள்ளத்தில் எண்ணுதல்வேண்டும். அதன்பிறகு நிலத்தைப் பார்த்து நிலமகளாகிய தாயே! அடியேன் நடக்குந்தோறும் என் கால்கள் நின்மீது படுகின்றன. அதனுல் உண்டாகுங் குற்றத்தினைப் பொறுத்தருளுதல் வேண்டும் என்று மனவுருக்கத்தோடு போற்றுதல் வேண்டும். பிறகு ஆனைமுகக் கடவுளை எண்ணுதல் வேண்டும், பிறகு சிவ பெருமானையும் உமாதேவியாரையும் திருமாலையும் கதிரவனையும் போற்றுதல் வேண்டும். இவர்களையன்றிப் பிற கடவுளரையும் எண்ணுதல் வேண்டும். பிறகு நாட் கடன்களை முடித்துக்கொண்டு அரசாட்சியைச் செய்தல் வேண்டும். நல்லொழுக்கத்திருல் பொருளும் இன்பமும் மிகுதியாக வுண்டாகிப் பயனைக் கொடுக்கும். வேள்விகளைச் செய்தலோடு பெரியோர்களையும் போற்றுதல் வேண்டும். துறவிகளாகிய பெரியோர்கள் சினங்கொள்வார்களாயின் அச்சினத்தீயினுலே காத்தற் கடவுளாகிய திருமாலுங் கலக்கத்தை அடைவார். ஆகவே, அவர்களை வழிபடுவதல்லாமல் ஒருகாலும் இகழ்தல் கூடாது.

அடைதற்கரிய விண்ணுலக இன்பத்தையும் கெடாத வீடுபேற்றின்பத்தையும் இம்மையின்பத்தையும் செல்வங்களை

யுங் கொடுத்தலால் ஒரு காலத்தினும் அறவொழுக்கத்தைக் கைவிடுதல் கூடாது.

மாணி, வானப்பிரத்தன், காக்கத்தக்க துறவிகள், தென் புலத்தார், ஆசிரியர், தேவர், விருந்தினர், சுற்றத்தார், ஆக்கள், மறையோர், இறந்தோர்கள், வறியர்கள், உறுப் பற்றவர்கள், நோயாளிகள், முதியவர்கள், சிறுவர்கள், குழந்தைகள், தம்முணவால் பிழைப்பவர்கள் ஆகியவர்களைக் காப்பாற்றுதல் வேண்டும். வரவுக்குத் தக்க செலவு செய்து வாழுங் குற்றமற்ற மனைவியைப்போல் இல்வாழ்வானுக்குச் சிறந்த பொருள்கள் வேறு எவை உள்ளன? அதுவன்றி அவளால் புகழும் பயனும் மிகுதியாக உண்டாகும். பகைவர் முன் ஏற்றைப்போல் நடக்கும் அழகிய நடையும் உண்டாகும். ஆதலால், மனைவியை நீங்காது அவளோடு உவப்புடன் வாழ்தல் அறமாகும்.

*பிரம சாரி வனத்துறைவோன் பேணுந் துறவி தென்புலத்தார்*
*குரவர் தேவர் விருந்தொக்கல் கோக்கள் மறையோர் இறந்தோர்கள்*
*இரவ லாளர் உறுப்பிலர்கள் எய்தும் பிணியா ளர்முதியோர்*
*விரவு பாலர் சிசுதமது மிசையார் இவரை ஓம்புகவே.*

வருவாய்க் கியைய வாழ்தலுறும் மறுவில் கற்பில் மனையாள்போல்
பொருள்யா வுளவாம் அதுவன்றிப் புகழும் பயனும் மிகவுண்டாம்
கருதார் எதிரே இமிலேற்றுக் காமர் நடையும் உறுமதனால்
ஒருவா தவளோ டுவப்புறவே உற்று வாழ்தல் அறனாகும்.

## மக்கள் வளர்ப்பு

குற்றமற்ற தவங்களைச் செய்து பெற்ற மக்கள் பெற்றோர் கட்கு எழுபிறப்பினும் நன்மையை உண்டாக்குவார்கள். தென்புலத்தார் மகிழுமாறு அவர்கட்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வார்கள். ஆகவே, மக்களை அறிவாளர்கள் கூடிய அவையின்கண்ணே முன்னர் இருக்கத்தக்க அறிவுடையவர்களாமாறு செய்தல் வேண்டும்.

அன்பு

ஒருவன் எல்லோரிடத்தினும் அன்புடையவனுக இருத்தல் அவனுக்கு எல்லாவகையான நன்மைகளேயும் உண்டாக்கும். ஆகவே, எல்லாரிடத்தினும் அன்புடையவனுக நடத்தல் வேண்டும்.

விருந்தோம்பல்

இல்வாழ்வோன் விருந்தாக வந்தவர்களேப் போற்றிப் பாராட்டி நன்மொழி புகன்று செய்யத்தக்க சிறப்புகளே அவர்கட்குச் செய்தல்வேண்டும் ; இல்லாவிடின் அவர்கள் முகம் வாடிப் போவார்கள்.

உதவியை மதித்தல்

கைம்மாறு கருதாமல் துன்பக் காலத்தில் ஒருவர் மனமிரங்கிச் செய்த நன்மை பொருந்திய உதவி சிறிதென்ருலும் ஆராய்ந்து பார்க்குமிடத்தில் அவ்வுதவி மிகப் பெரியதாகும். கைம்மாறு கருதிச் செய்த உதவியாக இருப்பினும் துன்பக் காலத்தில் செய்த உதவியை மிகப் பெரிதாக மதித்துப் பாராட்டுதல் வேண்டும்.

செய்ந்நன்றி பாராட்டுதல்

ஒரு காலத்திலே நன்மையைச் செய்தவர்கள் பின்னெரு காலத்தில் தீமைகளேச் செய்தார்களாயினும் அவர்கள் முன்பு செய்திருக்கின்ற நன்மையையே பெரிதாக எண்ணி அவர்கள் செய்த தீமையை மறந்து அவர்களே வியந்து பாராட்டுதல் வேண்டும். செய்ந்நன்றி கொன்ற தீவினேயானது, கருவழித்தல், ஆன் கொலேபுரிதல், அந்தணரைக் கொல்லுதல் முதலியவற்ருல் உண்டாகுந் தீவினே சிறிதாமாறு பெரிதாகித் துன்புறுத்தும்.

நடுவுநிலைமை

பிறருடைய வழக்குகளைக் கேட்டு முடிவு கூறுவதிற் சிறிதும் நடுநிலை தவருது நேர்மையான வழியைக் கடைப் பிடித்தல் வேண்டும். நடுநிலைமையை மேற்கொண்டொழு குதல் செல்வத்தையும் மக்கட்பேற்றையுங் கொடுக்கும். ஆகவே, ஒரு பயனைக் கருதி நடுவுநிலைமையைக் கைவிடுதல் கூடாது.

புலனடக்கல்

தன்னுடைய இல்லத்திலிருந்தே இல்வாழ்வோன் ஐம் பொறிகளாலும் எல்லாவகையான இன்பங்களையும் நுகருங் காலத்தில் மனவாக்குக் காயங்களைத் தத்தம் போக்கிற் செல்லவிடாமல் அடக்குதல் வேண்டும். அவ்வாறு அடக்கி ளுல் ஏழு பிறவிகளிலும் அவன் செய்வன வெல்லாம் நன்மையாக முடியும். நல்வினை தீவினையாக மாட்டாது; புலனடக்குவோன் துன்பமற்ற தேவருலகை அடைவன்.

ஒழுக்கங்காத்தல்

இழிந்த குலத்திற் பிறந்தவர்களும் நல்லொழுக்கத் தினுல் உயர்குலத்தில் தோன்றியவர்களாவர். உயர்குலத் தில் தோன்றியவர்களும் ஒழுக்கக் குறைவினுல் இழிகுலத்திற் பிறந்தோராவர். ஒழுக்கத்தைக் கைவிடாதொழுகின் வீடு பேறுங் கிடைக்கும். ஒழுக்கத்தைக் கைவிட்டாலோ எல்லா வகையான துன்பங்களும் உண்டாகும்; ஆகவே, நல்லொழுக் கத்தை உயிரினுஞ் சிறந்ததாகப் போற்றுதல் வேண்டும்.

பிறன்மனை விழையாமை

காம மயக்கத்தினுல் பிறமாதர்களை விரும்புதல் கூடாது. பிறனுடைய மனைவியை விரும்புவோர் அறம்பொருளின்பம் முதலியவற்றை இழப்பர். மனதிற் கொள்ளாமல் வெளி நகைப்பாகப் பேசினுலும் நனவிலன்றிக் கனவில் நினைத்

தாலும் தீமையை உண்டாக்கக் கூடியதான பிறன்மனை விழைதலானது யாவர்க்கும் பகை பழி தீவினை அச்சங்களை உண்டு செய்து பெருமையைக் கெடுக்கும். அஃதில்லாமை யானது அறம் பொருள் இன்பங்களை உண்டு செய்து பெருமை யடையச் செய்யும்.

*பகையே பழியே பாவமே*
*பயமே நான்குந் தினங்கொடுக்கும்*
*தகையார் பெருமை முழுதழிக்கும்*
*சார்ந்தபிறனில் விழைவொழிந்தோர்*
*தொகையார் அறமே பொருளின்பம்*
*தோலாப் பெருமை யொடும்வாழ்வர்*
*நகையால் அதனைக் கனவிடத்தும்*
*நவிற்றி யிடினுந் திங்காமே.*

பொறையுடைமை

ஒருவன் பொருமை முதலிய காரணங்களினுலாயினும் அறிவின்மையாலாயினும் குற்றஞ் செய்த பொழுது அவ னுடைய குற்றத்தின் பொருட்டு அவனை ஒறுத்தலால் எத்தகைய பயனுமில்லை. ஒருவனுடைய பிழையைப் பொறுத்துக் கொள்வது பெரிய அறமாகும். அதனுல் சீர்த்தியும் மாட்சியும் பெருகி வளரும். சினம் என்பதனைச் சிறிதும் அறியாத அறிஞர்களுடைய உள்ளத்தில் களிப் புண்டாகும். ஆதலால், பொறுமையை உயிர்த்துணையாகக் கொள்ளுதல் வேண்டும்.

அழுக்காருமை

பொருமைக் குணமானது ஒருவனுடைய நல்லொழுக் கத்தை அழிக்கும். இம்மை நலத்திற்கும் மறுமை நலத்திற்கும் தீமையை உண்டாக்கும். அவனை அடுத்தவர்களையுங் கெடுக்கும்; துன்பத்தையுடைய கொடிய நிரயத்தில் தள்ளும். இக் காரணங்களினுல் அழுக்காருகிய பொருமையினைப் பகைவரிடத்தினுங் கொள்ளுதல் கூடாது.

பிறன்பொருள் விரும்பாமை

புதிய நீர்ப் பெருக்கானது நிலையாகவுள்ள நீரையுங் கெடுப்பதைப் போல ஒருவரிடமிருந்து கவர்ந்த பொருள் முன்னமேயுள்ள பழைய பொருளையுங் கெடுத்துத் தீமையைச் செய்யும்; குலத்தை அழிக்கும். நீங்காத கொடிய துன்பத்தையும் உண்டாக்கும். மறுமைப் பயனையுந் தொலைக்கும்; குற்றம் பொருந்திய தீவினையை எக்காலமும் வளர்க்கும்; ஆகவே, பிறருடைய பொருளைக் கவர்தலை மனத்தில் எண்ணுதலுங் கூடாது.

புறங்கூறுமை

ஒருவன் நாள்தோறும் அறத்தை யழித்துத் தீவினைகளை மிகுதியாகச் செய்தாலும், கடுமையாகப் பழித்துரைத்தாலும் மறந்தும் புறங்கூறுதல் கூடாது. அவ்வாறு கூறின் உறவினர் பிரிவர்; நட்பினர் நட்பொழிவர். ஆகவே, புறங்கூறுதலை அடியோடு ஒழித்தல் வேண்டும்.

பயனில பேசாமை

பயனில்லாத வீணுரைகளைப் பேசுதல் கூடாது. அவ்வாறு பேசினுல் அப்பேச்சு அறிவாளர்கள் வெறுப்படையச் செய்யும், இகழ்ச்சியையுங் கொடுக்கும். அறிவின்மையை வெளிப்படுத்தும், நன்மதிப்பைக் கெடுக்கும், மேன்மையை அழிக்கும். ஆகவே, அறம் பொருள் இன்பங்களைச் சாராத வெற்றுரையாடுதலை விலக்குதல் வேண்டும்.

தீவினையச்சம்

உலகில் எத்தகைய பகைக்குத் தப்பிப் பிழைத்தாலும் பிழைக்கலாம்; தீவினையாகிய பகைக்குத் தப்பிப் பிழைத்தல் இயலாது. எத்தகைய பிறப்பினை யடைந்து எங்குச் சென்ருலும் தீவினையானது தொடர்ந்து வருத்தும்; ஆகவே, எத்தகைய தீவினையையுஞ் செய்தல் கூடாது.

பிறருக்குதவுதல்

நாம் வருத்தத்தினை யடைந்து பொருளினைத் தேடுதல் பிறருக்கு உதவி செய்தற் பொருட்டேயாம்; ஆதலின், எளியவர்கட்கு உதவி செய்து காத்தல் வேண்டும். பிறருக்கு உதவி செய்து புகழுடல் பெற்று வாழ்பவர்களே சிறந்த வாழ்க்கையுடையவர்களாவர்.

அரசாட்சி

அறநெறிப்படி அரசாட்சி செய்ய வேண்டுமானால் அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு ஆகியவற்றைத் தக்கவாறு பேணிப் பாதுகாத்துக் கொள்ளுதல் வேண்டும். அஞ்சாமை அறிவு ஊக்கம் முதலியவற்றையும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

கல்வி முதலியன

அறநூல் முதலிய எல்லாக் கலைகளையும் ஐயமும் மாறுபாடும் அறுமாறு கற்றுக் கற்றறிந்தவாறு ஒழுகுதல் வேண்டும். கல்வியறிவானது தளர்ச்சியடைந்த காலத்தில் தக்கவாறு துணை செய்வதாகும். நல்லொழுக்கமுடையவர்கள் கூறுகிற அறிவுரையையுங் கேட்டல் வேண்டும். சொல்லுகின்றவர்களுடைய தன்மையை நோக்காமல் சொல்லின் தன்மையை நோக்கி அதற்கேற்ப நடத்தல் வேண்டும். உயர்ந்தவர்களைச் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும். தாழ்ந்தவர்கள் தன்னை யடைந்து தன்னைக் கெடுக்காமற் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

பெரியோர்க் கடங்கல் முதலியன

அரிய தவத்தினர், ஆசிரியர், தாய்தந்தை முதலிய பெரியோர்கள் மறையவர்கள் ஆகியவர்களிடத்தில் அடங்கி நடத்தல் வேண்டும். நான் என்னுஞ் செருக்கினை ஒழித்தல் வேண்டும். தான் குற்றஞ் செய்யாமலிருந்து மற்றவர்களுடைய குற்றங்களைப் போக்குதற்கு வழிதேடுதல் வேண்டும்.

சிறிய குற்றத்தைச் செய்யினும் அது பெரிய துன்பத்தைக் கொடுக்கும்.

### குடிகளின் துன்பம் நீக்கல் முதலியன

தெய்வத்தால் உண்டாகக் கூடிய எதிர்கால இடையூறுகளை முற்காட்டுங் குறிகளால் அறிந்து அவைகளை ஒழித்தற்கு வழிதேடுதல் வேண்டும். மனிதரால் உண்டாகக் கூடிய தீமைகளை அவர்களுடைய தன்மையால் அறிந்து ஒழிக்க வேண்டும்.

### ஆற்றலறிந்து நடத்தல் முதலியன

ஆற்றல் குன்றியவர்களானுலும் பலர் ஒன்றி எதிர்ப்பார்களானுல் தீமை நேரிடும். ஆகையால் பலருடைய பகையைத் தேடிக் கொள்ளுதல் கூடாது. பகைவர்கள் கெடுதியைச் செய்தாலும் அவர்களை எதிர்த்தழித்தற்குரிய காலம் வரும் வரையிலும் அடங்கியிருத்தல் வேண்டும். இடமறிந்து கொள்ளாமற் பகைவனை எதிர்த்தல் கூடாது. அமைச்சர்கள் முதலியோரை நன்கு ஆராய்ந்து அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். நன்கு ஆராயாமல் எத்தகையோரையும் நம்புதல் கூடாது. ஆராய்ந்து தேர்ந்தெடுத்துக் கொள்ளப்பட்டவர்களிடத்தில் ஐயங் கொள்ளுதல் கூடாது. இன்ப நுகர்ச்சியில் அளவு கடந்து கருத்தைச் செலுத்திப் பிற காரியங்களை மறந்துவிடுதல் கூடாது.

### தீயோர்களை ஒறுத்தல்

படைக்கலம் நஞ்சிடுதல் முதலியவைகளால் பிறரைக் கொலை புரிவோரையும், கொள்ளையடிப்போரையும் வழிப்பறி செய்வோரையும், களவு செய்வோரையும், பிறன் மனைவியைச் சேர்வோரையும், தீவினை செய்வோர்களையும் அரசன் கொன்றொழிக்கலாம். இவர்களையழித்தல் பயிர்களைக் கெடுக்குங் களைகளைப் பறித்தொழித்தலைப் போன்றதாம்.

கருவிநஞ் சாதி தம்மால் காமரா ருயிரைக் கொல்வோர்
வெருவரச் சூறை கொள்வோர் மேவியா றலைப்போர் கள்வர்
உருவளர் பிறனில் வேட்போர் உவர்முத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று பயிர்க்களை களைதல் போலாம்.

### கொடுங்கோன்மை

அரசன் செங்கோலை ஒழுங்காகச் செலுத்துவானுனல் அச் செங்கோலே அரசனைக் காக்கும். அரசன் கொடுங் கோன்மையை மேற்கொண்டு மக்களைக் காவா தொழிவா னுயின் அந்தணர்கள் மறைமுறைகளை மறப்பார்கள். ஆக்கள் பால் கொடாவாம் ; மழைவளங் குன்றும்; நாட்டிலுண்டாகிய பலன்கள் குறையும்; ஆகவே, அரசன் தன்னுடைய செங்கோல் கொடுங்கோலாக மாறிவிடாமல் கண்ணுங் கருத்துமாக இருத்தல் வேண்டும்.

### ஊக்கமுடைமை முதலியன

மனவூக்கம் உள்ளவர்கள் பொருளற்றவர்களாக இருந் தாலும் நீங்காத செல்வம் உடையவராவர். செல்வம் பெற் றிருந்தும் ஊக்கத்தைப் பெற்றிராதவர்கள் யாதொன்றும் இல்லாதவர்களே யாவர். ஒருவன் சோம்பலை மேற்கொள் வானுயின் அவன் அழிந்தொழிவான். எடுத்துக் கொண்ட முயற்சிக்கு மனிதர்களாலாயினுந் தெய்வத்தாலாயினும் இடையூறு நேர்ந்தாலும் மனந் தளர்ந்து முயற்சியைக் கைவிடாமற் செய்பவனே உயர்ச்சியடைவான். அரசாட்சி நிலைபெற வேண்டுமாயின் பகைவர்களையும் நட்பாக்கிக் கொள்ளுதல்வேண்டும். தகுந்த துணையிருந்ததாயினும் பல ருடைய பகையை ஒருங்கே தேடிக் கொள்ளுதல் கூடாது. பலருடைய பகையைத் தேடிக் கொள்பவன் தப்பாமல் அழிந் தொழிவான்.

### பெண்வழிச் சேறல்

இல்வாழ்க்கைக்குத் துணையாக அமைந்து நின்று தன் ஏவல் செய்தற்குத் தேடப்பட்ட மனைவிக்கு ஒருவன் தான் ஏவல் செய்யத் தொடங்குவானுயின் அவனுக்கு அறமும்

பொருளும் உண்டாகமாட்டா. முன்னுள்ள பொருளாலும் பயனுண்டாகாது. எடுத்துக் கொள்ளுங் காரியங்கள் இனிது முடியமாட்டா. இம்மைப் பயன் ஒழிதலேயன்றி மறுமைப் பயனும் உண்டாகமாட்டாது. எத்தகைய குற்றங்களும் முற்பட்டு நிற்கும்; மிகுந்த நாணமுங் கெடாத பழியும் உண்டாகும்; ஆகவே பெண்களுடைய சொல்லைக் கேட்டல் கூடாது.

தன்னால் ஆளப் படுமனைவி தன்னால்
ஆளப் படுவானேல்
அன்னற் கறனும் பொருளும்உள
ஆகா தொல்லைப் பொருளானும்
மன்னு பயன்கள் வினைமுடியா
மறுமை யனுகா தெப்பிழையும்
முன்னும் பின்னும் பெருநாணும்
மூவாப்பழியும் அறிமைந்தா.

கள்ளுண்டல் முதலியன

கள்ளானது பகுத்தறிவைக் கெடுக்கும். நன்னடக்கையை ஒழிக்கும். பெருமையைப் போக்கும். மற்றும் பலவகையான தீமைகளை உண்டாக்கும்; ஆகவே கள் குடித்தலை மேற்கொள்ளுதல் கூடாது. சூதாடுதல் தீதாடுதலாம். சூதினால் முதற்கண் வெற்றியுண்டானாலும் பிறகு அது தோல்வியைத்தான் கொடுக்கும். சூதாடத் தொடங்கியவர்கள் தங்களுடைய பொருள்களையெல்லாம் இழப்பார்கள்'' இப்படிப் பலவாறு மகனுக்கு அறிவுரை கூறிய சோமகாந்தன் அத்தாணி மண்டபத்தை யடைந்து காலக் கணிதர்களை யழைத்து முடிசூட்டலுக்குத் தகுந்த நாளை உசாவினான்.

## 3. முடி சூட்டுதல்

ஏற்பாடு

காலக்கணிதர்கள் பலர் ஒன்றுகூடி ஆராய்ந்தார்கள். பிறகு அரசனைப் பார்த்து, ''உத்தராயணத்தின் முதல்

திங்களாகிய தைத் திங்களில் வரும் பூசவிண்மீன் நாள் முடிசூட்டுதற்குத் தக்கது'' என்று கூறினுர்கள். அரசன் அமைச்சர்களைப் பார்த்து, "ஏமகண்டனுக்கு முடிசூட்டுதற் குரிய ஏற்பாடுகளையெல்லாம் செய்வீர்களாக!'' என்று கட்டளையிட்டான். முனிவர்கட்கும் தொலைவில் உள்ள உறவினர்கட்குந் திருமுகங் கொடுத்துத் தூதர்களை அனுப் பினுன். தன்னுடைய குருவைப் பார்த்து, "என் மகனுக்கு அரசாட்சியைக் கொடுப்பதற்கு முடிவு செய்துள்ளேன். அவனுக்கு முடிசூட்டுதற்குச் செய்யவேண்டிய ஏற்பாடுகள் யாவை?'' என்று உசாவினுன். அந்த ஆசிரியன் முடிசூட்டு தற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் பனையோலையில் எழுதிக் கொடுத்தான்.

### முடிசூட்டலும் அரசாட்சியும்

அரசன் தன்னுடைய ஆசிரியன் எழுதிக் கொடுத்த பொருள்களையெல்லாம் விரைவில் தொகுத்ததோடு முடி சூட்டற்குரிய மண்டபத்தையும் அழகாகச் செய்வித்தான். பிறகு ஏமகண்டனுக்கும் அவன் மனைவிக்கும் முடிசூட்டு தலைச் செய்து முடித்தான். ஏமகண்டன் அரசியற்றலை மேற் கொண்டு அரசாட்சியைச் செய்துகொண்டிருந்தான். சோம காந்தனுகிய அரசன் தன் மகன் அரசியற்றலைப் பார்த்துச் சிலகாலம் மகிழ்ந்து கொண்டிருந்தான்.

## 4. சோமகாந்தன் வனம் புகுதல்

### நகரை விட்டுப் புறப்படுதல்

பிறகு சோமகாந்தன் தன்னுடைய நகரத்தை விட்டுக் காட்டுக்குப் புறப்பட்டான். கடைவாயிலை விட்டுப் புறப் படுவதற்கு முன், அமைச்சர், அந்தணர் முதலிய பலர் வந்து அரசனைச் சூழ்ந்தார்கள். அரசன் அவர்களோடு சிறிது தொலை சென்ருன். வழியில் ஒரு பொய்கையைக் கண்டு அதன் கரையில் தங்கினுன். தன்னைத் தொடர்ந்து வருப

வர்களைப் பார்த்து, ''அன்பர்களே! என்னோடு நீங்கள் வீணாக ஏன் வரவேண்டும்? உங்கட்குரிய இடங்கட்குச் சென்று நலமே வாழ்ந்திருங்கள்'' என்று சொன்னான். அதனைக் கேட்டவர்கள் மனவருத்தமடைந்தார்கள். அவர் களுடைய கண்களினின்றும் நீர் பெருகியது. அவர்கள் அரசனை வணங்கித், ''தீயினிடத்தில் வெம்மையைப் போல வும், நீரினிடத்தில் தண்மையைப் போலவும், கதிரவனிடத் தில் ஒளியைப் போலவும், மலரினிடத்தில் மணத்தைப் போலவும், உடலினிடத்தில் உயிரைப் போலவும் இருந்து எங்களையெல்லாங் காப்பாற்றியருளிய தங்களைவிட்டு நாங்கள் நீங்கியிருப்பதற்குத் துணிவோமோ? இனிமேல் நகரத்திற்குச் சென்று நாங்கள் எவ்வாறு வாழ்ந்திருப்போம்? தாங்கள் முற் பிறப்பிலன்றி இப்பிறப்பிலும் பல நல்வினைகளைச் செய்திருக் கின்றீர்களாதலால் புனித நீராலோ முனிவர்களாலோ தங்களுடைய நோய் நீங்கப் போகின்றது. அது வரையிலும் நாங்களும் தங்களோடிருந்து பிறகு நகரத்திற்குத் திரும்பு கிறோம்'' என்று சொன்னார்கள்.

அரசன் மறுமொழி

அவர்கள் கூறியவற்றையெல்லாங் கேட்ட அரசன் அவர்களைப் பார்த்து, ''அன்பர்களே! இவ்வுலகத்திற் பிறந் தோர் பிறந்த பயனை அடைய விரும்பினால் முன்பு இல்ல றத்தை நடத்திப் பிறகு துறவறத்தை மேற்கொள்ள வேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது. அதனை இது வரையிலும் எண்ணிப் பாராமல் மறந்திருந்தேன். அதனால் இக் கொடிய நோய் எனக்குண்டாகியது. நீங்கள் இதனைச் சிறிதும் எண்ணிப் பார்க்காம லிருக்கின்றீர்கள். மேலும் என்னுடைய அரசாட்சியை நடத்துவதற்கு என்னுடைய மகன் இருக் கிறான். அவன் என்னினுஞ் சிறந்தவன். அவன் உங்களை நன்கு பாதுகாப்பான். நீங்கள் எதற்கும் அஞ்சவேண்டிய தில்லை. ஆகவே, நீங்கள் திரும்பி நகரத்திற்கு ஏகுங்கள்'' என்று சொன்னான். அவர்கள் அரசனுடைய ஆணையை மறுப்பதற்கஞ்சிப் பேசாமலிருந்தார்கள்.

**தந்தையும் மைந்தனும்**

பிறகு மகனாகிய ஏமகண்டன் மிகுந்த வருத்தத்தோடு தந்தைக்கு முன்னே வந்து நின்றான். அவனை அரசன் பார்த்து, "என் அருமை மகனே! நீ ஏன் வருத்தப்படுகின்றாய்? இல்லறத்தில் இருப்பவர்கள் அகவை முதிர்ந்தால் காட்டிற்குச் செல்ல வேண்டியது முறைமையன்றோ? அந்த முறைமைப்படி யாமுங் காட்டிற்குச் செல்லுகின்றோம். தாய் தந்தையருடைய கட்டளையைத் தடுக்காமல் நடந்து கொள்ள வேண்டுவது மக்களுடைய கடமையாதலால் நீ என்னுடைய கட்டளைப்படி நகரத்திற்குப் போய் அரசாட்சியைச் செய்து கொண்டிரு" என்று கூறினான்.

**தாயுஞ் சேயும்**

ஏமகண்டன் எண் வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு கீழே விழுந்து தந்தையை வணங்கினான். பிறகு தாயினுடைய அடிகளில் வீழ்ந்து வணங்கினான். தாயானவள் மிகுந்த துன்பத்தோடு தன் மகனைத் தூக்கியெடுத்தாள். அவன் மார்பில் அணிந்திருக்கிற சந்தனமெல்லாம் தன்னுடைய கண்ணீரினால் கரையும்படி இன்பக் கண்ணீர் வடித்தாள். பல தேறுதல் மொழிகளைப் பகர்ந்தாள். "என் அருமைச் செல்வனே! எவ்வகைப்பட்ட தேவர்களாயினும் தங்களை யடுக்கும் ஊழ்வினையை ஒழிக்க மாட்டார்கள். அவ் வூழை எண்ணி வருந்துவதால் யாது பயன்? உன்னுடைய உள்ளத்தில் எங்களைக் குறித்து எத்தகைய கவலையுங் கொள்ள வேண்டாம். எவ்வகையான இடையூறுகளையும் ஒழித்து அவரவர்கட்கு வேண்டிய மேன்மைகளைத் தந்து காப்பாற்றுபவர் ஆனைமுகக் கடவுள். ஆகவே நீ அரண்மனையை அடைந்து அக்கடவுளை இடைவிடாமல் வழிபட்டு நாங்கள் மீளவும் அரண்மனைக்குத் திரும்புமாறு வேண்டிக் கொள். உன்னுடைய அரசாட்சியை ஒழுங்காக நடத்து. எல்லா வகையான நன்மைகளையும் பெற்று வாழ்ந்திரு" என்று வாழ்த்துரை வழங்கி வழியனுப்பினாள். அவன் அமைச்சர்கள் முதலானவர்களோடு நகரத்திற்குத் திரும்பி அரசாட்சியைச் செய்து கொண்டிருந்தான்.

**சோமகாந்தன் காட்டையடைதல்**

பிறகு சோமகாந்தன் தன் மனைவியோடு அவ்விடத்தில் இருந்து புறப்பட்டுக் காட்டை நோக்கிச் சென்றான். கபலன், ஞானகம்மியன் என்னும் இரண்டு அமைச்சர்கள் அரசனைப் பின்தொடர்ந்தார்கள். அரசன் அவர்களையும் உடனழைத்துக் கொண்டு சென்றான். நால்வரும் வழிநடந்து காட்டையடைந்தார்கள். தேன், கிழங்கு, காய், கனி முதலியவைகளை இரண்டு அமைச்சர்களுந் தேடிக் கொண்டுவந்து கொடுத்தார்கள். ஓரிடத்தில் தங்கியிராமல் பலவிடங்களிலுந் தங்கியிருந்த அந்நால்வரும் ஒருநாள் பிருகுமுனிவருடைய இருப்பிடத்திற்கு அண்மையான ஓரிடத்தில் வந்து தங்கியிருந்தார்கள். அந்த இடமானது மிகுந்த சிறப்போடு விளங்கியது. அரசன் சிறிது உறக்கங்கொண்டான். அமைச்சர்கள் காய்கனி தேடச் சென்றார்கள் ; அரசி அரசனுக்குக் காவலாக இருந்தாள்.

**பிருகு முனிவருடைய பிள்ளை**

அப்பொழுது ஓர் இளைஞன் அவ்விடத்திற்கு வந்தான். அரசிளங் குமரனைப் போல அழகு வாய்ந்த அவன் தண்ணீர் கொண்டு போகும் பொருட்டுத் தடாகத்தை நோக்கி வந்தான். அரசன் மனைவியாகிய சுதன்மையானவள் அவனைப் பார்த்து மிகுந்த வியப்படைந்தாள். "குழந்தாய்! அரிமா, யானை, புலி, கரடி முதலிய கொடிய விலங்குகள் உள்ள இக்காட்டில் தேவர்களும் வருதற்கு அஞ்சுவார்களே; நீ சிறு பிள்ளையாக இருக்கின்றாயே; இவ்வளவு துணிவோடு தனியாக வந்த நீ யார்? உன்னுடைய பெயர் யாது? உன்னைப் பெற்ற தாய் தந்தையர் யாவர்? இக்காட்டிற்கு வந்த காரணம் யாது? அவைகளை எனக்குக் கூறுவாயாக" என்று கேட்டாள். அச்சிறுவன் அரசியைப் பார்த்துத், "தாயே! நான் சிறந்த முனிவருக்குப் பிறந்தவன். என் பெயர் சிவனன். என்னைப் பெற்றவள் புலோமை. என் தந்தையின் பெயர் பிருகு முனிவர். யான் தண்ணீர் கொண்டு போதற்கு இங்கு வந்தேன். தங்களுடைய வரலாறு யாது?" என்று

உசாவினுன். சுதன்மை சிவனனைப் பார்த்துத் தாங்கள் அவ்விடத்திற்கு வந்துள்ள செய்திகளையெல்லாம் விளக்கமாகக் கூறினுள். அவள் கூறியவைகளைக் கேட்ட முனிமகன் மிக வருத்தமடைந்தான். அவர்கட்குத் தன்னுல் இயன்ற உதவிகளைச் செய்ய வேண்டுமென்று உள்ளத்தில் முடிவு செய்து கொண்டான். சுதன்மைக்குத் தெளிவுரைகள் பலவற்றைக் கூறிவிட்டுச் தண்ணீர் எடுத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சென்ருன். இங்கு அரசியோடு உரையாடிக் கொண்டிருந்தமையால் அவன் தன்னுடைய இருப்பிடத்தை அடைதற்குச் சிறிது நேரமாகி விட்டது.

## 5. பிருகுமுனியை அடுத்தது

### முனிவரும் மகனும்

தம்முடைய மகன் நேரஞ்சென்று வந்ததைக் கண்ட பிருகு முனிவர் தம்முடைய மகனைப் பார்த்து, "அப்பா! நீ இன்று இவ்வளவு காலந் தாழ்த்து வந்ததற்குக் காரணம் என்னை? அல்லாமலும் உன்னுடைய முகத் தாமரையானது பிறருடைய துன்பத்திற்கு வருந்தி வாட்ட முற்றிருக்கின்ற படியால் நீ சென்ற விடத்தில் நிகழ்ந்த காரியங்கள் என்ன? அவைகளை எனக்குக் கூறுவாயாக" என்று கேட்டார். சிவனுவன் தன்னுடைய தந்தையைப் பணிந்து, "எந்தையே! யான் தடாகத்தை நோக்கிச் சென்றேன். அத்தடாகக் கரையில் ஒரு மரத்தின் நிழலில் காமன் மனைவியுங் கண்டு வணங்கத்தக்க கட்டழகு வாய்ந்த காவலன் மனைவியொருத்தி கணவனெடு அங்கிருந்தாள். அவள் என்னைப் பார்த்தவுடன் அண்மையில் அழைத்தாள். "அப்பா நீ சிறு குழந்தையாக இருக்கின்ருயே; உன்னை இக்கொடிய காட்டில் தனிமையாக விட்டவர்கள் யாவர்? உன்னுடைய பெயர் என்ன? நீ இங்கு வந்த காரணம் யாது?" என்று கேட்டனள். நான் அதற்குத் தக்கவாறு மறுமொழி கூறினேன். பிறகு அவளுடைய வரலாற்றை உசாவினேன். அதனுல் காலந் தாழ்த்துவிட்டது. அந்த அரசியானவள் தன்னேடிருக்

கின்றவன் தன்னுடைய கணவன் என்றும் அவனுடைய பெயர் சோமகாந்தன் என்றும், அவன் தன்னுடைய உடலில் உள்ள தொழு நோயினல் நிரயத் துன்பத்தினுங் கொடிய துன்பத்தை அடைந்திருக்கிருன் என்றும் அதனல் அரசாட்சியைத் தன்னுடைய மகனிடங் கொடுத்துவிட்டுக் காட்டில் வந்திருப்பதாகவும் இரண்டு அமைச்சர்கள் உடனிருப்பதாகவும் உரைத்து உள்ளங் கலங்கினுள். மேலும் அரச இன்பங்களையெல்லாம் ஒழித்திருக்க நேரிட்டதையும் உரைத்து வருந்தினுள். நான் அதனைக் கேட்டுக் கொண்டிருந்தபடியால் என்னுடைய முகம் வாட்டத்தை யடைந்தது'' என்ருன்.

### முனிவர் இருப்பிடத்தை அடைதல்

தம் மகன் கூறியவைகளைக் கேட்ட பிருகு முனிவர் மனம் இரங்கினுர். அவருடைய உள்ளத்திலே அருள் சுரந்தது. அவர் தம்முடைய மகனைப் பார்த்து, "மகனே! அவர்கள் எங்கிருக்கின்ருர்கள்? நீ போய் அவர்களை இவ்விடத்திற்கு அழைத்துக் கொண்டு வருவாயாக'' என்று கட்டளையிட்டார். உடனே சிவனன் மிகுந்த விரைவோடு அவர்கள் இருக்கின்ற இடத்திற்குச் சென்ருன். அவர்களைக் கண்டு, "என் தந்தை உங்களை அழைத்து வருமாறு அருளோடு கட்டளையிட்டார். ஆகவே, நீங்கள் விரைவில் எழுந்து வருவீர்களாக'' என்ருன். அரசனும் மற்றவர்களும் மிகுந்த மகிழ்ச்சியோடு புறப்பட்டுப் பிருகு முனிவருடைய இருப்பிடத்தை அடைந்தார்கள்.

### முனிவர் இருப்பிடச் சிறப்பு

முனிவருடைய இருப்பிடத்தில் புலியானது தன்னுடைய பாலை மான் கன்றுகட்கு ஊட்டுவிப்பதும், யானையானது அரிமாவின் முதுகில் இருக்கின்ற மயிரைக் கோதிச் சிக்கறுப்பதும், பாம்புகளுக்கு மயில்கள் இரை தேடிக் கொண்டுவந்து கொடுப்பதும் ஆகிய பல புதுமைகளை உடையதாக இருந்தது. எல்லா உயிர்த் தொகைகளும் பகையில்லாமல் உறவாடிக் கொண்டிருந்தன. தட்ப வெப்பநிலைகளுஞ் சீராக அமைந்

திருந்தன. எல்லாவகையான மரங்களும் கொடிகளும் புற்களும் எக்காலத்திலுந் தளிர்த்தும் பூத்துங் காய்த்தும் பழுத்தும் விளங்குகின்ற சிறப்புடையதாக இருந்தது. அவ்விடத்திய சிறப்புக்களை அரசன் முதலிய நால்வருங் கண்டு மிகுந்த வியப்படைந்தனர். பல முனிவர்கள் தம்மைச் சூழ்ந்திருக்கப் பிருகு முனிவர் புலித்தோல் இருக்கையில் எழுந்தருளியிருந்தார்.

அரசன் முனிவரைக் காண்டல்

அரசன் முதலிய நால்வருந் தத்தம் பெயர்களைக் கூறிப் பணிந்தெழுந்தார்கள். இரு கைகளையும் தலைமீது கூப்பிப் பன்முறை வணங்கினுர்கள். பிருகு முனிவர் அரசன் முதலியோர்க்குத் தகுந்த வாழ்த்துரை கூறினுர். மிகுந்த அருளோடு அரசனைப் பார்த்தார். உடனே அரசன் மீளவும் பணிந்தான்; கண்களிலிருந்து இன்பக் கண்ணீர் பெருக்கினுன். உடலெங்கும் மயிர் சிலர்ப்ப மகிழ்ச்சியை அடைந்தான். பெருமூச்சு விட்டு வியர்த்து நின்ருன். தீயிற்பட்ட வெண்ணெயைப் போல உள்ளம் உருகினுன். "அடிகாள்! அடியேன் முன்பிறப்பிற் செய்தன வெல்லாம் தீவினையே. அத் தீவினையால் இவ்வுடலில் இத்தகைய பொல்லாத நோயைப் பெற்றேன் என்று இதுவரையினும் எண்ணிக் கொண்டிருந்தேன். இப்பொழுது எண்ணுமிடத்தில் அடியேன் செய்தன வெல்லாம் நல்வினையே என்றும், இந் நோயானது தேவரீருடைய திருவடிகளைப் போற்றுவதற்கு என் பிடரியைப் பிடித்துத் தள்ளுவதற்கான ஒரு முன்னிலை யென்றுந் தெரிந்து கொண்டேன். மேலும் தேவரீருடைய காட்சியை இன்று பெற்றபடியால் என்னுடைய முப்பிறப்புக்களும் தூய்மையடைந்தன. அடியேன் செய்த தவங்களெல்லாங் கைகூடிவிட்டன. அடியேனுடைய கல்வியும் குலமும் அடையத் தக்க பயன்களை அடைந்தன. அடியேனைப் பெற்ற முன்னேர்களும் நல்ல பேற்றினைப் பெற்ருர்கள். கற்பக மரத்தை யடைந்தவர்கட்கு என்ன குறையிருக்கின்றது? அதுபோலத் தேவரீருடைய திருவடித் தாமரைகளை அடுத்த

எனக்கு இனிமேல் ஒரு குறைவு உண்டாகுமோ? இப் பிறப்பில் அடியேன் செய்த தீவினைகள் ஒன்றேனுங் காணேன். முற்பிறப்பில் எத்தகைய தீவினைகள் நேர்ந் திருக்கின்றனவோ அவைகளை அறிந்திலன். மறு பிறப்பினும் நற்கதியை அடையவிடாமல் இந் நோய் என்னுடைய உடலில் வந்து பொருந்தியிருக்கின்றது. இது நீங்கும் பொருட்டு அளவற்ற மருந்துகளை யுண்டேன்; அளவிறந்த மறைகளைப் பின்பற்றினேன். எண்ணற்ற தானங்களைச் செய்தேன்; எண்ணற்ற தவங்களை முடித்தேன்: இதுவரை யிலும் இந்நோய் என்னை விட்டு நீங்காமல் நாளுக்கு நாள் மிகுந்த துன்பத்தையும் வருத்தத்தையும் வளர்த்துக்கொண்டு வருகின்றது. இனிமேல் இந்நோயானது தேவரீருடைய அருளினால் தீரவேண்டியதேயல்லாமல் மற்றவைகளால் நீங்க மாட்டாது'' என்றிப்படிப் பலவாறு கூறி முனிவரை வணங்கி நின்றான்.

### முனிவர் அருள் புரிதல்

மன்னன் கூறியவைகளை யெல்லாம் பிருகு முனிவர் கேட்டார். மீளவும் அரசனை அருளோடு பார்த்தார். சிறிது நேரம் அறிதுயிலில் அமர்ந்திருந்தார். தம்முடைய மெய் யறிவுப் பார்வையால் அரசன் அந்நோயை அடைந்ததன் காரணத்தைத் தெரிந்துகொண்டார். "அரசனே! தூய வடிவினராகிய கடவுளுடைய அருளால் உனது எண்ணம் நிறைவேறுகின்றது. இனிமேல் உன்னுடைய உள்ளத்தில் இருக்கின்ற துன்பத்தை ஒழித்துவிட்டு இளைப்பாறுவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினார். முனிவருடைய மாண வர்கள் முனிவருடைய எண்ணத்தைக் குறிப்பால் உணர்த்து கொண்டு அரசன் முதலானவர்களை உள்ளே அழைத்துக் கொண்டு சென்றார்கள். நீராடல் முதலியவைகளை முடிக்கச் செய்தார்கள். இனிய உணவினை உண்ணச் செய்தார்கள். நால்வரும் உண்டு இளைப்பாறி மகிழ்ச்சியோடு அங்குத் தங்கியிருந்தார்கள்.

## 6. சோமகாந்தன் தீவினை

### முன்பிறப்பு வரலாறு

பிருகு முனிவருடைய பேரருளைப் பெற்ற சோமகாந்தன் அன்று இரவு முழுவதும் பகிழ்ச்சியோடு உறங்கினான். மறுநாள் காலையில் எழுந்து நாட்கடன்களை நிறைவேற்றினான். பிறகு பிருகு முனிவரிடம் வந்து எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு வணங்கினான் ஆனைமுகக் கடவுளுடைய அடி மலர்களைப் போற்றுகின்ற பிருகு முனிவர் அரசனை வருத்தி வாட்டுகின்ற நோயை நீக்கி அவனை ஆட்கொள்ள வேண்டுமென்று எண்ணினார். ஒரு சிறந்த இருக்கையில் இருக்கச் செய்தார் அவன் முன்பிறப்பில் செய்திருக்கிற நல்வினை தீவினைகளை எடுத்துக் கூறுவதற்கு எண்ணினார். முன்னர்த் தீவினையை எடுத்து மொழியலானார்.

### காமந்தன்

"சோமகாந்த மன்னனே! நீ முன்பிறப்பில் விந்தமலைக்கு அண்மையில் உள்ள கொல்லம் என்னும் பட்டணத்தில் சித்துரூபன் என்னும் வைசியனுக்கும் சுலோசனை என்னும் அவனுடைய மனைவிக்கும் மகனாகப் பிறந்தாய். காமந்தன் என்னும் பெயரைத் தாங்கினாய். நல்ல இளமைப் பருவத்தில் குடும்பினி என்பவளைத் திருமணஞ் செய்து கொண்டு ஏழு பிள்ளைகளையும் ஐந்து பெண்களையும் பெற்றாய். உன்னுடைய தந்தை முதுமையடைந்து மாண்டான். உன்னுடைய தாயும் உடன்கட்டை யேறினாள்.

### தீயொழுக்கம்

தாய்தந்தையர் இறந்த பிறகு உனக்கு அறிவுரை கூறுவார் எவருமிலர். நீ விலைமகளிருடைய மையலில் வீழ்ந்தாய். பெரியோர்கள் தேடி வைத்த பொருள்களையெல்லாம் மாதர்பொருட்டு அழித்தாய். இவை அறமல்ல

வென்று மனைவியானவள் பலவாறு கூறியதையுங் கேளாமல் அணிகலன்கள், வீடுகள், நிலங்கள் முதலானவைகளையெல் லாம் விற்று அவர்களுக்குக் கொடுத்தாய். பிறகு கொடுத்துக் களித்தற்குப் பொருளில்லாதபடியினால் ஐயமேற்றுப் பொருள் தேடித் கொடுத்தாய். சிறிது நாள் பொய்க்கரி, கோள், பொய் முதலியவைகளைக் கூறிப் பொருள் வாங்கிக் கொடுத் தாய். சிறிது நாள் சூதாட்டத்தாலும் களவினாலும் பொருள் தேடித் கொடுத்தாய். சிறிது நாள் வழிப்பறியில் ஈடுபட்டுப் பெண்கள் கைகளில் அணிந்திருந்த வளையல்களையும், கால் களில் அணிந்திருந்த பாடகங்களையும், காதில் அணிந்திருந்த குழைகள் முதலானவைகளையும் பறித்துக் கொடுத்தாய். மேலும் பிறமாதர்களை வலுக்கட்டாயமாகப் பிடித்து அவர்க ளுடைய கற்பைக் கெடுத்தாய். இத்தகைய அளவற்ற தீமைகளையெல்லாஞ் செய்து காமக் கொடுமையினால் மயங் கினாய். எல்லோரும் காமக் கொடியோன் என்று கழறுமாறு திரிந்தாய். உன்னுடைய மனைவியாகிய குடும்பினி தன்னைப் பாதுகாப்பவர் எவருமில்லாமல் மனந் தளர்ந்து பசியால் வருந்திப் பல நாட்கள் பட்டினி கிடந்து பிறகு தன்னுடைய தாய் வீட்டை யடைந்தாள்.

பார்ப்பனக் கொலை

பிறகு நீ அந் நகரில்தானே யிருந்து கள்ளுண்டு, களித்துத் தலைகால் தெரியாமல் உன்னுடைய மனம்போன வாறெல்லாம் தீமைகளைச் செய்துகொண்டு திரிந்தாய். உன்னுடைய செய்கைகளையெல்லாம் அரசன் உணர்ந்து உன்னை நகரத்தில் இருந்து விரட்டிவிட்டான். நீ காட்டிற்குச் சென்று கள்ளர்களோடு கூடிக்கொண்டு வழிப்பறி செய்தல், கொலை முதலியவைகளில் ஈடுபட்டாய். விலங்குகள் பறவைகள் முதலானவைகளைக் கொன்று தின்று பசியைப் போக்கிக் கொண்டாய். ஒரு நாள் நீ தங்கியிருந்த வழியில் கணவர்த்தன் என்னும் பெயரையுடைய அந்தணன் ஒருவன் வந்தான். நீ அவனைக் கண்டவுடன் எழுந்து சென்று வழியை மறித்தாய். அவனுடைய கைகளைச் சேரப் பிடித்துக் கொல்ல முயன்றாய். அவ்வந்தணன் உன்னைக்

கண்டவுடன் அஞ்சி நடுநடுங்கினுன். எமதூதனைக் கண்டாற் போலப் பெருமூச்சு விட்டான். அவன் உன்னைப் பார்த்து, "அப்பா! நான் அந்தணன் என்னைக் கொலை செய்யலாமா? நான் வைத்திருக்கின்ற பொருள்களை யெல்லாம் ஒளிக்காமல் தருகின்றேன். என்னைக் கொலைபுரியாமல் விட்டு விடு. முன்பு ஒரு பெண்ணைத் திருமணஞ் செய்தேன். அவள் மகப் பேறில்லாமல் இறந்துவிட்டாள். பிதிர் கருமங்கட்குப் பிள்ளை வேண்டுமாகையால் இப்பொழுது இரண்டாவது திருமணஞ் செய்திருக்கிறேன். அவள் பிள்ளைகளைப் பெற முடியாத பருவத்தினளாக இருக்கின்ருள். அவளைக் காப்பாற்றுவார் என்னைத் தவிர வேறு எவரும் இலர். நண்பனே! என்னுடைய உயிரை உனக்கு அடைக்கலமாக்கினேன்" என்று கூறிப் பலவாறு வேண்டினுன். நீயோ அவனுடைய சொற்களை ஒரு பொருட்படுத்தாமல் விலக்கி உன்னுடைய விருப்பப் படி அவனைக் கொன்றுவிட்டாய். உடனே உன்னைப் பார்ப்பனப் பழி பற்றிக்கொண்டு பலவகையான தொல்லைகளைச் செய்யத் தொடங்கியது. அதனுற் பல வகையான துன்பங்களை யடைந்தாய். இத் தன்மையான துன்பத்தோடு வருந்தியிருக்கிற காலத்தில் ஒரு நல்வினைப் பயனுங் கிடைக்கப் பெற்ருய். அந்நல்வினைப் பயனுல்தான் இப் பிறப்பில் அரசனுகப் பிறக்கும் பெருமையை அடைந்தாய்" என்று கூறினுர்.

## 7. சோமகாந்தன் நல்வினை

### நல்வினையை நவிலுதல்

மேற்கூறியவாறு கூறிய பிருகு முனிவரைப் பார்த்துச் சோமகாந்தன் வணக்கஞ் செய்தான். "பெரியீர்! அந்த நல்வினையையும் உரைத்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். பிருகு முனிவர் அரசனைப் பார்த்து, "அரசனே! முற்கூறியவாறு நீ பார்ப்பனப் பழியாகிய தீவினையினுல் பல துன்பங்களை நுகர்ந்தவனுய்க் காட்டிற் சுற்றிக் கொண்டிருக்குங் காலத்தில் உனக்கு நடுக்கம், இளைப்பு, கபம், காசம் முதலிய கொடிய நோய்கள் உண்டாயின. காப்பாற்றுதற்கு

எவருமில்லாமல் வருந்திக்கொண்டிருக்கிற பொழுது உன்னுடைய மனைவியை நினைத்துக் கொண்டு அவளிடத்திற் கொரு தூதுவனை அனுப்பினுய். அவன் அவ்வாறே சென்று நீ படுகிற துன்பங்களையெல்லாம் அவளிடஞ் சொன்னுன். அவன் கூறியதைக் கேட்டு உன் மனைவி முதலியவர்கள் அஞ்சினுர்கள் இதனை அரசனறிவானுயின் நம்மனைவரையும் கொலை செய்வான் என்று அஞ்சினுர்கள். தூதுவனைப் பார்த்து, "நீ இச்செய்தியை வெளியே கூருமல் போய் விடு" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டார்கள்.

இதனைத் தூதுவனுல் அறிந்த நீ இனிமேல் யாது செய்வதென்று துன்பப்பட்டுக் கொண்டிருந்தாய். முற் பிறப்பிற் செய்த நல்வினைப் பயனுனது நெருங்கி வந்த காரணத்தால், அந்த வழியிற் சென்ற மறைவன் ஒருவன் உன்னுடைய வரலாற்றை உணராதவனுய் உன்னிடம் வந்து பொருள் இரந்தான். நீ அம் மறையவனுக்கு ஆடையணி கலன்களையும் பொருளையுங் கொடுத்தாய், மேலும் அவனைப் பார்த்து, "இன்னும் அந்தணர்களை அழைத்து வருவாயானுல் அவர்கட்கும் பொருள் கொடுக்கிறேன்" என்று கூறினுய். அவ்வந்தணன் அவ்வாறே பலரிடங் கூறிப் பலரை நின்னிடம் அழைத்துக்கொண்டு வந்தான். நீ அவர்களைக் கண்டதும் வணங்கினுய். அம் மறையவர்கள் உன்னைப் பார்த்து இன்னுன் என்று உணர்ந்து கொண்டார்கள். மனவருத்தமுற்று நகைத்தார்கள். "தானங்கொடுப்பவன் தீவினையாளனுகிய நீயென்று நாங்கள் உணர்ந்து கொள்ளாமல் இங்கு வந்துவிட்டோம். பெருந்தீவினையாளனுகிய உன்னையடுத்தவர்கள். கண்டவர்கள், உன் பெயரைக் கேட்டவர்கள், உன் பெயரைச் சொன்னவர்கள், உன்பால் இரப்பவர்கள் முதலான எல்லோரும் தீவினைக் காட்டில் அகப்பட்டுப் பிறகு நிரயக் குழியில் அழுந்தி வருந்துவார்களே. ஆயினும், உனக்கு அறஞ் செய்யவேண்டுமென்னும் எண்ணம் இருக்குமானுல் இக்காட்டில் ஆனைமுகக் கடவுளுடைய திருக்கோயில் ஒன்று அடிமுதல் முடி வரையில் செடி கொடிகளால் மூடப்பெற்றுப் பழுதடைந்திருக்கின்றது.

அக் கோயிலைத் திருப்பணி செய்து புதுக்குவாயாக'' என்று கூறி அனைவருந் தத்தம் இருப்பிடத்தை யடைந்தார்கள். உன்னைக் கண்ட தீவினை நீங்குமாறு நல்வினைகளைச் செய்து தூயராஞர்கள்.

### திருக்கோயில் திருப்பணி

அந்தணர்கள் உன்னைத் தீவினையாளன் என்று கூறி, நீ செய்வதாகக் கூறிய தருமத்தையும் பெற்றுக் கொள்ளாமல் சென்றதையெண்ணி மனம் வருந்திஞய். எல்லாவகையான இடையூறுகளையும் போக்கிக் காப்பாற்றக் கூடியவர் ஆனைமுகக் கடவுளாகையால் அக் கடவுளுடைய திருக் கோயிலைக் கட்டுவிப்பதைவிடச் சிறந்த அறம் ஒன்றுமில்லை யென்று முடிவு செய்து அது வரையிலும் பல தீய வழிகளில் தேடி வைத்திருந்த பொருள்களை யெடுத்துக்கொண்டு பழுது பட்டிருக்கின்ற ஆனைமுகக் கடவுள் கோயிலுக்குச் சென்ருய். ஆனைமுகக் கடவுளை வணங்கி உன்னுடைய மனக் கவலைகளை யெல்லாம் வாய் விட்டரற்றிஞய்; பலமுறை கீழே விழுந்து வணங்கிஞய் ; ஆடிப்பாடி மகிழ்ந்தாய் ; சிறந்த கம்மியர் முதலாஞேரை வரவழைத்தாய் ; பொன்ஞல் கருவறை செய்வித்தாய்; அதன் முகப்பில் மாணிக்கம் முதலிய மணிகளை இழைப்பித்து, அரைமண்டபம், பெருமண்டபம், மடைப்பள்ளி, வேள்விச்சாலை, விண்ணையளாவி உயர்ந்த மதில் முதலான வைகளை வெள்ளி முதலிய உலோகங்களாலும், கருங்கல் செங்கல் முதலியவைகளாலும், மரங்களிஞலும் தேவத் தச்சர்களுங் கண்டு நாணத் தக்கவாறு செய்வித்தாய்; நான்கு திக்குகளினும் நான்கு கோபுரங்களையும் எழுப்புவித்தாய்; மாடவீதிகள் ஏற்படுத்திஞய் ; வீடுகள் உப்பரிகைகள் முதலானவைகளை வரிசை வரிசையாகக் கட்டுவித்தாய் ; கோயிலின் நான்கு திக்குகளினும் நான்கு தடாகங்களைத் தோண்டுவித்தாய் ; பொன் வெள்ளி முதலியவைகளால் திருக்கோவிலுக்கு வேண்டிய கலன்களைச் செய்வித்தாய் ; ஆதி சைவ அந்தணர்களைக் குடியேற்றிஞய் ; அவர்களைக் கொண்டு ஆனைமுகக் கடவுளுக்குத் திருமுழுக்கு முதலியவை

களைச் செய்வித்தாய்; நாடகசாலை அமைத்து அதில் எல்லா வகையான ஒலிக் கருவிகளையும் முழக்குவித்தாய்; கணிகை மாதர்களைக்கொண்டு ஆடல் பாடல்களைச் செய்யச் செய்தாய்; பொன்னாற் செய்யப்பட்டு ஒன்பதுவகை மணிகள் இழைக்கப் பட்டிருக்கின்ற ஊர்திகள், குடைகள், பல்லக்குகள், தேர்கள் முதலியவற்றைக் கொண்டு திருவிழாக்களையும் நடப்பித்தாய் இவ்வாறு நாள் வழிபாடு சிறப்பு வழிபாடு முதலியன செய்து கொண்டிருக்குங் காலத்தில் உன்னுடைய வாழ்நாள் முடி வெய்தியது. நீ மாண்டு போனாய்.

### இறந்தபின் நிகழ்ந்தது

நீ இறந்தவுடன் எமதூதர்கள் உன்னைக் கொண்டு போய்த் தங்களுடைய அரசன்முன் விட்டார்கள். எமதரும ராசன் சித்திரகுப்தனைப் பார்த்து "இவன் இதுவரையிற் செய்துள்ள நல்வினை தீவினைகளையெல்லாம் முறைமையாக மொழியக் கடவாய்" என்று கட்டளை யிட்டான். சித்திர குப்தன் உடனே நீ அதுவரையிற் செய்திருந்த தீவினைகளை யெல்லாம் நாள் முறைப்படி நவின்றான். மேலும் எமதரும ராசனைப் பார்த்து, "அரசே! இவன் பிறந்தநாள் தொடங்கித் தீவினைகளையே செய்துகொண்டிருந்து இறுதிக் காலத்தில் ஆனைமுகக் கடவுளுக்குத் திருப்பணி செய்தான்" என்று சொன்னான். எல்லாவற்றையுங் கேட்ட எமதருமராசன் சிறிதுநேரம் எண்ணமிட்டான். 'பஞ்சுமலையிலே நெருப்புப் பொறி பட்டது போல' இவன் செய்த தீவினைகளெல்லாம் ஆனைமுகக் கடவுளுக்குத் திருப்பணி செய்த நல்வினையினால் அடியோடு ஒழிந்து போயின. ஆனாலும் இவன் இன்னும் நிலவுலகிற் பிறந்து தீரவேண்டுமென்று முடிவு செய்தான். உன்னுடைய முகத்தைப் பார்த்து, "நீ கணக்கில்லாத தீவினைகளைச் செய்து இறுதிக்காலத்தில் சிறிது நல்வினையைச் செய்திருக்கின்றபடியினால் மேலும் நல்வினை தீவினைகளின் பயனை நுகரவேண்டிய செயல் எஞ்சியுள்ளன. அதனை நீ நுகர்ந்தே ஆகவேண்டும். முதலில் நல்வினைப் பயனை நுகர விருப்பமா? அல்லது தீவினைப் பயனை நுகர

விருப்பமா?'' என்று கேட்டான். நீ நல்வினைப் பயனை நுகர வேண்டுமென்று கூறினுய். எமதரும ராசன் அதற்கு உடன் பட்டான். ஆகவே, நீ இவ்வுலகில் அரசனுகப் பிறந்து நல்வினைப் பயனை முன்னர் நுகர்ந்தாய். பின்னர் இந் நோயினுல் தீவினைப் பயனை நுகர்கின்றனை. இத் தீவினைப் பயனும் ஒழியுமாறு அவ்விநாயகக் கடவுளை வழிபடவேண்டு மென்று கூறினுர்.

## 8. சோமகாந்தன் நோய் தீர்ந்தது

### ஐயத்தின் பயன்

பிருகுமுனிவர் மிகுந்த அருளோடு கூறியருளிய செய்தி யில் சோமகாந்தனுக்கு நம்பிக்கை யுண்டாகவில்லை. உடனே அவனுடைய உடலில் இருந்து ஆயிரம் வலியன் பறவைகள் வெளிப்பட்டன. அவை வச்சிரத்தால் அமைத்தாற் போன்ற தம்முடைய மூக்குகளினுல் அரசனுடைய தொழு நோய் பொருந்திய உடல்முழுவதுங் குத்தித் தசைகளை யெல்லாம் பிடுங்கித் தின்றன. அதனுல் அரசன் மிகுந்த அச்சத்தை யடைந்தான். அத் துன்பத்தைப் பொறுக்க முடியாமல் வருந்தினுன். பிருகுமுனிவருடைய திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்தான். ''மேலான தவத்தை யுடையவரே! அடைக்கலம்! அடைக்கலம்!! தேவரீரைத் தவிர அடியேனுக்கு வேறு கதியில்லை. தேவரீர் என்னைக் கைவிட்டாலும் நான் தேவரீரை விட்டு நீங்க மாட்டேன். தேவரீரை எண்ணுகின்றவர்கள் எவ்வளவு தொலைவில் இருந்தாலும் அவர்களை நமன் அணுக மாட்டானே! அவ்வாருகத் தேவரீருடைய திருமுன்பு இருக்கும் என்னை வலியன் கூட்டங்கள் படுத்துகின்ற பாட்டைத் தேவரீர் பார்த்துக் கொண்டிருக்கின்றீர்களே. இது தேவரீருடைய திருவருளுக்கு ஏற்றது ஆகுமோ? தேவரீருடைய இருப் பிடத்தின் பக்கத்தில் வாழுகின்ற பறவைகளும் விலங்குகளும் பகையின்றி உறவாடுகின்றனவே. அவ்வாருகத் தேவரீ ருடைய திருவடிகளைச் சார்ந்த அடியேனுக்கு இத்தகைய

துன்பம் நேரிடலாமோ ? அடியேனுடைய துன்பத்தைப் போக்கி ஆட்கொள்ளாமலிருப்பது தேவரீருடைய திரு வருளுக்கு ஏற்றதாகுமோ?'' என்று இப்படிப் பலவாறு ஓல மிட்டான்.

முனிவர் பறவையை விரட்டல்

அரசனுடைய மனைவியாகிய சுதன்மையும் அரசனுக்கு ஏற்பட்டிருக்குந் தொல்லையைப் போக்கியருள வேண்டு மென்று வேண்டிக்கொண்டாள். அமைச்சர்களும் பிருகு முனிவரைச் சூழ்ந்துள்ள பிற முனிவர்களும் அரசனுக்கு அருள்புரிய வேண்டுமென்று பிருகுமுனிவரை வேண்டினர். பிருகு முனிவர் சோமகாந்தனைப் பார்த்து, ''அரசனே! யாம் கூறிய மொழிகளை நீ உண்மையென்று நம்பவில்லை. இவர் கூறுவது உண்மையாக இருக்குமா என்று ஐயங் கொண் டாய். அதனால் உனக்கு இத்தகைய கொடிய துன்பம் உண்டாகியது. இனிமேலாயினும் யாம் இயம்புபவற்றை ஐயப்படாமல் நம்பக் கடவாய்'' என்று கூறினர். பிறகு வலியன் பறவைகளைப் பார்த்து ஓர் அதட்டல் போட்டார். அவ்வளவில் அப்பறவைகள் அனைத்தும் விண்ணிற் பறந்து போய்விட்டன.

பூதம் வெளிப்படுதல்

பிறகு சோமகாந்தன் பிருகுமுனிவர் கூறியருளிய தன்னுடைய பழம்பிறப்புச் செய்திகளெல்லாம் உண்மையே என்று நம்பி மகிழ்ச்சி கொண்டான். சுதன்மை முதலிய எல்லோரும் தங்கள் தங்கள் துன்பம் நீங்கி இன்பமடைந் தார்கள். பிருகு முனிவர் தம்முடைய நீர் ஏனத்தில் (கமண்டலத்தில்) தண்ணீரை நிரப்பினர். ஆனைமுகக் கடவுளை உள்ளத்தில் எண்ணினர். இவ்வேந்தனுடைய நோயைப் போக்கியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டு ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை நூற்றெட்டு முறை உருவேற்றினர். பிறகு மந்திர நீரை அரசன் மீது தெளித் தார். அரசன் பழம் பிறப்பிற் செய்த தீவினைகளெல்லாம்

ஒன்ருகச் சேர்ந்து ஓருருக் கொண்டதைப் போலப் பூதம் ஒன்று வெளிப்பட்டு நின்றது. அதனுடைய தோற்றம் காண்போர்க்கு அச்சத்தைத் தருவதாக இருந்தது.

### தீவினைப் பூதம் தீயிற்பட்டு மாளல்

அப்பூதம் "நறநற" வென்று பற்களைக் கடித்தது. தீப் பொறி பறக்குமாறு கண்களை அகல விழித்தது. அஃது அரசனைப் பார்த்து "ஓ அரசனே! முற்காலத்திலே உன்னுடைய படைக்கல வன்மைகளையெல்லாங் காட்டினையே. அவ்வன்மைகளை இப்பொழுது காட்டு பார்க்கலாம்" என்று மிகுந்த கடுமையோடு அரசனை எதிர்த்து நின்றது. பிருகு முனிவர் அதட்டி அச்சுறுத்தி அப்பூதத்தை நிறுத்தினர். அரசன் பக்கத்திற் செல்லாமல் தடை செய்தார். பூதத்தைப் பார்த்து, "ஓ பூதமே! நீ யார்? உன்னுடைய வரலாறு யாது?" என்று உசாவினர். அப்பூதம் முனிவரைப் பார்த்து, "அடிகாள்! நான் இவ்வரசனைப் பிடித்திருந்த பிரமகத்தி என்னும் பெயரினையுடைய பெருந்தீவினை. தேவரீர் தெளித்த மறைநீரினலே இவ்வரசனை விட்டு வெளிப்பட்டேன். எனக்கு மிகுந்த பசியாக இருக்கின்றது. தேவரீர் அருள் செய்தால் இப்பொழுதே இவ்வரசனையும் இவன் மனைவியையும் இரண்டு அமைச்சர்களையும் தின்று விட்டுச் செல்வேன்" என்று செப்பியது. முனிவர் அப் பூதத்தைப் பார்த்துப், "பூதமே உனக்கு நன்மையுண்டாகத் தக்க காரியத்தையே கூறுகின்ேரும். நீ அம்மரத்தின் பொந்துக்குட் புகுவாயாக" என்று கூறினர். பூதம் முனிவர் காட்டிய மரப் பொந்துக்குள் நுழைந்தது. அவ்வளவில் அப்பூதமும் மரமும் ஒரு நொடிப் பொழுதில் எரிந்து சாம்பராயின.

### நற்கதி

பிறகு அப்பூத உடலுக்குள்ளிருந்த உயிரானது மிகச் சிறந்த உடலோடு தேவவடிவம் பெற்றுப் பிருகுமுனிவருடைய அடிகளிலே வணங்கியது. "அருட்கடலே! இத்தீவினையாளன் முன்காலத்தில் படைக்கலத்தினல் என்னைக்

கொலை செய்து விட்டனன். அந்தத் தீய சாவினால் ஒய்வில்லாத துன்பத்தை நுகர்ந்து கொண்டிருந்தேன். இப்பொழுது தேவரீருடைய திருவருளால் நல்லகதி கிடைத்தது'' என்று கூறிக் கொண்டிருக்கும்போது ஆனைமுகக் கடவுளுடைய கட்டளையினால் விண்ணில் இருந்து ஒரு தெய்வ விமானம் இறங்கியது. அவ்விமானத்தில் பூத உயிர் ஏறிக்கொண்டு விண் வழியே சென்றுவிட்டது. அங்கிருந்தவர்கள் அப் புதுமைகளையெல்லாம் பார்த்து வியந்திருந்தார்கள்.

## புராணங் கேட்கக் கட்டளை

பிருகு முனிவர் சோமகாந்த மன்னனைப் பார்த்து, "அரசனே! இது வரையிலும் உன்னைத் தொடர்ந்திருந்த பிரமகத்தி ஒழிந்து போனதைக் கண்டாய். உன்னுடைய உடலைப்பற்றிய தொழுநோய் நீங்குவதற்கு நீ ஆனைமுகக் கடவுளுடைய புராணத்தைக் கேட்டல் வேண்டும். அவ்வாறு கேட்பின் நோயே யன்றி எல்லாவகையான துன்பங்களும் ஒழிந்து போகும். நான் அப்புராணத்தைக் கேட்டிருக்கின்ற பெருமையினால்தான் என்னையடுத்த உன்னுடைய தீவினையும் விலகிப் போய்விட்டது. அப்புராணத்தைக் கேட்டாலன்றி உன்னுடைய நோய் ஒழிய மாட்டாது. பெருமை பொருந்திய ஆனைமுகக் கடவுளின் புராணத்தை முன்னாளில் சிவபெருமான் நான்முகனுக்கு நவின்றார். நான்முகன் வேதவியாசருக்கு உரைத்தான். வேதவியாசர் எனக்குக் கூறினார். மேலும் முன் காலத்தில் தக்கன் சிவபெருமானை இகழ்ந்து வேள்வி செய்தபோது சிவபெருமானுடைய சினத் தீயினின்று தோன்றிய வீரபத்திரரால் அவனுடைய வேள்வி யழிந்து துன்பமடைந்தான். பிறகு அத்துன்பம் நீங்குமாறு தக்கன் முற்கல முனிவரை யடைந்து அவருடைய அடிகளைப் பணிந்து அன்பு செய்து கொண்டிருந்தான். அதனால் அம்முனிவர் உள்ளம் இரங்கினார். ஆனைமுகக் கடவுளுடைய பெருமையைக் கூறியருளினார். அவற்றைத் தக்கன் அன்போடு கேட்டபடியினால் துன்பங்கள் நீங்கிச் சிவபெருமானுடைய திருவருளுக்கு உரியவனானான். எல்லா வகையான தீவினை

களையும் ஒரே சமயத்தில் ஒழிப்பதும், உடலில் உண்டாகிய நோய்களைப் போக்கி வேண்டிய மேன்மைகளைக் கொடுப்பதும், நாளுக்கு நாள் மிகுந்த நன்மையைத் தருவதும், இப்பிறப்பில் தவங்கள் முதலிய நல்வினையிற் செலுத்தி, மறுமையில் வீடு பேற்றைக் கொடுத்துக் காப்பதும் ஆனைமுகக் கடவுளுடைய பெருமை பொருந்திய புராணமேயாகும். நல்வினையுடையவர்கள்தாம் ஆனைமுகக் கடவுளுடைய புராணத்தைக் கேட்பார்கள். நல்வினையுடையவர்கட்குத்தான் ஆனைமுகக் கடவுளுடைய புராணத்தைக் கூறவேண்டுமே யல்லாமல் மற்றவர்கட்குக் கூறுதல் கூடாது. நீ அப்புராணத்தைக் கேட்பதற்குத் தகுதியுடையவனுகையால் உனக்கு அப்புராணத்தைக் கூறுகின்ருேம். நீ நீராடி வரக் கடவாய்'' என்று கட்டளையிட்டார்.

### நோய் நீங்குதல்

பிருகு முனிவர் கூறியவற்றையெல்லாம் சோமகாந்தன் செவிக்கமுதமாகக் கேட்டான். உடனே பிருகு முனிவர் பெயரால் வழங்கும் புனித நீருக்குச் சென்று அதனை வணங்கி நீராடினுன். நாட்கடன்களையெல்லாம் முறையாகச் செய்து முடித்தான். ஆனைமுகக் கடவுளுடைய புராணத்தைக் கேட்பதற்கு உள்ளத்தில் உறுதி கொண்டான். அப்பொழுதே அரசனுடைய உடலில் இருந்த தொழுநோய் நீங்கியது. அதனல், அரசனுடைய உடல் அழகுபெற்று விளங்கியது. அரசன் தன்னுடைய உடலைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். உடனே பிருகு முனிவரிடத்திற்கு வந்து அவரை வணங்கினுன். "பெரியீர்! அடியேனை வருத்திக்கொண்டிருந்த நோய் நீங்கியது. அருள் வடிவாக விளங்குந் தேவரீரை அடுத்தவர்கட்குக் கிடைக்காத பொருள் உலகத்தில் யாதிருக்கின்றது? திக்கற்றுத் துன்புற்றிருந்த எளியேனை ஈண்டழைத்துப் பேரருள் புரிந்த தேவரீருடைய அருட்டிறத்தை யான் என்னென்று புகழ்வேன்? பேரருள் செய்த தேவரீருக்கு என்னுயிரைத் தவிர யான் வேறு எதனை உதவுவேன்? இனிமேல் தேவரீர் அருள் செய்து ஆனைமுகக்

கடவுளுடைய புராணத்தை அடியேனுக்குத் திருவாய் மலர்ந் தருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். பிருகு முனிவர் அரசனிடத்தில் உள்ளம் இரங்கினர். தம்முடைய தாமரை மலர்க்கைகளால் அரசனுடைய உடலைத் தடவிக் கொடுத்தார். தம்முடைய சிறந்த இருக்கைகளில் ஒன்றை அரசனுக்குக் கொடுத்து அதில் இருக்கச் செய்தார். முனிவருடைய கையால் தடவப்பெற்ற பெருமையாலும் முனிவருடைய இருக்கையில் அமர்ந்திருக்குஞ் சிறப்பாலும் அரசனுடைய உடல் முன்னையினும் பன்மடங்கு ஒளிமிகுந்து விளங்கியது. அப்புதுமையைக் கண்ட அனைவரும் மிகுந்த வியப்படைந்தனர். துன்பக் கடலிற் படிந்திருந்த சுதன்மையும் அமைச்சர்களும் தேவாமுத முண்டவர்களைப்போல் மகிழ்ச்சியடைந்தார்கள். பிறகு முனிவர் விநாயக புராணத்தை அரசனுக்குக் கூறலானர்.

## 9. வியாசமுனிவர் நான்முகனை யடுத்தது

**பிருகுமுனிவர் உரை**

பிருகு முனிவர் அரசனைப் பார்த்து, ''அரசனே! முன்னொரு காலத்தில் மூன்றுலகங்களினுமுள்ள உயிர்த் தொகைகள் செய்த வினையினல் மறைகள் முறை தடுமாறின்றன. அதனல் மண்ணவரும் விண்ணவரும் மற்றவர்களும் தீவினைக்கு ஏதுவாகிய காரியங்களைச் செய்து கொண்டு திரிந்தனர். இதனைப் பார்த்துத் திருமாலும் நான்முகனும் தேவர்களோடு திருக்கைலையை அடைந்து சிவபெருமானைப் போற்றிப் பணிந்தார்கள். பிறகு சிவபெருமானைப் பார்த்து, ''உலகின்கண் ணுள்ளவர்கள் மயக்கத்தினை யடைந்துள்ளனர். தேவரீரைப் பரம்பொருளென்று எண்ணமல் எம்மைப் பரம்பொருளாக எண்ணித் தடுமாற்ற மடைந்துள்ளனர். சிலர், கடவுள் வேறில்லை, நாங்கற்ற நூலுணர்ச்சியே மெய்ம்மைப் பொருள் என்று எண்ணியிருக்கின்றனர். திருநீறு சிவமணி முதலியவைகளை மறந்து தமக்கு விருப்பமான குறிகளை அணிகின்றனர். சிலர் உண்ணல், உடுத்தல்,

புணருதல், களித்தல் என்னும் இவையல்லாமல் வேருெரு வீடுபேறும் இல்லையென்று எண்ணி யிருக்கின்றனர். இவற்றைத் தேவரீர் உணர்ந்திருப்பினும் அறிவிக்க வேண்டியது எமது கடமையாகலின் அறிவித்துக் கொண்டோம்'' என்று உரைத்தனர்.

### சிவபெருமான் உரை

சிவபெருமான் திருமாலைப் பார்த்துத், "திருமாலே! உன்னுடைய கலைகளில் ஒன்றைக் கொண்டு நிலவுலகத்தின் கண் பிறப்பெடுத்துப் பலவாறு மாறுபட்டிருக்கின்ற மறைகளைத் தொகுத்து அவற்றை நான்கு வகையாக முறைப் படுத்தி அவற்றை முனிவர்கட்குரைத்து அவர்களைக்கொண்டு உயிர்த்தொகைகளின் சிற்றுணர்வைப் போக்கி அவற்றை நல்வழிப்படுத்தக் கடவாய். ஆகமம் என்று பெயருள்ள மெய்யறிவுநூல் ஒன்று உள்ளது. அது நம்முடைய பெருமையையே முதன்மையாக விளக்கும். மேலும் படித்தவர்களைத் தூயவர்களாக்கவல்ல பதினெண் புராணங்களுள்ளன. அவற்றை நந்திக்கு உரைத்திருக்கின்ரேம், அவன் சனற்குமாரனுக்கு முறைமையாகக் கற்பித்திருக்கின்ருன். அவனிடத்தில் அப்புராணங்களை உணர்ந்து அனைவருக்கும் உணர்த்தி அறிவு விளங்கச் செய்வாயாக'' என்று அருள் செய்தார். அதற்கிசைந்த திருமாலானவர் சிவபிரானிடம் விடைபெற்றுக்கொண்டு நான்முகன் முதலானவர்களோடு அங்கிருந்து சென்ருர்.

### வேதவியாசர் பிறப்பு

பிறகு திருமால் நிலவுலகில் பிறப்பெடுப்பதற்குச் சமயத்தை எதிர்நோக்கி யிருந்தார். நிலவுலகிற் சிறந்த பெருமையோடு விளங்கியிருந்த பராசர முனிவர் ஒருநாள் ஓடமேறிக் கங்கையைக் கடந்து சென்ருர். அப்பொழுது நல்வேளை ஒன்று நேரிட்டபடியினுல் ஓடஞ் செலுத்திய மச்சகந்தியை யோசனை கந்தியாக்கித் தழுவினர். அச் சமயத்தில் திருமால் அவளுடைய கர்ப்பத்திற் புகுந்து தண்டு

கமண்டலத்தோடு பிறந்தார். அவர்களிடத்தில் உடன்பாடு பெற்றுக்கொண்டு வதரிகாச்சிரமம் என்னும் இடத்திற்குச் சென்று அங்குத் தங்கினுர். அக்காரணத்தினுல் அவருக்கு வாதராயணர் என்னும் பெயருண்டாகியது.

### வாதராயணர் வேதவியாசராதல்

வாதராயணர் சிவபெருமானுடைய திருவருளால் மறைகளையும் அறிவு நூல்களையும் ஒருவரிடத்தும் ஓதா துணர்ந்து மறைகளை நான்காக வகைப்படுத்தினுர். இதனுல் இவருக்கு வேதவியாசர் என்று பெயர் உண்டாகியது. சனற்குமாரரிடத்தில் பதினெண் புராணங்களையும் ஓதி உணர்ந்து தெளிந்தார். பிறகு அப் புராணங்களைச் செய்யுள் வடிவமாகச் செய்யத் தொடங்கினுர்.

### இடையூறு

அவ்வாறு தொடங்கியவர் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபடாமற் செய்யத் தொடங்கினுர். அக் காரணத்தினுல் வேதவியாசர் எண்ணிய காரியத்திற்கு இடையூறு உண்டாயிற்று. எத்தகைய பொருளும் விளங்கவில்லை. ஊமையைப் போல் மயங்கினுர். தமக்கேற்பட்ட மயக்கத்தைக் கண்ட வேதவியாசர் சத்தியலோகத்தை யடைந்து நான்முகனைக் கண்டு வணங்கினுர். நான்முகன் வேதவியாசரைப் பார்த்து, ''என்ன செய்தி?'' என்று உசாவினுன். வேதவியாசர் நான்முகனைப் பார்த்து, "உலகத்து மக்கட்கு நற்கதியை உண்டாக்கத்தக்க புராணங்களை உள்ளங்கை நெல்லிக்கனி போல யாவருக்கும் விளங்கும் வண்ணம் தெளிவாகக் கூற வேண்டுமென்று தொடங்கினேன். என்னுடைய அறிவானது மழுங்கிப் பித்தங்கொண்டவனுடைய அறிவைப் போல் ஆகிவிட்டது. இவ்வாறு ஆகக் காரணம் யாது என்பதை அடியேனுக்குக் கூறியருள வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக்கொண்டார்.

**நான்முகன் உண்மையை உணர்த்தல்**

வேதவியாசர் விளம்பிய மாற்றங்களைக் கேட்ட நான்முகன் சிறிதுநேரம் ஆழ்ந்த எண்ணத்தில் இருந்தான். வேதவியாசருக்குண்டான தடுமாற்றத்தின் காரணத்தை அறிந்துகொண்டான். அவன் வேதவியாசரைப் பார்த்து, "பழைமையானவ ராகவும் தூய்மையானவ ராகவும் எங்கும் நிரம்பியவ ராகவுமுள்ள ஆனைமுகக் கடவுளுடைய அருளில்லா விட்டால் எத்தகைய அறிவாற்றல் படைத்தவர்களாகவிருந் தாலும் எடுத்துக்கொண்ட காரியம் இனிது நிறைவேற மாட்டாது. ஆனைமுகக் கடவுளை முதலிற் போற்றுமல் அளவற்ற பேர் தாங்கள் தொடங்கிய காரியங்களை முடிக்க முடியாமல் இழிவடைந்தார்கள். பறவைகட்கரசனுகிய கருடன் முன்காலத்தில் அமுதங் கொண்டு வருவதற்காகச் சென்று சினத்தினுலும் ஆணவத்தினுலும் ஆனைமுகக் கடவுளைப் போற்றுதபடியினுல் திருமாலுக்கு ஊர்தியாகி இன்னமுந் திருமாலைச் சுமந்துகொண்டு திரிகிருன். உருத்திரனிடத்தில் தோன்றிய அனுமான் ஆனைமுகக் கடவுளை முதலில் எண்ணுதபடியினுல் வீடுபேற்றையடையாமல் இராமனைச் சுமந்துகொண்டு திரியலானுன். இராமனும் முதலில் வாலியோடு போர்செய்யத் திறமையில்லாமல் ஒடுங்கி நின்ருன். ஓம் என்பதனை முதலாகவுடைய மறை கட்கு நீ முன்பு எல்லைகட்டியபோது ஓம் என்பது முன்னர் அமைந்து நின்றபடியினுல் அதுவே ஆனைமுகக் கடவுளுடைய வணக்கமாகி நீ எடுத்த காரியம் இடையூறின்றி நிறை வேறியது. ஓம் என்கிற சொல்லே ஆனைமுகக் கடவுளுடைய வடிவமாகும். முன்னுளில் சிவபெருமான் மறையைச் சொல் வதற்குத் தொடங்கிய காலத்தில் தாம் எடுத்த காரியம் இனிது கைகூட வேண்டுமென்றே ஓம் என்பதனை முதலில் அமைத்துப் பிறகு மறையை ஓதினுர். எல்லோருந் தாங்கள் முயல்கின்ற எல்லாக் காரியங்கட்கும் ஓங்கார வடிவராக இருக்கின்ற ஆனைமுகக் கடவுளை முதலிலேயே வணங்கு தற்குத்தான் எல்லா மறைகட்கும் முன்பாக இவ்வோங் காரத்தை வைத்துள்ளனர். தலைமை பெற்ற தெய்வமாக

இருக்கின்றவரும் எல்லாக் காரியங்களையும் முடிப்பவரும், தம்மை யெண்ணுதவர்கட்கு இடையூறு செய்பவரும் ஆனை முகக் கடவுளே ஆவர். அத்தன்மை வாய்ந்த முதற் கடவுளை மனத்தால் நினைக்காமலும் வாயால் வாழ்த்தாமலும் உடலால் வணங்காமலும் நமக்கு எவரும் நிகர் அல்லர் என்கிற கல்விச் செருக்கினுலும் உன் விருப்பம்போல் புராணத்தைச் சொல்லத் தொடங்கினுய். அதனுல் இவ்வளவு தொல்லைகள் வந்து சேர்ந்தன. இனியேனும் ஆனைமுகக் கடவுளை வணங்கி எக்காரியத்தையுஞ் செய்யத் தொடங்குவாயாக. ஆனைமுகக் கடவுளைப் போற்றுமல் ஒருபுராணத்தைச் செய்யத் தொடங்கு வாயானுல் ஆயிரங் கற்பகோடி காலமானுலும் ஒரு பாயிரங் கூடச் சொல்ல முடியாது. ஆகவே, அக்கடவுளை வழிபட்டுக் காரியத்தை நிறைவேற்றுவாயாக'' என்று நான்முகன் வேத வியாசருக்குக் கூறியதாகச் சோமகாந்தனுக்குப் பிருகுமுனிவர் கூறினுர்.

## 10. வேதவியாசர் அருளுரை பெற்றது

**வியாசருக்கு நான்முகன் அறிவுரை**

சூதமுனிவர் சவுனகர் முதலான முனிவர்களைப் பார்த்துக் கூறுகிருர்: "முனிவர்களே! பிருகுமுனிவர் மேலுஞ் சோமகாந்த மன்னனைப் பார்த்துச் சொல்லுகிருர். நான்முகன் நவின்றவைகளை யெல்லாங் கேட்ட வேதவியாசர் கேட்டன முழுவதும் உண்மையே என்று மனமகிழ்ந்தார். மேலும் நான்முகனைப் பணிந்து, "பெரியீர் ஓங்காரவடிவராக இருக்கின்ற அந்த ஆனைமுகக் கடவுளை வழிபடத் தக்க முறை எப்படி?'' என்று உசாவினுர். நான்முகன் வியாசரைப் பார்த்து, "வியாசமுனியே! கணேச மறையில் ஏழுகோடி மந்திரங்கள் உரைக்கப்பட்டுள்ளன. அந்த ஏழு கோடி மந்திரங்களினும் ஆறெழுத்து மந்திரஞ் சிறந்ததாகும். ஓர் எழுத்துமறையை உன்னுடைய மயக்கம் நீக்குமாறு உரைக் கின்றேம். நீ தடாகத்திற்குச் சென்று நீராடி வருவாயாக''

என்றுன். வியாசர் அவ்வாறே நீராடிவந்தார். அந்தணர் கட்குரிய முறைப்படி செய்யவேண்டிய தூய்மைச் சடங்கு களையுஞ் செய்து ஓரெழுத்துமறையை நான்முகன் உரைத் தருளினுன். அம்மறையை எண்ணவேண்டிய முறையையுந் தெளிவாக உரைத்தான். மேலும் வியாசரைப் பார்த்து, "இடையூ றில்லாத நல்ல இடத்தில் இருந்து மந்திரநீரில் செய்யவேண்டிய தூய்மைகளைச் செய்து இம்மறையை எண்ணுவாயாக! இம்மறையின்பலன் கைகூட வேண்டு மெனின் இதற்குரிய ஆனைமுகக்கடவுளின் திருவுருவத்தை மனத்தில் எண்ணி வழிபடக்கடவாய். நாள்தோறும் வழி பட்டு உன்னுடைய ஆற்றலுக்கு ஏற்றவாறு உருவேற்றிக் கொண்டிருப்பாயாஞல் எங்கும் நிறைந்திருக்கின்ற ஆனை முகக்கடவுளானவர் உன்னெதிரில் காட்சி கொடுத்தருளுவார். அப்பொழுது நீ அவரை வணங்கிப் போற்றுவாயாஞல் நீ கேட்கும் மேன்மைகளையெல்லாங் கொடுத்தருள்வார். இவ்வாறு வழிபட்டுச் சித்தி பெற்றவர்கள் எல்லாவகையான நோய்களும் நீங்கத் தாங்கள் தொடங்கிய காரியங்கள் யாவும் இடையூறில்லாமல் இனிது கைகூடப் பெறுவார்கள். இறுதியில் வீடுபேற்றையும் அடைவார்கள். ஆனைமுகக் கடவுளை வழிபடுகின்றவர்களை விருப்பத்தோடு காண்கின்றவர் களும், அவர்களுடைய குணங்களைக் குறித்துப் பேசுகின்றவர் களும், அவர்களோடு அன்புடன் கூடியிருக்கின்றவர்களும் நற்கதியைப் பெறுவார்கள். கடவுளில்லையென்று கூறு கின்றவர்களும், ஒழுக்க மற்றவர்களும், தீயோர்களும், கள்ளர் களும் ஆகிய பொல்லாதவர்கட்கு இவ்வருமறையை உரைத்தல் கூடாது. உரைப்பார்களாயின் உரைப்பவர்கள் கொடிய நிரயத்தை யடைவார்கள்.

### அறிவுரை பெறத்தக்கவர்க்ள்

வணக்கம், அன்பு, அருள், ஒழுக்கம், மறைநெறிகளிற் பற்று, நல்லோரிடத்தில் இணக்கம், மந்திரத்தைப் போற்ற வேண்டும் என்னும் எண்ணம் இவை முதலான நல்லியல்புடை யவர்களுக்கு அறிவுரைகூற வேண்டுமாயின் முறைப்படி அவர்

கட்குத் தூய்மைச் சடங்கு (தீட்சை) செய்து கூறுதல் வேண்டும். முறையறிந்து உரைப்பவர்களும் உரைக்கப் பெறுபவர்களும் நற்பலனை அடைவார்கள். இவ்வழிபாட்டு முறையை முன்பு சிவபெருமான் எம்மீது அருள் சுரந்து கூறிய முறைப்படியே உனக்குக் கூறினேம்'' என்றனன். வியாசமுனிவர் மேலும் நான்முகனைப் பார்த்துப் "பெரியீர்! இதற்குமுன் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுப் பேறுபெற்றவர் களுடைய வரலாறுகளையும் அடியேனுக்கு உரைத்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். நான்முகன் வியாசமுனிவரைப் பார்த்துத் "தேவர், தானவர், சித்தர், முனிவர் முதலான கணக்கற்றபேர் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுப் பேறுபெற்றிருக்கிருர்கள். அவர்களுட் சிலருடைய வரலாற்றைக் கூறுகிறேன்'' என்று கூறியதோடு அவ் வரலாறுகளையெல்லாம் உரைத்தனன். அப்பொழுது நான்முகன் கூறிய வரலாறுகள் : உலக வடிவங் காட்டியது, படைப்பு, ஆனைமுகக்கடவுள் திருமணம், திருமால் ஆறெழுத்து மறையைப் போற்றியது, மக்கட்பேறு வேண்டிக் காட்டிற்குச் சென்ற வீமராசன் விசுவாமித்திர முனிவரை யடுத்தது, முற்கல முனிவருடைய வடிவத்தில் படிந்துவந்த காற்றினுல் தக்கன் நோய் நீங்கியது, தக்கனுக்கு முற்கலர் அருளுரை வழங்கியது, ஆனைமுகக் கடவுள் வல்லாளனுடைய துன்பத்தை நீக்கியது, வல்லாளன் வீடு பெற்றது, தக்கன் அரசாட்சி, வீமன் அருளுரைபெற்றது, உருக்குமாங்கதன் தீமொழிபெற்றது, நாரதர் உருக்குமாங்கதனுக்குத் தீமொழித் தீர்வு கூறியது, இந்திரன் சாபம் பெற்றது, கடவுளர் குருவுக்குக் கவுதமர் அருளுரை வழங்கியது, இந்திரன் அருளுரை பெற்றது, இந்திரன் வழிபட்டது, உருக்குமாங்கதன் வீடுபேறடைந்தது, கிருச்சமதர் அருளுரை பெற்றது, கிருச்சமதர் மேன்மை பெற்றது, திரிபுரன் வரம் பெற்றது, திரிபுரன் அரசாட்சி, தேவர்கள் வரம் பெற்றது, விமலன் விநாயகர் அருள்பெற்றது, முப்புரம் எரித்தது, உமை விநாயக சதுர்த்தி விரதங் கேட்டது, கடைப் பிடித்தது, கர்த்தமன் விநாயக சதுர்த்தி கடைப் பிடித்தது, நளன் விநாயக சதுர்த்தி கடைப்பிடித்தது,

சந்திராங்கதன் விநாயக சதுர்த்தி கடைப்பிடித்தது, சண்முகர் கடைப் பிடித்தது, மன்மதன் உருவம் பெற்றது, ஆதிசேடன் கடைடப்பிடித்தது, இந்திர விமானம் மண்ணில் இறங்கியது, புருசுண்டி சங்கட்ட சதுர்த்தி நோன்பு கடைப் பிடித்தது, கிருதவீரியன் தவம், அங்காரகன் கடைப்பிடித்தது, சந்திரன் நோற்றது, விடை கரம் புலேச்சி வீடுபேறு, அறுகு வழிபாடு, அறுகை இரந்தது, அறுகைத் துலேயேற்றியது, வன்னியின் பெருமை, வாமனர் வரம் பெற்றது, கீர்த்திமகப் பெற்றது, நஞ்சு நீங்கியது, சமிமந்தாரத் தோற்றம், தேவர்கள் தீமொழி தீர்த்தது, கிப்பிரப்பிரசாதனன் வரம் பெற்றது, கிருதவீரியன் மகப்பேறு, இந்திர விமானம் விண்ணெழுந்தது, சூரசேனன் வீடுபேறு, பரசுராமன் வரம் பெறுதல், இராவணன் வழிபட்டது, அகத்தியர் வழிபட்டது, காசிபர் முதலியோர் போற்றியது, ஆயிரம் பெயர், வக்கிர துண்டர் தோற்றம், சிந்தாமணி விநாயகர் தோற்றம், ஆனே முகர் தோற்றம், விக்கினராசர் தோற்றம், மயூரேசர் தோற்றம், பிந்திய மயூரேசர் தோற்றம், பாலசந்திரர் தோற்றம், தூமகேது தோற்றம், கணேசர் தோற்றம், கணபதி தோற்றம், மகோற்கடர் தோற்றம், உடுண்டி விநாயகர் தோற்றம், வல்லபை கணேசர் தோற்றம், அருளுரை என்பனவாம்.

கணேச கீதை

மேலும் நான்முகன் வியாசமுனிவரைப் பார்த்து, "மறை முதலிய நூல்களினும் மற்றெவ் வகையான வழியினும் அறிதற்கரிய ஆனேமுகக் கடவுளுடைய இவ்வரலாருனது தேவர்கள் முனிவர்கள் முதலியோரால் நாள்தோறும் போற்றிப் படிக்கத் தக்கது. உலகத்தொடர்பு முதலியவற்றை ஒழிக்கத்தக்கது. தங்களுடைய விருப்பங்களே நிறைவேற்றிக் கொள்ள எண்ணுகிறவர்கள் இப்புராணத்தை இடைவிடாமற் படித்து அவ்விருப்பங்களே நிறைவேற்றிக் கொள்ளலாம்" என்று கூறினுன். இவற்றையெல்லாங் கேட்ட வியாசர் "திருமாலுக்கு ஆனேமுகக் கடவுள் யோகஞான தத்துவங்களே உரைத்தருளினுர் என்று பொதுவாகக் கூறினீர்களே அதனே

விளக்கமாக அடியேனுக்கு உரைத்தருள வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். நான்முகன் அக் கணேச கீதையை வியாசருக்குத் தெளிவாக உரைத்தனன். அக் கீதை வழி முறையாகவந்து உலகில் விளங்கலாகியது. அக்கீதையினைத் தீயோர்கள் கேட்பாராயின் தீவினையாவும் ஒழிந்து நன்னெறியை அடைவார்கள். நல்லோர்கள் கேட்பாராயின் ஆனைமுகக் கடவுளுடைய அடிகளை அடைந்து பேரின்பக் கடலில் மூழ்கியிருப்பார்கள். ஆனைமுகக்கடவுளைத் தேவர்கள் முதலியோர் வழிபட்ட வரலாறுகள் அக்கடவுளின் திரு விளையாடல்கள் முதலியவைகளைக் கூறுகிறேன்'' என்று நான்முகன் வியாசருக்குக் கூறலானான்.

## 11. மூவர் போற்றியது

முன்னுரை

நான்முகன் வேதவியாசருக்குக் கூறிய ஆனைமுகக் கடவுளின் பெருமையைப் பிருகுமுனிவர் சோமகாந்தனுக்குக் கூறியபடி சூதமுனிவர் சவுனகர் முதலிய முனிவர்களுக்குக் கூறுகிறார் :

படைப்பு

தேவர்கள், தானவர்கள், சித்தர்கள், முனிவர்கள், நாகர்கள், இயக்கர்கள், சாரணர்கள், வித்தியாதரர்கள், கின்னரர்கள், மனிதர்கள் முதலிய பலதிறத்தினரும் ஐந்து திருக்கைகளையுடைய ஆனைமுகக் கடவுளின் வழிபாட்டை அன்போடு செய்து மேன்மையை அடைந்திருக்கிறார்கள். அவ்வாறு அடைந்தவர்களில் சிலருடைய வரலாற்றைக் கூறுகிறேன். ஆனைமுகக்கடவுள் முன்னொரு ஊழிக் காலத்தில் உயிர்கள் யாவும் இளைப்பாறும் பொருட்டுத் தத்துவங்களை யெல்லாந் தம்மிடத்தில் ஒடுக்கிக் கொண்டார். பிறகு உலகத்தை உண்டாக்க எண்ணியபொழுது நான்முகனையும் திருமாலையும் உருத்திரனையும் படைத்தார். மூவரும்

ஆயிரம் தேவ ஆண்டுகள் வரையில் அரிய தவத்தினைச் செய்தார்கள். ஆனைமுகக் கடவுள் காட்சி கொடுத்தார். அப்பொழுது அக்கடவுளுடைய திருவடிகளில் பணிந்து ;

### ஆனைமுகக் கடவுள் வணக்கம்

நிருவி கற்பமாய் நிறைந்தவா னந்தபூ ரணமாய்
நிருவி காரமாய் நிர்க்குண மாயதத் துவமாய்
நிருவி சேடமாய் நிரஞ்சன மாகியொன் றாலும்
நிருமி தப்படாக் கணேசநின் நீள்கழல் தொழுதாம். (க)

பிரம மாயொளி யாய்சிரா காரமாய்ப் பெரிதாய்த்
தரணி யாதிதத் துவமெலாங் கடந்ததத் துவமாய்
வரமெ லாந்தரும் வள்ளலாய் ஏகமாய் வதியும்
பரமன் ஆகிய கணேசநின் பதமலர் தொழுதாம். (உ)

என்று நீங்குறாத் திருவுரு வுடையதாய் எங்கும்
ஒன்றி நின்றுணர்ந் திடுமறி வானந்த வுருவாய்த்
துன்றும் யோகினர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக் கணேசநின் திருவடி தொழுதாம். (ங)

உலக காரண காரண மாயுயிர்க் குயிராய்
இலகு ஞானியர் தமையிழந் தெய்துநற் பேருய்ப்
பலவு மாய்ப்பரப் பிரமமாய்ப் பரேசமாய்ப் பரமாய்த்
திலக மாகிய கணேசநின் திருவடி தொழுதாம். (ச)

சகல லோகமும் படைத்தளித் தழிக்குந்தற் பரமாய்
அகில லோகத்தும் புகலிடந் தனக்கிலா வமைவாய்ப்
புகலு லோகங்கள் அனைத்துக்கும் புகலிடந் தானும்
பகவ னாகிய கணேசநின் பதமலர் தொழுதாம். (ரு)

உகத்துக் காதியாய்த் தேவருக் காதியாய் உலவாச்
சுகத்துக் காதியாய்ச் சுரர்களுக் கீசராய்ச் சுடரும்
மகத்துக் கீசராய்க் கணங்களுக் கீசராய் மதிப்போர்
அகத்துக் கூடிய கணேசநின் னடியிணை தொழுதாம். (சு)

இராச தத்தொழில் ஆகிய சிருட்டியை இயற்ற
விராவி ராசதத் துருக்கொடு பிரமனுய் மேலாய்ப்
பராவு வித்தைகள் அனைத்திற்கும் பயில்பிறப் பிடமாய்
ஓராது நின்றருள் கணேசநின் ஒளிர்பதந் தொழுதாம். (எ)

சோர்வி லாதசாத் துவிதநற் ருெழிலெனுந் திதிக்குச்
சார்வ தானதா மதந்தனில் உருவுகொண் டரியாய்த்
தீர்வி லாப்பகை அசுரரைச் செகுத்திருந் தேவர்க்
கார்வ மேயருள் கணேசநின் அருட்பதந் தொழுதாம். (அ)

தாம தத்தொழி லானசங் காரமாற் றுதற்குத்
தோம கற்றுசாத் துவிதத்தில் தோன்றுருத் திரனுய்
ஏம முற்றிமை யோர்முனி வோரெலாம் இறைஞ்சச்
சேம வைப்பதாங் கணேசநின் சேவடி தொழுதாம். (கூ)

கிரண பந்தியால் பயிரையும் கிளர்சுதைப் பெருக்கால்
பரவு தேவர்கள் தம்மையும் மகிழ்வித்துப் பார்ப்பார்க்
கரச ஞுயுல கத்துவெப் பறுத்திடுங் திங்கட்
சொருவ மாகிய கணேசநின் துணையடி தொழுதாம். (க0)

ஒளிப்பி ழம்பதாய் மேகவா யுவினுரு வாகி
விளிப்பில் காலங்கள் தெரிப்பதாய்த் தொழிலெலாம் விளைத்துக்
களிப்ப தாய்ப்பல சத்திய தானசெங் கதிராய்த்
தெளிப்ப நின்றருள் கணேசநின் சேவடி தொழுதாம். (கக)

நிரப்பில் தன்மமாய்த் துறக்கமாய் நிரந்தரத் துவமாய்த்
தரைச்சொ ரூபமாய்ச் சமுத்திர மாய்த்திசைச் சுரராய்க்
கரப்பி லாவுல கனைத்துமாய்க் கலந்துநின் றருளும்
பரப்பி ரமமாங் கணேசநின் பாதங்கள் தொழுதாம். (கஉ)

சாமி நின்னிரு தாள்மலர் சார்ந்தவர் எல்லாம்
நாம வெம்பிணி நலிவொரீஇ நற்சுகம் அடைவர்
ஆமி தைத்தெரிந் தியாங்களு முனைச்சரண் அடைந்தேம்
ஏம மல்குறக் காத்தியென் றேத்தினம் இரந்தேம். (கூ)

என்று புகழ்ந்து பாடினுர்கள். அருள் செய்ய வேண்டு மென்று வேண்டிக் கொண்டார்கள்.

## 12. மூவர் வரம் பெறுதல்

### ஆனைமுகக் கடவுள் அருள் புரிதல்

தம்மைப் போற்றி வணங்கிய மூவர்கட்கும் ஆனைமுகக் கடவுள் அருள் செய்ய எண்ணினுர். "அன்பர்களே! நீங்கள் புகழ்ந்து போற்றியதற்கு மகிழ்ச்சி யடைந்தோம். நீங்கள் எண்ணியவைகளைக் கேட்பீர்களாக" என்று திருவாய் மலர்ந்தருளினுர். முத்தேவர்களும் ஆனைமுகக் கடவுளைப் பார்த்துத், "தேவரீருடைய திருவடிகளில் எங்கட்கு நிலையான அன்புண்டாக வேண்டும்; நாங்கள் செய்யவேண்டிய காரியங்களையும் பணித்தருள வேண்டும்," என்று கூறினுர்கள். ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்து, "நம்முடைய முக்குணங்களில் இருந்து தோன்றியவர்களே! நம்மிடத்தில் உங்கட்கு அளவற்ற அன்புண்டாகுமாறு அருள் செய்தோம். நீங்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைமையையுங் கூறுகின்ரேம். நான்முகனே! நீ படைப்புத் தொழிலைச் செய்யக் கடவாய். திருமாலே! நீ உலகத்துயிர்களையெல்லாங் காப்பாற்றிவரக் கடவாய். உருத்திரனே! நீ எல்லாவற்றையும் அழித்தொழிக்கும் பணியினைப் புரியக் கடவாய்" என்று அருள் செய்தார். முத்தொழிலையுஞ் செய்யத் தக்க ஆற்றலை நான்முகனுக்கும் திருமாலுக்கும் உருத்திரனுக்கும் வழங்கினுர்.

## 13. உலகப் பெருவடிவங் காட்டியது

[விசுவரூப தரிசனம்]

### வேண்டுகோள்

மூவரும் ஆனைமுகக் கடவுளுடைய அருளைப் பெற்ற பிறகு, நான்முகன் எழுந்து ஆனைமுகக் கடவுளை வணங்கி, "எந்தையே! படைப்புத் தொழிலை அடியேனுக்குக் கட்டளையிட்டருளியது அடியேன் செய்த நல்வினையே. படைப்புத் தொழிலைச் செய்யும் வகையையும் போதித்தால் அல்லாமல் அடியேனுக்குத் தெளிவுண்டாக மாட்டாது. ஆகவே அருள்

புரிய வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் அதற்குத் திருவுளம் இணங்கினர். ''நான்முகனே! நீ நம்முடைய கருப்பத்துள் நுழைந்து அங்குள்ளனவாகிய அசையும் பொருள்களையும் அசையாப் பொருள்களையும் பார்த்துப் படைப்புத் தொழிலின் புதுமைகளையெல்லாம் தெளிவாயாக. அவ்வாறு தெளிந்துகொண்டால் பிறகு படைப்புத் தொழிலை நன்றாகச் செய்யலாம்'' என்று கூறினர்.

## மூவரையும் விழுங்குதல்

எதிரில் இருந்த நான்முகனைத் தம்முடைய துதிக்கையால் தூக்கி விழுங்கிவிட்டார். இந்தப் புதுமையைத் திருமாலும் உருத்திரனும் பார்த்து நமக்கு இப்பெரு வாழ்வு கிடைக்கவில்லையே என்று ஏங்கித் தளர்ந்தார்கள். ஆனைமுகக் கடவுள் உடனே அவர்களையும் துதிக்கையால் தூக்கி விழுங்கிவிட்டார்.

## உலகப் படைப்பைக் காண்டல்

ஆனைமுகக் கடவுளுடைய வயிற்றுக்குட் சென்ற மூவரும் அங்கு ஒருவரையொருவர் பார்த்து மகிழ்ந்தார்கள். அங்கு சுற்றிப் பார்க்கத் தொடங்கினர்கள். எண்ணில்லாத உலகங்கள் அவர்களுக்குமுன் தோன்றின. அவ்வுலகத்தினுள் ஓர் உலகத்தில் மூவரும் நுழைந்து அதன் நடுவில் விண்ணுலகத்தையும் மேலே நிலவுலகம் முதலிய ஏழு உலகங்களையும், கீழே அதல முதலிய ஏழு உலகங்களையும் அவைகளைப் படைத்தல், காத்தல், அழித்தல் வழியாக நடத்துங் காரியக்காரர்களாகிய மும்மூர்த்திகளையும் அதற்குமுன் கற்பங்களில் படைப்பு முதலியவைகளைப் புரிந்து இளைத்து அவைகளை வெறுத்துத் தவ நிலையில் இருந்து யோகம்புரியும் நான்முகன் முதலிய மூவர் பலரையும், மண் முதலிய ஐம்பெரும் பூதங்களையும், குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்களையும், பொன் முதலிய ஐவகைத் தாதுக்களையும், கோமேதகம் முதலிய ஒன்பான்வகை மணிகளையும், நாவலந்தீவு முதலிய ஏழு தீவுகளையும், இருக்கு முதலிய நான்கு மறைகளையும், ஆயுள்

வேதம் முதலிய நான்கு உதவிமறைகளையும், மந்திரம் முதலிய ஆறுமறையுறுப்புக்களையும் மறை முடிவு முதலிய ஆறு நூல் களையும், அந்தணர்குலம் முதலிய நான்குவகைக் குலங்களை யும், மாணி முதலிய நால்வகை நிலைகளையும் (ஆசிரமம்) இந்திரன் முதலிய எட்டுத் திக்குப்பாலகர்களையும், தாத்ரு முதலிய பன்னிரண்டு கதிரவர்களையும், மகாதேவன் முதலிய பதினொரு உருத்திரர்களையும், அனலன் முதலிய எட்டு வசுக்களையும், உயிர் முதலிய பத்து வாயுக்களையும், கதிரவன் முதலிய ஒன்பது கோள்நிலைகளையும், உலகாயதம் முதலிய ஆறு புறப் புறச் சமயங்களையும், தார்க்கிகம் முதலிய ஆறு புறச் சமயங்களையும், சைவம் முதலிய ஆறு உட்புறச் சமயங்களையும், தேவர்கள் முதலிய பதினெட்டுக் கணங் களையும், பாடாணவாத சைவம் முதலிய ஆறு உட்சமயங் களையும், பதினெட்டுக் கணங்களின் மனைவிமார்களையும், சனகர் முதலான யோகிகளையும், நாரதர் முதலான முனிவர்களையும், வசிட்டர் முதலான பிரம இருடிகளையும், கைலாசம் முதலிய ஏழு குலமலைகளையும், சம்வர்த்தம் முதலிய ஏழு முகில்களையும், உப்புக் கடல் முதலிய ஏழு கடல்களையும், கங்கை முதலிய ஏழு யாறுகளையும், அரிமா முதலிய விலங்கு வகைகளையும், கருடன் முதலிய பறவை வகைகளையும், கற்பகம் முதலிய மர வகைகளையும், காம வல்லி முதலிய கொடி வகைகளையும், தாமரை முதலிய மலர் வகைகளையும், மற்றுமுள்ள பொருள்களையும் ஒன்றொழி யாமல் பார்த்து மகிழ்ந்தார்கள். ஆனைமுகக் கடவுளுடைய திருவருளாற்றலைப் போற்றிப் புகழ்ந்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு மற்றோர் அண்டத்திற்குச் சென்றார்கள். அதி லுள்ள புதுமைகளையும் பார்த்து மகிழ்ந்தார்கள். அவ்வாறே எல்லா உலகங்களினும் நுழைந்து நுழைந்து பார்த்தார்கள். அணுக்கூட்டங்கள் பறப்பதைப்போலப் பறந்து கொண் டிருக்கும் உலகக் கூட்டங்களில் அளவற்ற காலந் தங்கிப் படைப்பின் பாகுபாடுகளைத் தெளிந்து களித்தார்கள். நாம் இனிமேல் யாது செய்வதென்று எண்ணமிட்டார்கள். ஆனைமுகக் கடவுளுடைய திருவயிற்று வாழ்வு கிடைத்ததை எண்ணி எண்ணி இறுமாந்தார்கள். ஆனைமுகக் கடவுள்

நமக்கு இனிமேல் யாது கட்டளையிடுவாரோ என்று எண்ணி அவரைப் புகழ்ந்து போற்றினார்கள். ஆனைமுகக் கடவுள் நான்முகனைத் தமது துதிக்கையின் வழியாகவும் திருமாலையும் உருத்திரனையும் தமதிரண்டு காதுகள் வழியாகவும் வெளிப் படுத்திவிட்டு மறைந்தருளினார்.

## 14. நான்முகன் படைப்புத் தொழில்

### நான்முகன் தடுமாற்றம்

ஆனைமுகக் கடவுளுடைய அருளைப்பெற்ற நான்முகன் அக்கடவுளை மறந்தான். தான் படைப்புக்குத் தலைவன் என்று முடிவுசெய்து தனக்குக் கொடுக்கப்பட்ட படைப்பு வேலையைச் செய்யத் தொடங்கினான். ஒரு காரியத்தைத் தொடங்குவதற்குமுன் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுத் தொடங்க வேண்டுமென்பதனை மறந்தான். தான் எத்தகைய மேலாந் தன்மையும் இல்லாதவ னென்பதனையும் எண்ணிப் பார்க்கவில்லை. ஆனைமுகக் கடவுளை வழிபடாமல் தொடங்கிய படைப்பு ஒழுங்காக நடைபெறாமல் தடுமாற்றத்தை யடையத் தொடங்கியது. ஒரு தலையும் இரண்டு முகங்களும், மூன்று கண்களும் நான்கு சிகைகளும் ஐந்து காதுகளும் ஆறு கால் களும் ஏழு கைகளும் பெருத்த உடல்களுந் தோன்ற பல விதமான அழகற்ற படைப்புகள் உண்டாயின. அன்றியும் அவை படைத்தவனை யெதிர்த்துப் பல வகையான துன்பங்களைச் செய்தன. அவற்றுள் சில நான்முகன் எதிரே நின்று கூத்தாடின; சில பல்லையிளித்து எள்ளி நகையாடின; சில அண்மையில் வந்து தட்டின; சில குடுமியைப் பிடித்து வளைத்துக் குட்டின; சில பல்லைக் கடித்தன; சில கண்ணை யுருட்டிப் பார்த்து அச்சுறுத்தின; சில இருந்த இடத்தில் இருந்து பெயர்ந்து ஓடின; சில கூச்சலிட்டுக் கொண்டா னடித்தன; சில அழுதுகொண்டு அடியில் வீழ்ந்தன; சில பாடின; சில கை கால்களை உதைத்துக் கொண்டன. இவ் வாறாகவே நான்முகன் படைப்புத் தொழிலை ஒழுங்காகச் செய்ய முடியாமல் திகைத்தான். கையைத் தலைமேல்

வைத்துக்கொண்டு கண்ணீர் விட்டழுதான். "எளியவர்கட் குறவினரே! சிவனுடைய மகனே! ஆனைமுகக் கடவுளே! என்னைக் காப்பாற்றியருளும். தேவரீருடைய திருவருள் கிடைத்த பிறகும் எனக்கு இத்தகைய இடையூறு உண்டாவது முறையாகுமோ? அடியேன் தெரிந்து எத்தகைய குற்றமுஞ் செய்யவில்லையே. அவ்வாறு செய்திருப்பினும் அதனைப் பொறுத்தருளி அடியேனைத் திருவடிக்கு ஆளாக்கிக் கொள்ள வேண்டும். தேவரீரைத் தவிர எனக்கு வேறு புகலிடமில்லை" என்று பலவாறு போற்றி நிலத்தில் விழுந்தான்.

### இடையூற்றின் காரணத்தை அறிதல்

நான்முகன் சிறிது நேரம் நிலத்திற் கிடந்தபோது ஆனைமுகக் கடவுளுடைய அருளால் அவனுக்குச் சிறிது தெளிவுண்டாகியது. உண்டாகவே அவன் நமக்கு இப்பொழுது உண்டாகிய அறிவு முன்பு உண்டாகாமற் போய் விட்டது. நமக்கு உண்டாகிய வாழ்வெல்லாம் ஆனைமுகக் கடவுளுடைய அருளால் உண்டாயினவேயன்றி வேறில்லை. நாம் படைக்கத் தொடங்கிய காலத்தில் ஆனைமுகக் கடவுளை வழிபடாமற் றொடங்கிவிட்டோம். இடையூறுகட்குத் தலைவராக விளங்கும் கடவுளை வணங்காமல் தொடங்கிய படியினுல்தான் இத்தகைய இடையூறு உண்டாகியது பரம் பொருளுக்கெல்லாம் மேலான பரம்பொருளாக விளங்கும் சிவபெருமானும் ஒரு காரியத்தைத் தொடங்குகையில் அக் காரியம் இடையூறின்றி இனிது நிறைவேறற் பொருட்டுத் தாமும் ஆனைமுகக் கடவுளை வழிபாடு செய்வதாக உறுதி செய்திருக்கிருர். நாம் அதனை உணர்ந்திருந்தும் படைப்புத் தொடங்கிய பொழுது ஆனைமுகக் கடவுள் வழிபாடு செய்ய மறந்தோம். இது நமது தீவினையே என்று சிறிதுபோது யோகத்தில் இருந்தான்.

### ஆனைமுகக் கடவுள் காட்சி

அப்பொழுது அவனுக்கு ஒரு தோற்றம் உண்டாகியது. அத்தோற்றம், ஏழு கடலும் ஒன்ருகக் கூடி ஒரு பெரு

வெள்ளம் உண்டாகியது; அந்த வெள்ளத்தின்மேல் ஓர் ஆலிலை மிதந்து வந்தது; அவ்வாலிலையில் ஒரு சிறு குழந்தை படுத்திருந்தது; அக்குழந்தையின் அண்மையில் தான் சென்று அதனைத் தட்டியெழுப்பினான்; அக்குழந்தை விழித்துப் பார்த்து, "ஓ நான்முகனே!" என்று அழைத்தது. அதனை உற்றுப் பார்த்தபொழுது அது ஆனைமுகக் கடவுளாக விளங்கியது. அதனை நான்முகன் போற்றினான். தன்னுடைய குற்றங்களையெல்லாம் பொறுத்து ஈடேற்றியருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் நான்முகனைப் பார்த்து, "நீ நம்முடைய ஆணையின் வழி நடப்பவன் என்பதை மறந்து நீயே தலைவன் போல் எண்ணிக்கொண்டு படைப்பைத் தொடங்கியபடியால் அது கைகூடாமற் போய்விட்டது. இவ்வாறு தட்டுக் கெட்டழிந்ததும் உனக்கு நன்மைதான். இனிமேல் நீ கண்ணுங் கருத்துமாக விருந்து என்னுடைய வழிபாட்டை மறவாமல் மேற்கொண்டு ஒவ்வொரு காரியத்தையுஞ் செய். அப்படிச் செய்வதனால் உனக்குத் தீவினை யுண்டாகா திருக்கவும் நன்மை யுண்டாகவும் வழியேற்படும். இனிமேல் இத்தகைய இடையூறுகள் உண்டாக மாட்டா. நம்முடைய ஓரெழுத்து மறையைப் பத்து நூருயிரந்தரம் உருவேற்றக் கடவாய்" என்று கூறி அம்மறையை உரைத்தருளினார். இவ்வாறு அத்தோற்றம் காணப்படவே நான்முகன் விழித்தெழுந்தான். நீராடல் முதலியவைகளை முடித்துக்கொண்டு நாள்வழிபாட்டைச் செய்தான். தனிமையான ஓரிடத்தில் அமர்ந்து ஓர் எழுத்து மறையைப் பன்னிரண்டு ஆண்டுகள் உருவேற்றினான். ஆனைமுகக் கடவுள் காட்சி கொடுத்து, "உன்னுடைய தவத்திற்கு மகிழ்ந்தோம். வேண்டிய சிறப்புக்களைக் கேட்டுக் கொள்வாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

### சித்தி புத்திகள் மகள்களாதல்

நான்முகன் ஆனைமுகக் கடவுளை மீளவும் பணிந்து 'ஐயனே! அடியேனுக்குத் தேவரீருடைய திருவடிகளில்

எப்பொழுதும் மாருத அன்பு வளர்தல் வேண்டும். என்னுடைய படைப்புத் தொழில் தடைபடாது நடக்க வேண்டும். இந்த இரண்டு சிறப்புக்களையுமே நான் விரும்பு கிறேன். இவைகளைக் கொடுத்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே அருள் புரிந்தார். மேலும் நான்முகனைப் பார்த்து, "ஓ நான் முகனே! நாம் ஞானசத்தி கிரியாசத்தி என்னும் இரண்டு சத்திகளோடு பொருந்தி வாழ்வோம். அவர்களை நினைத்து உன்னுடைய படைப்புத் தொழிலை நடத்தக் கடவாய். உனக்கு எல்லாங் கைகூடும்'' என்று திருவாய் மலர்ந் தருளினர். நான்முகன் அதனை மேற்கொண்டு அந்த இரண்டு சத்திகளையும் எண்ணிச் சித்த மயக்கந் தீர்ந்தான். அச் சத்திகளிருவரும் நான்முகனிடத்தில் அருள் சுரந்து சித்தி புத்திகள் என்னும் பெயர் பூண்டு ஒளிவடிவந் தாங்கிக் கலைமகளுந் திருமகளும் நாணுமாறு திருமேனி யழகு காட்டிக் காட்சி கொடுத்தார்கள். நான்முகன் அவர்கள் இருவரையும் வீழ்ந்து வணங்கினன். ''நான் கடைத்தேறும் படியாக நீங்களிருவரும் எனக்குப் புதல்வியர்களாக வந்தருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். அவர்கள் இசைந்து விரும்பிய மேன்மைகளைத் தந்து மறைந்தார்கள்.

### நான்முகன் படைப்பு

நான்முகன் ஆனைமுகக்கடவுளைத் தொழுது படைப்புத் தொழிலைத் தொடங்கினன். எத்தகைய இடையூறுமில்லாமல் படைப்புத் தொழில் கை கூடியது. முதலில் ஏழு மக்கள் பிறந்தார்கள். நான்முகன் அவர்களைப் பார்த்து, ''நீங்கள் உலகத்தைப் படையுங்கள்'' என்று கட்டளையிட்டான். அவர்கள் தங்களுடைய தந்தையாகிய நான்முகனை வணங்கி, ''எங்கட்கு உலகத் தொல்லைவேண்டாம். நாங்கள் துறவி களாகிச் சிவபெருமானை வழிபட்டு நற்கதியடைய விரும்பு கிறோம்'' என்று கூறி நான்முகனுடைய உடன்பாடு பெற்றுச் சிவபெருமானைப் போற்றித் திருவடி நீழலை யடைந்தார்கள். நான்முகன் மேலும் ஏழு மக்களைப் பெற்றான். அவர்களும்

முன்போலவே தவஞ்செய்து முதல்வனடியை அடைந்தார்கள். பிறகு நான்முகன் சநகர், சநந்தனர், சநாதனர், சநற்குமாரர் என்னும் நான்கு பிள்ளைகளையும் நாரதரையும் அந்தணர் களையும் தீக்கடவுளையும், தன்னுடைய முகத்தினின்று உண்டு பண்ணினான். நான்கு வருணத்தார்களையும் படைத்தான். உள்ளத்திலிருந்து திங்களைப் படைத்தான். விழியிலிருந்து கதிரவனைப் படைத்தான்; முகத்தில் இருந்து இந்திரனைப் படைத்தான்; காதிலிருந்து மருத்துக்களைப் படைத்தான்; உந்தியில் இருந்து விண்ணைப் படைத்தான்; முடியிலிருந்து மேலுலகங்களைப் படைத்தான். அடியிலிருந்து கீழுலகங் களைப் படைத்தான்; காதிலிருந்து திக்குகளைப் படைத்தான். இவ்வாறே, மலை, யாறு, மரஞ் செடி கொடிகள் முதலியவை களையும் படைத்தான். அதுமுதல் முத்தேவர்கள், தீ, நீர், நிலம், விண், காற்று, திக்குப்பாலகர், மனுக்கள், முனிவர்கள், வசுக்கள், இயக்கர்கள், கணங்கள் முதலிய இருபத்தொரு பிரிவுகளோடு உலகம் நடைபெற்று வந்தது. இதனைக் கண்டு நான்முகன் மகிழ்ச்சியடைந்தான்.

## 15. ஆனைமுகக் கடவுள் திருமணம்

### நான்முகன் எண்ணமும் நாரதர் தொண்டும்

நான்முகன் படைப்புத் தொழிலை நன்கியற்றி நாள்களைப் போக்கிக்கொண்டிருந்தான். தனக்குச் சித்தி புத்திகள் வரங்கொடுத்துச் சென்றதை எண்ணினான். நம்முடைய பெண்களை ஆனைமுகக் கடவுள் எப்பொழுது திருமணஞ் செய்து மணக்கோலக் காட்சி வழங்கியருள்வாரோ என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். திருக்கைலையில் எழுந் தருளியிருந்த ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபடும் பொருட்டு நாரதர் அங்குச் சென்றார். சிவபெருமானையும் உமாதேவியாரையும் வழிபட்ட பிறகு ஆனைமுகக் கடவுளிடம் சென்றார்; தொழுது போற்றினார். "எந்தையே! நான் முகனுடைய பெண்களாகிய சித்தி புத்தி என்பவர்கள் தேவரீரையே திருமணஞ் செய்தற்குரியவர்கள். நான்முகன்

அவர்கட்குத் தேவரீரையே மணவாளனுக மனத்தில் எண்ணி யிருக்கிருன். தாங்கள் நான்முகனுடைய எண்ணத்தை நிறைவேற்றியருள வேண்டும்.'' என்று சொல்லி வேண்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுள் நாரதருக்கு விடை கொடுத்தனுப்பினுர். நாரதர் சித்தி புத்திகளிடம் சென்று செய்தி கூறியதுடன் நான் முகனிடஞ் செய்தியைச் சொன்னுர். நான்முகன் நாரதர் கூறியவைகளைக் கேட்டு மனமகிழ்ந்தான்; நாரதரைத் தழுவிக் கொண்டான். நாரதரைப் பார்த்து, "அப்பா! குழந்தாய்! உன்னை நான் பிள்ளையாய்ப் படைத்த தற்கு நான் அடையவேண்டிய ஊதியத்தை அடைந்து விட்டேன்; உன்னை நான் ஏவுவதற்கு முன்பு என்குறிப் பறிந்து நீயே தக்கவாறு எண்ணமிட்டு ஓங்கார வடிவராகிய ஆனைமுகக் கடவுளிடஞ் சென்று என்னுடைய எண்ணம் நிறைவேறுமாறு செய்து வந்தாயன்றே?'' என்று கூறி மகிழ்ந்தான். பிறகு எழுந்து திருக்கைலைக்குச் சென்றுன்.

### நான்முகன் கைலைக்குச் செல்லுதல்

திருக்கைலையை அடைந்த நான்முகன் சிவபெருமானையும் உமாதேவியாரையும் போற்றிப் பணிந்து தன்னுடைய எண்ணத்தைக் கூறி அவர்களுடைய உடன்பாட்டைப் பெற்றுன். பிறகு ஆனைமுகக் கடவுளிடஞ் சென்று வணங்கித் தான் சிவபெருமானிடமும் உமாதேவியாரிடமுந் திருமணத் திற்கு உடன்பாடு பெற்றுள்ள செய்தியைக் கூறினுன். ஆனைமுகக் கடவுள் நான்முகனைப் பார்த்து, "ஓ நான்முகனே! உன்னுடைய பெண்கள் இருவரையும் நாம் திருமணஞ் செய்து கொள்ளுகிறேம். நீ உன்னுடைய இருப்பிடத் திற்குப் போய்த் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யக் கடவாய். நாம் குறித்த காலத்தில் எழுந்தருளித் திருமணத்தைச் செய்து கொள்ளுகிறேம்,'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். நான்முகன் விடை பெற்றுக்கொண்டு மீண்டான்.

திருமண ஏற்பாடு

நான்முகன் வைகுண்டத்தை யடைந்து திருமாலைப் பணிந்து தன்னுடைய பெண்களின் திருமணச் செய்தியைக் கூறினன். பிறகு தன்னுடைய இருப்பிடமாகிய சத்திய லோகத்தை யடைந்து, இந்திரன் முதலிய தேவர்கட்கும், வசிட்டர் முதலிய முனிவர்கட்கும், நிலவுலகத்து அரசர்கட்கும் மற்றுந் தனக்கு வேண்டிய உறவினர்கள் நண்பர்கள் முதலியவர்கட்கும் திருமணச் செய்தியை அனுப்பினன். தேவதச்சனை அழைத்து, "நம்முடைய பெண்கட்குத் திருமணம் நடக்கப் போகின்றது. திருமணத்திற்கு வருவோர் தங்குவதற்கு அவரவர்களுடைய தகுதிக்கேற்ப விடுதிகள் அமைப்பாயாக! அன்றியும் திருமண மண்டபமும் விரைவாகச் செய்து முடிக்கவேண்டும்" என்று கட்டளையிட்டான். தேவதச்சன் மனமகிழ்ந்து உடனே செய்யத் தொடங்கினன். ஒரு பெரிய பட்டணத்தை உண்டாக்கினன். அதனைச் சூழப் பெரிய மதில்களை அமைத்தான். நான்கு பக்கங்களிலும் கோபுர வாயில்களை ஏற்படுத்தினன். உட்புறத்தில் திருமணத்திற்கு வருபவர்கள் தங்கத்தக்க பெரிய மாளிகைகளை அமைத்தான். உப்பரிகைகளையும் ஏற்படுத்தினன். அகன்ற தெருக்களை உண்டாக்கி இடையிடையே ஓவியக் கூடங்கள், பளிங்கு மண்டபங்கள், நிலவொளி மேடைகள் முதலியவைகளை வரிசை வரிசையாக வகுத்தான். திருமணத்துக்குத் தொகுக்கும் பொருள்களை வைக்கும் அறைகளையும் அமைத்தான். மலர்கள் மலர்ந்திருக்கின்ற தடாகங்கள் கிணறுகள் முதலியவைகளையும் வேண்டிய இடங்களில் உண்டாக்கினன். நகரத்தின் நடுவில் திருமணச் சடங்குகள் முடிப்பதற்கோர் திருமண மண்டபத்தை அகன்றதாக அமைத்தான். அதன் நடுவில் ஒன்பான் வகை மணிகளேயமைந்த அரியணை ஒன்றைப் பல புதுமைப்பாடுகளோடு அமைத்தான். அதைச் சூழத் திருமால் முதலிய தேவர்கள் தங்குவதற்கான இருக்கைகளையும் ஏற்படுத்தினன். முத்து மாலைகள், பூமாலைகள், மயிற்பீலிகள் முதலியவற்றை மண்டபங்களில் தொங்க விட்டான். நவமணிகள் இழைத்

திருக்கிற சுவர்ப் புறங்களினும், பெருத்தோங்கி நிற்கும் பலவகையான தூண்களினும் பொற்பாவைகள், ஓவியப் பதுமைகள், நிலைக் கண்ணாடிகள் முதலியவைகளை அமைத்தான். மேலும் அமைக்க வேண்டியவைகளை அமைத்து விட்டுச் செய்தியை நான்முகனுக்குத் தெரியப் படுத்தினான்.

### நான்முகன் மகிழ்ச்சி

நான்முகன் விரைந்து வந்து திருமண ஏற்பாடுகளைப் பார்த்தான். அவற்றின் சிறப்புக்களைக் கண்டு இவைகளின் அழகைப் பார்ப்பதற்குத் தேவேந்திரனைப் போல் ஆயிரங் கண்களைப் பெறவில்லையே என்று அருமை பாராட்டினான்.

### மேலுஞ் செய்ய வேண்டிய ஏற்பாடுகள்

அன்றியும் நான்முகன் மேலும் பல ஏவலர்களை அழைத்து, விண்ணாற்று நீர், தருப்பை, மாவிலை, திருமண வேள்விப் பொருள்கள் முதலியவைகளைக் கொண்டுவரச் செய்தான். வாழை, கமுகு, தென்னங்குலை முதலியவைகளை ஆங்காங்கே அணிபெறக் கட்டித் தொங்கவிடச் செய்தான். மேலுஞ் செய்யவேண்டியவைகளை யெல்லாஞ் செய்யச் செய்தான்.

### விருந்தினர் வருகை

திருமண ஏற்பாடுகள் இவ்வாறாகத், திருமண ஓலையைப் பெற்றவர் அதனைப் படித்துப் பார்த்துச் செய்தியுணர்ந்து மகிழ்ந்தார்கள். கதிரவர் திங்கள் முதலிய கோள்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் கருடர், கந்தருவர், சித்தர், வித்தியாதரர், போக நிலத்திலுள்ளவர்கள், விண்ணோர் முதலிய பலரும் தத்தம் மனைவி மக்கள் உறவினர் முதலியவர்களோடு கடையுகத்தில் எல்லாக் கடல்களும் கரைபுரண்டு மேருவைச் சூழ்வது போல நகரமெங்கும் வந்து நெருங்கினார்கள்.

### விருந்து ஏற்பாடு

நான்முகன் திருமணத்திற்கு வந்தவர்கள் அனைவருக்கும் உணவு முதலியவைகளை அளிக்குமாறு சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி, ஐவகை மரங்கள், காமதேனு முதலியவற்றுக்குக் கட்டளையிட்டான். காமதேனு முதலியவை நான்முகன் கட்டளைப்படி எல்லாவகையான தேவைப் பொருள்களையும் வந்தவர்கட்கு வழங்கிக் கொண்டிருந்தன. அவற்றை இந்திரன் முதலிய தேவர்கள் பெற்று வேறொரு தெய்வலோகத்தில் இருப்பவர்களைப் போல் மனமகிழ்ந்தார்கள். அந்நகரத்தின்கண் பன்னிரண்டு கதிரவர்களும் திங்களும் உடுக்கூட்டங்களும் ஒன்றுகூடி யிருந்தபடியினால் இராப் பகல் என்னுங் கால வேற்றுமைகள் இல்லாமல் ஒரே தன்மையாக இருந்தது. காமதேனு கொடுக்கின்ற உண்டிகளையும் கற்பகமரம் அளிக்கின்ற அணிகளையும் அங்கு வந்திருப்போர் பெற்று மகிழ்ந்திருந்தார்கள். ஐந்து மரங்களாகிய பாரிசாதம், மந்தாரம், கற்பகம், தேவதாரம், சந்தானம் என்பவை நெருங்கிய சோலைகள் தம்முட் பல புதுமைகளை யுண்டாக்கச், சிலர் அப்புதுமைகளைப் பார்த்து அவ்விடத்தை விட்டு நீங்காம லிருந்தார்கள்.

### சிவபெருமான் பிள்ளையாரோடு திருமணத்திற்கு வருதல்

திருமண ஏற்பாடுகள் யாவும் நன்கு நிறைவேறி யிருப்பதைக் கண்ட நாரதர் திருக்கைலைக்குச் சென்றார். சிவபெருமானை வணங்கினார். "ஆனைமுகக் கடவுளுடைய திருமணத்திற்குரிய எல்லா ஏற்பாடுகளும் இனிது நடைபெற்றுள்ளன. தாங்கள் மணமகனை அழைத்துக்கொண்டு வரவேண்டியது ஒன்றுதான் பாக்கியாகவுள்ளது" என்று கூறினார். சிவபெருமான் ஆனைமுகக் கடவுளை அழைத்து, "நீ விரைவாக மங்கல நீராடி வா" என்று கட்டளையிட்டார். ஆனைமுகக் கடவுள் சிவகங்கையில் நீராடித் திருமணக் கோலங்கொண்டு புறப்பட்டார். ஆனைமுகக் கடவுள் திருமணக் கோலத்தோடு வருதலை நான்முகன் அறிந்தான். எதிர்கொண்டு சென்றான். கற்பக மலர்களைத் தூவிக் கீழே

விழுந்து வணங்கினுன். அழைத்துக்கொண்டு திருமண மண்டபத்திற்குச் சென்ருன். உயரிய இருக்கையில் இருக்க வைத்தான். கலைமகள் பொன் ஏனத்தில் கங்கை நீரை யேந்திவந்து ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளில் வார்த் தாள். நான்முகன் மிகுந்த வணக்கத்தோடு திருவடிகளைக் கழுவி மெல்லிய ஆடைகொண்டு ஒற்றினுன். இவற்றைச் சிவபெருமானும் உமாதேவியாரும் பார்த்து மகிழ்ந்திருந் தார்கள். திருமுருகக் கடவுள், வீரபத்திரர், வைரவக் கடவுள் முதலியோர் வெவ்வேறிருக்கைகளில் அமர்ந்து எல்லா வற்றையும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். திருமணத்திற் குரிய சடங்குகள் நடைபெற்றன.

**மணப் பெண்கள் வருதல்**

சித்திபுத்திகளைக் கலைமகள், திருமகள், இந்திராணி, அதிதி, அநசூயை, அருந்ததி என்னும் அறுவரும் அழைத்து வந்து மணியணையில் இருக்க வைத்தார்கள். சித்திபுத்தி ஆகிய இருவரும் ஆனைமுகக் கடவுளுடைய இரண்டு பக்கங் களினும் அமர்ந்திருந்தார்கள்.

**திருமண ஆசிரியர்**

மறைகளில் வல்லவராகிய சநகமாமுனிவர் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து மணப் பொருள்களைத் தூய்மைப்படுத்தினுர். ஆனைமுகக் கடவுள் வழிபாட்டை முடித்துத் தேன் கலந்த பால்பழங் கொடுத்தார். திருமணப் பெண்களுக்கு ஆடை முதலியன வழங்கினுர். நான்முகன் ஆனைமுகக் கடவுளுடைய திருக்கைகளில் தன்னுடைய புதல் விகளாகிய சித்திபுத்திகளின் திருக்கைகளைச் சேர்த்துப், "பெருமானே! அடியேன் அருமையாக வளர்த்தெடுத்த இம்மங்கையரைத் தேவரீர் ஒப்புக்கொண்டு என்னை ஆட் கொண்டருளவேண்டும்" என்று வழங்கினுன். அத்திருமண விழாவிற்கு வந்திருந்த ஒன்பது கோள்கள் முதலிய எல்லா உயிர்களும் தாமாக விருந்தும் அப்பெண்களை யேற்றுக் கொள்ளும் பொருட்டு அவற்றினின்றும் வேருகி வீற்றிருக்

கின்ற ஆனைமுகக் கடவுளானவர் நான்முகனுடைய விண்ணப் பத்திற்கு அருள் சுரந்து ஏற்றுக்கொண்டார். நான்முகன் தான் விரும்பியதை முடித்தபடியினால் மிகுந்த களிப்பை யடைந்தான்.

மணவுண்வு

பிறகு நான்முகன் வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி முதலிய கனிவகைகளையும் இனிமை மிகுந்த கருப்பஞ்சாறு, ஆவின்பால், தேன், கற்கண்டு முதலிய சிறந்த பொருள் களையும் மிகுதியாகக் கொண்டுவந்து, "ஐயனே! இவற்றைத் தேவரீர் புசித்தருளி அடியேனைக் காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான்.

திருமணம்

பிறகு மங்கல ஒலிக் கருவிகளாகிய, முரசம், மத்தளம், டமாரம், குடமுழா, தக்கை, வலம்புரிச் சங்கம், வேய்ங்குழல் திருச்சின்னம், பூரி, எக்காளம், துத்தாரி, வெற்றிகண்டை முதலிய பலவும் முழங்கின. அவற்றினுடைய முழக்கங்கள் உலகங்கள் அதிர்ந்து திக்குகள் செவிடுபடும் படியாக இருந்தன. தேவர்கள், முனிவர்கள், கின்னரர்கள், கிம்புருடர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், கருடர்கள், கந்தருவர்கள் முதலியோர் மகிழ்ச்சியுடன், "வெற்றி வெற்றி" என்று பெருமுழக்கஞ் செய்தனர். பதினொரு உருத்திரர்கள், பன்னிரண்டு கதிரவர்கள், எட்டுத் திக்குப் பாலகர்கள் முதலிய யாவரும் இன்பக் கடலில் மூழ்கி மங்கல வாழ்த்துக் கூறினார்கள். அத்திரி, ஆங்கீரசர், கௌதமர், சமதக்கினி, பரத்துவாசர் முதலிய முனிவர்கள் மறை முதலிய மெய்யறிவு நூல்களால் துதித்து வணங்கினார்கள். விண்ணிலிருந்து தேவதுந்துபி முழங்கியது. சனகமாமுனிவர் வேள்விக் குழியை அடைந்து சுற்றிலும் அந்தணர்களை யிருத்தினார். முத்தீக்களையும் முறைப்படி வளர்த்தார். ஆனைமுகக் கடவுளையும் சித்திபுத்தி களையும் அதன் அண்மையில் எழுந்தருளச் செய்தார். முனிவர்களும் அந்தணர்களும் மறைகளைக் கூறி முறைப்படி வேள்வி விறகுகளை வேள்வித் தீயிற் போட்டார்கள். ஆவின்

நெய்யை ஊற்றினுர்கள். இடையிடையே பொரியையும் பாலேயுஞ் சொரிந்தார்கள். ஒன்பான்வகைக் கோள் வேள்வி முதலிய செயல்களே மறைமுறைப்படி நிறைவேற்றினுர். அத் தீயினிடத்தில் எடுத்த மைக்குழம்பை மாப்பிள்ளேயினுடைய திருநுதலில் இட்டார். பிறகு அவரைக் கொண்டு மணப் பெண்களுக்கு இடச்செய்தார். நாரதமுனிவர் பொரியிட அதனேயும் வேள்வித் தீயில் ஆகுதி செய்து மற்றைச் சடங்கு களேயும் முறையாக முடித்தார். பிறகு மாப்பிள்ளேக்குத் திருமால் திருமணத் தோழராக இருந்து கைகொடுத்தார். திருமகள் முதலியோர் சித்தி புத்திகளேயும் ஆனேமுகக் கடவுளேயும் சுண்டு விரல்களால் பற்றச் செய்தனர். அதன் பிறகு மணமக்கள் வேள்வித் தீயை மும்முறை வலம் வந்தனர். அம்மி மிதித்தலும் அருந்ததியை எதிரே அழைத்துப் பார்த் தலும் நிகழ்ந்தன. திருமணச் செயல்கள் முடிந்தவுடன் ஆனேமுகக் கடவுள் தம்முடைய தேவியார்களோடு தாய் தந்தையர்களுடைய திருவடிகளிலே வணங்கினுர். அவர்கள் மணமக்களுக்கு வாழ்த்துரை வழங்கினுர்கள். பிறகு திருமணத் திற்கு வந்தவர்கட்குப் பாக்கு வெற்றிலே வழங்கப்பட்டன. கற்பக மரம் முனிவர் கூட்டங்கட்கு வேண்டியவைகளே வழங்கியது. சிவபெருமான் திருமணத்திற்கு வந்திருந்த எல்லோருக்கும் அவரவர்கள் விரும்பிய மேன்மைகளே வழங்கி யருளினுர். ஆனேமுகக் கடவுள் ஈராயிரம் மருப்பினேயுடைய ஆனேயின்மீது அமர்ந்து அளவற்ற ஒலிக்கருவிகள் முழங்கத், தேவர்கள் மலர்மாரி பொழியத், திங்கள் வட்டக் குடைகள் விண்ணில் நிழலேச் செய்ய, மற்றும் பல சிறப்புக்களோடும் மனேவிமார்களோடும் புறப்பட்டார். தெருக்களே யெல்லாங் கடந்து அரண்மனேயை அடைந்தார். அச்சமயத்தில் காமதேனு, சிந்தாமணி, ஐவகை மரங்கள், சங்கநிதி, பதுமநிதி என்னும் இவைகள் வேறு வேறு வடிவங்கொண்டு அங்கு வந்தவர்கட்கெல்லாம் அவரவர்கள் வெறுக்குமாறு வேண்டிய பொருள்களே மழைபோற் சொரிந்தன. பிறகு எல்லோரும் சிவபெருமானேயும் உமாதேவியாரையும் வணங்கித் தத்தம் இருப்பிடங்கட்குச் சென்றுர்கள். இவ்வாறு திருமணம் பெருஞ் சிறப்போடு இனிது நிறைவெய்தியது.

**திருக்கைலையை அடைதல் :**

பிறகு சிவபெருமான் தம்மோடு வந்த முருகக் கடவுள் முதலானோர் புடைசூழ்ந்து வரச் சித்திபுத்திகளையும் ஆனைமுகக் கடவுளையும் அழைத்துக் கொண்டு உமாதேவி யாரோடு திருக்கயிலாயத்தை யடைந்தார். ஆனைமுகக் கடவுள் சித்திபுத்திகளோடு தம்முடைய இருப்பிடத்தை யடைந்து இனிது வாழ்ந்திருந்தார்.

## 16. திருமால் வழிப்பட்டது

**மது கைடவர்கள்**

முன்பு ஒரு காலத்தில் திருமால் திருப்பாற் கடலிலே பாம்புப் படுக்கையில் அறிதுயில் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய காதுக் குறும்பியில் இருந்து ஆற்றல்மிகுந்த மது கைடவர் என்னும் அரக்கர்கள் இருவர் பிறந்தார்கள். பூனைக்கண் போன்ற கண்களும், இடியொலி போன்ற குரலும், கண்டோர் அச்சங் கொள்ளத்தக்க உடலும், பிறைத் திங்களைப் போன்று வளைந்த பற்களும், சிவந்த மயிரும் உடையவர்களாக அவர்கள் இருந்தார்கள். அவ்வரக்கர்கள் தமக்குப் பிறப்பிடமான திருமாலையும் முனிவர் களையும் பெரியோர்களையும் மற்றவர்களையும் இகழ்ந்தார்கள். அவ்வரக்கர்கள் இந்திரன் முதலியோர் இருக்குமிடஞ் சென்று அவர்களைப் பிடித்தும் கடித்தும் அடித்தும் இடித்தும் உதைத்தும் பலவகையான துன்பங்களைச் செய்தார்கள். முனிவர்களைத் துன்புறுத்தி அவர்களுடைய தவங்களை அழித் தார்கள். இவ்வாறு திரிகின்ற அவ்வரக்கர்கள் ஒருநாள் நான்முகனிடஞ் சென்று அவனைத் துன்புறுத்தினார்கள். அவன் அவர்களிடத்திலிருந்து தப்பி யோடினான்.

**திருமாலிடம் முறையிடுதல்**

இவ்வரக்கர்களைக் கொல்லத் தக்கவர்கள் யார் என்று நான்முகன் எண்ணமிட்டான். திருமாலே இவ்வரக்கர்களை

அழித்து ஒழிக்கத் தக்கவர் என்று முடிவு செய்தான். திருப் பாற் கடலை யடைந்து திருமாலைக் கண்டான். அச்சமயத்தில் அங்கு இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் வந்திருந்தார்கள் எல்லோரும் மது கைடவர்கள் செய்யுந் தொல்லையைத் திருமாலிடங் கூறினுர்கள். அவர்களுடைய வேண்டுகோளுக்குத் திருமால் இரங்கினுர். படுக்கையினின் றும் எழுந்தார். பல படைக்கலங்களைத் தாங்கிப் போர்க் கோலங் கொண்டார். மது கைடவர்களை யெதிர்த்துப் பெருநகை புரிந்தார். மது கைடவர்கள் சிறிதும் அஞ்சவில்லை. திருமாலினுடைய கருமேனி செம்மேனியாமாறு பல படைக் கலங்களைச் செலுத்தி இரத்தப் பெருக் கெடுக்குமாறு செய்தார்கள். திருமாலும் அஞ்சாமல் அவ்விருவருடைய உடல்களும் புண்ணுகுமாறு பல கணைகளைச் செலுத்திஞர். வாளால் அறுத்தும் வேலாற் குத்தியும் ஈட்டியால் இடித்தும் அவர்களைப் பலவாறு துன்புறுத்திஞர். ஆனுல், அவர்கள் இதனை யொருபொருட் படுத்தவில்லை. எவ்வாறேனும் திருமாலின் உயிரை வாங்கிவிட வேண்டுமென்று திருமாலைப் பிடிக்கத் தொடங்கினுர்கள். இருவரையும் எதிர்த்துப் போரிடும் ஆற்றல் திருமாலுக்கு இல்லை. ஆகவே அவர் கந்தருவ கோலந் தாங்கி ஓடி ஒளித்தார்.

### கயிலாய வரையை அடைதல்

ஓடியொளித்த திருமால் திருக்கைலையை அடைந்தார். ஒரு பூம்பொழிலில் தங்கி யாழ் வாசித்தார். திருமாலின் யாழோசையைக் கேட்ட சிவபெருமான் திருமாலைத் தம்மிடம் அழைத்துவரக் கட்டளையிட்டார். திருமால் சிவபிரானிடஞ் சென்ருர். சிவபிரானைப் போற்றிப் புகழ்ந்தார். சிவபெரு மான் திருமாலைப் பார்த்து, "நீ இங்கு வந்த காரியம் யாது?" என்று உசாவினுர். திருமால் சிவபிரானைப் பார்த்து, "எம்பெருமானே! என்னுடைய காதுகளில் இருந்து இரண்டு அரக்கர்கள் தோன்றித் தந்தையாகிய என்னையே எதிர்த்துப் போரிடலானுர்கள். அவர்களோடு நெடுங்காலம் போர் செய்தும் என்னுல் அவர்களைக் கொல்ல முடியவில்லை.

மிகுந்த களைப்படைந்து உருவை மறைத்து இவ்விடத்திற்கு ஓடி வந்தேன். அவர்களை அழித்தொழிக்குமாறு தேவரீர் திருவருள் புரிய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்.

### சிவபிரான் அருளுரை

சிவபெருமான் திருமாலைப் பார்த்துத், "திருமாலே! நீ முன்பு போருக்குச் சென்றபொழுது ஆனைமுகனை வழிபாடு செய்யாமற் சென்றபடியினால், உனக்குத் தோல்வி யுண்டாகியது. ஆனைமுகனை வழிபட்டுப் பகைவர்களை வென்று வெற்றியோடு வாழக் கடவாய்! ஆனைமுகனைப் போற்றுதற் குரிய மறைகள் பல இருக்கின்றன. அவைகளில் உனக் கேற்ற மறை ஒன்று உண்டு. அஃது ஆறெழுத்து மறை யாகும். அப்பெருமறையை உனக்குக் கூறுகின்றோம். விரைவில் நீராடி வரக் கடவாய்'' என்று கட்டளையிட்டருளினார். திருமால் அவ்வாறே நீராடி வந்தார். அறிவு நூன் முறைமையோடு தூய்மை செய்து, ஆனைமுகக் கடவுளுக்கு மகிழ்ச்சியுண்டாக்கத் தக்க ஆறெழுத்து மறையைக் கூறி அதனைப் பின்பற்ற வேண்டிய முறைமையையுந் திருவாய் மலர்ந்தருளினார். பிறகு திருமால் இறைவனை வணங்கி நிலவுலகத்திற்கு வந்தார்.

### ஆனைமுகனைப் போற்றல்

ஒரு தடாகத்தில் நீராடித் திருவெண்ணீறணிந்து, மறைநீர் தெளித்து நிலத்தைத் தூய்மை செய்து, புலித் தோல் இருக்கையின்மீது வெள்ளையாடையை விரித்து வட கிழக்காகிய ஈசானமுகமாக இருந்துகொண்டு ஐம்புலன்களை அறிவின்வழியே செலுத்தி நூறு ஆண்டுகள் வரை ஆனைமுகக் கடவுளை எண்ணி யிருந்தார்.

### ஆனைமுகர் அருளுதல்

ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்து திருமாலுக்கெதிரில் காட்சி கொடுத்தார். திருமால் ஆனைமுகக் கடவுளைப்

போற்றிப் புகழ்ந்து வணங்கினுர். ஆனைமுகக் கடவுள் திருமாலைப் பார்த்து, "ஓ திருமாலே! நீ போருக்குச் செல்வதற்கு முன்னரே எம்மை வழிபட்டுச் சென்றிருப்பையானுல் வெற்றி பெற்றிருப்பாய். அவ்வாறு வழிபடாமற் சென்றபடியினுல்தான் தோல்வியடைந்தாய். இனிமேல் அவ்வரக்கர்களையெதிர்த்துப் போரிடுவாயானுல் வெற்றியடைவாய். அதற்குரிய பேராற்றலை உனக்குக் கொடுத்தோம்" என்று கூறி மறைந்தருளினுர். பிறகு திருமால் ஆனைமுகக் கடவுளுக்குக் கோயிலுண்டாக்கி வழிபாடு செய்தார்.

## மீண்டும் போருக்குச் செல்லுதல்

ஆனைமுகக் கடவுளுடைய அருளைப் பெற்ற திருமால் மீண்டும் மது கைடவர்களை யெதிர்த்துப் போரிட எண்ணினுர். மதுகைடவர்களைத் தேடிக் கண்டுபிடித்தார். அவ்வசுரர்கள் இவரைப் பார்த்து நகைத்து, "ஓ திருமாலே! முன்பு எங்களோடு போரிட முடியாமல் ஒளிந்து ஓடிப்போன நீ மீளவும் நாணமில்லாமல் திரும்பி வந்தாயே. இப்போது உனக்கு வீடுபேற்றையே கொடுக்கிறோம்! பெற்றுக்கொள்" என்று கூறினுர்கள். திருமால் அவர்களைப் பார்த்து, "ஓ அறிவற்றவர்களே! நீங்கள் வீண் மொழி பேசுவதில் பயனில்லை. உங்களுடைய உயிரை இதோ வாங்குகிறேன் பாருங்கள்" என்று சொன்னுர். அவ்வளவில் மதுகைடவர்களுக்குந் திருமாலுக்கும் பெரும்போர் மூண்டது. அளவற்ற கணைகளை மாரிபோல் ஒருவர்மீது ஒருவர் சொரிந்துகொண்டார்கள். நீண்ட நேரம் பெரும்போர் நிகழ்ந்தது. திருமால் மிகுந்த சினங்கொண்டு தம்முடைய சங்கை யெடுத்து ஊதிச் சார்ங்கம் என்னும் வில்லை வளைத்து, அதில் எண்ணிறந்த கணைகளைத் தொடுத்துப் பகைவர்மீது செலுத்தினுர். இறுதியில் தமக்குச் சிவபெருமான் கொடுத்திருந்த ஆழிப் படையைக் கையிலெடுத்து ஆனைமுகக் கடவுளை வழிபட்டு மதுகைடவர்கள்மீது செலுத்தினுர். அப்படை அவர்களைக் கொன்று தொலைத்தது. இதனைக் கண்டு நான்முகனுந் தேவர்களும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்கள். திருமால்

ஆனைமுகக் கடவுளை வழிபட்ட இடத்திற்கு நான்முகனும் மற்றைத் தேவர்களுஞ் சென்று வழிபாடு செய்து நன்மைகளை யெல்லாம் அடைந்தார்கள்.

## 17. விசுவாமித்திரரை வீமன் அடுத்தது

### வீமன் என்னும் வேந்தன்

விதர்ப்ப நாட்டில் கவுண்டியம் என்னும் நகரத்தில் வீமன் என்னும் பெயரினையுடைய ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சாருகாசினி. வீமன் தன்னுடைய மனைவியோடு எல்லா வகையான இன்பங்களையும் நுகர்ந்துகொண்டு முறைப்படி அரசாட்சி செய்துகொண்டிருந்தான். நெடுங்காலமாக அவனுக்கு மக்கட்பேறு உண்டாகவில்லை. ஆகவே, அவன் தன்னுடைய மனைவியோடு காட்டிற்குப் போய் மக்கட்பேற்றின் பொருட்டுத் தவஞ் செய்ய எண்ணினன். தன்னுடைய அமைச்சர்களாகிய சுமந்து மனோரஞ்சிதன் என்னும் பெயர்களையுடைய அமைச்சர்களைப் பார்த்து, "அமைச்சர்களே! நான் முன்பிறப்பில் எத்தகைய தீவினை செய்தேனோ தெரியவில்லை. எனக்கு இதுவரையில் மக்கட்பேறு உண்டாகாதபடியினால் இனியேனுங் காட்டை யடைந்து தவஞ்செய்து ஒரு மகனைப் பெற எண்ணுகிறேன். எனக்குரிய நாடு முதலிய பொருள்கள் அனைத்தையும் நீங்கள் இருவரும் பங்கிட்டு நான் வருமளவுங் காத்துக்கொண்டிருக்கக் கடவீர்கள். நான் மீண்டும் வராமற் போவேனாயின் நீங்களே முழு உரிமையுடன் ஆண்டு கொள்ளலாம்" என்று கூறினன். தன்னுடைய மனைவியோடு எழுந்து பயணமானன். அமைச்சர்கள் கவலைகொண்டார்கள். அரசனுடைய உரையைத் தடுக்க முடியாதவர்களாய்ப் பேசாமலிருந்தார்கள். அரசன் தன் மனைவியோடு காட்டை யடைந்து அங்குத் தங்கியிருந்தான். ஒருநாள் நல்வினைப் பயனால் இருவரும் விசுவாமித்திர முனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றார்கள்.

**முனிவரைக் காண்டல்**

விசுவாமித்திர முனிவருடைய இருப்பிடத்தைச் சூழ்ந்த இடம் எல்லாச் சிறப்புக்களோடும் விளங்கியது. விசுவாமித்திர முனிவர் தம்முடைய இருப்பிடத்தில் புலித்தோல் இருக்கையில் அமர்ந்து மறைப்பொருளை விரித்துரைத்துக்கொண்டிருத்தலைக் கண்டார்கள். கீழே விழுந்து அவரை வணங்கினார்கள். விசுவாமித்திர முனிவர் அரசனையும் அரசியையும் பார்த்து "உங்கட்குப் புதல்வன் உண்டாகக் கடவன்'' என்று வாழ்த்துரை வழங்கினர். பிறகு இருவரும் எழுந்து முனிவரை வணங்கி நின்றார்கள். விசுவாமித்திர முனிவர் அரசனைப் பார்த்து, "அரசனே! நீ யார்? நம்முடைய இருப்பிடத்தை நோக்கி வந்தவர்கள் ஏதேனும் ஒரு பயனை அடையாமற் போவதில்லை. ஆகவே உன்னுடைய விருப்பத்தை அறிவிப்பாயானல் அதனைத் தடையின்றி நிறைவேற்றுவோம்'' என்று கூறினர். அரசன் தான் அப்பொழுதே மகப்பேற்றை யடைந்து விட்டாற் போன்று மகிழ்ச்சி யடைந்தான். முனிவரைப் பார்த்து, "பெரியீர்! என்னுடைய பெயர் வீமன். இவள் என்னுடைய மனைவி. இவளுடைய பெயர் சாருகாசினி. நாங்களிருவரும் அளவற்ற தருமங்களைச் செய்தோம். அவ்வாறு செய்தும் மக்கட்பேற்றை யடையவில்லை. அதனல் மனம் வருந்தி இல்வாழ்க்கையை வெறுத்துக் காட்டிற்கு வந்தோம். நாங்கள் இதுவரையில் செய்த நல்வினைப் பயனல் இங்கு வந்து தங்களைக் காணப்பெற்றோம். மகமேருவை அடுத்தவர்களும் கற்பக மரத்தைச் சார்ந்தவர்களும் அவரவர்கள் எண்ணியதை அடையாமற் போவதுண்டோ? அருளே வடிவமாக அமர்ந்தவரே! தங்களைக் கண்ட போதே இனிமேல் மக்கட்பேற்றை யடைந்து மகிழலாம் என்று திண்ணமாக முடிவு செய்து கொண்டேன்; தேவரீருடைய வாழ்த்துரையும் அதற்கு இணங்கியதாகவே இருக்கிறது'' என்று கூறினன்.

**மக்கட் பேறின்மைக்குக் காரணம்**

மேலும் அரசன் முனிவரைப் பார்த்து, "மேலான, தவத்திலும் மறைநூல் ஆராய்ச்சியிலும், சிறந்த அருளிலும்

மேன்மையான நோன்பிலும் சிறந்த வேள்வியிலும், பெருமை பொருந்திய கலையறிவினும் தரும தானத்தினும் தேவரீருக் கொப்பாக வேறு யார் இருக்கிறார்கள்? தேவரீர் வழங்கிய வாழ்த்துரை வீண் போகுமா? அடிகாள்! முற்பிறப்பில் அடியேன் செய்திருக்கின்ற தீவினைகளை அடியேனுக்குத் தெரியப்படுத்தி அவ்வினைகளினின்று நீங்கி யான் உய்யும் வழியையுந் தேவரீர் அருளிச் செய்ய வேண்டு''மென்று வேண்டிக்கொண்டான். விசுவாமித்திர முனிவர் உள்ளம் இரங்கினார். அவ்வரசன் செய்திருக்கின்ற முன்பிறப்புத் தீவினைகளையெல்லாம் தமது மெய்யறிவு நோக்கினால் உணர்ந்தார். அரசனைப் பார்த்து, ''அரசனே! உன்னுடைய வழிமுறையில் இருந்த முன்னோர்கள் ஆனைமுகக் கடவுளை நாள்தோறும் வழிபட்டு மிகுந்த நன்மைகளைப் பெற்று வாழ்ந் திருந்தார்கள். நீ உன்னுடைய மனைவிமீது கொண்டுள்ள மையலால் ஆனைமுகக் கடவுள் வழிபாட்டை மறந்துவிட்டாய். அதனால் மக்கட்பேற்றை அடையாமற் போனாய். இனிமே லாயினும் நீங்கள் இருவரும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு வருவீர்களாயின் மக்கட்பேற்றை யடைவீர்கள்'' என்று கூறினார்.

## 18. தக்கன் நோய் நீங்கியது

### வல்லவன் என்னும் அரசன்

முன்னாளில் கருநாட நாட்டில் பானு என்கிற பட்டணத் தில் வல்லவன் என்னும் பெயருடைய மன்னவன் ஒருவன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன் மனைவியின் பெயர் கமலை. அவர்கட்கு ஒருமகன் பிறந்தான். அம்மகன் பிறந்த பொழுதே குருடாகியும், செவிடாகியும், ஊமையாகியும் உடலெங்கும் தொழு நோய் கொண்டு சீயுஞ் செந்நீரும் ஒழுகுகின்ற புண்ணுடையவனாக இருந்தான். இவ்வாறு பிறந்த பிள்ளையைத் தாய் பார்த்து மிகுந்த துன்பமடைந் தாள். கண்ணீர் சொரிந்து புலம்பினாள். ''தெய்வமே! மறுநாட்டு மன்னர்கள் இகழத்தக்க இத்தகைய தொழுநோய் கொண்ட பிள்ளையை வருந்திப் பெற்றதைவிடப் பிள்ளை

இல்லாமலே இருந்திருந்தால் மிக நன்ருக இருந்திருக்குமே. இத்தகைய பிள்ளை பிறக்குமாறு நான்முகன் ஏன் படைத்தான்? இப்பிள்ளை உயிரோடிருப்பதைவிட இறந்து போவது நல்லதாயிற்றே'' என்று பலவாறு புலம்பியிருந்தாள். இச்செய்தியை அரசன் அறிந்தான். தன் மனைவியிடத்திற்கு வந்தான். மகனைப் பார்த்துத் தானும் மிகுந்த வருத்தமடைந்தான். "ஆ! ஆ! நான் செய்த தவப்பயன் நன்ருக இருக்கிறது'' என்று சொல்லி அரற்றினுன். ஊழ்வினையினுல் உண்டாகிற காரியத்திற்கு வருத்தப் படுவதனுல் பயனில்லையென்று தன்னுடைய உள்ளத்தைத் தானே தேற்றிக் கொண்டான். தன் மனைவியைப் பார்த்து, "அன்புள்ளவளே! நீ துன்பப்பட வேண்டாம். இவ்வுலகத்தில் ஒரு காலத்தில் துன்பம் நுகர்கின்றவர்களே மற்ருெரு காலத்தில் இன்பத்தையும் நுகருகின்ருர்கள். புலன்களை இழந்திருக்கிற இப்புதல்வன் நாளை எல்லாப் பெருமைகளினுஞ் சிறந்து அரசனுவான். தக்கவாறு மருத்துவஞ் செய்விப்போம். அவைகளால் குணமாகாவிட்டால் தவம் தானம் நோன்பு முதலானவற்றைச் செய்து எல்லாத் துன்பங்களையும் போக்கிக் கொள்ளுவோம். சிறிது காலம் மனம் பொறுத்துக் கொண்டிரு'' என்று கூறினுன்.

### நோய் நீங்க மருத்துவஞ் செய்வித்தல்

அரசன் தன்னுடைய மகனுக்குப் பிறந்த நாட்குறிப்பு முதலியன முறைப்படி நடப்பித்தான். காலக் கணிதர்களை அழைத்து அவர்கள் கூறியபடியே தக்கன் என்று பெயரிட்டான். நோய் நீங்குமாறு பன்னிரண்டு ஆண்டுகள் வரையிலும் பலவகையான மருத்துவங்களை அளவற்ற பொருட் செலவு செய்தும் மகனுடைய நோய் நீங்கவில்லை. அதனுல் அரசன் மிகுந்த மன வெறுப்படைந்தான்.

### மனைவியையும் மகனையும் நீக்குதல்

ஒருநாள் தன்னுடைய மனைவியைப் பார்த்துப், "பெண்ணே! இதுவரையிலும் இவன் பொருட்டு அளவு

கடந்த பொருளைச் செலவு செய்தும் செய்யவேண்டிய தான தருமங்களைச் செய்து பார்த்தும் இவனுடைய நோய் நீங்க வில்லை. இவன் இனிமேல் இங்கு இருத்தல் கூடாது. இருந்தால் எஞ்சியுள்ள பொருளும் வீணாகச் செலவழிந்து போகும். ஆகவே சிறிதுங் காலந் தாழ்த்தாமல் உன் மகனோடு வெளியே சென்றுவிடக் கடவாய்'' என்று கட்டளை யிட்டான்.

### கமலை கலங்கி வெளியேறுதல்

காவலன் கழறியவைகளைக்கேட்ட கமலை நடுநடுங்கினாள். மிகுந்த துன்பமடைந்தாள். அந்தோ அரசன் இவ்வாறு என்மீது சினங் கொண்டால் யான் யாது செய்வேன் என்று மனம் நொந்தாள். நோயாக இருக்கிற புதல்வனை எடுத்துக் கொண்டு வெளிப்பட்டாள். ''நல்ல காலத்திற்குப் பகை யில்லை. பொல்லாத காலத்திற்கு உறவில்லை'' என்று பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். இனி வருந்துவதால் எத்தகைய பயனும் இல்லையென்று தன்னுடைய உள்ளத்தைத் தானே தேற்றிக்கொண்டாள். இனிமேல் நமக்குக் கடவுளைவிட வேறொரு துணையில்லையென்கிற உறுதியுடன் வழிநடந்து காட்டிற்குப்போய் அங்குச் சுற்றிக்கொண்டிருந் தாள். ஒருநாள் கள்ளர்கள் கமலையை வளைத்துக்கொண் டார்கள். அவள் அணிந்திருந்த அணிகலன்களையெல்லாம் பறித்துக்கொண்டு விரட்டிவிட்டார்கள். அதனால் கமலை மிகுந்த வாட்டமடைந்தாள். எக்காலத்திலும் பசிதாகங்களால் வருத்தமுற்றுக் கலங்காதவள் இப்பொழுது அவற்றால் கலங்கி மிகுந்த அச்சமடைந்தாள். உயிரை விட்டுவிடலாம் என்று எண்ணினாள். பிறகு மகனை நினைத்து அவ்வெண் ணத்தை மாற்றிக்கொண்டாள். ஊர்களில் ஐயமெடுத்துத் தன்னுடைய மகனைக் காப்பாற்றியதோடு தானும் அதனால் உண்டு உயிர் வாழ்ந்திருந்தாள்.

### நோய் நீங்குதல்

ஒருநாள் குண்டினபுரம் என்னும் ஊருக்கு ஐயமெடுக்கச் சென்றாள். அப்பொழுது அவளுடைய மகனும் உடன்

சென்ருன். அப்பொழுது முற்கல முனிவர் என்பவர் எதிரே வந்தார். ஆனைமுகக் கடவுளுக்கு அன்பராகிய அம்முனிவருடைய உடலிற் படிந்து வந்த காற்ருனது தக்கன் என்னும் சிறுவன்மீது பட்டது. அதனுல், அவனுடைய நோய் முழுவதும் நீங்கியது. வாய் திறந்து பேசலானுன். காது கேட்டதோடு கண்ணும் தெரிந்தது. இவ்வாறு நோய் நீங்கியபடியினுல் தக்கனுடைய உடல் பேரழகோடு பிறங்கியது. அவனைப் பார்க்கின்றவர்கள் இவன் காமனோ முருகக் கடவுளோ திருமாலோ என்று எண்ணுமாறு விளங்கினுன். இவ்வாறு அழகோடு விளங்குகின்ற மகனைப் பார்த்துத் தாய் மிகுந்த களிப்படைந்தாள். நம்முடைய காதலன் நம்மைச் சினந்து துரத்தியதும் நன்மைக்கு ஏதுவாகியது. நாம் இங்கு வந்தபடியினுலன்ருே பெரியோர்கள்மீது படிந்துவந்த காற்று இவன்மீது பட்டு இவ்வாறு சிறப்படையலானுன் என்று எண்ணி மகிழ்ந்தாள். தன் கணவன்மீது கொண்டிருந்த வெறுப்பை யொழித்தாள். இப்புதுமையை அந்நகரத்தோர் அறிந்து இருவர்மீதும் அருளுடையவர்களாகி நல்ல உணவு உடை முதலியன கொடுத்துப் பாதுகாத்தார்கள்.

## ஆனைமுகக் கடவுள் அருள்

ஒருநாள் ஆதிசைவ அந்தணர் ஒருவரைக் கண்டு இருவரும் வணங்கினுர்கள். அவர் இவர்கள்மீது அருள் வைத்து இருவருக்குந் தூய்மைச் சடங்கு (தீட்சை) செய்து ஆனைமுகக் கடவுளுடைய ஆறெழுத்து மறையை உரைத்தருளினுர். அதனை உருவேற்ற வேண்டிய முறைமையையுங் கூறினுர். அவர் கூறியவாறே இருவரும் அம்மறையை உருவேற்றிக் கொண்டிருந்தார்கள். ஆனைமுகக் கடவுள் இவர்கள்மீது அருள் சுரந்தார். இருவருக்கும் திருவருள் செய்ய எண்ணினுர். அழகிய கோலத்தோடு காட்சி கொடுத்தார். இருவரும் ஆனைமுகக் கடவுளைப் போற்றிப் புகழ்ந்தார்கள் :

வேதகா ரணமுநீ வேதமோர் நான்கும்நீ
பாதமோர் நான்குநீ பதங்களோர் நான்குநீ
போதலை மலையமார் புவனகா ரணருநீ
நாதநின் பெருமையை நவிலவல் லாரெவர்? (க)

புராதனப் பொருளுநீ புறம்பினும் உள்ளினும்
விராவுமெய்க் கரியும்நீ மிகுமுப நிடதநீ
சராசர குருவுநீ தத்துவ முழுதுநீ
பராபர நினதியல் பகரவல் லாரெவர்? (உ)

மூவர்கா ரணருநீ மூன்றுகா ரணமுநீ
மூவகை உலகுநீ மொழியுமுச் சுடருநீ
மூவகை உயிருநீ மூவகை உருவுநீ
தேவனே நினதருள் தெளியவல் லாரெவர்? (ங)

இந்திரி யங்களின் இசையதி தெய்வநீ
இந்திரன் முதலிய எண்டிசைத் தேவர்நீ
அந்திநண் பகலுநீ அறுவகைப் பருவநீ
எந்தைநின் னுருவினை இயம்பவல் லாரெவர்? (ச)

ஏகன்நீ அநேகன்நீ இருளும்நீ ஒளியும்நீ
போகிநீ யோகிநீ புலவரெல் லாருநீ
சாகரம் ஏழும்நீ தடவரைக் குலமும்நீ
மாகநின் னடிமலர் மருவவல் லாரெவர்? (ரு)

அறைபிர மேயநீ அப்பிர மேயநீ
பாறையும்பா வனையுநீ பாவனா தீதநீ
நிறைபரப் பிரமநீ நிலமுதல் ஐந்தும்நீ
இறைவநின் அருளினை எய்தவல் லாரெவர்? (சு)

மிருதிநீ புராணநீ வேறுபல் கலையுநீ
வருணமோர் நான்குநீ வனமுப வனமுநீ
தருவொடு கொடியுநீ சகலசெந் துக்கள்நீ
ஒருவநின் றன்னியல் உணரவல் லாரெவர்? (எ)

காமமா திகளுநீ கடும்பசி தாகநீ
நாமநித் திரையுநீ நகுவிநோ தங்கள்நீ
ஏமமார் பொறையும்நீ இன்பநீ துன்பநீ
வாமனே நின்கழல் மதிக்கவல் லாரெவர்? (அ)

அருளுநீ மறமுநீ அன்புநீ வன்புநீ
தெருளுநீ மருளுநீ செல்வநீ வறுமைநீ
வெருளுநீ தேற்றநீ வேறுநீ ஒன்றுநீ
குருவநின் குணங்களைக் குறிக்கவல் லாரெவர்? (௯)

புண்ணிய தலங்கள்நீ பொருவில்தீர்த் தங்கள்நீ
வண்ணமூர்த் திகளுநீ வரந்தரும் வள்ளல்நீ
பண்ணியம் பலவுநீ பரமதப் பொருளுநீ
அண்ணலே நின்செயல் அறியவல் லாரெவர்? (௧0)

செய்வினை முதலுநீ செயப்படு பொருளுநீ
செய்வினைத் தொழிலுநீ செய்கரு மப்பயன்
உய்வகை அவரவர்க் குதவவல் லவனுநீ
மெய்வலாய் நினதியல் விளக்கவல் லாரெவர்? (௧௧)

குணமொடு குறிபல கொள்கைகொள் ளாயெனில்
நனிமலர் மணமென ஆக்கையின் உயிரெனப்
பணிஉயிர் அறிவெனப் பயிலுமத் துவிதமாம்
கணபதி நினதியல் காணவல் லாரெவர் ? (௧௨)

## தக்கன் தக்க வரம் பெறுதல்

ஆனைமுகக் கடவுள் தம்முடைய வடிவத்தை மாற்றி முற்கல முனிவருடைய உருவத்தைத் தாங்கித் தக்கனைப் பார்த்து, "அன்பனே ! உன்னுடைய புகழ்ச்சிக்கு மனமுவந்தோம். உனக்கு வேண்டிய மேன்மைகளைக் கேள் தருகின்றோம்" என்று திருவாய் மலர்ந்தருளினர். தக்கன் மீளவும் வணக்கஞ் செய்து, "பெருமானே! அடியேனுடைய இல்லத்தில் எண்வகைச் செல்வங்களும் நிறைந்திருக்க வேண்டும். மிகுந்த புகழோடு அடியேன் வாழ்ந்திருக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் தக்கனைப் பார்த்து, "ஓ தக்கனே ! நம்மால் முற்கலன் என்னும் பெயரைப் பெற்றிருக்கின்ற ஒரு முனிவனுடைய உருவத்தையே நாம் இப்பொழுது தாங்கியுள்ளோம். அவன் நம்முடைய திருவடிகட்கு அன்பன். அவனும் யாமும் வேறலம். அவனுருவத்திற் படிந்து வந்த காற்றினால்தான்

நீ நோய் நீங்கப்பெற்ருய். இனிமேல் நீ அவனே அடைக்கல மடைவாயாஞல் உன்னுடைய விருப்பங்களேயெல்லாம் நிறை வேற்றி வைப்பான். பிறகு நீ பெருஞ் சிறப்போடு நன்ருக வாழ்ந்திருப்பாய்'' என்று கூறி மறைந்தார்.

## 19. முற்கல முனிவர் தக்கனுக் கருளுரை வழங்கியது

### தக்கன் முற்கல முனிவரிடம் போதல்

ஆனேமுகக் கடவுள் மறைந்தவுடன் தக்கன் மனம் வருந்திப் பலவாறு புலம்பினுன். பிறகு ஒருவாறு உள்ளந் தேறி முற்கல முனிவருடைய இருப்பிடத்தை யடைந்தான். மாணவர்கட்கு அறிவு நூற்பொருளே அறிவுறுத்திக் கொண் டிருக்கிற முற்கல முனிவரைக் கண்டான். அவரைப் பேரன் போடு வணங்கி நின்ருன். முற்கல முனிவர் தக்கனுடைய பேரன்பைக் கண்டு மிகுந்த வியப்படைந்தார். தக்கனேப் பார்த்து, ''அன்பனே உன்னுடைய பெயர் யாது? நீ இருக்கும் ஊர் எது? நீ எதனே விரும்பி இங்கு வந்தாய்?'' என்று உசாவினுர். தக்கன் கைகளேக் குவித்து முனிவரை வணங்கினுன். ''அடிகாள்! அடியேனுடைய தந்தை கருநாட நாட்டில் பானு என்னும் ஊரில் அரசாட்சி செய்கின்ற வல்லவராசன். என்னுடைய தாயின் பெயர் கமலே. என்னுடைய பெயர் தக்கன். மேற்கூறிய அவ்விருவருக்கும் யான் புதல்வனுகத் தோன்றிய பொழுதே என்னுடைய உடலானது தொழு நோய் முதலிய பிணிகளோடு விளங்கியது. அவர்கள் மனவருத்தம் அடைந்து பன்னிரண்டு ஆண்டுகள் வரையிற் பலவகையான மருத்துவங்களேச் செய்தார்கள். எந்த வகையான முயற்சியினுலும் நோய் நீங்கவில்லே. அதனுல் வெறுப்படைந்த என்னுடைய தந்தை மிகுந்த சினங்கொண்டு தாயையும் என்னேயும் விலக்கி விட்டார். நாங்கள் அவருடைய ஆணேயைத் தடுக்க முடியாமல் பல விடங்களில் ஐயமேற்றுக் காலங் கடத்தினேம்.

ஒருநாள் அடிகளுடைய திருவுடலிற் பட்ட காற்ருனது அடியேனுடைய உடலின்மீது பட்டபடியினுல் என்னுடைய நோய்கள் முழுவதும் நீங்கப்பெற்றது மல்லாமல் ஒரு மறையவர் உரைத்த ஆனைமுகக் கடவுளின் அருமறையைக் கடைப்பிடித்து அக்கடவுளையுங் காணப் பெற்றேன். அக் கடவுள் இட்டருளிய கட்டளையின்படி தேவரீரை அடைக்கல மடைந்தேன். ஆனைமுகத்தோடு எனக்கு முன்வந்து காட்சி கொடுத்த ஆனைமுகக் கடவுள், பிறகு அவ்வுருவத்தை மாற்றித் தேவரீருடைய உருவத்தைக் கொண்டு காட்சி கொடுத் தருளியதால் அக்கடவுளுக்கும் அடிகட்கும் திருவுருவம் ஒன்ருக இருக்கின்றது. தேவரீர் திருவருள் செய்தால் அடியேன் கடைத்தேறுவேன். ஆகவே தேவரீர் அடியே னுக்கு அருள் புரியவேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான்.

முற்கலமுனிவர் அருள்புரிதல்

தக்கன் சாற்றிய மாற்றங்களைக்கேட்ட முற்கலமுனிவர் மிகுந்த வியப்படைந்தார். ''மைந்தனே! நீ மிக நல்வினை யுடையவன். இவ்வுடம்பினுலாகிய பயனைப்பெற்றவன் நீயே. நினைத்த காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளத்தக்க சிறந்த தவத்தை யுடையவனும் நீயே. நீயே ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளில் மிகுந்த அன்புடையவன். நீயே முற்றத் துறந்தவன். நீயே வீடுபேற்றிற் குரியவன். யான் தேவர்களுடைய ஆண்டில் ஆயிரம் ஆண்டுகள் அருமையான தவஞ் செய்தும் திருப்பெயர் உருவேற்றியும் பல அறநெறி களில் முயன்றும் எண்ணிறந்த தானங்களைச் செய்தும் அது வரையிலும் ஆனைமுகக் கடவுள் எனக்குக் காட்சி கொடுத் தருளியதே இல்லை. நான்முகன் திருமால் உருத்திரன் என்கிற மூவர் உள்ளத்திலிருந்தும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையுஞ் செய்து அம் முத்தொழில்களை அம்மூவர் முன்னிலையில் இம்மூவகை உலகத்தினும், இயற்றுதல் செய்து, அம்மூவர்க்கும் முதல் வனுக இருக்கின்ற ஒரு முதல்வனுக்குத் தாமே முதல்வராக

இருக்கின்றவர் அவ் வானைமுகக் கடவுளே. அக் கடவுளை உன்னுடைய முக் கரணங்களாலும் பற்றியிருக்கிறபடியால் இவ்வுலகில் உனக்கு ஒப்பாக யார் இருக்கின்றார்கள் ?'' என்று இப்படிப் பலவாறு கூறினர். அவனை அன்போடு தழுவிக் கொண்டார். ஆனைமுகக் கடவுளுடைய ஓரெழுத்து மறையை உரைத் தருளினர். அதனை உருவேற்றும் முறையையும் அருளிச் செய்தார்.

### தாய் வருதல்

தக்கனுடைய தாயாகிய கமலையானவள் நெடுநேரம் தன்னுடைய மகனைக் காணமல் தேடினள். முற்கல முனிவரிடத்தில் இருக்கக் கண்டு மகிழ்ந்தாள். தானும் முனிவரைப் போற்றி வணங்கினள். முற்கல முனிவர் கமலையைப் பார்த்து, "நீயும் உன்னுடைய மகனும் ஆனைமுகக் கடவுளுடைய திருவருளுக்கு உரியவர்களானீர்கள். எல்லா வினைகளையும் வென்றீர்கள். இனிமேல் நீங்கள் பெற வேண்டியது யாதிருக்கின்றது ? உன் மகனுக்கு ஓரெழுத்து மறையை உரைத்திருக்கிறேன். அவன் அம் மறையை உருவேற்றிச் சித்தியெய்தி அரசியற் செல்வம் பெற்று வாழ்ந்திருப்பான். இனிமேல் ஒன்றற்கும் அஞ்சவேண்டாம்,'' என்று கூறி அவர்கட்கு விடைகொடுத்தார். இவ்வாறு விசுவாமித்திரர் வீமராசனுக்குச் சொன்னர்.

## 20. வல்லாளன் துன்பம் நீங்குதல்

### தக்கன் முன்பிறப்பு வரலாறு

பிறகு வீமராசன் விசுவாமித்திர முனிவரை மீளவும் வணங்கி, "அடிகாள் ! முற்கல முனிவர்மீது படிந்துவந்த காற்றுனது தக்கன் உடலிற் பட்டவுடன் அவனுடைய கொடியநோய் அவனை விட்டு நீங்கவும் ஆனைமுகக் கடவுள் அவனுக்கு எளிதில் காட்சி தரவும், முன்பிறப்பில் அவன்

எத்தகைய தவத்தினைச் செய்தான் அதனையுங் கூறியருளுதல் வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான். விசுவாமித்திரர் வீமராசனைப் பார்த்து, "அரசனே! எல்லா வளங்களாலுஞ் சிறப்புற்று விளங்கிய சிந்து நாட்டில் பல்லி யென்கிற பட்டணத்தில் வைசியகுலத்தில் கலியாணன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் இந்துமதி. அவர்கள் இருவருக்கும் வல்லாளன் என்னும் பெயருடைய மகன் ஒருவன் தோன்றினன். அவன் வளர்ந்து விளையாட்டுப் பருவத்தை யடைந்தான். தன் வீட்டை விட்டுச் சிறு பிள்ளைகளோடு கூடிக்கொண்டு தோப்புகளில் சென்று விளையாடத் தொடங்கினன். நல்வினைப்பயன் அவனுக்கு இருந்த படியினல் அவனுடைய விளையாட்டுத் தெய்வ விளையாட்டாகத் தொடங்கியது. ஒரு கல்லை யெடுத்து வைத்து அக்கல்லை ஆனைமுகக் கடவுளாக எண்ணித் தண்ணீரால் முழுக்காட்டி மலரால் வழிபட்டுத் தன் வீட்டிற்குச் செல்வான். இவ்வாறே நாள் தோறும் ஆனைமுகக் கடவுளின் வழிபாட்டு விளையாட்டைச் செய்துகொண்டிருந்தான்.

**தந்தையின் சினம்**

நாளடைவில் வழிபாட்டு விளையாட்டு வளர்ந்துகொண்டே சென்றது. காலையிற் சென்ருல் மாலையில்தான் இல்லத்திற்குத் திரும்புவான். ஊரார் பிள்ளைகள் வல்லாளனுடைய வழிபாட்டு விளையாட்டிற்கு ஆக வேண்டிய உதவிகளை உடனிருந்து செய்வார்கள். வல்லாளனல் மற்றைப் பிள்ளைகளும் தக்க காலத்தில் இல்லங்கட்குச் செல்லாமல் காலங் கடந்து சென்றுகொண் டிருந்தார்கள். மற்றைப் பிள்ளைகளின் பெற்ரோர்கள் வல்லாளன்மீது கடுஞ்சினங் கொண்டார்கள். அவனுடைய தந்தையாகிய கலியாணனிடத்திற்குப் போய், "உன்னுடைய மகன் எங்களுடைய பிள்ளைகளை அதிகாலையில் அழைத்துக் கொண்டுபோய் மாலைவரையில் வீட்டிற் கனுப்பாமல் விளையாடிக் கொண்டிருக்கிருன். அவனை நீ தக்கவாறு ஒறுத்து அடக்காவிட்டால் நாங்கள் இக்கொடு

மையை அரசனுக்குத் தெரியப்படுத்தி உன்னை இந்நகரத்தி லிருந்து துரத்திவிடச் செய்வோம். இதனை உறுதியாக நம்புவாயாக'' என்று சொல்லிக் கலியாணனுடைய உள்ளத்தைக் கலைத்தார்கள். பலபேர் தன்னிடம் வந்து கூச்சலிட்டுக் கத்தவே கலியாணனுக்கு அளவு கடந்த சினம் உண்டாகியது. ஒரு தடியை எடுத்துக்கொண்டு தன்னுடைய மகன் ஆனைமுகக் கடவுளின் வழிபாட்டு விளையாடல் செய்துகொண்டிருக்கிற இடத்திற்குச் சென்றான். பூம்பந்தரைப் பிரித்துத் தள்ளினான். பிள்ளையாராக வைத் திருக்கிற கல்லை எடுத்தெறிந்தான். வல்லாளனைக் குருதி யொழுகுமாறு அடித்தான். அவ்வாறு செய்துங் கலியாண னுடைய சினம் அடங்கவில்லை. அவனை ஒரு மரத்துடனே சேர்த்து இறுகக் கட்டினான். தன்னுடைய தந்தையின் செயலைக் கண்டு வல்லாளன் அஞ்சினான். தன்னுடைய கட்டை அவிழ்த்துவிடுமாறு கெஞ்சினான். பலமுறை தந்தையை வேண்டிக்கொண்டான். கலியாணனாகிய தீவினை யாளன் சிறிதும் உள்ளம் இரங்கவில்லை. "நீ ஆனைமுகக் கடவுளைக் குறைவில்லாமல் வழிபாடு செய்திருந்தால் அவரே வந்து உன்னுடைய கட்டை அவிழ்த்து விடுவார். உணவு களையும் உன்னுடைய கையிலேயே கொடுத்து நீ விரும்பிய வாறு அருள்செய்து உன்னுடைய உயிரையும் பாதுகாப்பார். நீ வீட்டிற்கு வருவாயானால் இறந்தொழிவாய்'' என்று பகைவரைப்போலப் பேசிவிட்டுத் தன்னுடைய வீட்டை நோக்கிச் சென்றான்.

வல்லாளன் வசவுரை வழங்குதல்

தந்தையால் துன்புறுத்தப்பட்ட வல்லாளன் பலவாறு புலம்பினான்: "முக்கண்களையுடைய ஆனைமுகக் கடவுளே! அடியேன் படுகிற துன்பங்களைத் தேவரீர் பார்க்கவில்லையோ? எல்லாவற்றிற்குந் தேவரீரையே நம்பியிருக்கின்ற அடியே னுக்கு இத்தகைய துன்பம் நேரிடலாகுமா? தேவரீரைப் போற்றும் எனக்கும் இத்துன்பம் நேர்ந்ததே. நான் உமக்கு அடிமையென்பது உண்மையானால், யான் செய்து வைத்த

திருக்கோயிலை எவன் பிரித்துத் தள்ளினனோ, யான் அமைத்து வைத்த தேவரீருடைய உருவத்தை எவன் எடுத்தெறிந்தானோ, என்னுடைய உடலில் உதிரம் ஒழுகு மாறு எவன் அடித்துக் கட்டினனோ, எவன் தேவரீரை இகழ்ந்துரைத்தானோ அத்தீயோன் இக்கணமே குருடாகியும் ஊமையாகியும் செவிடாகியும் அழுகிய தொழுநோய் கொண்டு அதிற் சீயுஞ் செந்நீரும் ஒழுகத் துன்பப்படக் கடவன்'' என்று வசவுரை வழங்கினன். தன்னுள்ளத்தில் ஆனைமுகக் கடவுளைப் போற்றி உயிரைவிடத் துணிந்தான். அடியார்க் கெளியவராகிய ஆனைமுகக் கடவுள் வல்லாளனுக்கு அருள் செய்ய எண்ணினர்.

### ஆனைமுகக் கடவுள் அந்தணச் சிறுவனாக வருதல்

அருள் செய்ய எண்ணிய ஆனைமுகக் கடவுள் ஓர் அந்தணச் சிறுவனாக வல்லாளனுக்கு முன்னே தோன்றினர். அவ்வளவில் வல்லாளனை இறுகக் கட்டியிருந்த கட்டு அறுபட்டுவிட்டது. அடிகளால் உண்டாகியிருந்த புண் ஒரு நொடிப்பொழுதில் ஆறிப்போய்விட்டது. வல்லாளன் இதனைக் கண்டு வியப்படைந்தான். இவரே நம்மை ஆட் கொண்ட ஆனைமுகக் கடவுள் என்று உறுதி செய்து வணங்கினன். பலவாறு போற்றிப் புகழ்ந்தான். ஆனைமுகக் கடவுள் வல்லாளனுக்குத் திருவருள் செய்தார். ''எனக்குக் குற்றஞ் செய்தவர்களும் என்னுடைய அடியவர்கட்குக் குற்றஞ் செய்தவர்களும் மிகுந்த துன்பத்திற்குள்ளாவார்கள். இப்பொழுது நம்மிருவருக்குங் குற்றஞ்செய்த கலியாணனுக்கு நீ வழங்கிய வசவுரையின் பலன் உடனே கிடைக்குமாறு செய்தோம். நீ உன்னுடைய துன்பம் நீங்கி வேண்டிய சிறப்புகளைப் பெற்றுக்கொள்ளலாம்'' என்று திருவருள் செய்தார். வல்லாளன் அம்மொழிகளைக் கேட்டுப் பேரின்ப மடைந்தான். ''அடியேனுக்குத் தேவரீருடைய திருவடி களில் நீங்காத பேரன்பைத் தரவேண்டும். எக்காலமும் இந்த இடத்தைவிட்டு நீங்காமல் எழுந்தருளியிருக்க வேண்டும். போற்றும் அன்பர்கள் விரும்புகிற வரங்களை

வழங்கியருளுதல் வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் வல்லாளனுடைய வேண்டு கோளுக்கு இணங்கினர். ''மைந்தனே! உனக்கு எம்முடைய திருவடிகளில் என்றைக்கும் அழியாத பேரன்பைக் கொடுத் தோம். அல்லாமலும் உன்னுடைய பெயரை நம்முடைய பெயருக்கு முன்னால் வைத்து வல்லாள கணபதி என்று உலகினர் போற்றுமாறு இங்கு எழுந்தருளி யிருப்போம். மண் விண் பாதலம் என்னும் மூவுலகத்தாரும் இங்கு வந்து எம்மைப் போற்றி வழிபடக் கடவர். இங்கு அமைந்துள்ள நம்முடைய உருவத்தை எவர் கண்டாலும் அவர்கள் அடையக் கருதிய அரிய பொருள்களையெல்லாம் எளிதில் அடையக் கடவர்கள்'' என்று கூறி ஆனைமுகக் கடவுள் மறைந்தருளினர்.

## 21. வல்லாளன் வீடுபேறு

### கலியாணன் செய்தி

ஆனைமுகக் கடவுளானவர் அங்குத் திருவுருக்கொண்டு வீற்றிருத்தலை வல்லாளன் கண்டான். மிகுந்த அன்போடு பணிந்தான். முன்போலவே பூம்பந்தரிட்டு வழிபடத் தொடங் கினன். வழிபாட்டிற்கு வேண்டிய பொருள்களையும் மலர் வகைகளையும் இனிமையான காய்கனிகளையுஞ் சேர்த்து அளவற்ற மகிழ்ச்சியோடு வழிபாடு செய்துகொண்டிருந்தான். இவனைத் துன்புறுத்திவிட்டுச் சென்ற கலியாணன், தன் னுடைய வீட்டையடைவதற்குமுன் இவனோடு விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் விரைவாக ஓடினர்கள். வல்லாள னுடைய தாயாகிய இந்துமதியிடத்திற்குச் சென்றார்கள். கலியாணன் வல்லாளனை அடித்துத் துன்புறுத்தி மரத்தில் கட்டிப் போட்டிருக்கிற செய்தியைக் கூறினர்கள். அதனை இந்துமதி கேட்டுத் துன்புற்று வருந்திக்கொண்டிருந்தாள். மகனைத் துன்புறுத்திவிட்டு வீட்டை நோக்கி வந்துகொண் டிருந்த கலியாணனுடைய நிலைமை வருந்தத் தக்கதாகி விட்டது. அவனுக்கு அவனுடைய மகன் வழங்கிய வசவுரை பலித்துவிட்டது. கண்கள் தெரியாமற் போய்விட்டன; வாய்

பேசமுடியாமல் ஊமையாக இருந்தது ; காதுகள் செவிடாகி யிருந்தன. உடல் முழுவதும் தொழுநோயாற் பீடிக்கப்பட் டிருந்தது. அவன் தட்டுக்கெட்டுத் தடுமாறி வீட்டுக்கு வந்து சேர்ந்தான். நிலைகெட்டு வந்த கலியாணனுகிய தன்னுடைய கணவனை இந்துமதி கண்டாள். ஈதென்ன தீவினையென்று திடுக்கிட்டாள். நடுநடுங்கி உள்ளம் வருந்தினுள். "அந்தோ நம்முடைய கணவனுக்கு இத்தகைய தொல்லைவரக் காரணம் யாது?" என்று மனம் உருகிக் கண்ணீர் சொரிந்தாள். தன் மகன் அடித்துத் துன்புறுத்தப்பட்ட செய்தி வேறே அவளுடைய உள்ளத்தை வருத்திக் கொண்டிருந்தது. பிற மாதர்களோடு தன் மகன் இருக்குமிடத்திற்குச் சென்ருள். அவன் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுக் கொண்டிருத்தலைக் கண்டு மகிழ்ச்சியடைந்தாள். இவன் அடிக்கப்பட்டு மரத்திலே கட்டப்பட்டிருக்கிருன் என்று நாம் கேட்ட செய்தி பொய்யோ என்று எண்ணினுள். தான் கேள்வியுற்றதற்கு மாருக வல்லாளன் நலத்துடன் இருத்தலைப் பிற மாதர்கட்குச் சொன்னுள். அவர்கள், இச்சிறுவன் ஆனைமுகக் கடவுளை அன்போடும் வழிபட்டு வருகின்ற பெருமையினுலே இவனுக்கு ஏற்பட்ட தொல்லை நீங்கிவிட்டது என்று எண்ணினுர்கள். அச்செய்தியை இந்துமதிக்குச் சொன்னுர்கள்.

**இந்துமதி வேண்டுகோள்**

இந்துமதி தன்னுடைய மகனுக்கு அண்மையிற் சென்று அவனைத் தழுவிக்கொண்டாள். "அப்பா! என்னுடைய அருமைச் செல்வனே! நீ இவ்வளவு இளமைப் பருவத்தில் தானே ஆனைமுகக் கடவுளை அன்போடு வழிபட்டு அவரை விட்டு நீங்காமலிருக்கிற புதுமையினுலே நானும் உன்னுடைய தந்தையுங் கடைத்தேறினேம். நீ ஆனைமுகக் கடவுளை வழிபடுங் காலம் போக மற்றைக் காலத்தில் வீட்டிற்கு வரக் கூடாதா? எங்களை அடியோடு மறந்துவிட்டு இவ்வாறு ஊருக்கு வெளியில்தானே ஒருவருடைய துணையும் இல்லாமல் தனியே இருப்பது உனக்குத் தகுமா? இப்பொழுது உன் னுடைய தந்தை யாதொரு காரணமும் இல்லாமல், யாவருங்

கண்டு திகைப்படையுமாறு உடல் முழுவதும் புண்ணுகியும், ஊமையாகியும், குருடாகியும், செவிடாகியும் மதிமயங்கித் தடுமாறி வீட்டில் வந்து விழுந்தார். அதனை யான் கண்ட வுடன் அளவற்ற துன்பத்தை யடைந்து அச்செய்தியை உனக்குத் தெரிவிக்கலாம் என்று இங்கு வந்து சேர்ந்தேன். தவருன வழியிற் செல்லுகின்ற பிள்ளைகளைத் தாய் தந்தையர் முதலானோர் சினந்தும் ஒறுத்தும் நல்வழிக்கு கொண்டுவர வேண்டுமென்று நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. அந்த முறையின்படியன்ரே உன்னுடைய தந்தை உன்னை ஒறுத்தார்? அது முறைமை தானே? தந்தை யாது செய்யினும் மக்கள் பொறுத்துக் கொள்ள வேண்டியது இயற்கையன்ரே? இனியேனும் நீ உன்னுடைய தந்தைமீது கொண்டிருக்கும் சினத்தைத் தணித்துக்கொள்ள வேண்டும். உன்னுடைய தந்தை படுகிற துன்பத்தை நீயே போக்குதல் வேண்டும். அறிவிற் சிறந்த பிள்ளைகள் தங்கள் தாய் தந்தையருடைய சொல்லை மேலாகக் கொள்வார்கள் என்று பெரியோர்கள் கூறியிருக்கிருர்கள். என்னுடைய துன்பந் தீருமாறு நீ நான் கூறுகிற அறிவுரையைக் கேட்க வேண்டும்'' என்று கூறி வேண்டிக் கொண்டாள்.

### வல்லாளன் மறுமொழி

வல்லாளன் தன்னுடைய தாயைப்பார்த்து, ''அம்மையே! இவ்வுலகில் எல்லோருக்குந் தாய்தந்தையர்களாக விளங்கத் தக்கவர் கடவுள் ஒருவரேயாவர். ஒருவருக்கொருவர் நன்மை செய்து கொள்வதும் அக்கடவுளுடைய அருளைக் கொண்டல் லாமல் தங்களுடைய ஆற்றலைக் கொண்டு அன்று. அவரவர் நன்மை தீமைகளை அவரவர்களே நுகர்தல் வேண்டும். மக்கள் தங்களுடைய தாய் தந்தையர்களின் உடன் பாடில்லாமல் உலகத்தையாளும் அரசனுக்குத் தொண்டு செய்வார்களாயின் தாய்தந்தையர்கள் அப்புதல்வர்களை ஒறுக்கவல்லவர்களோ? பெருங் கடவுளாக விளங்கும் ஆனைமுகக் கடவுளைத் தள்ளி என்னையுந் துன்புறுத்தி என் கடவுளின் உருவத்தைக் கையால் எடுத்தெறிந்தபடியினுல் அவருக்கு நீங்காத தொழுநோய் வந்து சேர்ந்தது

இந்நோயை இப்பிறப்பில் நுகர்வதல்லாமல் இனி வரும் பிறவிகளினும் அவர் நுகரவேண்டும்.

### மறுபிறப்புச் செய்தி

நீ மறுபிறப்பில் வல்லவராசனுடைய மனைவியாகிக் கமலையென்னும் பெயரைப் பெறுவாய். அப்பொழுது உன் கணவனுகிய இக்கலியாணன் "தக்கன் என்னும் பெயரோடும் இந்த நோயோடும் உன்னுடைய மகனுகப் பிறந்து துன்பப் படுவார். அக்காலத்தில் அவனுடைய தந்தையாகிய வல்லவ ராசன் மனவருத்தங் கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் வரை அளவற்ற மருத்துவங்களைச் செய்வான். அவ்வாறு செய்தும் நோய் நீங்காமைகண்டு உன்னையும் அவரையும் நாட்டைவிட்டுத் துரத்திவிடுவான். பிறகு நீங்கள் முற்கல முனிவராலே நன்மையைப் பெறுவீர்கள்'' என்று கூறி அனுப்பிவிட்டான்.

### விமானம் வருதல்

இந்துமதி வல்லாளன் கூறிய மொழிகளைக் கேட்டு மனேதிடங் கொண்டாள். அவனேடு வேறெதுவும் பேச முடியாமல் தன்னுடைய வீட்டிற்குச் சென்ருள். பிறகு வல்லாளன் மேலும் மிகுந்த அன்போடு ஆனைமுகக் கடவுளை வழிபட்டுக் கொண்டிருந்தான். அவனுறுதியைக் கண்டு ஆனைமுகக் கடவுள் களிப்படைந்தார். தம்முடைய தேவ கணங்களை அழைத்தார்; 'நம்முடைய அன்பனுகிய வல்லாளனை இவ்விடத்திற்கு அழைத்துக் கொண்டு வருவீர் களாக'' என்று கட்டளையிட்டார். அவ்வாறே தேவகணங்கள் விமானத்தைக் கொண்டுவந்து வல்லாளனுக்கு முன்பு நிறுத்தினுர்கள். அவ்விமானத்தைப் பார்த்த வல்லாளன் "ஆனைமுகக் கடவுளுடைய திருவருளுக்கு அடியேன் உரியவன் ஆவேனே'' என்று சொல்லித் தலைமீது கைகுவித்து நின்ருன். தேவகணங்கள் வல்லாளனைப் பார்த்து, "ஆனைமுகக் கடவு ளுடைய கட்டளையின்படி இவ்விமானத்தைக் கொண்டு

வந்தோம். இதனில் ஏறுவாயாக' என்று கூறினர். வல்லாளன் மிகுந்த மகிழ்ச்சியோடு அவ்விமானத்தில் ஏறினன். தேவகணங்கள் விண்ணக ஒலிக்கருவியை முழக்கினர்கள். சித்தர்கள், சிங்கன் வட்டக்குடையைப் பிடித்தார்கள்; கருடர்கள் வெண்சாமரை வீசினர்கள்; கின்னரர்கள் ஆலவட்டம் எடுத்தார்கள்; தேவர்கள் மலர் மாரி பொழிந்தார்கள்; அரம்பையர்கள் கூத்தாடினர்கள்; முனிவர்கள் இருபக்கங்களிலும் நெருங்கினர்கள்; மறைமுதலியவைகளால் போற்றினர்கள். வல்லாளன் ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தை யடைந்து அவருடைய திருவடிகளில் இரண்டறக் கலந்தான். இப்புதுமையை நகர மக்கள் கண்டு வியப்படைந்தார்கள். வல்லாளன் ஆனைமுகக்கடவுளை அமைத்த இடத்தில் சிற்பிகளைக் கொண்டு திருக்கோயில் அமைத்து அந்தணர்களைக் கொண்டு வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்தார்கள். திருவிழா முதலியவைகளையுஞ் சிறப்பாகச் செய்வித்தார்கள். வல்லாளனுக்குத் துன்பங்களையெல்லாம் போக்கி வீடுபேற்றைக் கொடுத்தருளிய ஆனைமுகக் கடவுளுக்கு வல்லாள கணேசர் என்று திருப் பெயரிட்டார்கள்.

### கலியாணன் செய்தி

தொழுநோய் கொண்டு துன்பத்திற்குள்ளாகிய கலியாணன் அப்பிறப்பு முழுவதும் நோயின் துன்பத்தை நுகர்ந்தான். அவனுடைய மனைவியாகிய இந்துமதியானவள் அவனுக்கு முன்னரே இறந்து மற்றொரு பிறப்பை எடுத்துக் கமலை என்னும் பெயரைத் தாங்கி வல்லவராசனுக்கு மனைவியாக இருந்தாள். அவளிடத்தில் அந்நோயுடன் கலியாணன் மகனாகத் தோன்றித் தக்கன் என்னும் பெயரைப் பெற்றான். தன் தாயாகிய கமலை முன்பிறவியில் மனைவியாக இருந்து அளவற்ற தான தருமங்களைச் செய்த நல்வினையினாலும், அப்பொழுது தன்னுடைய மகனாக இருந்த வல்லாளன் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு வீடுபேற்றை யடைந்த பெருமையினாலும், முற்கலமுனிவர் மீது படிந்து வந்த காற்றினால் அவனுடைய தொழுநோய் முதலியனவுந்

தீர்ந்து ஒரு மறையவனுல் ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை உரைக்கப் பெற்ருன். அம்மறையால் ஆனைமுகக் கடவுளையுங் கண்டு பிறகு முற்கல முனிவருடைய திருவடிகளை யடைந்து ஓரெழுத்து மறையும் பெற்று நல முற்ருன்'' என்று விசுவாமித்திர முனிவர் வீமராசனுக்கு விளம்பியருளினுர்.

## 22. தக்கன் அரசாட்சி

### முன்னுரை

ஆனைமுகக் கடவுளை வல்லாளன் வழிபட்டு வீடு பேறடைந்த செய்தியைக் கூறினேம். பிறகு வீமராசன் வழி பட்ட செய்தியையும் விளம்புகிரேம் கேட்பீர்களாக! வீமராசன் விசுவாமித்திரரை வணங்கிப், ''பெரியீர்! தக்கன் முற்கல முனிவரிடம் அருளுரை பெற்ற பிறகு நிகழ்ந்தது யாது? அதனையும் உரைத்தருள வேண்டும்'' என்று கேட்க விசுவாமித்திரர் கூறலானுர்.

### தக்கன் தவம்

'அரசனே! எல்லாவகையான நன்மைகளையுந் தரத்தக்க ஓரெழுத்து மறையை முற்கல முனிவரிடமிருந்து பெற்ற தக்கன் அம்முனிவரிடமிருந்து விடைபெற்றுத் தாயோடு அவ்விடமிருந்து புறப்பட்டான். கவுண்டினிய நகரத்திற்கு அண்மையான ஓரிடத்தில் ஒரு குளக்கரையில் ஒரு பிள்ளையார் கோயில் இருக்கக் கண்டான். அக்கோயிலை யடைந்து ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளையெண்ணி முற்கல முனிவரால் கூறியருளப் பெற்ற ஓரெழுத்து மறையைப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை உருவேற்றிக் கொண்டிருந் தான். மேலும் அக்கோயிலில் எழுந்தருளிய ஆனைமுகக் கடவுளுக்குப் பூசனை புரிந்து வழிபட்டான்.

நற்கனவு

யானை ஒன்று தன்னுடைய கையில் பூமாலை ஒன்றைத் கொண்டு வந்து தன்னுடைய கழுத்தில் போட்டுத் தன்னைத் தூக்கி முதுகில் வைத்துக்கொண்டு போவதாக ஒருநாள் அதிகாலையில் தக்கன் கனவு கண்டான். மறுநாள் காலையில் தக்கன் எழுந்து தன்னுடைய நாட் கடன்களை முடித்தான். பிறகு தன்னுடைய தாயைப் பார்த்துத் தான் இரவிற்கண்ட கனவை இயம்பினுன். அவள் அதனைக் கேட்டு மகிழ்ந்தாள். "அப்பா! நம்முடைய துன்பம் யாவும் ஒழிந்தன. நமக்கு விரைவில் நல்ல காலம் ஏற்படும். நீ உலகத்தை ஆளத் தக்க அரசனுவாய்" என்று கூறினுள். இருவரும் ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை உருவேற்றிக் கொண்டிருந் தார்கள். அதிகாலையிற் கண்ட கனவு உடனே கைகூடு மாதலின் கனவின் பலன் உடனே ஏற்படும் என்று எண்ணி னுர்கள்.

தக்கன் அரசனுதல்

கவுண்டினியம் என்னும் நகரத்தைச் சந்திரசேனன் என்னும் பெயருடைய அரசன் அரசாட்சி செய்துகொண்டிருந் தான். அவன் எத்தகைய காரணமும் இல்லாமல் திடீரென்று இறந்து போனுன். சந்திரசேனனுடைய மனைவியாகிய சுலபை என்பவள் மிகுந்த துன்பங் கொண்டு பலவாறு புலம் பினுள். இறந்துபோன அரசனுக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களை யெல்லாஞ் செய்தாள். பிறகு நாட்டை யரசாள்வதற்கு என்ன செய்யலாம் என்று எண்ணினுள். அமைச்சர்களோடு ஆராய்ந்து யானையைக் கொண்டு அரசனைத் தேர்ந்தெடுப்பது என்று முடிவுசெய்தாள். பட்டத்து யானையை அழகுசெய்து அதனுடைய கையிலே பூமாலையைக் கொடுத்து, "இந்நாட்டை அரசாளத்தக்க அரசனைக் கொண்டு வருவாயாக" என்று சொல்லி அதனை அதன் போக்கிலே விட்டார்கள். அமைச்சர் முதலியோர் அந்த யானையைப் பின்தொடர்ந்து சென்றுர்கள். பலபேர்

தாங்கள் அரசாட்சி செய்யவேண்டும் என்னும் எண்ணத் தோடு யானைக்கு முன்னாலே வந்து நின்றார்கள். யானை அவர்களையெல்லாம் சீறி விலக்கிக்கொண்டு தக்கனும் அவனுடைய தாயுந் தங்கியிருந்த இடத்தை அடைந்தது. அவனுடைய கழுத்திலே தன் துதிக்கையில் இருந்த மாலையைப் போட்டது ; அச்சமயத்தில் மலர் மாரி பெய்தது ; விண்ணவர்கள் அந்தர துந்துபியை முழக்கினார்கள் ; யானை யைத் தொடர்ந்து வந்த அமைச்சர்கள் முதலானோர் அரசனுவை தற்குத்தக்க ஆடையணிகளை யெடுத்துத் தக்கனுக்கு அணிந்தார்கள். அந்தணர்கள் வாழ்த்துரை வழங்கி இரு புறங்களினும் இருந்தார்கள். படைத்தலைவர்கள், தூதர்கள் முதலானவர்கள் வீரகண்டாமணியை அணிந்திருக்கின்ற அடிகளில் வணங்கி ஏவலுக்கு எதிர்பார்த்து நின்றார்கள். தக்கன் எழுந்து அவ்விடத்தில் தான் அதுவரையில் வழிபட்ட ஆனைமுகக் கடவுளை எண் வகை உறுப்புக்களும் நிலத்திற் றோயுமாறு வீழ்ந்து வணங்கினான். அந்தணர்கட்குப் பல பொருள்களைத் தானஞ் செய்தான். தன்னுடைய அருமைத் தாயைத் தங்கச் சிவிகையில் ஏற்றினான். தான் பட்டத்து யானையின்மேல் ஏறிக்கொண்டு புறப்பட்டான். அமைச்சர்கள் குதிரை முதலியவைகளில் ஏறிக்கொண்டு பின்தொடர்ந் தார்கள். தக்கன் பட்டணத்துக்குள் நுழைந்து அரண்மனையை அடைந்தான். தக்கன் அரண்மனையை அடைந்ததும் அரியணையில் ஏறி அமர்ந்துகொண்டு தனக்கு அச்சிறப்புக்கள் எல்லாம் கிடைப்பதற்குக் காரணமாக இருந்த முற்கல முனிவரை அங்கு அழைத்துக்கொண்டு வரச் சொன்னான்.

முற்கலமுனிவர் வருதல்

தூதர்கள் விரைந்து முற்கலமுனிவரிடஞ் சென்றார்கள். அவரைத் தேரில் ஏற்றி ஆடல் பாடல் முதலிய சிறப்புக் களோடு அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். தக்கன் இருக்கையை விட்டு எழுந்து முற்கலமுனிவரை எதிர் கொண்டான். சிறந்த இருக்கையில் இருக்க வைத்தான். சந்தனம் பூசி மலர்மாலைகளைச் சூட்டினான். சிறந்த முறையில்

வழிபாடு செய்தான். ஒன்பான் வகை மணிகள் இழைக்கப் பட்ட பொன் தட்டில் ஆடையணிகளை நிரப்பிப் பலவகைக் கனிகளைப் பரப்பினன்; முனிவருக்கு முன்னால் வைத்தான்; எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு கீழே விழுந்து வணங்கினன். முற்கல முனிவரைப் பார்த்து "அருட்கடலே! தேவரீருடைய திருவருட் பார்வையினலே அடியேன் இந்த அரசாட்சியைப் பெற்றேன். அடிகளுடைய திருக்கையை அடியேனுடைய முடிமீது வைத்து வாழ்த்தி யருள வேண்டும்" என்றுசொல்லி வேண்டிக் கொண்டான். முற்கல முனிவர் தக்கனுடைய வழிபாட்டைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தார். தக்கன் விரும்பியவாறே கைகளை முடிமீது வைத்து "உன்னுடைய நல்லியல்பினல் உனக்கு எவரும் பகையாக மாட்டார்கள். நீ எல்லாவகையான பொருள்களை யும் பெற்று அளவற்ற மகிழ்ச்சியோடு உலகிலே வாழ்ந் திருக்கக் கடவை" என்று வாழ்த்துரை வழங்கினர்.

### அறநெறி உரைத்தல்

பிறகு முற்கல முனிவர் தக்கனை ஓர் இருக்கையில் இருக்கச் செய்து அரசாட்சி செய்யவேண்டிய அரசியல் முறைகளையெல்லாம் விரிவாக எடுத்துச் சொன்னர். தக்கன் அவைகளையெல்லாம் நன்கு கேட்டுணர்ந்தான். தனக் கருள்புரிந்த முனிவரை வாழ்த்தி வணங்கினன். அந்தணர் முதலான பெரியவர்கட்கு அளவற்ற தான தருமங்களைச் செய்தான்.

### அரசாட்சி

தக்கன் அரசாட்சியை மேற்கொண்டான். ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தவர்கட்கு உண்டி, ஆவுக்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் வழங்கல், அறவைச் சோறு, மகப்பெறுவித்தல், அறவைப் பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம் நல்கல், சுண்ணம், நோய் மருந்து, வண்ணர், நாவிதர், கண்ணடி, காதோலை, கண்

மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப் பந்தர், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சு தறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம் என்னும் முப்பத்திரண்டு அறங் களையுஞ் செய்தான். அளவற்ற திருக்கோயில்கட்குத் திருப்பணி செய்வித்தான். மலைமகள் கோயில், அலைமகள் கோயில், கலைமகள் கோயில் முதலியவைகட்குத் திருத்தாலி, ஆடையணிகலம் முதலியன கொடுத்தான். அந்தணர்கட் கெல்லாம் அறிவுநூல் முறைப்படி வழிபாடு செய்தான். அமைச்சர் முதலானவர்கட்குத் தேர், யானை, குதிரை, காலாட்படை, நிலம் முதலியவற்றை நன்கொடையாக வழங்கினான். சிவன் கோவில்கட் கெல்லாம் திருவிழா நடத்தினான். விண்முகட்டைத் தொடத்தக்க கோபுரங்க ளோடு ஒரு திருக்கோயில் அமைத்து அதில் ஆனைமுகக் கடவுளை நிலைபெறுத்தி முற்கலமுனிவர் மொழிந்த முறைப்படி நாள்தோறும் வழிபாடு நடத்தச் செய்தான். சுமக்காமல் பெற்ற தாயாகிய சுலபையின் அடிகளையும் சுமந்துபெற்ற தாயாகிய கமலையின் அடிகளையும் இடைவிடாது பணிந்தான். தனக்கு எந்தத் திக்கினும் பகைவர்களே யில்லாமல் உலகத்தை அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

### வல்லவராசன் செய்தி

தக்கனுடைய தந்தையாகிய வல்லவராசன் தன்னுடைய மகன் எல்லா நோய்களும் நீங்கப்பெற்று நல்ல புகழோடு விதர்ப்பநாட்டை அரசாட்சி செய்து கொண்டிருக்கிறான் என்று கேள்வியுற்றான். தன்னுடைய படைகளோடு வந்து மகனைக் கண்டான். மகிழ்ச்சியோடு அளவளாவியிருந்தான். மற்றவர்களுங் களிப்பாக வாழ்ந்திருந்தார்கள்.

### திருமணம்

வீரசேனன் என்னும் பெயருடைய ஓர் அரசனுடைய கனவில் ஆனைமுகக் கடவுள் எழுந்தருளி, "அன்பனே!

உன்னுடைய மகள் முன்பிறவியில் நல்வினை செய்திருக்கிருள். அவளைத் தக்கன் திருமணஞ்செய்து கொள்வான். அவ்வாறே நீ நடந்துகொள்ளக் கடவாய்'' என்று கூறி மறைந்தருளினர். வீரசேனன் கண் விழித்துக் களிப்படைந்தான். ஆனைமுகக் கடவுளுடைய கட்டளையின்படி தன்னுடைய மகளைத் தக்கனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தான்.

### மக்கட் பேறும் வழிமுறையும்

அதன் பிறகு ஆனைமுகக் கடவுளுடைய திருவருளினல் தக்கனுக்குப் பிரகற்பானு பிறந்தான். அவனுக்குக் கட்கதரன் பிறந்தான். கட்கதரனுக்குச் சுபாலன் பிறந்தான். சுபாலனுக்கு எதாகரன் பிறந்தான். எதாகரனுக்கு வபுத்திரன் பிறந்தான். வபுத்திரனுக்குச் சித்திரசேனன் பிறந்தான். சித்திரசேனனுக்கு வீமனுகிய நீ பிறந்தாய். தக்கன் முதலாக உன்னுடைய தந்தை வரையில் இருந்த யாவர்களும் ஆனைமுகக் கடவுளுடைய அடிமலர்களில் குறைவற்ற அன்போடு வழிபாடு செய்துகொண்டிருந்தார்கள். ஆகவே, நீயும் அவ்வாறு வழிபாடு செய்து வந்தால் உன்னுடைய விருப்பம் நிறைவேறும்'' என்று கூறினர்.

## 23. வீமன் அருளுரை பெற்றது

### வீமன் அருளுரை பெறுதல்

விசுவாமித்திர முனிவர், ஆனைமுகக் கடவுளை வழிபட வேண்டிய முறைமையையுங் கேள் என்று வீமராசனுக்குக் கூறலானர். ஆனைமுகக் கடவுளுடைய அருளை யுண்டாக்கத் தக்க ஓரெழுத்துமறையே தீவினைகள் எல்லாவற்றையும் போக்கிக் கருதிய பெருமைகளையெல்லாம் இம்மையில் தானே கொடுத்துக் காக்கத்தக்க சிறப்புடையது. அம்மேலான மறையை உனக்குக் கூறுகின்றேன். நீ விரைவில் நீராடி வரக் கடவாய்'' என்று சொன்னர். வீமராசன் உடனே நீராடி வந்தான். விசுவாமித்திர முனிவர் வேள்விக் காரியங்களை யெல்லாஞ் செய்து ஆனைமுகக் கடவுளுடைய ஓரெழுத்து

மறையை உரைத்தருளினர். அதனைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையையுஞ் சொன்னர். பிறகு அரசனைப் பார்த்து, "நீ உன்னுடைய பட்டணத்திற்குப்போய் முன்பு தக்கனுல் வழிபடப்பெற்ற ஆனைமுகக் கடவுளுடைய திருக் கோயிலில் இருந்து நாள்தோறும் மறையை உருவேற்றி வருவாயாக" என்று சொன்னர். வீமராசன் விசுவாமித்திர முனிவருடைய உடன்பாட்டைப் பெற்றுக்கொண்டு தன் மனைவியோடு நகரத்தை நோக்கிச் சென்ருன்.

ஆனைமுகக் கடவுளைப் போற்றல்

வீமராசன் தன் மனைவியோடு நகரத்திற்கு வருகிற செய்தியை அமைச்சர்கள் அறிந்தார்கள். பட்டத்து யானை யையும் சிவிகையையும் அழகு செய்து கொண்டு நகர மக்கள் புடைசூழ எதிர்கொண்டு சென்ருர்கள். அரசனைக் கண்டு வணங்கினர்கள். பிரிந்திருந்த தாய்தந்தையரைக் கண்ட இளம் பிள்ளைகள்போல மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்கள். தன்னுடைய பட்டத்து யானைமீது அரசன் ஏறினன். அரசனுடைய மனைவி சிவிகையில் அமர்ந்தாள். எல்லாவகை யான ஒலிக்கருவிகளும் முழங்க மிகுந்த சிறப்போடு பட்டணத்துக்குள் நுழைந்தார்கள். அரண்மனையை அடைந்து அந்தணர் முதலானவர்கட்கு அளவற்ற பொருளைத் தானம் வழங்கினர்கள். தன்னைப் பார்க்க வந்த மக்கட்கெல்லாம் அரசன் அருள் செய்தான். பிறகு அமைச்சர்களைப் பார்த்து, "நீங்கள் முன்போலவே அரசாட்சியை நடத்துங்கள்" என்று கட்டளையிட்டான். தான் தக்கனுல் அமைக்கப்பெற்றிருந்த ஆனைமுகக் கடவுளுடைய திருக்கோயிலுக்குச் சென்ருன். அங்கு எழுந்தருளியுள்ள ஆனைமுகக் கடவுளை மறைமுறைப்படி வழிபட்டான். எல்லாப் பொருள்களும் ஆனைமுகக் கடவு ளுடைய வடிவமே என்று உள்ளத்தில் எண்ணினன். விசுவாமித்திர முனிவரால் உரைக்கப்பெற்ற மறையை இடை விடாமல் உருவேற்றிக் கொண்டிருந்தான். ஆனைமுகக் கடவுள் வீமராசனுக்கு அருள் செய்ய எண்ணினர். அவன் முன்பு வெளிப்பட்டுத் தோன்றினர். ஆனைமுகக் கடவுளைத் தொழுது பலவாறு போற்றினன்.

மக்கட்பே றவித்தருளல்

ஆனைமுகக் கடவுள் வீமராசனைப் பார்த்து, "அன்பனே! நீ கருதியவாறே உனக்கு நம்மிடத்தில் அன்பையும் அழகிய மகனையுங் கொடுத்தோம். உனது இறுதி நாளில் வீடுபேற்றினையுங் கொடுப்போம்" என்று திருவாய் மலர்ந்தார். நீ உன்னுடைய அரண்மனைக்குச் செல்லக் கடவாய் என்று விடை கொடுத்தார்; தாம் மறைந்தருளினர். வீமராசன் அரண்மனையை அடைந்து சிவபெருமானையும் ஆனைமுகக் கடவுளையும் இடைவிடாமல் வழிபட்டான். அந்தணர் முதலானவர்கட்குத் தானதருமங்கள் செய்து இன்பக் கடலில் மூழ்கியிருந்தான். அரசனுடைய மனைவியாகிய சாருகாசினி நாளடைவில் கருப்பங் கொண்டாள். உரிய காலத்தில் ஓர் அழகிய புதல்வனைப் பெற்றாள். அரசன் தன்னுடைய மகனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாம் இனிது செய்தான். பெரியோர்கள் கூறியபடி உருக்குமாங்கதன் என்று பெயரிட்டான். உருக்குமாங்கதன் தக்க பருவத்தை அடைந்ததும் அரசன் அவனைக் கபில முனிவரிடங் கொண்டுபோய் விட்டான். சிறுவன் கபில முனிவரைப் போற்றி எல்லாக் கலைகளையுங் கற்றுணர்ந்தான். தந்தை தன்னுடைய மைந்தனுக்கு ஓரெழுத்து மறையை உரைத்து அதனைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையையுஞ் சொன்னான். உருக்குமாங்கதன் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தான்.

## 24. உருக்குமாங்கதன் வசவுரை பெறல்

அரசனுக்குதல்

தன்னுடைய மகனாகிய உருக்குமாங்கதன் அறிவாற்றல்களிற் சிறந்து விளங்குதலைக் கண்ட வீமராசன் அவனுக்கு முடிசூட்ட எண்ணினான். அரசிருக்கை மண்டபத்திற்கு வந்து அரியணையில் அமர்ந்தான். தன்னுடைய குலகுருவை அழைத்து ஓர் உயரிய இருக்கையில் இருக்கச் செய்து தன்னுடைய எண்ணத்தை வெளியிட்டான். அமைச்சர்

முதலானவர்களைக் கலந்து முடிசூட்டற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்தான். முடிசூட்டற்குச் செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாஞ் செய்து நன்னுள் ஒன்றிலே முடிசூட்டினுன். உருக்குமாங்கதன் அரசாட்சியை அறநூன் முறைப்படி செய்துகொண்டிருந்தான்.

## வேட்டைக்குச் செல்லுதல்

உருக்குமாங்கதன் அரியணையில் அமர்ந்து மகிழ்ச்சி யோடு அரசாட்சியைச் செய்துகொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் அவனுடைய ஆட்சியில் வாழும் மக்களிற் சிலர் அவனிடம் வந்து, "ஓ அரசனே! காட்டு விலங்குகள் கூட்ட மாக வந்து நாட்டுப் பயிர்களை வீட்டி யழிக்கின்றன. அவைகளை வேட்டையாடி ஓட்டியழிக்கவேண்டும்" என்று கூறி முறையிட்டுக் கொண்டனர். அதனை அரசன் கேட்டு மனமிரங்கினுன். வேட்டையாடுவதற்கு எண்ணினுன். வேட்டைப் படைகளை அழைத்துக்கொண்டு காட்டைநோக்கிப் புறப்பட்டான். அரிமா, புலி, யானை, கரடி முதலிய விலங்குகளை வேட்டையாடிக் கொன்முன். பிறகு தான் தனித்துச் சென்று செந்நாய், கலைமான், புள்ளிமான், முதலியவைகளை விரட்டி விரட்டிக் கொன்முன்.

## காமவெறிகொண்ட காரிகை

உருக்குமாங்கதனுக்கு நீர் வேட்கை உண்டாகியது. தண்ணீரைத் தேடிக்கொண்டு சென்முன். ஓரிடத்தில் கவிமகாமுனிவர் என்பவருடைய இருப்பிடம் இருந்தது. அவ்விடத்தில் அம்முனிவருடைய மனைவியாகிய முகுந்தை என்பவள் வேடிக்கையாகப் பொழுது போக்கிக் கொண் டிருந்தாள். உருக்குமாங்கதன் அவளைக் கண்டான். அவளுடைய அண்மையிற் சென்று, "தாயே! நீர் வேட்கை யால் வருந்தினேன்; சிறிது தண்ணீர் தருதல் வேண்டும்" என்முன். அழகிய வடிவம் உடையவனுகிய உருக்குமாங் கதனை முகுந்தை கண்டவுடன் திகைத்தாள். அவனுடைய பேரழகு அவளுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது.

நீர் வேட்கை கொண்ட அரசன்மீது காம வேட்கை கொண்டாள். அவன் நீர் வேட்கையோடிருக்கிருன் என்பதையும் மறந்து விட்டுத் தன்னுடைய காமவேட்கையையே பெரிதாக எண்ணிப் பேசத் தொடங்கினுள். "ஓ அரசனே! உன்னைப்போன்ற பேரழகுடையவர்களை நான் தேவர் கூட்டத்திற்கூடக் கண்டதில்லை உன்னுடைய உடலிலே எல்லாவகையான அழகுகளும் நிறைந்திருக்கின்றன. உன்னைக் கண்ட பெண்களில் எவர்தாம் மோகத்தால் வருந்த மாட்டார்கள்? ஓர் இளமங்கையானவள் ஓர் இளைஞனைக் கண்டு விருப்பங்கொள்ளுவாளாயின் அவனைத் தழுவாத வரையில் அவளுடைய வேட்கை ஒழியுமோ? எல்லோரையுங் கொல்லத்தக்க நஞ்சைத் தன்னிடத்தில் உண்டாக்கிய திருப்பாற்கடலானது, மீளவும் நல்ல அமுதத்தைக் கொடுத்து எல்லோரையும் காப்பாற்றியதைப் போல உன்னுடைய பேரழகினுல் உண்டாகிய காமத்தீயானது உன்னுடைய தோள்களைத் தழுவினுல் அல்லாமல் தணியமாட்டாது" என்று கூறியதோடு தன்னுடைய ஆடையானது அவிழ்ந்து சோரவும், கூந்தல் கலையவும், முத்துமாலை பொரியவும், கைவளைகள் நழுவவும் காமக் காழ்ப்பேறிய குறிப்பினையுடையவளாய் உருக்குமாங்கதனுக்கு முன்னே நின்ருள். இவ்வாறு முகுந்தையானவள் தானே வந்து வலிந்து கூடவேண்டுமென்று குறையிரந்து நிற்கவும் உருக்குமாங்கதன் உள்ளந் தளரவில்லை. அவன் முகுந்தையாகிய அம்மொய் குழலைப் பார்த்துத், "தாயே! நீ அந்தணர் குலத்திற் பிறந்து ஒரு முனிவருக்கு மனைவியாக இருக்கின்றனை. நானே அரச குலத்திற் பிறந்து இவ்வுலகத்தை அரசாட்சி செய்து கொண்டிருக்கிறேன். அல்லாமலும் யான் ஆனைமுகக் கடவுளை வழிபடுகிற அடிமையாகவும் இருக்கிறேன். என்னுடைய மனம் எப்பொழுதும் வேறு மாதர்களிடத்திற் செல்வதில்லை. பெண்களானவர்கள் தங்களுடைய கணவர்களோடு கூடியிருப்பதே மேலான நன்மையைக் கொடுக்கும். அவ்வாறின்றிப் பிற ஆடவர்களோடு இணங்குவார்களாயின் அஃது உடனே துன்பத்தை உண்டாக்கும். அல்லாமல்

மறுமையில் நிரயத்தில் அழுத்தி அளவற்ற துன்பத்தைக் கொடுக்கும். மேலும் கூடாவொழுக்கம் பலவகையான தொல்லேகளுக்கும் காரணமாக இருப்பதால் உன்னுடைய மனத்தை யடக்கிக் காமநோயை ஒழிக்கக் கடவாய்'' என்று ஆதரவோடு கூறினுன்.

வலுக்கட்டாயஞ் செய்து வசவுரை வழங்கல்

உருக்குமாங்கதன் உரைத்தவைகளையெல்லாம் முகுந்தை கேட்டாள். இவ்வரசனுடைய மனமானது சிறிதும் கலங்குதல் இல்லாமல் கல்லுக்கு ஒப்பாக இருக்கின்றது. கண்டிப்பான மொழிகளேயும் பேசுகிருன் என்று உள்ளம் வருந்தினுள். திடீரென்று அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, ''அன்பனே! பெண்களுக்கு இக் கிரேதாயுகத்திலும் திரேதா யுகத்திலும் தாங்களே வலிந்து சென்று ஆடவர்களைக் கூடுவதற்கான உரிமையை நான்முகன் நல்கியிருக்கின்ருனுகையால் நான் உன்னே வலிந்து தழுவலாம். நீயே வலிந்து என்னைத் தழுவ வந்தால்தான் பழிபாவங்களே நினைத்துப் பார்க்கவேண்டும். அவ்வாறில்லாமல் முறைப்படி நானே உன்னைக் கூட வேண்டுமென்று விரும்பினுல் அதனுல் உனக்கு எவ்வாறு பழியுந் தீவினையும் உண்டாகும்? இனிமேலுந் தடைகூறி என்னைத் தழுவாமற் செல்லுதற்கு முயல்வாயானுல் நீருகும்படி உன்னை எரித்துவிடுவேன். அல்லது உன்னுடைய அழகனைத்துங் குலேந்து காட்டிலேயே திரியும்படியாக வசவுரை வழங்கிவிடுவேன். இதனை நன்ருக எண்ணிப் பார்க்கக் கடவாய்'' என்று சொன்னுள். அரசன்மேல் விழுந்து அவனை வலுக்கட்டாயமாகத் தழுவினுள். அவ்வளவில் உருக்குமாங்கதன் அஞ்சினுன். இம்மாதினுடைய செயல் நன்ருக இருக்கிறது என்று நகைத்தான். தன்னைத் தழுவிய அவளே நிலத்தில் விழுமாறு உதறித் தள்ளினுன். ''தீ நெறியில் ஒழுகுபவளே! பெருகிவருகின்ற நீர்ப்பெருக்கும் ஓர் அணைக்கு அடங்கி நிற்கும். தீ, பாம்பு முதலியவைகளும் ஒரு தடைக்கு அஞ்சியிருக்கும். அறிவற்றவர்களுக்கு உண்டான காமமானது அவருக்குள் அடங்க

மாட்டாது. அதனைப் பள்ளங் கண்டு பாய்ந்து செல்லும் நீர் என்று அறிவுடையோர் உரைப்பர். அதைப் போலவே நீ இந்தத் தீய காரியத்தை அஞ்சாது செய்யத் துணிந்தாய். உன்னுடைய ஒழுக்கம் இத்தன்மையதென்று முன்னர் உணர்ந்திருப்பேனுயின் நான் இந்த இடத்திற்குவரத் துணிந்திருக்கமாட்டேன். நீ ஒரு பெரிய முனிவருடைய மனைவியென்று எண்ணி என்னுடைய நீர் வேட்கை தணியுமாறு நீர் கேட்டதற்கு நிரயத்தில் வீழத்தக்க கொடிய காரியத்தைச் செய்யுமாறு வற்புறுத்தத் தொடங்கினுய். உன்னை இப்பொழுதே என்னுடைய வாளுக்கு இரையாக்கிவிடுவேன், முனிவருடைய மனைவியென்று அஞ்சி அவ்வாறு செய்யாது விட்டுவிட்டேன்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து திரும்பினுன்.

தீமொழி

முகுந்தையானவள் மிகுந்த சினங் கொண்டாள். "அரசனே! என்னுடைய கற்புநிலை குலையுமாறு இவ்விடத்திற்கு வந்தாய். வந்தும் எனக்கு எத்தகைய இன்பத்தையுங் கொடுக்கவில்லை. ஆகவே உன்னுடைய உடலில் தொழுநோய் உண்டாகக்கடவது'' என்று வசவுரை வழங்கினுள். அதனை உருக்குமாங்கதன் கேட்டான். இவள் விரும்பியதை அடையாமற் போனபடியினுல் மிகுந்த சினங் கொண்டிருக்கிருள். இவளிடத்தில் வசவுரைக்குத் தீர்வு கேட்டாலுஞ் சொல்லமாட்டாள். ஒழுக்கங் கெட்ட இத் தீயவளின் முகத்தைப் பார்த்தல்தானும் தீவினையாகும் என்று எண்ணி அவளைத் திரும்பிப் பார்க்காமலேயே போய்விட்டான். அவள் கூறிய தீ மொழியினுல் உடலெங்கும் வெண்குட்டம் உண்டாகியது. அதனை அவ்வரசன் கண்டு மிகுந்த துன்பமடைந்தான். ஆனைமுகக் கடவுளை உள்ளத்தில் எண்ணினுன். "தேவரீருடைய பணிவிடைகளில் அடியேன் மனதறிந்து எத்தகைய குற்றமுஞ் செய்ததில்லையே. தேவரீருடைய திருவடித் தாமரைகளையடைந்த அடியார்களிடத்தில் சிறிது நேரமேனுந் திருவருள்

நீங்குவதுண்டோ ? தேவரீருடைய திருவருள் அடியேனிடத்தில் உண்டாயிருக்குமாயின் இத்தீமை எனக்கு வந்து சேருமோ ? அடியேன் அறியாமையினுல் செய்த தீவினை யாதேனும் இருந்தால் அதனைத் தேவரீர் பொறுத்தருளுதல் கடமையன்றே ? யான் முகுந்தை கொண்ட மோகத்தை வெறுத்தது நேரிய முறையாக இருக்க அத்தீயவள் இட்ட வசவுரை என்னிடம் பலிக்கலாமோ ? தேவர்களுங் கண்டு வியக்கத்தக்க பேரொளி வாய்ந்த என்னுடைய உடலானது ஈன்றவளும் இகழத்தக்க வெண்குட்ட நோயினுல் பீடிக்கப் பட்டுவிட்டதே ! இனிமேல் இவ்வுடலை இக்காட்டில்தானே போக்கிவிடுவதல்லது நோயோடு நகரத்திற்குப் போய் எவ்வாறு அரசாட்சி செய்வேன் !'' என்று வருத்தப்பட்டு அக்காட்டில்தானே ஓர் ஆலமர நீழலில் அமர்ந்திருந்தான்.

## 25. நாரதரும் உருக்குமாங்கதனும்

**நாரதர் வருதல்**

உருக்குமாங்கதனோடு வேட்டைக்கு வந்த உறுதிச் சுற்றத்தினர் தங்கள் அரசனைக் காணுமல் எங்குந் தேடினர். யாண்டுங் காணுதவர்களாய் அறிவு மயங்கினர். பொழுது போய்விட்டபடியால் நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். கதிரவன் மறைந்த பிறகும் உருக்குமாங்கதன் காட்டில் தானே இருந்தான் ; இளைப்பாலும் பசியாலும் வருந்தினுன். அவனுக்கு உறக்கம் உண்டாகவில்லை. தன்னுடைய ஊழ் வினையை எண்ணி வருந்திக்கொண்டிருந்தான். பொழுது விடிந்தது. எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு ஆனைமுகக் கடவுளை மனதில் எண்ணியிருந்தான். அப்பொழுது விண்வழியாக நாரதர் செல்வதைக் கண்டான். ''ஏ அடிகாள்! அருளுருக் கொண்ட பெரியவரே! அடியேன் வீமராசனுடைய மகன். என்னுடைய பெயர் உருக்குமாங்கதன். தேவரீர் இங்கெழுந்தருளியும் அடியேன் துன்பப்படுவது அழகாகுமோ? அடியேனைக் காப்பாற்றியருளுதல் வேண்டும்'' என்று பன்முறை ஓலமிட்டான். தம்முடைய அறிவுப் பார்வையினுல் எல்லாவற்றையும் உணர்ந்த நாரதர் தாம் எண்ணிச்

செல்லுகிற காரியத்தை விட்டுவிட்டுத் திடீரென்று நிலத்தில் இறங்கினூர். உருக்குமாங்கதனுக்கு முன்னூல் வந்து நின்றூர். உருக்குமாங்கதன் தன்னுடைய எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து நாரதரை வணங்கினூன். "அடிகாள்! அடியேன் இக்காட்டிற்கு வேட்டையாடுதற்கு வந்தேன். வந்தவிடத்தில் மிகுந்த நீர்வேட்கை உண்டாகியது. அதனூல் தண்ணீர் இருக்குமிடத்தைத் தேடிச் சென்றேன். ஒரு முனிவருடைய இருக்கைக்குப் பக்கத்தில் முனிவருடைய மனைவியாகிய முகுந்தை என்பவள் இருந்தாள். அவளிடந் தண்ணீர் கேட்டேன். அவள் காம நோய் கொண்டு என்னைத் தழுவத் தொடங்கினூள். வலிந்து வந்து பிடித்தாள். அவளுடைய விருப்பத்திற்கு நான் இணங்காதபடியினூல் எனக்கு வசவுரை கூறி நான் இக்கொடிய நோயை அடையுமாறு செய்தாள். நான் இந்த நோயோடு என்னுடைய நகரத்திற்குச் செல்ல விருப்பமில்லாமல் உயிரைவிட எண்ணினேன். அரிய தவங்களைச் செய்து அடியேனைப் பெற்ற தாய்தந்தையர் பொருட்டு இவ்வுடலை விடாமல் வைத்துக் கொண்டிருக்கிறேன். அடியேன் நாள்தோறும் வழிபாடு செய்துகொண்டிருந்த ஆனைமுகக் கடவுளுடைய திருவருளால் தேவரீர் இச்சமயத்தில் என்னிடம் வரப்பெற்றேன். தங்களுடைய அருளினூல் என்னுடைய நோய் நீங்கும்படியான வழியைத் தேவரீர் அடியேனுக்குக் கூறி என்னைக் காப்பாற்றியருளுதல் வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக்கொண்டான். உருக்குமாங்கதனை நாரதர் அருளோடு பார்த்தார்.

சிந்தாமணி விநாயகர்

"அன்பனே! உன்னுடைய ஆளுகைக்குட்பட்டிருக்கின்ற விதர்ப்ப நாட்டிலே நான் வரும்பொழுது ஒரு புதுமையைக் கண்டேன். அந்நாட்டிலே கதம்பவன நகரம் என்னும் பெயருடைய ஒரு நகரம் இருக்கின்றது. அந்நகரத்தில் ஆனைமுகக் கடவுளுடைய திருக்கோயில் ஒன்று இருக்கின்றது. அக்கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற சிந்தாமணி விநாயகர் என்னும் பெயருடைய ஆனைமுகக் கடவுளைப் பலபேர் பூசை

செய்து அவரவர் விரும்பியதைப் பெறுகிருர்கள். அக் கோவிலுக்கு முன்னுல் கணேச குண்டம் என்னும் பெயருடைய புனித நீர்நிலே (திருத்தநீர்) ஒன்று இருக்கின்றது. அதனுடைய பெருமை தேவலோகம் வரையில் பரவியிருக்கின்றது. ஒருவன் தொழுநோயினுல் துன்புற்றுப் புனித நீர்ப்பயணஞ் செய்துகொண்டு வருகையில் அத் தடாகத்தை அடைந்து நீராடினுன். அப்பொழுதே அவனுடைய தொழுநோய் நீங்கியதல்லாமல் அவனுடைய தீவினேகள் எல்லாம் நீங்கின. அவன் உடனே ஆனேமுகக் கடவுளினுடைய வடிவத்தைப் பெற்று அவருடைய அருளால் தேவகணங்கள் கொண்டுவந்த விமானத்திலேறிக் கணேசர் உலகத்திற்குப் போய்ச் சேர்ந்தான். ஆகையால் நீ அங்குச் சென்று கணேச குண்டத்தில் நீராடி அங்கெழுந் தருளியிருக்கின்ற ஆனேமுகக் கடவுளே வழிபட்டுத் தான தருமங்களேச் செய்வாயானுல் இத்தொழுநோய் உன்னேவிட்டு ஒழிந்துபோகும். அந்த ஆனேமுகக் கடவுளே இதனேப் போக்கத்தக்கவர். உலகத்தில் உள்ள மருந்துகளேப் புசித்தாலும் யானே, தேர், குதிரை முதலியவைகளேத் தானஞ் செய்தாலும் இந்நோய் ஒழியமாட்டாது,'' என்று நாரத முனிவர் கூறியவைகளே யெல்லாம் உருக்குமாங்கதன் செவிகுளிரக் கேட்டான். களிப்படைந்து மீளவும் பணிந்தெழுந்தான் ''அடிகாள்! தேவரீருடைய திருவருளுக்கு அடியேன் செய்யத்தக்க கைம்மாறு யாதிருக்கின்றது? கதம்ப நகரத்தில் திருக்கோயில் கொண்டுள்ள ஆனேமுகக் கடவுளே அமைத்து வழிபட்டவர் யாவர்? அதனே அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டு'' மென்று வேண்டிக்கொண்டான்.

## 26. இந்திரன் வசவுரை பெற்றது

### இந்திரன் வஞ்சனே

நாரதர் உருக்குமாங்கதனேப் பார்த்து நவிலலானுர். ''ஓ அரசனே! முன்னெரு காலத்தில் நான் இந்திரனுடைய

அவைக்குச் சென்றேன். இந்திரன் என்னைத் தக்க இருக்கையில் இருக்க வைத்துப் போற்றினன். பிறகு என்னைப் பார்த்துப், 'பெரியீர்! தாங்கள் எல்லா உலகங்களினுஞ் சுற்றிக்கொண்டு வருகின்றீர்கள்? யாண்டேனும் புதுமையுண்டாயின் அதனைக் கூறியருளவேண்டும்' என்று வேண்டிக் கொண்டான். நான் இந்திரனைப் பார்த்து, 'இந்திரனே! நான் நிலவுலகிற்குச் சென்றிருந்தேன். அங்குக் கௌதம முனிவருடைய மனைவியாகிய அகலிகையைக் கண்டேன். அவளைப்போல் பேரழகுடையவர்களை நான் இவ்வுலகத்தில் காணேன். திருமகள், இந்திராணி, இரதி, அநசூயை, திதி, திலோத்தமை, அதிதி என்கிற இம்மாதர்களுடைய அழகும் ஒப்பாகமாட்டாது. முப்புரம் எரிசெய்த அச்சிவனடி மலர்களை எப்பொழுதும் எண்ணிக்கொண்டிருக்கின்ற என்னுடைய மனமும் அவளைக் கண்டவுடன் விருப்பங்கொள்ளுமாயின் இவ்வுலகில் அவளைக் கண்டு விரும்பாதவர்கள் எவர் இருப்பார்கள்?' என்று நான் கூறிவிட்டு அவ்விடம் விட்டுச் சென்றேன். இதனைக் கேட்டபிறகு இந்திரனுக்கு அகலிகையிடம் அளவுகடந்த காதல் உண்டாகிவிட்டது. அவன் உள்ளம் அழலிற்பட்ட வெண்ணெயைப்போல் உருகியது. அவன் அகலிகையினுடைய கணவராகிய கௌதமருடைய வடிவத்தை எடுத்துக்கொண்டு அகலிகையைத் தழுவ எண்ணினன் அதிகாலை நேரத்தில் அம்முனிவர் நீராடச் செல்லுஞ் சமயம் பார்த்துச் சென்றான். 'கேடுவரும் பின்னே மதிகெட்டுவரு முன்னே' என்பதற்கேற்ப அவனுடைய அறிவு கெட்டுப்போய்விட்டது. கௌதமருடைய வடிவத்தோடு சென்று பல பொய்யுரைகளைக் கூறி அவளைத் தழுவினன்.

கௌதமர் வருதல்

நீராடச் சென்ற கௌதமர் சில அறிகுறிகளால் இந்திரனுடைய வஞ்சகத்தை உணர்ந்துகொண்டார். தம்முடைய இருப்பிடத்திற்குத் திரும்பிவந்தார். இந்திரன் அஞ்சிப் பதுங்கினன். கௌதமர் அங்கு வருவதற்கு முன்னரே அகலிகை இந்திரனுடைய வஞ்சனையை அறிந்து

கலங்கினுள். நிகழ்ந்ததைக் கணவனிடங் கூறினுள். 'அடியேன் அறியாமற் செய்த இக்குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்' என்று வேண்டிக்கொண்டாள். அச்சமயத்தில் பதுங்கியிருந்த இந்திரன் பூனையின் வடிவத்தை எடுத்துக்கொண்டு ஓடத் தொடங்கினுன். பூனையாக ஓடுவது இந்திரன் என்பதை உணர்ந்துகொண்ட கௌதமர் நிற்கச் சொல்லி அதட்டினுர். இந்திரன் அஞ்சி நின்ருன். தன்னுடைய உண்மையான வடிவத்தை எடுத்துக்கொண்டு முனிவருடைய அடிகளில் விழுந்து பணிந்தான். 'அடியேன் தேவரீருடைய திருவடிகளுக்குப் பெருங் குற்றஞ் செய்துவிட்டேன். அது பொறுக்கத் தக்கது அன்று ஆயினுந் தேவரீருடைய பேரருட் டிறத்தாற் பொறுக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டான்.

### அகலிகை கல்லாதல்

கௌதமர் அகலிகையைப் பார்த்து, 'என்னுடைய தன்மையை நீ அறியாதவள் அல்லள். எப்பொழுதேனும் இத்தகைய காரியம் என்பால் நிகழ்ந்ததுண்டா? நிகழ்ந்த காரியத்திற்குக் காரணம் நீ அறிவற்ற கல்லைப்போலக் கிடந்ததுதான். ஆகவே நீ கல்லுருவத்தை அடைவாயாக! தசரத மன்னனுடைய மகனுகிய இராமன் காட்டுக்கு வருவான். அப்பொழுது அவனுடைய திருவடி உன்மேற்படும். அப்பொழுது நீ கல்லுருவம் நீங்கி இந்தப் பெண்வடிவத்தை யடைந்து என்னிடத்திற்கு வந்து சேருவாயாக' என்று கூறினுர்.

### இந்திரனுக்குத் தீமொழி

பிறகு இந்திரனைப் பார்த்து, 'ஓ இந்திரனே! நீ மிகக் கொடியவன். நான் தவஞ் செய்பவன் என்று அறிந்தும் என்னுடைய மனைவியிடத்தில் பொய்க்கோலம் பூண்டு வந்து செய்யத் தகாத காரியத்தைச் செய்தாய். அதனுல் அவளுக்கும் எனக்குந் தீராத பழியைத் தேடிவைத்தாய். அறிவில்லாதவனே! ஒரு பெண் குறியை விரும்பி நீ இங்குவந்தாய். நீ

விரும்பிய பெண் குறி உனக்கு உடல் முழுவதும் உண்டாகக் கடவது' என்று தீமொழி பகர்ந்தார். இந்திரன் முனிவருடைய வசவுரையை ஏற்று வருந்தினன். முனிவரைப் பலவாறு வணங்கித் தீமொழிக்குத் தீர்வு கூறவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். முனிவர் இந்திரனைப் பார்த்து, 'உன்னுடைய குற்றம் பொறுக்கக் கூடிய குற்றம் அன்று. அதற்குத் தீர்வுண்டாகத் தக்க வழியொன்றையும் நீ தேடிக் கொள்ளவில்லை. உனக்கு இரங்குவது அறமன்று' என்று கூறிப் பேசாமல் இருந்து விட்டார்.

### இந்திரன் மறைந்திருத்தல்

முனிவர் மொழி உடனே பலித்துவிட்டபடியால் இந்திரன் மிகுந்த நாணத்தை யடைந்தான். இனி என்ன செய்யலாம் என்று இரங்கினன். வெளியிலே தலைகாட்ட அவனால் இயல வில்லை. ஒரு மடுவுக்குப் போய் அதிலுள்ள தாமரைத் தண்டு ஒன்றில் ஒளித்துக்கொண்டான். பிறகு தேவர்கள் இந்திரனை வணங்கும் பொருட்டு வழக்கப்படி இவனுடைய கொலுவுக்குச் சென்றார்கள். அங்கு அவனைக் காணாமல் பல இடங்களினுந் தேடி வருந்தினர்கள். இந்திராணி மிகுந்த வருத்தமடைந் தாள். நம்முடைய கணவர் எங்குச் சென்றாரோ என்று எண்ணமிட்டாள். ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை உள்ளத்தில் எண்ணிக் கொண்டிருந்தாள். தேவர்கள் ஒன்றுந் தோன்றாமல் கலங்கினர்கள். பிறகு தேவகுரு வினிடம் போய் இந்திரன் தேவலோகத்தில் இல்லாத செய்தியைக் கூறினர்கள். அவர் தேவர்களை அழைத்துக் கொண்டு எம்மிடம் வந்து தேவர்கட்கு நேர்ந்த துன்பத்தைக் கூறினர். யாம் அவர்கட்குத் தெளிவுரை கூறி இந்திரனுடைய செய்தி முழுவதையுந் தெரியப்படுத்தினோம். தேவர்கள் அனைவரும் மேலே செய்யவேண்டியதைக் குறித்து எண்ண மிட்டார்கள். தீமொழி கொடுத்தருளிய கௌதமருடைய இருப்பிடத்திற்குச் செல்லக் கருதினர்கள். எம்மையும் உடன் வருமாறு அழைத்தார்கள். யாமும் அவர்களோடு சென்று முனிவரைக் கண்டு பேசினோம். தேவர்களனைவரும்

அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி 'ஓ' என்றலறி அழுதார்கள். எங்களுடைய குறையைப் போக்கியருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். மேலும் முனிவரைப் பார்த்துத், தாங்கள் இந்திரனை உயிரோடு விட்டது நாங்கள் செய்த நல்வினையே என்றார்கள். எவ் வகையிலேனும் அருள்புரிந்து வசவுரையை நீக்கியருள வேண்டும் என்றார்கள்.

## 27. கடவுளர் குருவுக்குக் கவுதமர் அறிவுரை

### கவுதமருந் தேவர்களும்

கவுதமர் தேவர்களைப் பார்த்து. 'ஓ தேவர்களே! அறிவில்லாதவன், வஞ்சகன், தீயோன், நல்லொழுக்கமில்லாதவன், தன்னுயிரைப்போல மன்னுயிர்களை நினையாதவன், கொடிய உள்ளமுடையவன் முதலிய பெருந் தீவினையாளர்களைப் பற்றிப் பேசுதலும் மனத்தால் நினைத்தலுங் கூடாது. ஆயினும் ஒரு கொடியவன் மீது பலபேர் கூடி அருள் பாராட்டுவார்களாயின் அவன் உடனே நல்லவனாவான். நீங்கள் எல்லோரும் பெருந் தீவினையாளனாகிய இந்திரன்மீது அருள் வைத்தபடியினாலே அவனும் இனிமேல் நல்லவன் ஆவான்' என்று சொன்னார். தேவகுருவைப் பார்த்துப் 'படைப்பு முதலிய முத்தொழில்களை நான்முகன் முதலிய தேவர்களாக இருந்து நடாத்துகின்ற ஆனைமுகக் கடவுளுடைய ஆறெழுத் தருமறையைத் தீவினைகள் தேயுமாறு உரைக்கின்றோம். நீர் அம்மறையைத் தேவேந்திரனுக்குக் கூறும். அதனால் அவனுடைய உடலில் உண்டாகியிருக்கின்ற பெண் குறிகள் மாறிக் கண்களாகும். மேலும் அவன் செய்திருக்கின்ற தீவினைகள் யாவும் ஒழியும்' என்று கூறினார். அந்த அருமறையைக் கூறவேண்டிய முறையோடு கவுதமருக்கு உரைத்தார். அதனைக் கடைப்பிடிக்கவேண்டிய முறைமையையுஞ் சொன்னார். தேவகுரு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். கவுதமரைப் பணிந்து விடை பெற்றுக்கொண்டு அந்த இடத்தைவிட்டுப் புறப்பட்டார்.

## 28. இந்திரன் அறிவுரை பெற்றது

### இந்திரன் வெளிப்படுதல்

கவுதம முனிவருடைய அருள் பெற்ற தேவகுருவும் மற்றைத் தேவர்களும் இந்திரன் மறைந்திருந்த இடத்திற்குச் சென்றார்கள். இந்திரன் மறைந்திருந்த தடாகக் கரையை அடைந்து, 'ஓ தேவர்கள் தெய்வமே! உமக்கு வசவுரை வழங்கிய முனிவரிடம் நாங்கள் எல்லோருஞ் சென்று பணிந்து உமக்கு நன்மையைத் தேடிவந்தோம். நாரத முனிவரும் இங்கு வந்திருக்கின்றார். ஒவ்வொருவருந் தாங்கள் செய்த குற்றங்களை ஒளியாமல் வெளியிட்டுவிட்டால் அவற்றால் வருகிற தீவினைகளைப் பெரியோர்கள் விலக்கிவைப்பார்கள். அவைகளை வெளியிடாமல் மறைத்து வைத்திருந்தால் துன்பமே உண்டாகும். இங்கு வந்திருப்பவர்களுள் நாரதர் மிகப்பெரியவர். நீர் செய்த குற்றத்தை அவரிடத்தில் விண்ணப்பஞ் செய்வீராயின் அது தீரத்தக்க வழியை அவரே கூறுவார். நீர் உம்முடைய மனக்கவலையை ஒழித்துவிட்டு வெளியிலே வாரும்' என்று சொல்லிக் கூவினார்கள்.

தேவர்கள் கூவியதைத் தேவேந்திரன் கேட்டான். தாமரைத் தண்டில் இருந்து வெளியே வந்தான். தேவர்கள் அவனுடைய உடலில் இருக்கிற பெண் குறிகளைப் பார்த்து வருத்தப்பட்டார்கள். பிறகு இந்திரன் தான் செய்த குற்றங்களையெல்லாம் வெளியிட்டுத் தேவகுருவினிடத்திலே வருத்தந் தெரிவித்துக்கொண்டான். பிறகு தேவகுருவினால் ஆறெழுத்துமறையைக் கூறப்பெற்றான். திங்களைக் கண்ட செவ்வாம்பலைப்போல முகமலர்ந்து களிப்படைந்தான். அந்த மாமறை தன்னுடைய காதில் ஏறியவுடன் அவன் உடலெல்லாம் மூடியிருந்த பெண் குறிகள் கண்களாகி விட்டன. அப்பொழுது யாமும் மற்றைய முனிவர்களும் பல வாழ்த்துரைகளைக் கூறினோம். தேவர்கள் மலர்மாரி பெய்தார்கள். அரம்பையர் கூத்தாடினார்கள். கின்னரர்

இன்னிசை பாடினார்கள்; விண்ணில் அந்தர துந்துபி முழங்கியது; எல்லோருங் களிப்படைந்தார்கள். தேவர்கள் அனைவரும் இந்திரனைப் பார்த்து வணக்கஞ் செய்தார்கள். 'இதுவரையில் உம்மைப் பிரிந்திருந்தபடியினால் திங்களில்லாத இரவைப் போலவும் தாயில்லாத சேயைப் போலவும் வருந்திேனாம்' என்றார்கள்.

## 29. இந்திரன் வழிபாடு

### இந்திரன் முகமனுரை

தேவேந்திரன் அங்கு வந்திருக்கின்ற முனிவர்களைப் பார்த்துத் 'தவத்திற் சிறந்த பெரியோர்களே! உங்களுடைய பெருமையைப் பெரியோர்கள் தாம் அறிவார்களேயல்லாமல் என்னைப் போன்றவர்களால் அறிய முடியாது. அளவற்ற தேவர்கள் ஒன்றாகக் கூடினாலும் உங்களில் ஒருவருக்கு ஒப்பாவார்களோ? எல்லாவகையான பெருமைகளும் வாய்ந் திருக்கின்ற பெரியோர்கள் நீங்களே' என்று சொல்லிப் போற்றினான். எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயு மாறு விழுந்து பணிந்தான். தேவர்களைப் பார்த்து, 'அன்பிற் சிறந்த நண்பர்களே! முனிவராகிய கவுதமரிட்ட தீமொழி என்னை விட்டு நீங்குமாறு எவ்வளவு முயற்சி செய்தீர்களோ அறியேன். முன்பு எனக்கு இயற்கையாக இருந்த இரண்டு கண்களும் இருளடையுமாறு மிக ஒளிபொருந்திய ஆயிரங் கண்களைத் தந்தீர்கள் உங்களால் எல்லா வகையான நன்மைகளையும் பெற்றேன். நீங்கள் என் பொருட்டுச் செய்த உதவிக்கு நான் செய்யக் கூடிய கைம்மாறு என்ன இருக்கின்றது? இனிமேல் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு அவருடைய அருளைப் பெற்று உய்யுமாறு ஒரு சிறந்த திருவூரில் தவங்களைச் செய்து பிறகு என்னுடைய விண் உலகத்தையடைந்து அரசாட்சி செய்வதேயல்லாமல் நான் இப்பொழுது வருகிறதில்லை. நீங்கள் யாவரும் அங்குச் சென்று தங்கியிருங்கள். சிலர்மட்டும் கற்பக மரத்தின் இடத்திலிருந்து நம்முடைய தவத்திற்கு வேண்டிய பொருளைக்

கொண்டுவந்து கொடுக்கக் கடவீர்கள்' என்று கட்டளை யிட்டான். எல்லோருஞ் சென்றனர்.

### கதம்பவனத்தை அடைதல்

பிறகு தேவேந்திரன் கதம்பவனத்தை யடைந்தான். அங்கொரு தடாகக் கரையில் அமர்ந்து தேவர்களாற் கொணர்ந்து கொடுக்கப்படுகின்ற விண்ணகக் கங்கையைக் கலந்து அதன் கரைமீது ஒளிபொருந்திய பளிங்குக் கற்களினுல் ஒரு கோயில் எழுப்பினுன். அக்கோயிலில் மறை முறைப்படி ஆனைமுகக் கடவுளை அமைத்தான். எல்லாவகையான பொருள்களோடும் நாள்தோறும் பூசை செய்தான். ஐம் பொறிகளையும் அடக்கி ஓர் இருக்கையில் இருந்து இருவிழி களையும் மூக்கு நுனியில் நிறுத்தி ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை எண்ணி ஆறெழுத்து மறையை உருவேற்றினுன். தூய உள்ளமுடையவனுய் உணவில்லாமல் ஆயிரம் ஆண்டுகள் தவஞ் செய்தான். ஆனைமுகக் கடவுள் இந்திரனுக்கு அருள் சுரந்தார். வெள்ளிய திருமேனியும் திக்குமுழுதும் விளங்கத் தக்க ஒளிபொருந்திய ஆனைமுகமும் சிவமணிமாலை ஏந்தி யிருக்கின்ற துதிக்கையும் நான்கு தோள்களும், தண்டை முதலியன அணிந்த தாள்களும் உடையவராய் இந்திரன் முன்காட்சி கொடுத்தார். இந்திரன் அன்பும் அச்சமும் கொண்டு எழுந்தான். நிலத்தின் மீது விழுந்து வணங்கினுன். பிறகு கைகளைக் குவித்து நின்று,

*அறிவாய் விளங்கும் ஒளியாகி எங்கும்*
*அசைவற்று நின்ற நிறைவாய்க்*
*குறியாதி இன்பம் முதலீ றிலாத*
*குறைவற்ற இன்ப மயமாய்ச்*
*செறிவான நீரின் நிழல்போல நின்ற*
*திறலோயை யானும் வளைவேன்*
*வெறுஞான மான திருமேனி கொண்டென்*
*விழிகாண முன்னர் வரலால்.* (க)

இருண்மூழ்கு கண்ணின் மலமே வலத்தின்
இதமின்றி நின்ற உயிர்கட்
குருவாதி மூன்று முனமுய்த் தவற்றின்
உளதாம் விகார வகையால்
இருவேறு கன்மம் இசைவித் தருத்தும்
இறையோயை யானும் இணைவேன்
வெருண்மாயை நீத்த திருமேனி கொண்டென்
விழிகாண முன்னர் வரலால். (உ)

வாதங் கடந்து மலமாயை கன்ம
வகையுங் கடந்து மருள்சேர்
ஏதங் கடந்து பொருளொன்று மின்றி
எழுகின்ற மம்ம ருயிரின்
போதங் கடந்து துரியங் கடந்த
பொருளோயை யானு முணர்வேன்
வேதங் கடந்த திருமேனி கொண்டென்
விழிகாண முன்னர் வரலால். (ங)

என்று புகழ்ந்து பாடினன். உள்ளம் உருகி நின்றான். இவ்வாறு நிற்கின்ற இந்திரனை ஆனைமுகக்கடவுள் அருளோடு பார்த்தார். "ஓ இந்திரனே! நீ செய்த தவத்திற்கு மகிழ்ந்தோம். உனக்கு வேண்டிய மேன்மைகளைக் கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

### ஆனைமுகக் கடவுள் அருள்புரிதல்

இந்திரன் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, "எல்லா உலகங்கட்குந் தலைவராக இருக்கின்ற கடவுளே! தேவரீர் அடியேனுக்குத் திருவடிப்பேற்றைக் கொடுக்காமல் விண்ணுலக அரசாட்சியைக் கொடுத்தீர். அரசாட்சி நடைபெற்று வருங்காலத்தில் நான்முகக் கடவுள் ஆறெழுத்து மறையைக் கூறிக் கடைப்பிடிக்க வேண்டிய முறையையுங் கூறினர். கடைப்பிடிக்காதொழியின் அரசு நிலைபெற மாட்டாதென்றுஞ் சொன்னர். நான் அதனை மறந்து பல குற்றங்

களைச் செய்தேன். அதனால் மிகுந்த துன்பங்களை நுகர்ந் தேன். பிறகு தேவகுருவினால் அருளப் பெற்று ஆயிரங் கண்களை உடையவனானேன். அல்லாமலுந் தேவரீரை இன்று நேரே காணப்பெற்றேன். இனிமேல் அடியேனுக்கு முடியாத காரியம் ஒன்றுமில்லை. உலகில் ஒவ்வொருவருந் தேவரீருடைய திருவடிகளைப் போற்றுமலிருப்பதே காரியக் கேடுகட்கெல்லாங் காரணமாகின்றது. ஆகவே, அடியே னுக்குத் தேவரீருடைய திருவடிகளில் மாருத அன்பினை அருளுதல் வேண்டும். இவ்வூரில் அடியேன் வழிபட்ட தேவரீருடைய திருவுருவத்திற்குச் சிந்தாமணி விநாயகர் எனவும், இவ்வூருக்குச் சிந்தாமணி நகரமெனவும், இத்தடா கத்திற்குச் சிந்தாமணி தீர்த்தம் எனவும் பெயர் வழங்க வேண்டும். மேலும் இவ்வூருக்குக் கதம்பவன நகரமென்றும் பெயர் கூறுதல் வேண்டும். இக்கதம்பவன நகரத்தில் வாழ் கின்றவர்கள் சிந்தாமணி தீர்த்தத்தில் நீராடிச் சிந்தாமணி விநாயகரைப் போற்றுவார்களாயின் அவர்கள் அடையத்தக்க விருப்பங்களையெல்லாம் அடைய வேண்டும்'' என்று வேண்டினன். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே அருள் செய்தார்; பிறகு மறைந்தார். இந்திரன் மீளவுஞ் சிந்தாமணி விநாயகரைப் போற்றிப் பணிந்தான். அக் கடவுளிடம் விடைபெற்றுக் கொண்டு விண்ணுலகம் போய்ச் சேர்ந்தான். ஓர் இடையூறும் இல்லாமல் அரசாட்சியைச் செய்யலானன். ஆகவே நீயும் அவ்வானைமுகக் கடவுளை யடைந்து வழிபடுவாயானல் இப்பிணி நீங்கப் பெறுவது மல்லாமல் மேலும் பல மேன்மைகளைப் பெறுவாய்'' என்று உருக்குமாங்கதனுக்கு உரைத்தார்.

## 30. உருக்குமாங்கதன் வீடுபேறு

**நோய் நீங்குதல்**

மேற்கூறியவாறு நாரதர் கூறிவிட்டு அங்கிருந்து புறப் பட்டார். அவர் புறப்படுவதற்கு முன்னரே உருக்குமாங்

கதனைத்தேடிக்கொண்டு அவனுடைய உறுதிச் சுற்றத்தினர் காட்டிற்கு வந்தனர். உருக்குமாங்கதன் தொழுநோயோடு இருக்கக் கண்டு உள்ளம் வருந்தினர்கள் இவ்வாறு நோய்வரக் காரணம் என்ன என்று உசாவினர்கள். உருக்கு மாங்கதன் நிகழ்ந்த செய்திகளெல்லாவற்றையும் விளக்க மாகச் சொன்னன். அவர்களோடு அங்கிருந்து புறப்பட்டுக் கதம்ப நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தான். சிந்தாமணி தீர்த்தத்தில் நீராடினன். சிந்தாமணி விநாயகரைப் போற்றிப் பணிந்தான். அவ்வளவில் அவனுடைய உடலைப் பற்றி யிருந்த தொழுநோய் விலகிவிட்டது. அவனுடைய உடல் முன்னிருந்ததைப் போல் அழகையடைந்தது. அந்தணர்களை அழைத்து அளவற்ற பொருள்களைத் தானஞ் செய்தான். அந்தச் சமயத்தில் தேவகணங்கள் விண்வழியாகத் தெய்வ விமானம் ஒன்றைக் கொண்டு வந்தனர். உருக்குமாங்கதனைப் பார்த்து. ''நல்வினையாளனே ! நீ இந்தச் சிந்தாமணி தீர்த்தத்தில் நீராடிச் சிந்தாமணி விநாயகரைப் போற்றிய படியால் அளவற்ற சிறப்பினையடைந்தாய். நீ இவ் விமானத்தில் ஏறி எங்களோடு வருவாயாக'' என்று கூறினர்கள். அதனைக்கேட்டு உருக்குமாங்கதன் மிகுந்த வியப்படைந்தான்.

### சுற்றத்தாரோடு விண்ணகம் புகுதல்

உருக்குமாங்கதன் தேவகணங்களை வணங்கி, 'முழுமுதற் பொருளாக விளங்குகிற ஆனைமுகக் கடவுளுடைய திரு வருளுக்கு யான் எவ்வளவும் உரியவனல்லன். யான் என்ன தவத்தைச் செய்தேன் ? என் மனம் எவ்வளவு பக்குவ மாயிற்று ? என் பிறவி எவ்வளவு தகுதியை உடையது ? என் அன்பு எவ்வளவு ? யான் முன்பு செய்திருக்கின்ற தவத்தி ஞலும், பெருமைவாய்ந்த இப்புனித நீரில் நீராடிய சிறப்பி ஞலும், அடியேன் உங்களுடைய காட்சியை எளிதிற் பெற்றேன். என்னுடைய தந்தையாகிய வீமராசனும் தாயாகிய சாருகாசினியும் அளவற்ற தவங்களைச் செய்து என்னைப் பெற்ருர்கள். ஆகவே, அவர்களை விட்டுவிட்டு

நான்மட்டும் எவ்வாறு வருவது?'' என்று கேட்டான். உருக்குமாங்கதன் உரைத்தவைகளைக் கேட்டுத் தேவகணத் தலைவர் மகிழ்ந்தார். "நீ உன்னுடைய தாய் தந்தையரை நினைத்து இப்புனித நீரில் நீராடி நீர்க்கடன் செய்வாயானால் அவர்களும் உன்னுடன் வருவார்கள். அதற்குத் தக்கநல்வினை யுண்டாகும்'' என்று கூறினார். இதனை உருக்குமாங்கதன் கேட்டு மகிழ்ந்தான். ஒரு நாணற்புல்லை முடிந்து அவ்வாறு முடிந்த புல்லைத் தாய் தந்தையர் முதலாயினோரை நினைத்து நீராட்டுவித்தான். மடுக்கரை மீது ஏறிவந்து தனக்கு வழி காட்டி ஆட்கொண்டருளிய நாரத முனிவரைப் பணிந்தான். தன் நோயைப் போக்கியருளிய அப்புனித நீரையும் வணங்கிப் போற்றினான். இவ்வாறு போற்றிய பிறகு உருக்குமாங்கதன் மலமற்ற தூயவடிவத்தைப் பெற்றான். அங்கிருந்த அரசனுடைய உறுதிச் சுற்றத்தினரும் நீராடித் தேவ வடிவம் பெற்றார்கள். சிந்தாமணி விநாயகரைப் போற்றி வழிபட்டு உருக்குமாங்கதன் விமானத்தில் ஏறினான். தன்னுடைய கவுண்டின்னிய நகரத்தை யடைந்தான். தான் நீராடிய பலனைத் தாய் தந்தையர் முதலாயினோர்க்கு வழங்கினான். மற்றைய உறுதிச் சுற்றத்தினரும் தங்கள் தங்கள் உறுதிச் சுற்றத்தினர்க்குப் பலனைத் தானஞ் செய்தார்கள். ஆனைமுகக் கடவுளுடைய அருளால் எல்லோர்க்குந் தனித்தனியாக விமானங்கள் வந்தன. வீமராசன் முதலானோர் அவ்விமானங் களைப் பணிந்து அவைகளில் ஏறிக்கொண்டு உருக்குமாங்கத னோடு ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தை யடைந்து பேரின்ப வாழ்வைப் பெற்று இன்புற்றிருந்தார்கள்.

## 31. கிருச்சமதர் அறிவுரை பெற்றது

முன்னுரை

"முனிவர்களே! ஆனைமுகக் கடவுளை உருக்குமாங்கதன் வழிபட்டு வீடுபேற்றினையடைந்த செய்தியைக் கூறினோம். பிறகு கிருச்சமத முனிவர் வழிபட்ட வரலாற்றினைக் கூறு

கிறேம், கேட்பீர்களாக'' என்று சூதமா முனிவர் சொல்ல லானுர்.

### முகுந்தையின் செய்தி

முகுந்தையிட்ட வசவுரையோடு உருக்குமாங்கதன் அவ்விடம் விட்டு நீங்கியபிறகு முகுந்தைக்குக் காமநோய் மிகுதியாகியது. அவள் உருக்குமாங்கதனையே எண்ணி எண்ணி அனலிற்பட்ட மெழுகை யொத்தவளாய் உள்ளங் கரைந்து உடல் நெகிழ்ந்தாள். காமத் தீயின் வெம்மையைப் பொறுக்கமாட்டாமல் கதறினுள். பூம்பொழில்களிற் சென்று உலாவுவாள். குளிர்ந்த தடாகங்களில் உள்ள மீன் கூட்டங் களைக் கண்டு வாடுவாள். வேய்ங் குழலோசையைக் கேட்டு மெலிவாள். இளந்தென்றற் காற்றைக் கண்டு நடு நடுங்கு வாள். 'நீ நெருப்போடு கலந்துவரக் காரணம் யாது?' என்று சினப்பாள். ஆவின் கழுத்திடு மணியொலியைக் கேட்டு, 'ஐயோ என்னுயிர் அழிகின்றதே' என்பாள். ஒரு பலகையில் உருக்குமாங்கதனுடைய வடிவத்தை யெழுதி அதனைத் தன் கையைக் கொண்டு அணைவாள். முகத்தோடு முகம் வைத்து முத்தமிடுவாள். இனிமேல் யாது செய்வேன் என்று பெருமூச்சு விடுவாள். இப்படிப் பலவாறு துன்புற்று மெலிந்து வாடியிருந்தாள்.

### வாசவின் வஞ்சனை

முகுந்தை காமத்தினுல் கலங்கித் தவித்தலைத் தேவேந்திரன் உணர்ந்தான். தான் அவளைச் சேரவேண்டும் என்று எண்ணினுன். உருக்குமாங்கதன் முன்னர் எத்தகைய கோலத்தோடு முகுந்தையிடம் வந்து தண்ணீர் கேட்டானே அத்தகைய கோலத்தோடு முகுந்தையிடம் வந்தான். முகுந்தை முன்னர் மறுத்துச் சென்ற உருக்குமாங்கதனே பிறகு மனம் மாறித் தன்னிடம் வந்திருப்பதாக எண்ணினுள். இருவரும் மிகுந்த களிப்படைந்து இன்பத்தை இனிது நுகர்ந்தனர். பிறகு முகுந்தையானவள் தன்னுடைய

கணவராகிய கவி முனிவருடைய பணியைச் செய்யப்போனுள். இந்திரன் தன்னுடைய பொய்க் கோலத்தை யொழித்துத் தேவலோகம் போய்ச் சேர்ந்தான்.

### கிருச்சமதர் பிறப்பு

முகுந்தையினுடைய வயிற்றிலே கருவுண்டாகியது. அண்டங்களெல்லாம் நடுங்கும்படியான பேரொலியோடு ஒரு மகன் பிறந்தான். அம்மகனைக் கண்டு கவி முனிவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். இந்திரனுக்குப் பிறந்த பிள்ளை யென்று உணராமல் கையிலேந்தி மகிழ்ந்தார். பிறந்தநாட் சடங்கு முதலியவைகளைச் சிறப்பாக நடத்தினுர். பன்னிரண்டாவது நாள் கிருச்சமதர் என்று பெயர் வைத்தார். ஆருவதாண்டிற் பூணூல் சடங்கு முதலியவைகளைச் செய்து முடித்தார். மறை முதலிய கலைகளையெல்லாங் கற்பித்தார் கிருச்சமதர் எல்லா வற்றையும் நன்கு கற்றுத் தேறினுர். கவி முனிவர் தம் முடைய மகனின் நல்லொழுக்கம் முதலியவைகளைப் பார்த்து மகிழ்ச்சியடைந்தார். கருஞனந்துவா என்னும் மறையை உரைத்தருளினுர். 'குழந்தாய்! இம்மறையைக் கடைப் பிடித்து முறைமையோடு செய்து வருவாயாஞல் உனக்கு ஆனைமுகக் கடவுளுடைய திருவருள் உண்டாகும்' என்று கூறினுர். கிருச்சமதர் மனமகிழ்ந்து நாடோறும் நாட் கடன்களை முடித்துக் கொண்டு ஆனைமுகக் கடவுளை உள்ளத்தில் அன்போடு எண்ணி அக்கடவுளுடைய திருவருளைப் பெற்றவராக விளங்கினுர்.

### பிறப்பைச்சுட்டி இகழ்தல்

மகதநாட்டில் சூரன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் கொடையிற் சிறந்தவன். அவனுடைய மனைவியின் பெயர் அம்பிகை. அவன் தேவகுருவும் நாணத்தக்க அறிவினையுடைய அமைச்சர் களோடு அரசாட்சியைச் செய்துகொண்டிருந்தான். அவனுடைய தந்தைக்குத் தென்புலத்தார் கடன் கழிக்க வேண்டிய நாள் வந்தது. அதற்கு வசிட்டர், அத்திரி முதலிய

முனிவர்களை அரசன் அழைத்தான். அம்முனிவர்களோடு கிருச்சமதருஞ் சென்றிருந்தார். அம்முனிவர் கூட்டத்துள் அத்திரிமுனிவருக்குங் கிருச்சமத முனிவருக்குங் கலைஞானங்களில் சொற்போர் மூண்டது. ஒருவருக்கொருவர் நெடுநேரம் போரிட்டுக் கொண்டிருந்தனர். கிருச்சமத முனிவரை அத்திரி முனிவரால் வெல்ல முடியவில்லை. அதனுல் அத்திரி முனிவர் மிகுந்த சினங்கொண்டார். கிருச்சமத முனிவரைப் பார்த்து, 'நீ மிகப் பெரியவனைப்போற் பேசுகிருய். உன்னுடைய பிறப்பையும் பெருமையையுங் கொண்டுபோய் நெருப்பிற்போட்டுச் சுடு. எங்களோடு சொற் போரிடுவதற்கு முனிவருடைய வயிற்றில் நீ பிறக்கவில்லை. நீ உருக்குமாங்கத மன்னனுக்குப் பிறந்த கதை ஒருவருக்குந் தெரியாதோ ? நீ இந்த அவையில் இருப்பதற்குத் தகுதி வாய்ந்தவனல்லன். உனக்கு எங்களோடு சேர்த்துச் சரியான சிறப்பு நடக்கக் கூடாது. உடனே எழுந்து வெளியிற் செல்லுவாயாக' என்று கூறினர். இதனைக் கேட்ட கிருச்சமத முனிவர் மிகுந்த சினங்கொண்டார். அவருடைய கண்கள் சிவந்தன; இதழ்கள் துடித்தன ; புருவம் நெறித்தது. அங்கிருப்பவர்கள் அனைவரும் அஞ்சி நடுங்குமாறு மூவுலகத்தையும் எரிப்பவர் போலக் கொதித்தெழுந்தார். வசிட்டமுனிவர் முதலானவர்கட்கு எதிரே நின்று, 'என்னேடு ஒப்பாகச் சொற்போர் செய்து வெல்வதற்கு ஆற்றலற்ற இழிவினுலே என்னை உருக்குமாங்கதனுடைய மகன் என்று இழிவாகப் பேசினீர்கள். நான் தவத்திற் சிறந்த கவிமுனிவருடைய மகனேயானுல் இந்த அவையில் கூடியிருக்கின்ற உங்களையெலாம் இமைப்பொழுதிற் சாம்பராக்கித் தேவர்களெல்லாருங் கொண்டாடத்தக்க புகழை யடைவேன்' என்று சொன்னுர். அவ்விடத்திலிருந்து புறப்பட்டார்.

### முகுந்தையிடம் உண்மையை வினவுதல்

மிகுந்த விரைவோடுந் தணியாத சினத்தோடும் புறப்பட்டவர் தம்முடைய தாயாகிய முகுந்தையைக் கண்டார்.

அவளைப்பார்த்து, 'என்னுடைய தந்தை யார்? நடந்த காரியத்தை உள்ளவாறு உரைக்கக்கடவாய்' என்று கூறினர். இவருடைய சினத்தைக் கண்டு தாயாகிய முகுந்தை நடு நடுங்கினள். 'மகனே! நான் உன்னுடைய விருப்பப்படி நடந்த உண்மையை நவிலுகிறேன். பரபரப்படையாமல் கேள். ஒருநாள் உருக்குமாங்கதராசன் வேட்டையாடிவிட்டு மிகுந்த நீர்வேட்கையோடு இங்குவந்து என்னைப் பார்த்துத் தண்ணீர் கேட்டான். இவ்வுலகமெங்கும் காண முடியாத அவனுடைய பேரழகைக் கண்ட நான் உள்ளந் தடுமாறி னேன். பெண்கட்குக் காமநோய் உண்டானபொழுது தங்களுடைய விருப்பம்போல் நடந்து கொள்ளுமாறு நூல் களில் கூறியிருக்கின்றபடியினல் நான் அவனேடு கூடி உன்னைப் பெற்றேன். இதுவே நடந்த உண்மை' என்று கூறினள். இதனைக் கேட்ட கிருச்சமதருடைய சினம் முன்னையினும் பன்மடங்கு மிகுதியாயிற்று. அவர் அவளைப் பார்த்து, 'நீ காட்டிலே பறவைகள் தின்னுத இலந்தை மரமாகக் கடவாய்' என்று வசவுரை கூறினர்.

முகுந்தையின் வசவுரை

முகுந்தை தனக்கு வசவுரை வழங்கிய தன்னுடைய மகனைப்பார்த்து, 'நீ எல்லா நூல்களினும் வல்லவனுக இருந்தும், என்னைப் பெற்ற தாய் என்று எண்ணுமல் வருந்தச் செய்தாய். ஆகவே நீ கொடிய குணத்தோடு கூடிய ஒரு மகனைப் பெறக்கடவாய்' என்று தானும் ஒரு வசவுரை கூறிக் காட்டிலே இலந்தை மரமானள்.

உண்மை உணர்தல்

பிறகு கிருச்சமத முனிவர் மிகுந்த நாணத்தை யடைந் தார். இத்தகைய இழிவான நிலையில் உயிரை வைத்துக் கொண்டிருப்பதைவிட இவ்வுடலைப் போக்கிக் கொள்வதே நல்லது என்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தார். அப் பொழுது அவருடைய உள்ளங் குளிருமாறு, 'நீ தேவேந்திர னுடைய மகன்' என்று ஓர் உருவிலிவாக்கு (அசரீரி) உண்டா

கியது. அதனைக்கேட்டுக் கிருச்சமதர் தம்முடைய உள்ளத்தைத் தெளிவித்துக்கொண்டார். முன்பு தம்மை இழிவு படுத்திய முனிவர்கள் தம்மை வணங்கத்தக்க மேன்மையைப் பெற்றுச் சிறப்படையவேண்டும் என்று எண்ணினர். அக் காட்டை விட்டு நீங்கி வேறொரு காட்டை யடைந்தார்.

## 32. கிருச்சமதர் வரம் பெறுதல்

### கிருச்சமதர் தவம்

அக்காட்டில் மல்லிகை, முல்லை, இருவாட்சி, மாதவி முதலிய பலவகையான மலர்க்கொடிகளாற் பந்தலிடப்பட்டிருக்கின்ற பொழிலையும், தாமரை அல்லி, கருங்குவளை முதலிய பல மலர்களால் நிறைந்த தடாகங்களையுங் கண்டு மகிழ்ந்தார். அங்கு மறை முழக்கோடு வேள்விகளை நடத்திக் கொண்டிருந்த முனிவர் கூட்டங்களையும் தேவர் கூட்டங்களையும் கண்டு வணங்கினர். அவர்கள் கிருச்சமதரை வரவேற்றுப் பாராட்டிப் போற்றினர்கள். கிருச்சமதர் மகிழ்ந்து அக் காட்டில் ஓரிடத்தில் இருந்து வலத்தாட் பெருவிரலை நிலத்தில் ஊன்றி ஐம்புலன்களை அடக்கினர். ஆனைமுகக் கடவுளுடைய உருவத்தை உள்ளத்தில் எண்ணித் தம்முடைய தந்தை உரைத்தருளிய மறையை உருவேற்றித் தவம் புரிந்தார். ஆயிரம் தேவ ஆண்டுகளுக்கு ஒரு முறை கண்களைத் திறந்து பார்த்துப் பிறகு மூடிக்கொள்வார். இவ்வாறு பதினையாயிரம் ஆண்டுகள் தவம்புரிந்தார். அத்தவத்திற்கு ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்தார். கோடிக் கதிரவர்கள் தோன்றியதற் கொப்பான ஒளியை உடைய உடலும், தாமரைப் பூமாலையணிந்த மார்பும், சந்தனம் பூசியிருக்கிற பத்துத் திருத்தோள்களும், இடைவிடாது அசைகின்ற காதுகளும், மதம் பொழிகின்ற யானைவதனமும், இளம் பிறையை ஒத்த ஒற்றைக்கோடும் விளங்க இருபுறங்களினுஞ் சித்திபுத்திகளோடு காட்சி நல்கினர். கிருச்சமத முனிவர் ஆனைமுகக் கடவுள் காட்சி கொடுத்ததை அறிந்துகொள்ளவில்லை. நமது தவத்திற்கு ஏதோ இடையூறு நேரிட்டிருக்கிற

தென்று எண்ணினர். இடையூற்றைப் போக்கியருள வேண்டுமென்று ஆனைமுகக் கடவுளை எண்ணினர். ஆனைமுகக் கடவுள் கிருச்சமத முனிவருக்கு மெய்யறிவுக் கண்களைக் கொடுத்தருளினர். அதனல் ஆனைமுகக் கடவுளுடைய காட்சி கிருச்சமத முனிவருக்கு நன்கு தோன்றியது. ஆனைமுகக் கடவுளைப் பலவாறு வணங்கிப் போற்றினர். புகழ்ந்து பாடினர்.

அருள் புரிதல்

ஆனைமுகக் கடவுள்கிருச்சமதருக்கு அருள் நோக்கம் வழங்கினர் 'அன்பனே! உன்னுடைய தவத்திற்கு வியந்தோம். வேண்டிய வரங்களைக் கேள்; தந்தருளுகின்ரேும்' என்று திருவாய் மலர்ந்தருளினர். கிருச்சமதர் ஆனைமுகக் கடவுளைக் கைகுவித்து வணங்கினர் "யாவருங் காண்டல், கருதல், உரைத்தல் என்னும் இம்மூன்றளவைகளாலும் எட்டுதற்கரிய தேவரீரை அடியேன் காணவுங் கருதவும் போற்றவும் பெற்றேன். இதனினும் யான் அடையத்தக்க பேறு வேறு யாதிருக்கின்றது? தேவரீருடைய திருவடிகளில் அடியேனுக்கு மாருத அன்பைக் கொடுத்தருளுதல்வேண்டும். இப்பதியில் எக்காலத்தினுந் தேவரீர் எழுந்தருளியிருந்து, தேவர் முதலிய யாவர்களுக்கும் அவரவர்கள் விரும்பிய மேன்மைகளைக் கொடுத்தருளுதல் வேண்டும். இக்காட்டிற்குப் புட்பவனம் எனவும், இந்நகரத்திற்குப் புட்ப நகரம் எனவும் பெயருண்டாதல் வேண்டும். அல்லாமலும் அடியேனைத் தேவர், முனிவர், சித்தர், சித்தியர், அசுரர் முதலிய யாவர்களும் வழிபட்டு அடியேனது ஆணையைக் கடவாமல் நடந்துகொள்ளவேண்டும்" என்று பல வரங்களைக் கேட்டார். அதற்கு ஆனைமுகக் கடவுள் அருள்கூர்ந்து, "அன்பனே! இந்த நகரம் கிரேதாயுகத்தில் புட்பநகரம் என்றும் திரேதா யுகத்தில் மணிபூரக நகரம் என்றும் துவாபரயுகத்தில், பானக நகரமென்றும், கலியுகத்தில் பத்ரீ நகரம் என்றும் பெயர் பெறும். நீ வேண்டிய மற்ற வரங்களையும் உனக்கு அளித்தோம். இனி உனக்கு நம்முடைய அருளினலே தனக்கொரு

வரும் ஒப்பில்லாத ஆற்றலுடையவனும் சிவபெருமான் ஒருவர் தவிர மற்றயாவரானும் அழிக்க முடியாத மேன்மையுடைவனும், நம்முடைய திருவடிகட்கு அன்புடையவனுயும் இருக்கத்தக்க ஒரு மகன் உண்டாவான். மூவுலகத்தினும் உன்னுடைய பெருமையே மிகுதியாக இருக்கும். மேலும் உனக்குக் காரியங்கள் கைகூட வேண்டுமென்ருல் நம்மை வழிபட்டு அவைகளைப் பெறக்கடவாய்" என்று கூறி மறைந்தருளினுர்.

### கோயில் அமைத்து வழிபடுதல்

பிறகு கிருச்சமத முனிவர் அவ்விடத்தில் திருக்கோயில் ஒன்று அமைத்தார். அதில் ஆனைமுகக் கடவுளை அமைத்து அக்கடவுளுக்கு வரத கணபதி என்று பெயரிட்டார். புனித நீர் ஒன்றை உண்டாக்கி அந்நீரால் திருமுழுக்குச் செய்து வழிபாடு முதலியன செய்துகொண்டிருந்தார். அப்புனித நீருக்குக் கணேச தீர்த்தம் என்று பெயருண்டாகியது. அந்நகரம் ஆனைமுகக் கடவுளுடைய அருளை விளக்கியதால் கணேச நகரம் எனவும், எல்லோருக்கும் பல சித்திகளைக் கொடுப்பதால் சித்தி நகரம் எனவும் பெயர் பெற்றது. தேவர் முனிவர் முதலானேர் சித்தி நகர ஆனைமுகக் கடவுளைப் போற்றி அருள் பெற்ருர்கள்.

## 33 திரிபுரன் வரம் பெறுதல்

### பலி தோன்றுதல்

ஆனைமுகக் கடவுள் கொடுத்தருளிய சிறப்பினுல் கிருச்சமதமுனிவர் வேள்விகளுக்கெல்லாம் ஆசிரியராகி நாள்தோறும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுத் தம் தந்தையால் உரைத்தருளப் பெற்ற மறையை இடைவிடாது உருவேற்றிக் கொண்டிருந்தார். ஐம்புலன்களையும் அடக்கித் தவஞ்செய்து கொண்டு வருகின்ற காலத்தில் ஒரு நாள் நெடுநேரம் யோகில் இருந்து கண்களை விழித்துப் பார்த்தார். அவருடைய

விரைவுள்ள பார்வையிலிருந்து எல்லா உலகங்களும் நடுங்கும் படி ஊழிக்காலத்தில் உண்டாகிற இடியைப் போல ஆரவாரம் செய்துகொண்டு மிகுந்த பேராற்றலோடு பலியென்னும் பெயரினையுடைய ஓர் அவுணன் தோன்றினன். இவன் இவ்வாறு தோன்றியது ஆனைமுகக் கடவுள் கொடுத்த வரத்தின்படியே யாகும். அந்த அவுணன் சிவந்த நிறமும் மிகுந்த அழகும், ஒளி வீசுகின்ற முடியும் உடையவனாய் விளங்கினன். இவ்வாறு தோன்றிய மகனைக் கண்டு கிருச்சமத முனிவர் அஞ்சி நடுநடுங்கினர். இவன் யாவன் என்று மயங்கினர். ஆனைமுகக் கடவுளுடைய பேரருளால் இவன் நமக்கு மகனாக வந்தான் என்று தெளிந்தார். அவனைப் பார்த்து, 'அப்பா நீ யாவன்? எங்கிருந்து வந்தனை?' என்று கேட்டார். அதற்கு அவன், "தாங்கள் என்னை அறியாமலிருப்பது மிகவும் வியப்பாக இருக்கின்றது. தேவரீர் விழித்தருளிய பார்வையின் பெருமையால் அன்றோ யான் உண்டாயினேன்? நான் தேவரீருடைய மகன். எனக்குத் தாய் தந்தை முதலிய எல்லாருந் தேவரீரேயாகும். என்னைத் தேவரீர் பாதுகாத்தல் வேண்டும். பிறகு மூவுலகங்களையும் வெற்றி கொள்ளுவேன். அப்பொழுது என்னுடைய பேராற்றலைத் தேவரீர் அறியப்போகின்றீர்" என்று கூறினன். அவன் கூறியவைகளை யெல்லாம் கேட்டுக் கிருச்சமதமுனிவர் நடுக்கமடைந்தார். ஆனல், தம்முடைய அச்சத்தை வெளிக்குக் காட்டாமல் அடக்கிக் கொண்டார். அவனைப் பார்த்து, "மைந்தனே! ஆனைமுகக் கடவுளுடைய மறையை உனக்குக் கூறுகின்றேன். அம்மறையை நீ உருவேற்றுவையானல் உனக்கு எல்லாவகையான சித்திகளுங் கைகூடும்" என்று சொன்னர். கருணனந்துவா என்னும் மறையை அறிவு நூன்முறைப்படி உரைத்தார். அதைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமைகளையுங் கூறினர்.

### பலியின் தவம்

பிறகு பலி பேருவகையில் மூழ்கினன். கிருச்சமத முனிவருடைய திருவடிகளைப் பணிந்து போற்றினன். அக்

காட்டில் தானே வேறொரு புறத்தில் இருந்துகொண்டு அவரைப் போலவே தானும் ஒரு காலை நிலத்தினூன்றி ஐம் பொறிகளையும் ஒருவழிப்படுத்தி, மூலாதாரத்தினின்றும் உடல் நடுவாகிய இதய கமலத்தில் பிருதிவிமுதல் நாத தத்துவம் ஈருகவுள்ள தத்துவங்களையே ஓர் இருக்கையாகக் கற்பித்து அவ்வழகிய இருக்கையில் ஒளிவடிவான ஆனைமுகக் கடவுளை அமைத்து வழிபாடுகள் செய்து தன்னுடைய தந்தையால் உரைக்கப்பெற்ற ஆனைமுகக் கடவுள் மறையை உருவேற்றிப் பதினையாயிரம் ஆண்டுகள் தவஞ் செய்தான். அவன் செய்த கொடிய தவத்தீ எங்கும் பரவியது. அதனால் தேவர்கள் அனைவரும் நடுங்கி வருந்தினார்கள்.

## ஆனைமுகக்கடவுள் அருளல்

பலியானவன் இவ்வாறு யாவரும் வியக்கத்தக்க தவஞ் செய்ததைக் கண்ட ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார். கோடிக்கதிரவன் ஒளிபோன்ற தம்முடைய மேலான ஒளி வடிவந் தோன்ற அவனுக்குக் காட்சி கொடுத்தார். பலி யானவன் அப்பேரொளியைக் கண்டு சிறிதும் அஞ்சவில்லை. கண்களை நன்ருக விழித்துப் பார்த்தான் ஒரு கையில் தாமரை மலரும், ஒரு கையில் கழுமுள்ளும், ஒரு கையில் மழுப்படையும் ஒரு கையில் மோதகமுந் தாங்கிய வியத்தகு காட்சியை மனங்குளிரக் கண்டான். அடியற்ற மரம் போல் விழுந்து வணங்கினான். பலமுறை புகழ்ந்து பாடினான். அக்கடவுளைப் பார்த்து, ''எல்லா உலகங்களையும் எரித்து நீருக்கவல்ல கடவுளே! அடியேனிடத்திற் சினமில்லாமல் தேவரீர் பேரருள் வைத்து ஆளவேண்டும். அடியேன் தவறு செய்தாலும் அதனைத் தேவரீர் பொறுத்துக்கொள்ளுதல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் அதனைக் கேட்டு அருள் சுரந்தார். ''ஓ பலியே! நான்முகனாலும் முனிவர்கள் முதலியவர்களாலும் இருக்கு முதலிய மறைகளாலும் அளந்து அறிதற்கரிய யாம் உன் மீது வைத்த பேரன்பினால், நீ செய்த பெருந்தவத்திற்கு இரங்கி வந்து காட்சி கொடுத்தோம். இனிமேல் உனக்கு

வேண்டியவைகளைக் கேள், தருகிறோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

பலியானவன் மகிழ்ந்து, "ஓ கடவுளே! ஓ மெய்ஞ்ஞானப் பேரொளியே! ஞாயிறு திங்கள் தீ என்னும் முச்சுடர்களும் இவ்வுலகத்தில் உள்ள இருளை நீக்குவது தேவரீருடைய உடலின் ஒளியின் தொடர்பு பெற்றேயாம். எல்லா உலகங்களும் எத்தகைய குறைவுமில்லாமல் நடந்து வருவதுந் தேவரீருடைய திருவடிகளின் அசைவினுலேயாம். எல்லாந் தேவரீருடைய வடிவமாகவே மறை முதலிய கலைகள் முறையிடுகின்றன. தேவரீருடைய காட்சி அடியேனுக்குக் கிடைத்த போதே எல்லா மேண்மைகளுங் குறைவில்லாமற் கிடைத்தன. தேவரீருடைய காட்சியினுல் அடியேன் எக் காலத்தினும் அழியாத பெரும் பேறுடையவனுயினேன். அடியேனை ஈன்ற தந்தையும் பெருஞ் சிறப்புடையவரானுர். யாங்கள் செய்த தவமும் பயனுடையதாயிற்று. யாதும் அறியாத சிறியேன் தேவரீருடைய பெருமைகளை எவ்வாறு அளவிட்டுக் கூறுவேன்? அடியேன் மீது இரக்கங்கொண்டு நான் கேட்கும் வரங்களைக் கொடுத்தருளவேண்டும். மூன்று உலகங்களும் அடியேனுடைய வழிப்பட்டதாக இருத்தல் வேண்டும். இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாரும் அடியேனுடைய தலைவாயிற் காத்திருந்து நான் இடுகின்ற ஏவல்களைத் தட்டாமல் செய்து வரவேண்டும். எந்தப் பொருள்களை எந்தெந்த வேளையில் நினைத்தாலும் அந்தப் பொருள்கள் அந்தந்த வேளையில் அடியேனுக்கு எளிதில் வந்து உதவவேண்டும். தேவரீருடைய திருவடிகளில் மாருத அன்பு வளர்தல் வேண்டும். என்னுடைய வாணுள் முடிவிலே யான் வீடுபேற்றை யடைதல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான்.

ஆனைமுகக் கடவுள் பலியைப் பார்த்து, ''நீ விரும்பிய வரங்கள் எல்லாவற்றையும் கொடுத்தோம். மூவுலகத்தாரும் உன்னுடைய விருப்பப்படி நடப்பார்கள். அல்லாமலும் கரும்பொன் (இரும்பு) வெண்பொன் (வெள்ளி) பசும்பொன் என்னும் மூன்று வகை உலோகத்தாலாகிய மூன்று கோட்டை

களையும் உனக்குக் கொடுத்தோம். அவை முப்புரம் என்று பெயர் பெறும். உன்னையும் உலகத்தவர்கள் அனைவரும் திரிபுரன் என்று அழைப்பார்கள். சிவபிரானுடைய கணையால் அல்லாமல் மற்றெதனுலும் உனக்கு அழிவில்லை. நீ நினைத்த விடத்தில் முப்புரக் கோட்டைகளோடு சுற்றித் திரியலாம். அவை உன்னேடு கூடவே தரும். நீ யாதேனும் தவருன காரியஞ் செய்வாயானுல் அப்பொழுது சிவபிரானுடைய திருக்கையில் உள்ள கணையொன்றினுல் உன்னுடைய பட்டணங்கள் அழியும். அப்பொழுதே உனக்கு வீடுபேறு உண்டாகும்'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினுர். ஆனைமுகக் கடவுள் பலிக்குக் கொடுத்தருளிய மேன்மைகளை யெல்லாந் தேவர்கள் கேட்டுத் துன்பக் கடலில் மூழ்கினுர்கள்.

## 34 திரிபுரன் அரசாட்சி

### ஆனைமுகக் கடவுளுக்குக் கோயில்

பிறகு பலி தன்னுடைய தந்தையாகிய கிருச்சமத முனிவரைக் கண்டு தான் மேன்மைபெற்ற செய்தியைக் கூறினுன். மூன்றுலகங்கட்கும் போய்ப் போர் புரியவேண்டும் என்றும் எண்ணத்தைக் கொண்டான். தன்னுடைய புட்பவனத்திற் சென்று தங்கினுன். யாவரும் வியக்குமாறு கண்டகக் கற்களினுல் ஒரு திருக்கோயில் அமைத்தான். அக்கோயிலை நன்கு அழகு செய்து தான் ஆனைமுகக் கடவுளை எவ்வாறு கண்டானே அவ்வாறே ஓர் உருவத்தைச் செய்து அதனை அக்கோயிலில் அமைத்தான். நாள்தோறும் அதனை வழிபட்டு வந்தான்.

### திக்குகள்தோறுஞ் செல்லுதல்

சிலநாள் சென்றபிறகு நிலவுலகத்திலுள்ள அரசர்களை யெல்லாம் வெல்லுவதற்கு எண்ணினுன். போர் முனைக்குப் போய்ப் பல போர்களைச் செய்தான். எல்லா அரசர்களையும் வென்றுன். அவர்கள் அனைவரும் தனக்கு ஏவல் செய்ய

வேண்டுமென்று கட்டளையிட்டான். தன்னை வணங்காதவர்களை விண்ணுலகத்திற்குக் குடியேற்றினன். கீழ் உலகத்திற்குச் சென்று அங்கு அரசாளுகின்ற நாகராசன் முதலிய எல்லா வீரர்களையும் வென்றான். அங்குள்ள செல்வங்களையெல்லாம் கைப்பற்றிக்கொண்டு நிலவுலகத்திற்கு வந்தான். அப்பொழுது பல தீவுகளிலிருந்தும் அவுணர்கள் வந்து பலியை வணங்கினர்கள். அவர்கட்கெல்லாம் பலி அருள் புரிந்தான்; வேண்டிய செல்வங்களைக் கொடுத்தான்.

### விண்ணுலகஞ் செல்லுதல்

பிறகு பலி எல்லோரையும் அழைத்துக்கொண்டு விண்ணுலகத்திற்குச் சென்றான். கற்பகச் சோலையிற் புகுந்து அங்குள்ள தேவர்களையெல்லாம் ஒடுக்கினன். அச்சோலைகளையெல்லாம் அழித்தான். பலி அங்கு வந்துள்ள செய்தியைத் தேவ தூதர்கள் தேவேந்திரனுக்கு அறிவித்தார்கள். பலியுந் தன்னுடைய வரவை இந்திரனுக்குத் தெரியப்படுத்துமாறு தன்னுடைய தூதர்களை அனுப்பினன். தூதர்கள் தேவேந்திரனைக் கண்டு, "ஓ இந்திரனே! எங்களுடைய அரசராகிய பலி என்பவர் இங்கு வந்திருக்கின்றார். உமக்கு அவரோடு போர் செய்வதற்கு ஆற்றலிருக்குமாயின் இப்பொழுதே படைகளோடு வந்து போர் புரியலாம். போர் புரிய முடியாதென்றால் அவரிடம் வந்து அடைக்கலம் புகுதல் வேண்டும்" என்று கூறினர்கள். தூதர்கள் சொல்லிய மாற்றங்களைக் கேட்ட இந்திரன் மிகுந்த சினங்கொண்டான். தன்னுடைய கையைத் தூணில் தாக்கினன். "நீங்கள் கூறிய சொல் நன்றாக இருக்கிறது" என்று சொல்லி நகைத்தான். தாமரை மலர்கள் மலர்ந்த காடுகளைப் போலக் கண்கள் சிவந்தன. "இதோ வந்து போர் புரிந்து எல்லோரையும் அழித்துத் தொலைக்கிறேன்" என்றான். உடனே தன்னுடைய படைகளெல்லாம் போருக்குப் புறப்படவேண்டும் என்று போர் முரசறைந்தான். இச்செய்தியைப் பலியின் தூதர்கள் பலிக்குப் பகர்ந்தார்கள். பலி மிகுந்த சினத்தோடு இந்திரனுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இந்திரன் தன்னுடைய வச்சிரப் படையைக் கையில் எடுத்துக் கொண்டு வெள்ளையானையின் மீதேறித் தேவர் கூட்டந் தன்னைச் சூழ்ந்து வரப் பலியைத் தேடிக்கொண்டு வந்தான்.

இந்திரன் வரவை யறிந்த பலி அவனை ஒரு துரும்பாக எண்ணினன். தன்னுடைய படைகளோடும் அவனெதிரிற் சென்றான். இந்திரனுடைய படைக்கும், பலியினுடைய படைக்கும் பெரும்போர் மூண்டது. இருவரும் கடுமையாகப் போரிட்டார்கள். வெற்றியும் தோல்வியும் மாறிமாறி ஏற்பட்டுக் கொண்டிருந்தன. இறுதியில் பலியானவன் இந்திரனைப் பார்த்து, "ஓ இந்திரனே! உன்னுடைய பெருமை கெடாமல் இன்னுஞ் சிறிதுகாலம் நீ வாழ விரும்பினால் உனக்கு இவ்வரசாட்சியைக் கொடுக்கின்றேன். உன் சுற்றத்தார்களோடிருந்து வாழ்வாயாக! இல்லையேல் மிகுந்த துன்பத்தை அடைவாய்'' என்று கூறினன். இதனைக் கேட்ட இந்திரன் உடல் குலுங்க நகைத்தான். ''ஓ பலியே! இன்னும் போர் செய்வதற்கு அஞ்சியோ இம்மொழிகளைப் பேசி உயிர் பிழைக்கப் பார்க்கிறாய்? இதோ உன்னுடைய உடலைச் சின்ன பின்னமாக்கிப் பருந்துகட்கு இரையாக்குகிறேன்'' என்று கூறித் தோள்களைத் தட்டினன். இதனைக் கேட்ட பலியானவன் மிகுந்த சினங்கொண்டான். தன்னுடைய குதிரையை விட்டுக் கீழே இறங்கினன். உதிர வெள்ளம் பெருகுமாறு இந்திரனோடு மற்போர் செய்தான். இந்திரனுடைய கால்களைப் பிடித்து விண்ணில் தூக்கிக் கிறுகிறென்று சுழற்றி வீசினன். அதனால் இந்திரன் மெலிந்து இமயமலைச் சாரலில் வீழ்ந்து மூர்ச்சித்துப் பிணம் போற் கிடந்தான்.

### இந்திராணி வருகை

தன்னுடைய தலைவனுக்கு ஏற்பட்ட கதியை இந்திராணி உணர்ந்தாள். கீழே விழுந்து புரண்டு அழுதாள். தேவர்களை அழைத்துக்கொண்டு இந்திரன் மூர்ச்சையாகி விழுந்து கிடக்கிற இடத்திற்கு வந்தாள். மூர்ச்சை தெளிவித்தற்குரிய

பரிகாரங்களைச் செய்து தெளிவித்தாள். இமயமலையின் குகைகளில் இந்திரனோடு தானும் மறைந்திருந்தாள்.

### பலியின் விண்ணுலக ஆட்சி

பலி இந்திரனைச் சுழற்றி வீசியபிறகு போர்க்களத்தை விட்டுப் புறப்பட்டான். இந்திரனுடைய வெள்ளை யானையின் மீது ஏறிக்கொண்டு வெற்றி முரசத்தை முழக்குவித்தான். இந்திரனுடைய அரண்மனைக்குச் சென்று அரியணையில் அமர்ந்தான். விண்ணுலகத்தில் இருக்கிற குடிகளெல்லாம் தன்னுடைய ஆணைக்கு அடங்கி நடந்துகொள்ள வேண்டியது என்று எங்கும் முரசறைவித்தான். அவ்வாறே எல்லோரும் நடக்கப் பெற்று மகிழ்ந்தான். எல்லாவகையான போகங் களையும் நுகர்ந்து தன்னுடைய ஐம்புலன்கட்கும் விருந்தூட்டி அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

### சத்தியலோகம் முதலிய இடங்கட்குச் செல்லுதல்

சில நாட் சென்ற பிறகு பலி நான்முகன் வாழ்கின்ற சத்திய உலகத்திற்குச் சென்றான். பலியினுடைய வரவை யறிந்த நான்முகன் அஞ்சினான். அவ்வுலகத்தை விட்டு வைகுந்தம் போய் அங்கு ஒளித்தான். திருமால் பலியி னுடைய கொடுமைகளை யெல்லாங் கேட்டு அஞ்சினார். நான்முகனைத் தம்மோடு அழைத்துக்கொண்டு இந்திரன் ஒளிந்திருக்கின்ற இமயமலைப் பக்கத்திற்கு வந்து சேர்ந்தார். சத்தியலோகத்திற்குச் சென்ற பலியானவன் அங்கு நான்முகன் இல்லாததைக் கண்டு அவ்வுலகத்தைத் தன் வழிப்படுத்திக்கொண்டான். அங்கிருந்து நீங்கி வைகுந்தத் திற்குச் சென்றான். அங்குத் திருமால் இல்லாததைக் கண்டு அதையும் தன்வழிப்படுத்திக்கொண்டு நிலவுலகத்திற்கு வந்து சேர்ந்தான். தனக்கு அளவற்ற மேன்மைகளைத் தந்தருளிய ஆனைமுகக் கடவுளைப் பூசை செய்து வழிபட்டான். முன்னர் அடியேனுக்குத் தருவதாகக் கூறிய மூன்று கோட்டைகளையும் இப்பொழுது தந்தருள வேண்டுமென்று வேண்டிக்

கொண்டான். உடனே இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய இவைகளால் ஆகிய முப்புரங்கள் எல்லா வகையான செல்வங்களோடும் விண்ணிடத்தில் உண்டாயின.

முப்புரச் சிறப்பு

அந்த முப்புரங்களில் கற்பக மரம், காமதேனு, சங்கநிதி, பதுமநிதி முதலிய பொருள்களோடு அளவற்ற செல்வங்கள் நிரம்பியிருந்தன. அளவற்ற செல்வம் நிரம்பிய அம்மூன்று மதில்களும் பலி செல்லுமிடங்கட்கெல்லாஞ் சென்றன. பலிக்குத் திரிபுரன் என்னும் பெயருண்டாகியது. திரிபுரன் ஆனைமுகக்கடவுளை அன்புடன் எண்ணி அரசாண்டு கொண்டிருந்தான்.

மக்கள்

தன்னுடைய மனத்தினுல் பலி மூன்று மக்களை உண்டாக்கினுன். அம்மூவருக்கும் வச்சிர தமிஷ்டிரன், வீமகாயன், காளகூடன் என்று பெயர்களிட்டான். மூன்று மக்களுக்கும் மூன்று கோட்டைகளையுங் கொடுத்து அவர்கட்குத் தான் தலைவனுக இருந்தான். தன்னுடைய கட்டளையின்படி அவர்களை நடக்கச் செய்தான். முப்புரங்கள் ஆயிரம் ஆண்டுகட்கு ஒருமுறை அவ்வவ்விடம் விட்டு மற்ருேரிடத்திற்குப் பெயர்வதும், தமக்குள்ளிருந்து அரசு செய்கின்றவர்கள் ஏதேது விரும்பினும் அவைகளையெல்லாந் தடையில்லாமற் கொடுப்பதும், அவர்கள் எவ்விடங்களிற் செல்ல எண்ணினுலும் அவ்விடங்களிற் சென்று இறங்குவதும் தம் மடியில் அகப்பட்ட உலகங்களையெல்லாம் அழித்து வெற்றிகொள்வதுமாக இருந்தன.

மேலும் பெருவாழ்வு

திரிபுரன் மேலுந் தன்னுடைய மனத்தால் இரண்டு மக்களை யுண்டாக்கினுன். அவர்கட்குச் சண்டன் என்றும் பிரசண்டன் என்றும் பெயரிட்டான். சண்டன் சத்திய

லோகத்தை யாளச் செய்தான். பிரசண்டன் வைகுண்டத்தை யாளச் செய்தான். அதன் பிறகு ஒரு மனைவியைக் கூடி அவளால் மதன் என்னும் பெயரினையுடைய ஒரு மகனைப் பெற்றான். எல்லா உலகங்களினு ந் தன்னுடைய ஆணையைச் செலுத்தினான். அளவற்ற போகச் செல்வங்களை நுகர்ந்தான். தன்னுடைய சீர்த்தியை எட்டுத்திக்குகளினும் பரவச் செய்தான். நல்ல அறத்தை நிலை நிறுத்தினான். இடைவிடாமல் ஆனைமுகக் கடவுளை வழிபட்டதோடு இறைவனையும் போற்றி வழிபட்டான். பலகாலம் அரசாட்சி செய்து கொண்டிருந்தான்.

## 35. தேவர்கள் வழிபாடு

### தேவர்களும் நாரதரும்

திரிபுரன் எல்லா உலகங்களினும் தன்னுடைய ஆணையைச் செலுத்தி அரசாட்சி செய்துகொண்டிருக்கிற காலத்தில் இமயமலைக் குகைகளில் ஒளித்துத் துன்புற்றிருக்கின்ற தேவர்களிடத்திற்கு நாரத முனிவர் வந்தார். அவரைத் தேவர்கள் எல்லோருங் கண்டு வணங்கினார்கள். ''நாரதரே! கொடியவனாகிய திரிபுரன் எல்லாவகையான வெற்றிகளையும் அடைந்து மூவுலகங்களையுந் தன்னுடைய வழிப்படுத்திக் கொண்டான். அவனால் நாங்கள் அனைவரும் மிகுந்த துன்பத்தை அடைந்தோம். அவனுக்கு எவரால் இத்தகைய பெருமை உண்டாகியதோ தெரியவில்லை. அது தொலையும் வழி ஏதேனும் உண்டாயின் எங்களிடத்தில் அருள் சுரந்து அதனைக் கூறியருளுதல் வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டார்கள். நாரத முனிவர் எல்லாச் செய்திகளையும் தம்முடைய மெய்யறிவுப் பார்வையினால் உணர்ந்துகொண்டார். பிறகு அவர் தேவர்களைப் பார்த்துத் ''தேவர்களே! திரிபுரன் ஆனைமுகக் கடவுளை வழிபாடு செய்து அவரால் எல்லாவகையான பெருமைகளையும் அடைந்திருக்கிறான். அவனும் அவன் அரசு செய்கின்ற முப்புரங்களும் சிவபெருமானுடைய கணை ஒன்றினாலேதான் அழியும். அவ்வாறு அழிவதற்கும்

ஆனைமுகக் கடவுளுடைய அருள் வேண்டும். ஆகவே நீங்கள் அனைவரும் ஆனைமுகக் கடவுளைப் பூசித்து வழிபடக் கடவீர்கள்'' என்று சொன்னார். அதனைக் கேட்டுத் தேவர்கள் மகிழ்ந்தார்கள். 'தேவரீரே அடியேங்கட்கு முழுதும் அருள் செய்யவேண்டும்' என்று சொல்லி வேண்டினார்கள். நாரதர் அதனைக் கேட்டு அருள் சுரந்தார். ''நீங்கள் எண்ணிய படியே செய்கின்றோம். நீங்கள் எல்லோரும் நீராடி நாட் கடன்களைக் முடித்துக்கொண்டு வருவீர்களாக'' என்று கட்டளையிட்டார். அவ்வாறே அவர்கள் முடித்துக்கொண்டு வந்தார்கள். பிறகு ஆனைமுகக் கடவுளுடைய ஓர் எழுத்து மறையை அவர்கட்கு உரைத்தருளினார். அதனைக் கடைப் பிடிக்கவேண்டிய முறையையுங் கூறி விடைபெற்றுக்கொண்டு சென்றார்.

### ஆனைமுகக் கடவுளைப் போற்றுதல்

பிறகு தேவர்கள் அனைவரும் ஒரு தாளை நிலத்தில் ஊன்றி ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவத்தை மனத்தில் எண்ணி ஓர் எழுத்து மறையை உருவேற்றித் தவஞ் செய் தார்கள். ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்து அவர்களுக்குக் காட்சி கொடுத்தருளினார். தேவர்கள் அனைவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார்கள். அன்பும் அச்சமுங் கொண்டு எண்வகை உறுப்புகளும் நிலத்தில் தோயுமாறு கீழே விழுந்து பணிந்து எழுந்தார்கள். இரு கைகளையும் தலைமேற் கூப்பிக்கொண்டு,

*தத்துவா தீத போற்றி தத்துவப் பொருளே போற்றி*
*தத்துவ முதலே போற்றி தத்துவ சொரூப போற்றி*
*தத்துவத் தியன்ற தாத்து விதங்களும் ஆனாய் போற்றி*
*தத்துவ அறிவுக் கெட்டாத் தயங்குபே ரறிவே போற்றி.* (௧)

*உடலினுக் குயிரே போல உயிர்க்குயிர் ஆனாய் போற்றி*
*உடலுயிர்க் கறிவு நல்கி உடலினைக் கழிப்பாய் போற்றி*
*உடலுயி ரெனப்பி ரிங்கா ஒற்றுமைப் பொருளே போற்றி*
*உடனுறை உயிர்க்கு மெட்டா ஒளிர்பெருஞ் சோதி போற்றி.* (௨)

விரவுதத் துவத்தின் நீங்கி மேலென நின்ற வாவி
வரமுற உருவுகொண்டு வந்தருள் குரவ போற்றி
பரவுமைந் தொழிலை நீக்கி உயிரினைப் பணிப்பாய் போற்றி
துரியத்தின் உயிரை வாங்குஞ் சுடர்ப்பெருங் கடலே போற்றி. (௬)

பத்தர்கள் வழங்கா நின்ற
பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகத் தார்க்குப்
புணர்த்தருள் போகி போற்றி
முத்தியை யோகத் தார்க்கு
முடித்தருள் யோகி போற்றி
எத்தொழி லவர்க்கு மந்தப்
பயனரு ளிறைவ போற்றி. (௭)

வேண்டிய அடியார்க் கெல்லாம்
விக்கினங் கெடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெ யார்க்கு
விக்கினங் கொடுப்பாய் போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம்
விளைத்தருள் விமல போற்றி
மாண்டதுட் டர்களைக் கொல்லும்
மறமிகு மள்ள போற்றி. (௮)

என்று புகழ்ந்து பாடினர்கள். அவற்றை ஆனைமுகக் கடவுள் கேட்டருளினர். தேவர்களை அருளோடு பார்த்தார். "நீங்கள் எண்ணிய மேன்மைகளைக் கேட்டுக்கொள்ளுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினர். தேவர்கள் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, "எந்தையே! அடியேங்கள் படுகின்ற துன்பம் தேவரீருக்குத் தெரியாததன்றே. எங்களுக்குத் தொல்லை புரியும் திரிபுரனை அழித்து எங்களைக் காப்பது தேவரீருடைய கடமையன்றோ?" என்று சொல்லித் தொழுதார்கள். ஆனைமுகப் பெருமான் தேவர்கள்மீது அருள் சுரந்தார். "ஓ தேவர்களே! உங்களுடைய சிறுமைகளையும் திரிபுரன் பெருமைகளையும் ஒழிப்பதற்கு ஒருவழி கூறுகின்றோம். நீங்கள் எல்லோரும் இப்பொழுதே சென்று

சிவபெருமானிடம் அடைக்கலம் புகக் கடவீர்கள்'' என்று கூறி விடை கொடுத்தருளினுர்.

ஆனைமுகக் கடவுள் திரிபுரனிடஞ் செல்லுதல்

ஆனைமுகப் பெருமான் தாம் ஓர் அந்தண வடிவங் கொண்டார். திரிபுரன் வாழுகின்ற நகரத்தினை அடைந்தார். அவனுடைய அரண்மனைக்குச் சென்ருர். திரிபுரன் மறையவர் பெருமானைக் கண்டு மகிழ்ந்தான். அரியணையை விட்டு இறங்கி எதிரே சென்ருன். எண்வகை உறுப்புகளும் நிலத்தில் தோயுமாறு விழுந்து வணங்கினுன். அழைத்துக் கொண்டுபோய் உட்காரவைத்தான். மாறுகோலங்கொண்ட ஆனைமுக அந்தணரைப் பார்த்துத், "தேவரீர் யாவர்? அடியேனுல் தேவரீருக்கு ஆகவேண்டிய காரணம் என்னை? கூறியருளுதல் வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான். ஆனைமுக அந்தணர் பலியைப் பார்த்து, "ஓ திரிபுரனே! நம்மை எல்லோரும் கலாதரன் என்று கூறுவார்கள். எம்மிடம் எல்லாச் சித்திகளும் வந்து ஏவல் செய்யும். யாம் திருமால் உலகம் முதலிய எல்லா உலகங் களினுஞ் சுற்றிக்கொண்டு ஆங்காங்குள்ள புதுமைகளை வேடிக்கையாகப் பார்த்துக்கொண்டு வருகின்ருேம். அறம், வேள்வி, புகழ், செல்வம், அழகு, ஆயுத ஆற்றல், ஆண்மை, ஒளி முதலிய சிறப்புகளாலும் ஆனைமுகக் கடவுளை நாள் தோறும் வழிபட்டு வருகின்ற அன்பினுலும், பகைவர்கள் எல்லோருங் கண்டு நடுங்கி வணங்கத்தக்க வீரத்தன்மை யினுலும் மேன்மையடைந்திருக்கின்ற உன்னைப் பார்ப்பதற் காக இவ்விடத்திற்கு வந்தோம். நீ எமக்கு மூன்று உலகங் களைக் கொடுத்தாலும் யாம் அவற்றை விரும்பேம். உன்னுடைய அரசாட்சியைக் கொடுக்கினும் வேண்டேம். திருக்கைலையில் ஆனைமுகக் கடவுளுடைய வடிவம் ஒன்று இருக்கின்றது. அவ்வடிவத்திற்குச் சிந்தாமணி விநாயகர் என்று பெயர். அவ்வடிவத்தைச் சிவபெருமான் வழிபட்டுக் கொண்டிருக்கின்ருர். அதனை எமக்கு எவ்வகையிலேனுந் தருவித்துக் கொடுத்தல் வேண்டும்'' என்று கூறினுர்.

### சிவபிரானிடம் தூதர்களை அனுப்புதல்

ஆனைமுக அந்தணர் அருளிய செய்தியைக் கேட்டுத் திரிபுரன் மனமகிழ்ந்தான். "ஓ அந்தணரே! தேவரீர் விரும்பிய அந்த உருவத்தைத் தருவித்துத் தருகிறேன். அது சிவபிரானிடத்தில் இருப்பதாக மனந் தளரவேண்டாம். அந்தச் சிவபெருமானே அதனைத் தேவரீர்க்கு முன்கொண்டு வந்து வைக்கச் செய்கிறேன். அடியேனுடைய ஆற்றலைத் தேவரீர் பார்த்தருளும்" என்று சொன்னான். ஆடையணி கலன் முதலிய பொருள்களைக் கொடுத்து வணங்கினான். "அந்தச் சிந்தாமணி விநாயகரை யானழைப்பித்துத் தருகின்றவரையில் தேவரீர் இவ்விடத்தில் தானே தங்கி யிருத்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் இவற்றையெல்லாங் கேட்டுப் புன்னகை கொண்டார். "நீ அவ்வுருவத்தை வரவழைக்கிற வரையில் இந்நகரத்திற்கு அண்மையில் தங்கியிருக்கின்றோம். நீ அதற்குரிய முயற்சிகளை விரைவிற் செய்யக்கடவாய்" என்று கூறி வாழ்த்துரை வழங்கி அகன்றார். பிறகு திரிபுரன் ஒற்றர்களைப் பார்த்து, "நீங்கள் திருக்கைலைக்குச் சென்று பரமசிவனைப் பணிந்து, 'எங்கள் அரசனாகிய திரிபுரவள்ளல் தேவரீர் வழிபடுகின்ற சிந்தாமணி விநாயகரை வாங்கி வருமாறு கட்டளையிட்டனர். அதனை எங்களிடத்தில் கொடுத்தருளவேண்டும்' என்று கேளுங்கள். கொடுக்கா விட்டால் நேரில்வந்து வலுக்கட்டாயமாகக் கொண்டு போவார் என்று சொல்லுங்கள்" என்று சொல்லியனுப் பினான்.

## 36. விமலன் அருள் பெறுதல்

### சிவபிரானுடைய தேர்

ஆனைமுகக் கடவுளுடைய அருளைப்பெற்றகன்ற தேவர்கள் பிறகு சிவபிரானுடைய அருளைப் பெறுதற்கு எண்ணினார்கள். நம்மீது சிவபெருமான் இரங்கியருளவேண்டும் என்று

எண்ணியவர்களாய்த் தேர் ஒன்றைச் செய்தார்கள். அத்தேர் மிகப் பெரியது. ஞாயிற்றையும் திங்களையும் உருளைகளாக உடையது. இருதுக்களை உட்பரப்பாகவுடையது. சமயங்களை உள்ளிடமாகவுடையது. பிரகிருதி என்னு மாயையை முகப் பாகவுடையது. நாழிகை முகூர்த்தம் முதலிய காலங்களை மச்சாகவுடையது. நிலவுலகத்தைத் தட்டாகவுடையது. விண்ணுலகத்தை இருக்கையாகவுடையது. கலைகளை முளைக ளாகவுடையது. மறைகளையும் அவற்றின் செய்கைகளையும் மேல் வட்டமாகவுடையது. இமயமலையைக் கொடிஞ்சியாக உடையது. கதிரவன் தோன்றும் மலையைக் கூம்புகளாக உடையது. மற்றைய மலைகளையெல்லாம் தூண்களாக உடையது. தத்துவங்களைக் குடமாகவுடையது. முகில்களைச் சுற்று மரங்களாகவுடையது. கன்மேந்திரியங்களையும் ஞானேந் திரியங்களையும் அணிகலன்களாகவுடையது. அண்டங்களை மாலைகளாகவுடையது. புராண நூல்களை மணிவடங்களாக உடையது. விண்மீன்களை மேற்கட்டியாகவுடையது. கடல்களை அழகிய ஆடைகளாகவுடையது. மருத்துவர் களைப் படிகளாகவுடையது. கங்கை முதலிய தெய்வ ஆறு களைச் சாமரைகளாகவுடையது. மற்றைய ஆறுகளையெல்லாம் பதாகைகளாகவுடையது. திதி கிழமை முதலிய நாட்களை நடக்கின்ற விரைவாகவுடையது. இவ்வாறு அமைக்கப்பட்ட தேரை நடத்துவற்கு மறைகளைக் குதிரைகளாக்கினுர்கள். வசுக்களை அக்குதிரைகட்கு வடிகயிறுகளாகத் தொடுத் தார்கள். கன்மகாண்டம் ஞானகாண்டம் என்னும் இரண்டு மறை வழிகளையும் நுகத்தடியாகப் பூட்டினுர்கள். உபநிட தங்களையெல்லாம் குதிரைகட்கு அணிகலன்களாக அணிந் தார்கள். பிரணவம் என்னுங் குதிரைச் சம்மட்டியைக் கொண்டு நான்முகனைத் தேரோட்டச் செய்தார்கள். மகாமேரு மலையை வில்லாகவும் வாசுகியை நாணுகவும் திருமாலைக் கணையாகவும் நமனை அலகாகவும், காற்றை இற காகவும், வடவைத்தீயைக் கூராகவுஞ் செய்தார்கள். இவற் றைத் தாங்கள் அமைத்துள்ள தேரில் வைத்துக்கொண்டு திருக்கைலையை அடைந்தார்கள். தேரை வெளியிலே நிறுத்திவிட்டுத் தாங்கள் அனைவருஞ் சிவபிரான் திருமுன்பு

சென்றார்கள். சிவபிரானுடைய திருவடிகளில் வணங்கிப் போற்றினார்கள் "நாங்கள் திரிபுர அசுரனால் மிகுந்த துன்பத்தை நுகர்ந்துகொண்டிருக்கிறோம். அவனைத் தாங்கள் அழித்து எங்கட்கு நன்மையைச் செய்தருளவேண்டும். அதன் பொருட்டுத் தேருஞ் செய்துகொண்டு வந்திருக்கிறோம்" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள். சிவபிரான் உமாதேவியாரோடு புறப்பட்டு வெளியே வந்து தேவர்கள் செய்துகொண்டுவந்துள்ள தேரைப் பார்த்தார். மிகுந்த களிப்படைந்தார். "உங்களுடைய துன்பத்தை விட்டுவிட்டு மகிழ்ச்சியோடிருங்கள். உங்கட்குத் தீமை செய்கின்ற திரிபுரனை விரைவில் ஒழித்து உங்கட்கு நன்மையை உண்டாக்குவோம்" என்று திருவாய் மலர்ந்தார். மீளவுந் திருக்கோயிலுக்குட் சென்றார்.

### இறைவன் ஆனைமுகக் கடவுளைப் போற்றல்

அச்சமயத்தில் முன்பு திரிபுரனால் ஏவப்பெற்ற தூதர்கள் அங்கு வந்தார்கள்; சிவபிரானை வணங்கினார்கள். திரிபுரன் கூறிய செய்தியைச் சொன்னார்கள். அதனைக் கேட்டுச் சிவபெருமான் புன்னகை புரிந்தார். 'உங்கள் அரசனைப் போருக்கு வரச் சொல்லுங்கள்' என்று கூறியனுப்பினார். பிறகு தனித்திருந்து ஆனைமுகப் பெருமானைத் திருவுளத்தில் எண்ணினார். கண்களை மூடிக்கொண்டு ஓரெழுத்து மறையை உருவேற்றித் தவத்தில் இருந்தார்.

### ஆனைமுகக் கடவுள் அருளுதல்

ஆனைமுகப் பெருமானுக்கு அருள் உண்டாகியது. அச் சிவபிரானுடைய முகத்தில் நின்று ஐந்துமுகங்களையுந் தாங்கிய உருவத்தோடு தோன்றி எதிரே நின்றார். சிவபிரான் அவரைப் பார்த்து மனங் களித்தார்; "ஐயனே! நீர் எங்கிருந்து எழுந்தருளினீர்? உம்முடைய திருப்பெயர் யாது? அதனைத் திருவாய் மலர்ந்தருளவேண்டும்" என்றுகேட்டார். அதற்கு ஆனைமுகக்கடவுள், "இரவும் பகலும் முக்குணங்களோடும் பொருந்தியுள்ள என்னை நீர் அன்போடு கருதி

அளவற்ற நாள் தவஞ் செய்தபடியால் மூவுலகங்களினும் உள்ள உயிர்களையெல்லாங் காத்தற் பொருட்டு உம்முடைய முகத் தாமரையில் இருந்து தோன்றிவந்தோம். நம்முடைய பெயர் கணேசர் என்பதாகும். உமக்குவேண்டிய மேன்மைகளைக் கேட்பீராயின் அவற்றை இப்பொழுதே கொடுத்தருள்வோம்'' என்று கூறினர். சிவபெருமான் மனக் களிப்படைந்து, ''கணேச மூர்த்தியே! தேவர்கள் அனைவரும் திரிபுரனுடைய ஆணைக்குள் அகப்பட்டு வருந்துகின்றார்கள். யான் அவர்களுடைய வருத்தங்களைப் போக்குமாறு அத்திரிபுரனை அழித்தல் வேண்டும். அதற்கு ஏற்ற ஆற்றல் எனக்கு உண்டாகுமாறு நான்கு மறைகட்கும் முதன்மையாக இருக்கின்ற உம்முடைய மறையை மூல எழுத்தோடு உரைத்தருளவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் தம்முடைய மறையையும் அதன் மூலத்தையும் விளக்கமாகக் கூறினர். ''திரிபுரனை அழிக்கும் பொருட்டுக் கணை விடுகின்ற போது யாமுரைத்த மறையை நூறுருக் கூறுதல் வேண்டும்'' என்று உரைத்தார். இவற்றைக் கேட்ட சிவபெருமான் மகிழ்ச்சியடைந்தார். பிறகு சிவபிரான் அங்கு வந்துள்ள தேவர்களை அழைத்துக் கணேச மூர்த்தியை வணங்கி அருள் பெறச் செய்தார். பிறகு கணேசர் மறைந்தார்.

## 37. முப்புரம் எரித்தல்

### திரிபுரன் போருக்குப் புறப்படுதல்

சிவபெருமானிடத்திற்கு வந்து சென்ற தூதர்கள் திரிபுரனிடஞ் சென்று அவனை வணங்கினர்கள். அவனைப் பார்த்து, ''மன்னுதி மன்னவா! நாங்கள் சிவபிரானிடஞ் சென்று சிந்தாமணி விநாயகரைக் கேட்டோம். அவர், 'உங்களுடைய அரசனைப் போருக்கு வரச் சொல்லுங்கள்' என்று கூறிவிட்டார்'' என்று சொன்னர்கள். இதனைத் திரிபுரன் கேட்டு நகைத்தான். தன்னுடைய தவப் பயனுக்கு முடிவு காலம் நேரிட்டுவிட்டபடியினல் சிவபிராளுேடு போர்

செய்ய எண்ணினன். சண்டன் பிரசண்டன் முதலிய அவுண வீரர்களையெல்லாம் வருமாறு கட்டளையிட்டான். அவ்வாறே அவர்கள் வந்து சேர்ந்தார்கள். திரிபுரன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் எல்லோரும் விரைவாகப் போருக்கு உங்களை ஒழுங்கு செய்து கொள்ளுங்கள்" என்று சொன்னன். அவரவர்கட்குச் செய்யவேண்டிய சிறப்புகளையுஞ் செய்தான். இவ்வாறு திரிபுரன் படையெடுப்பதைச் சிவபெருமான் கேள்வியுற்ருர். நந்திதேவரை யழைத்து, "நம்முடைய படைகளையெல்லாம் போருக்கு ஒழுங்கு செய்வாயாக" என்று கூறினர். நந்திதேவர் பறையறைவித்து எல்லோரும் படைக்கலங்களுடன் வந்து சேர வேண்டுமென்று கட்டளை யிட்டார். எல்லோருங் கோபுர வாயிலுக்கு எதிரே வந்து குவிந்தார்கள். சிவபெருமான் உமாதேவியாரோடு வந்து தேரில் ஏறினர். உடனே வெற்றிச் சங்கங்கள் முழங்கின.

சில காட்சிகள்

நம்முடைய தலைவராகிய சிவபெருமான் பேரருள் உடையவராகையால் ஒருவேளை திரிபுரன்மீது இரக்கங் கொண்டு கொல்லாமல் விட்டாலும் விட்டுவிடுவார் என்று எண்ணிச் சினத் தீயைச் சிறுகச் சிறுக மூட்டுவித்தலைப் போலச் சில கணங்கள் சாந்தாற்றிகளையெடுத்து அசைத் தார்கள். சிவபெருமானுடைய தேரில் அணியாடையாகக் கட்டியுள்ள கடல்களினின்றும் அலைகள் எழுந்து வீசுதலைப் போலச் சில கணங்கள் வெள்ளைப் பாவாடைகளை வீசினர்கள். திரிபுரனை அழித்து ஒழிக்குமாறு நம்முடைய சிவபெருமான் எழுந்தருளிய படியினல் இனிமேல் நம்முடைய பாதல லோகத்தைத் தடையின்றி அடையலாம் என்னும் மகிழ்ச்சி யோடு பாம்பரசர்கள் (நாகராசர்கள்) எழுந்து ஆடுதலைப் போலச் சில கணங்கள் ஆலவட்டங்களை அசைத்தார்கள்.

சிவபிரானுடைய ஒரே கணையினல் முப்புரங்களும் அழியப் போகின்றபடியினல் நாம் இப்பொழுதே அவற்றின் எழிலைக் காணுவோம் என்று சில கணங்கள் மேல் எழுந்ததைப்

போலச் சில கணங்கள் இடபக்குறியிட்ட பல வெற்றிக் கொடிகளை விண்ணளாவ எடுத்தார்கள். சில கணங்கள், படகம், ஆகுளி, சல்லரி, பணை, கிணை, குடமுழா, குடப்பறை, கரடிகை, முரசம், துடி, தடாரி, தண்ணுமை, துந்துபி, தக்கை, மொந்தை, தொண்டகம், இடக்கை, தகுணிதம், பம்பை, தூரியம், பாண்டில், படலிகை, பணிலம், யாழ், வங்கியம், காகளம், பீலி முதலிய அளவற்ற ஒலிக் கருவிகளை முழக்கினார்கள். சில கணங்கள், கழுக்கடை, முசுண்டி, சக்கரம், பிண்டி, பாலம், கம்பம், கொடுவாள், முசலம், கப்பணம், வேல், மழு, வச்சிரம், கேடகம், வாள், வில், அம்பு, கலப்பை, ஈர்வாள், கணை, குளிரி முதலான அளவற்ற படைக்கலங்களைத் தாங்கி ஆரவாரஞ் செய்தார்கள். எழுபத்தெண்ணாயிரங் கோடி பூதவெள்ளங்கள் புடைசூழுமாறு நூறாயிரம் வீரர்கள் ஆனைமுகக் கடவுளை மனத்தில் எண்ணித் தங்களுடைய தேரின்மீது ஏறினார்கள். எண்ணாயிரங் கோடி பூத வெள்ளங்கள் புடைசூழுமாறு வீரபத்திரர் ஒரு தேரில் ஏறினார். நாலாயிரங்கோடி பூத வெள்ளங்கள் புடை சூழுமாறு பன்னிருதோள் மலைகளுடைய முருகக் கடவுளானவர் மயிலூர்தியின்மீது ஏறியருளினார். முப்பத்துமுக்கோடி தேவர்களோடு அளவற்ற விஞ்சையர் முதலானவர்கள் புடைசூழுமாறு தேவேந்திரன் வெள்ளையானையின்மீது ஏறினான். சண்டன், நந்தி, ஐயனார், குண்டோதரன், கோகன்னன், தசகன்னன் முதலிய அளவற்ற படைத் தலைவர்கள் தங்கள் தங்கள் பூதப்படைகளோடுஞ் சென்று சிவபெருமானுடைய தேரைப் புடை சூழ்ந்தார்கள்.

## இருபக்கத்துப் படைகளும் எதிர்த்தல்

நான்முகன் மறைக்குதிரைகளைத் தூண்டித் தேரை விரைவாகச் செலுத்தினான். திரிபுரனுடைய படைகளுக்கு எதிரே கொண்டுவந்து நிறுத்தினான். சிவபெருமானுடைய படைப்பெருக்கத்தைக் கண்டு திரிபுரன் சிறிதும் அச்சங் கொள்ளவில்லை. முகிலைப்போல் முழங்கினான். தன்னுடைய புதல்வர்களைச் சிவபெருமானுடைய படைகளோடு போர்

செய்யுமாறு கூறிவிட்டுத் தன்னுடைய தேரைக் கொண்டு வந்து சிவபெருமானுடைய தேருக்கு முன்பாக நிறுத்தினன். சிவபெருமானுந் திரிபுரனுந் தங்கள் தங்கள் வில்லைக் கையிற் பிடித்துக்கொண்டு போர் செய்யத் தொடங்கினர்கள். வில்லை வளைத்து நாணேற்றி ஒலி யெழுப்பினர்கள். அவ் வொலியைக் கேட்டு எண்வகை குலமலைகளும் நடுங்கின. ஏழுகடல்களும் ததும்பின. நிலங்களெல்லாம் பிளந்தன, உலகங்களெல்லாங் கிழிந்தன. மரங்களெல்லாம் மடிந்தன. பாம்புகளெல்லாம் கலங்கின. உடுக்களெல்லாம் உதிர்ந்தன. எட்டுத்திக்குகளும் அழிந்தன. தெய்வலோகம் அனைத்தும் திடுக்குற்றன. நாகலோகங்கள் அனைத்தும் நடுக்குற்றன.

### இருபக்கத்தவரும் போர் செய்தல்

சிவபிரானுந் திரிபுரனும் போர் செய்யத் தொடங்கினர்கள். அளவற்ற அம்புகளை ஒருவர்மீது ஒருவர் சொரிந்து கொண்டார்கள். முருகக் கடவுளோடு பிரசண்டன் எதிர்த்தான். நந்திதேவரோடு சண்டன் எதிர்த்தான். இந்திரனேடு திரிபுரனுடைய அமைச்சன் எதிர்த்தான். சயந்தனேடு மதனன் என்பவன் எதிர்த்தான். புட்பதந்தன் என்பவனேடு காலகூடன் என்பவன் தன்னுடைய பொன் கோட்டையை நடத்திக்கொண்டு வந்து எதிர்த்தான். வீரபத்திரரோடு வச்சிரமாட்டிரன் என்பவன் தன்னுடைய இரும்புக் கோட்டையை நடத்திக்கொண்டு வந்து எதிர்த்தான். இலக்க வீரரோடு வீமகாயன் என்பவன் தன்னுடைய வெள்ளிக்கோட்டையை நடத்திக்கொண்டு வந்து எதிர்த்தான். புருசுண்டியோடு மற்ற வீரர்கள் எல்லாம் எதிர்த்தார்கள்.

### படைகளழிதல்

இவ்வாறு ஒருவரோடொருவர் எதிர்த்துப் போர் செய்யுஞ் சமயத்தில் பூத வீரர்களெல்லாம் அவுணர்களோடு எதிர்த்து வாள்களை வீசியும், கணைகளை விடுத்தும், வேற் படைகளை யெறிந்தும், யானைக் கூட்டங்களையெல்லாம்

அவற்றை நடத்துகின்ற பாகர்களோடு விழும்படியாக எதிர்த்தும், தேர்களையெல்லாம் முரித்தும், குதிரைகளை யெல்லாம் மடித்தும், காலாட்படைகளையெல்லாம் கண்ட துண்டமாகச் செய்தும் போரிட்டார்கள். இதனைப் பார்த்த அவுணவீரர்கள் தாங்களும் விழிகளில் தீப்பொறி சிதறச் சினந்து கடுமையாகப் போரிட்டார்கள். இவ்வாறு இரு பக்கத்தினரும் பெரும்போர் செய்கையில் சிலர் தாளறு பட்டவர்களானார்கள். சிலர் தோளறுபட்டவர்களானார்கள். சிலர் இடையொடிந்தார்கள். சிலர் குடல் சரிந்தார்கள். சிலர் வலியிழந்தார்கள். சிலர் கையற்றார்கள். போர்க்கள மெங்கும் பிணங்கள் மிகுந்தன. தலையற்ற உடற் குறைகள் ஆடின. அளவற்ற பேய்கள் யாண்டும் பாடின. போர்க் களம் நிலமகளானவள் அளவற்ற பிணங்களை யேந்திக் கொண்டு கூத்தாடுவதைப் போன்றிருந்தது.

இவ்வாறு போர் நடந்துகொண்டிருக்கையில் தாருகன், சிங்கமுகன், சூரபன்மன் என்னும் மூவருமே ஒருரு எடுத்து வந்தாற்போன்ற பேராற்றல் படைத்தவனாகிய பிரசண்டன் என்பவன் தன்னுடைய படை வீரர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு முருகக்கடவுளை எதிர்த்தான். முருகக்கடவுள் தம்முடைய மயிலூர்தியை வட்டமாக ஓட்டி அவன்மீது அம்புகளைப் பொழிந்தார். அரைக்கணப்பொழுதில் அவ னுடைய படைகளையெல்லாம் அழித்தார். அவன் விடுகிற கணைகளையெல்லாம் நிலத்துக்கு இரையாக்கினார். அவ னுடைய வில் முதலிய படைகளையும் தேரையும் பொடி யாக்கினார். தேவர்கள் அனைவரையும் நடுங்கச் செய்கின்ற அவனுடைய மாயைகளையெல்லாம் அழித்தார். அவனுடைய உயிரை ஐந்து கணைகளைக்கொண்டு போக்கினார். ஊழிக் காலத்தில் உண்டாகின்ற பெருங்காற்றிற்கு ஒப்பான சண்டன் என்பவனை நந்திதேவர் எதிர்த்தார். அவனுடைய படைகளை யெல்லாங் கண்டதுண்டமாக்கினார். ஒரு நொடிப்பொழுதில் அவன் செய்கின்ற போரைத் தொலைத்தார். மூன்று கணைகளைக்கொண்டு அவனுடைய உயிரைப் போக்கினார்.

பறவையைப்போலத் தன்னுடைய பொன்கோட்டை யோடும் எழுந்து விண்வழியாகப் பறந்து போர் செய்கின்ற காலகூடனைப் புட்பதந்தர் எதிர்த்து அவன் விடுகின்ற கணைகளையெல்லாம் விலக்கினார். தம்முடைய தேரையும் விண்வழியாகச் செலுத்தி ஐந்து கணைகளால் அவனுடைய உயிரையும் போக்கினார். வெள்ளிக்கோட்டையோடு விரை வாக வந்து போர் செய்கின்ற வீமகாயனை இலக்கவீரர் எதிர்த்தார். அவனோடு அளவற்ற போரைச் செய்தார். அவனுடைய படைகளையெல்லாம் அழித்தார். அவனுடைய உடலில் இருந்து உதிரவெள்ளம் பெருகுமாறு நான்கு கணைகளைச் செலுத்தி வீழ்த்தினார். இரும்புக்கோட்டையை நடத்திக்கொண்டு போர் செய்யவந்த வச்சிரதமிட்டிரனை வீரபத்திரக்கடவுள் எதிர்த்தார். அவுணர்கள் எல்லோரும் இனிமேல் நம்முடைய போரில்லையென்று கலங்குமாறு தம்முடைய தேரை அவனுக்கு முன்னாகச் செலுத்தினார். நான்கு கணை விடுத்து அவனுடைய உயிரைப் போக்கினார். இந்திரன், திரிபுரன் அமைச்சனோடு பெரும்போர் செய்து அவனுடைய படைகளையெல்லாங் கொன்று தன்னுடைய வச்சிரப்படையினால் அவனுடைய தலையை அறுத்தெறிந்து வெற்றிமாலை சூடிக்கொண்டான். சயந்தன், மதனன் என்பவனோடு போர்செய்து தன்னுடைய வாளினால் அவ னுடைய தலையை வெட்டினான். மற்றவர்களும் தங்கள் தங்கள் ஆற்றலுக்கேற்றவாறு பலரை அழித்தொழித் தார்கள்.

## சிவபிரானும், திரிபுரனும் போர்

பிறகு, மகாமேரு மலையை வில்லாகவுடைய சிவபிரான் திரிபுரன் ஏந்தியிருக்கின்ற வில்லைக் கண்டதுண்ட மாக்கினார். அவனைச் சூழ்ந்திருந்த அவுணர்களையெல்லாம் அரைக் கணத்தில் அழித்தொழித்தார். அவ்வளவில் திரிபுரன் வேறொரு வில்லையெடுத்து வளைத்து உலகமுகடுகளெல்லாம் உதிருமாறு ஒலியெழுப்பினான். திருமாலைக் காளையாக ஊர்ந்தருளிய சிவபெருமானுடைய தேரின்மீது ஒரு நொடிப்

பொழுதில் கணக்கிடப்படாத கணைகளைப் பொழிந்தான். அவற்றையெல்லாஞ் சிவபெருமான் நொடிப்பொழுதில் விலக்கியருளினர். தம்முடைய மேருவில்லில் கணக்கற்ற கணைகளைத் தொடுத்துத் திரிபுரனுடைய முடி, உடல் மூடி, வில், தூணி, தேர், உதவித்தேர் முதலான எல்லாவற்றையும் அழித்தொழித்தார். திரிபுரன் எத்தகைய படைக்கலங்களும் அற்றவனாகத் தனித்து நின்றான். தன்னுடைய மக்கள் முதலானவர்கள் அழிந்தொழிந்ததைக் கேள்விப்பட்டு ஊழித் தீயைப்போலக் கொதித்தான். மிகுந்த வீரவெறி கொண்டான். முப்புரங்களையும் வருமாறு எண்ணினன். அவைகள் விரைந்து வந்தன. அவை மூன்றினும் மூன்று வடிவெடுத்துக்கொண்டு புகுந்தான். அவற்றோடு எழுந்து விண்ணிற் பறந்தான்; மண்ணிற் குதித்தான்; கடல்களிற் புகுந்தான்; எட்டுத் திக்குகளினும் பாய்ந்தான். இவனுடைய நிலையைக்கண்டு பதினான்கு உலகங்களும் அஞ்சின. சிவபெருமானுந் திரிபுரன் செல்லுமிடங்கட்கெல்லாஞ் சென்று போரிட்டுக் கொண்டிருந்தார்.

### திரிபுரன் அழிதல்

சிவபிரானுந் திரிபுரனும் நெடுநாள் வரையில் போரிட்டுக் கொண்டிருந்தனர். தேவர்கள் எல்லாரும் இந்தப் போரைப் பார்த்து உள்ளந் தளர்ந்தார்கள். நம்முடைய சிவபிரான் அடியவர்கட்கருளுகின்ற அருள் வள்ளல் ஆயினரே. இத் திரிபுரன் பணிந்து இன்னும் பல மேன்மைகளைச் கேட்பானாயின் கொடுத்தாலுங் கொடுப்பாரே என்று அச்சமடைந்தார்கள். சிவபிரானைப் பார்த்து, "எம்பெருமானே! தாங்கள் மனம் வைத்தால் இந்த அவுணனை ஒரு நொடிப்பொழுதில் நீறு செய்து விடலாமே! இவனோடு நீண்டநாள் போர் செய்து திருவிளையாடல் செய்யவேண்டியது இல்லையே! பெருமானுடைய காட்சியை அவன் இடைவிடாது பார்த்துக்கொண்டிருப்பதால் அவனுஞ் சிறந்த தவத்தினை உடையவனாக ஆகின்றானே! மேலும் அவனோடு நீடித்துப் போர்செய்து கொண்டிராமல் விரைவில் அவனை

அழித்து வெற்றி மாலையை அணிந்தருளுதல் வேண்டும்'' என்று கூறிப் பணிந்தார்கள். சிவபெருமான் உமையவளைப் பார்த்து, ''பெண்ணே! முன்னொரு காலத்தில் நீ காண வேண்டியதற்காகக் காளியோடு திருக்கூத்தாடினதைப்போல இத் திரிபுரனுடைய ஆற்றலை நீ பார்க்கவேண்டுமென்றே இதுவரையில் அவனோடு போர் செய்தலை வளர்த்தனம். இனிமேல் அவனையும் திரிபுரங்களையும் அழித்தொழித்தலைப் பார்க்கக்கடவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். ஆனைமுகக் கடவுளுடைய அருமறையைக் கூறித் தம்முடைய திருக்கைகளிலே முத்தலைச் சூலத்தை எடுத்தார். அவ் வளவில் திரிபுரனும் திரிபுரமும் வெந்து நீருகியதை எல்லோரும் கண்டார்கள். சிவபெருமானுடைய சூலப்படை எவ்வாறு சென்றதென்பதை எவரும் பார்க்கவில்லை. திரிபுரன் அழிந்ததைக்கண்டு தேவர்கள் ஆரவாரித்து மகிழ்ந்தார்கள். தேவர்கள் மலர் மாரி பெய்தார்கள். நான்முகன், திருமால் முதலியவர்கள் நம்முடைய துன்பம் இன்றோடு நீங்கியது என்று இன்பக் கடலில் மூழ்கினர்கள். சிவபெருமானுடைய சூலப்படை திரும்புவதற்கு முன் திரிபுரன் சிவபிரானுடைய திருவடிகளில் வந்து ஒன்றினன். அன்றுமுதல் சிவபிரானுக்குத் திரிபுராரி என்று பெயர் உண்டாகியது. போர்க்களத்தில் மடிந்த பூதகணங்களின்மீது இறைவன் தம்முடைய கடைக் கண் பார்வையைச் செலுத்தினர். அவை அனைத்தும் எழுந்து வந்து இறைவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கின. பிறகு, இறைவன் திருக்கைலாயமலையை அடைந்து தம்மைத் தொழுகின்ற அடியவர்கட்குத் திருவருள் செய்துகொண் டிருந்தார். திரிபுரன் எரிந்த நாளில் திருமால் முதலிய தேவர்களெல்லாம் சிவபெருமானுக்குத் திருவிழா நடத்தித் தங்கள் தங்கள் உலகங்கட்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

### முப்புரன் வீடுபேறடைந்த நாள்

திரிபுரன் வீடுபேறடைந்தது புரட்டாசித் திங்களின் முழுத்திங்கள் நாளாகையால் அந்நாளை எல்லோரும் பாகுளி என்று வழங்குகின்றார்கள். ஆண்டுதோறும் அந்நாளில்

எவரேனுஞ் சிவபிரானுக்குத் திருவிழாச் செய்தாலும், அவரவர்களுடைய ஆற்றலுக்கேற்றவாறு வழிபாடு முதலியவைகளைச் செய்தாலும் நெய்யாலாவது எண்ணெயினுலாவது திருவிளக்கேற்றி வைத்தாலும் அவர்களை எக்காலத்தினும் தீவினை அணுகமாட்டாது. இவ்வாறு ஏதேனும் நல்ல காரியஞ் செய்யாதவர்கள் தேவர்களைப்போலத் துன்பத்தை யடைவார்கள். அந்நாளில் காலையில் சிவ வழிபாடு செய்தால் முற்பிறப்பிற் செய்த தீவினைகள் எல்லாம் ஒழியும்; நண்பகற் போதில் செய்தால் முற்பிறவியோடு இப்பிறவியிற் செய்த தீவினைகளும் ஒழியும். மாலைக்காலத்திற் செய்தால் ஏழு பிறவிகள் தோறுஞ்செய்து முற்றிய தீவினைகளெல்லாம் ஒழிவதல்லாமல் விரும்பிய எல்லாப் பொருள்களும் வந்து கைகூடும்.

## 38. விநாயக சதுர்த்தி விரதங் கேட்டது

**தக்கன்**

நான்முகனுடைய மக்களில் ஒருவனுகிய தக்கன் என்பவன் அரிய தவஞ்செய்து உலகீன்ற தாயாகிய உமாதேவி தனக்கு மகளாகவும், தேவர்கள் முதலியோர் தன்னுடைய ஆணை வழி நடந்துகொள்ளவும் மேன்மைகள் பலவற்றை அடைந்து சிறப்பாக வாழ்ந்துகொண்டிருந்தான். உமாதேவியை மகளாகப் பெற்றுச் சிவபெருமானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தபடியால் அப்பெருமானுககு மாமனுக விளங்கிய தக்கன் ஒருநாள் திருக்கைலைக்குச் சென்றுன். தன்னைக் கண்டதும் மருமகனுகிய சிவபெருமான் எழுந்து தன்னை வணங்கவில்லையென்று சினங்கொண்டான். மிகுந்த சினத்தோடு அவ்விடத்திலிருந்து புறப்பட்டான். தன்னுடைய இருப்பிடத்தை யடைந்து சிவபெருமானைப் பலவாறு இகழ்ந்தான். சிவபெருமானை விடத் தான் உயர்ந்த நிலையை அடையவேண்டுமென்று எண்ணங் கொண்டான்.

**வேள்வி செய்தல்**

திருமால் முதலிய தேவர்களை யழைத்து ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினன். தந்தையாகிய தக்கன் வேள்வி செய்தலை உமாதேவியார் உணர்ந்தனர். சிவபெருமானிடம் விடைபெற்றுக்கொண்டு வேள்வி நடக்கும் இடத்திற்குச் சென்றார். தக்கனும் அவனுடைய மனைவியாகிய வேதவல்லியும் உமாதேவியை வரவேற்றுப் போற்றாதிருந்ததோடு இகழ்ந்தார்கள். உமாதேவியார்க்கு மிகுந்த சினமுண்டாகியது. "இந்த வேள்விச்சாலை பேய் விளையாடுஞ் சுடலையாகக்கடவது" என்று வசவுரை வழங்கிவிட்டுத் தாம் தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார். தக்கன் செய்யத் தொடங்கியிருக்கும் வேள்வியைப்பற்றிச் சிவபிரானிடந் தெரியப்படுத்தினர்.

**வேள்வியழிதல்**

உமாதேவியார் உரைத்ததைக் கேட்ட சிவபெருமானுக்கு மிகுந்த சினம் உண்டாகியது. அச் சினத்தீயில் இருந்து வீரபத்திரக் கடவுள் தோன்றினர். சிவபெருமான் வீரபத்திரக் கடவுளைப் பார்த்து, "நீ இப்பொழுதே சென்று தக்கனுடைய வேள்வியை அழித்து வருவாயாக" என்று கட்டளையிட்டருளினர். வீரபத்திரர் விரைந்து வேள்விச் சாலைக்குச் சென்றார். அங்கு வந்திருந்தோர் அனைவருக்கும் தக்கவாறு அறிவுரை புகட்டினர். சிவபெருமான் அந்த வேள்வியில் துன்புற்றோரிடத்தில் அருள் கொண்டார். இனிமேல் தீய செயல்கட்கு உடன்பட்டிராதீர்களென்று அவர்களையெல்லாம் அவரவர்களுடைய இருப்பிடங்கட்கு அனுப்பினர். தம்மிடத்தில் தவறுசெய்த தக்கனுடைய உடலில் ஆட்டுத் தலையைப் பொருத்தி எழுந்திருக்கச் செய்தார். இவற்றையெல்லாங் கண்ட உமாதேவியார் சினந்தணிந்தார். தாம் தக்கனுடைய மகளானமைக்கு வருந்தினர். வேறு பிறப்பு எடுத்தலை விரும்பினர்.

### இமவானுக்கு மகளாதல்

தம்முடைய யோகத் தீயினால் தம்முடைய உடலை யொழித்தார். இமயமலை யரசனுடைய தவச் சிறப்பாலும் மேனை செய்த அறத்தினாலும் அவர்கட்கு மகளாகத் தோன்றினார். வளர்ந்து மணப் பருவத்தை யடைந்தார். தவஞ்செய்து சிவபெருமானை அடையவேண்டும் என்று எண்ணினார். தம்முடைய விருப்பத்தைத் தந்தைக்குத் தெரியப்படுத்தினார். தம்முடைய எண்ணம் நிறைவேறு தற்கேற்ற ஒரு நோன்பைக் கூறியருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். இமவான் உமாதேவியார்க்கு ஆனைமுகக் கடவுளின் நோன்பைப்பற்றிக் கூறலானான்.

### ஆனைமுகக் கடவுள் நோன்பு

"தாயே! மிகுந்த சிறப்பையுடையதும் விரைவாக நற் பயன்களைக் கொடுப்பதும் இந்திரனுடைய வசவுரையைப் போக்கியதும் நான்முகன் முதலிய தேவர்கட்குப் படைப்பு முதலிய தொழில்களைக் கொடுத்ததும் எல்லாவகையான துன்பங்களையும் போக்கக் கூடியதும் எல்லாப் பொருள் களையும் வழங்கத் தக்கதும் ஆகிய பலவகையான சிறப்புகளை யுடைய நோன்பு ஒன்று இருக்கின்றது. அந் நோன்பு முழுமுதற் கடவுளாக விளங்கும் ஆனை முகக் கடவுளுடைய சதுர்த்தி நோன்பாகும். அந் நோன்பைக் கடைப்பிடித்தால் எண்ணிய வெண்ணியாங் கெய்துதல் திண்ணம். அந் நோன்பைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையைப் பற்றி மொழிகிறேன்.

### சதுர்த்தி நோன்பு

ஆவணித் திங்களில் பூர்வ பக்கத்தில் வருகின்ற நான்காவது நாளில் அந் நோன்பைத் தொடங்குதல் வேண்டும். அவ்வாறு தொடங்குவோர் அந்நாளில் அதி காலையில் எழுந்து நீராடுதல் செய்து நாட்கடன்களைச் செய்து முடிக்கவேண்டும். பிறகு திருமுழுக்கிற்குரிய பொருள்

களையும் வழிபாட்டிற்கேற்ற மலர்களையும் படைத்தற்குரிய பொருள்களையும் தொகுத்து வைத்துக்கொண்டு வழிபாட்டிற் குரிய ஓர் இடத்தை ஒழுங்கு செய்து கொள்ளுதல் வேண்டும். தூய இடத்தில் மண் எடுத்து அதில் வேர்கள் முதலியன இல்லாமல் ஆராய்ந்து அதனைப் பிசைந்து ஆனைமுகக் கடவுளுடைய உருவத்தை அமைத்தல் வேண்டும். இதனை யன்றிப் பொன்னினாலும் ஓர் உருவத்தை அமைக்கவேண்டும். பெரிதாகச் செய்தற்கு ஆற்றலில்லாதவர்கள் அரைப் பலம் அல்லது காற்பலம் முதலிய சிறிய அளவிலேனும் அமைத்தல் வேண்டும். பிறகு ஆசிரியருடைய கட்டளைப்படி கங்கையில் நீராடித் திருவெண்ணீறணிந்து தலை, கழுத்து, கை, காது என்னும் இவ்விடங்களில் கண்மணி மாலையணிந்து முன்கூறிய வழிபாட்டு மண்டபத்திற்கு வந்து எள்ளைப் பரப்பி அதன்மீது இழை சுற்றி நீர் நிரப்பியிருக்கிற பொற்குடத்தை வைத்து முன்னர்ச் செய்து வைத்திருக்கின்ற மண் வடிவத்தையும் பொன் வடிவத்தையும் அதன் அண்மையில் எழுந்தருளச் செய்தல்வேண்டும். ஆகம முறைப்படி வழிபாடு செய்து மந்திரத்தை உருவேற்றுதல் வேண்டும். இடையே தான தருமங்கள் செய்யவேண்டும். இவ்வாறு மறு திங்கள் சுக்கில பட்ச சதுர்த்தி வரையில் நாள்தோறுஞ் செய்தல்வேண்டும். பிறகு மண்ணினால் செய்த வடிவத்தை ஆற்றிலேனுங் குளத்திலேனும் விட்டுவிடுதல் வேண்டும்.

இவ்வாறு முப்பது நாட்களும் உணவு உறக்கம் முதலியன இல்லாமலிருத்தல் வேண்டும். முப்பத்தோராவது நாள், உறவினர், விருந்தினர், துறவிகள் முதலானவர்களோடு உணவு கொள்ளுதல் வேண்டும். முப்பது நாளும் உணவில்லாமலிருப்பதற்குத் திறனில்லாதவர்கள் முதல் நாளிலேனும் உணவில்லாமலிருந்து மறுநாள் முதல் பழம் பால் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றை உண்டு கொண் டிருத்தல் வேண்டும். முப்பதுநாள் செய்ய முடியாதவர்கள் தொடங்கிய முதல் நாளிலேனும் முன்கூறிய முறைப்படி செய்தல் வேண்டும். தானஞ் செய்வதில் அவரவர்களுடைய செல்வத்திற்குத் தக்கபடி செய்தல்வேண்டும். எவ்வாறேனும்

இருபத்தொரு பெயர்கட்கு உணவிடுதல் வேண்டும். இவ்வாறு நோன்பைச் செய்து முடிப்பவர்கள் செல்வச் சிறப்போடு வாழ்ந்திருப்பார்கள்'' என்று முடித்தான்.

### நோன்பைச் செய்தவர்

உமாதேவியார் இமவானைப் பார்த்து, ''இந் நோன்பினை முன்னர் எவரேனுஞ் செய்து முடித்திருக்கின்றனரா?'' என்று உசாவினர். இமவான் உமாதேவியைப் பார்த்து, ''முன்னொரு நாள் எல்லாத் தேவர்களும் வணங்கிப் போற்றச் சிவபெருமான் எழுந்தருளி யிருந்தார். அப்பொழுது முருகக் கடவுள் சிவபெருமானைப் பார்த்து, ''அளவற்ற நோன்புகளுள் மேலான நோன்பாகவும், விரைவில் எல்லாவகையான பயன் களையும் அளிக்கக் கூடியதாகவும் மிகுந்த சிறப்புடையதாகவும் உள்ள ஒரு நோன்பை எனக்குக் கூறியருளுதல் வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். சிவபெருமான் முருகக் கடவுளைப் பார்த்து, ''எல்லா நோன்புகளினுஞ் சிறந்தது ஆனைமுகக் கடவுளினுடைய சதுர்த்தி நோன்பேயாகும். அதுவே எண்ணிய காரியங்களையெல்லாம் எளிதில் வழங்கத் தக்கது. அதுவே எல்லாவற்றினுஞ் சிறந்தது'' என்று கூறி யருளினர்.

### முருகக் கடவுளின் ஐயம்

இவ்வாறு இயம்பியருளிய சிவபிரானைப் பார்த்து முருகக் கடவுள், ''சுவாமி! அடியேன் சிறுபிள்ளை என்று நினைத்தா இவ்வாறு திருவாய் மலர்ந்தருளினீர்கள்? தேவரீருடைய நோன்புகள் எண்ணற்றவையிருக்கின்றன. அவற்றுள் ஒன்றைக் கூறியருளாமல் ஆனைமுகக் கடவுளுடைய நோன்பை மேலானதாகத் தெரிவித்தீர்கள். ஆனைமுகக் கடவுள் எனக்கு மூத்தவராயினும் தங்கட்கு மகன் தானே! எப்பொருட்கும் இறைவராகப் பொருந்தியுள்ள தேவரீரினும் அவர் சிறந்தவராக இருப்பின் அவருடைய நோன்புஞ் சிறந்ததாகவே இருக்கும். ஆகவே, அடியேனுக்கு

ஏற்பட்டுள்ள இவ்வையத்தைப் போக்கியருளவேண்டும்'' என்று கூறி வேண்டிக் கொண்டார். சிவபெருமான் முருகக் கடவுளைப் பார்த்து :

ஒன்ற தாய்ப்பல வாயரு வாயுரு வாகி
நின்றெ லாவுல கத்தினு நீக்கமி லாத
துன்று சோதியே கணபதி யெனச்சொல்லு நாம
நன்று தாங்கிய தறிமதி நாமெலாம் உய்ய. (க)

பிரண வத்தினின் றுருக்கொடு பிரபஞ்சந் தனது
சரண பங்கயந் தொழுவருள் தந்திமா முகத்தோன்
அரணம் அட்டநாள் நமக்குமந் திரமறைந் தனன்முன்
முரணு முத்தொழின் முகிழ்த்தெம்மொ டிருவர்க்குங்
கொடுத்தான். (உ)

கலதி செய்திடுங் காமுக மனத்தவர் தம்மைக்
குலநெ டுங்கெடுத் தடியவர்க் கருள்செயக் குறித்தே
உலக மீதுபல் வேறவ தாரங்கொண் டுற்றுள்
புலவு வேலவ நமக்குமோர் மகனெனப் புகுந்தான். (ங)

உருவும் உள்ளுறும் உயிருமே எனஇரு வேமும்
மருவி நிற்றலின் மற்றிரு எங்களை வேறுய்ச்
சுருதி யாகம புராணங்கள் சொலாதொன்றே என்னும்
கருதும் யோகியர் தாங்களும் அன்னதே கரைவார். (ச)

ஆத லால்அவன் அனைவர்க்கும் மேலவன் அவன்மெய்ப்
பாத நாடிய விரதமு மேலெனப் படுமால்
ஓத லாகுமவ் விரதமே யன்றியும் ஒன்றுண்
டேத நீத்திடுஞ் சங்கட சதுர்த்திஎன் றிளையோய். (ரு)

எந்த நன்மையும் இணக்குமிவ் விரதங்க ளானும்
அந்த நம்பனே காக்கர மந்திர மாதி
மந்தி ரங்களி னானும்வந் தருளவ தாரச்
சுந்த ரந்திகழ் மூர்த்திபூ சனைத்தொழி லானும். (சு)

வணக்கஞ் செய்தலி னானுமற் றவனுரு மனத்தில்
இணக்கஞ் செய்தலி னானுமேத் தெடுத்தலி னானும்

பிணக்கஞ் செய்தபல் இடரெல்லாம் பெயர்த்திருள் மலமும்
உணக்கஞ் செய்துநாற் பயனையும் உற்றவர் பலரே. (எ)

என்று கூறி அவ்விரதத்தை மேற்கொள்ளச் செய்தார்" என்று கூறி முடித்தான்.

## 39. உமை விநாயக சதுர்த்தி நோன்பு

### சதுர்த்தி நோன்புக்கு ஏற்பாடு

உமாதேவியானவள் மலையரசனைப் பார்த்து, "நான் விநாயக சதுர்த்தி நோன்பினை இயற்றுதல் வேண்டும். இதற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தொகுத்தளிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டாள். மலையரசன் ஏவலர்களைக் கூவி நோன்புக்கு வேண்டிய பொருள்களை யெல்லாந் தொகுக்குமாறு கட்டளையிட்டான். உடனே ஏவலர்கள் நோன்புப் பொருளைத் தொகுக்கத் தொடங்கினார்கள். சிலர் தேவலோகத்திற்குச் சென்று கற்பக மலர்கள் முதலியவற்றை கொண்டுவந்தார்கள். சிலர் பற்பல தீவுகட்குச் சென்று ஆங்காங்குள்ள புதுமைப் பொருள்கள் பலவற்றைக் கொண்டு வந்தார்கள். சிலர் நிலவுலகத்தை யடைந்து புதுமையான பொருள்களைக்கொண்டு சென்றார்கள். சிலர் பாதலத்தை யடைந்து மாணிக்கம் முதலிய பொருள்களைக் கொண்டு வந்தார்கள். சிலர் உப்புக் கடல்நீர் ஒன்றைத் தவிர மற்றைக் கடல் நீர்களையெல்லாங் கொண்டு வந்தார்கள். சிலர் கங்கை காவிரி முதலிய புனித நீர்களைக் கொண்டு சென்றார்கள். சிலர் மணந் தங்கிய மலர்களையும், இளந் தளிர்களையும், அறுகுகளையும் வன்னி முதலிய இலைகளையும் தொகுத்தார்கள். சிலர் பல வகையான மாலைகளைத் தொடுத்துப் பூக் குடலைகளில் நிரப்பி வைத்தார்கள். சிலர் பொன்னால் ஒரு மண்டபத்தை அமைத்து அதில் ஒன்பான் வகை மணிகள் பதிக்கப்பெற்ற மாலைகளைத் தொங்க விட்டார்கள். சிலர் வாழை, கரும்பு, கமுகு இவற்றை நட்டு

அழகு செய்தார்கள். சிலர் மேற்கட்டிகளை உயரத் தூக்கினார்கள். சிலர் கொடிகளைக் கட்டினார்கள். சிலர் தீக் கடவுளுக்கு உறைவிடமாகிய தீக்குழியை (வேள்விக் குழியை) அமைத்தார்கள். சிலர் புனுகு, சந்தனம், பனிநீர் முதலியவற்றைக் கலந்து மெழுகினார்கள். சிலர் நறுமணப் புகைகளை உண்டாக்கினார்கள். சிலர் சுவர்கள் முழுதும் எண்ணிறந்த ஓவியங்களைத் தீட்டினார்கள். சிலர் பொன் பொடி முதலியவற்றால் கோலம் போட்டார்கள். சிலர் பொற்கலங்களைத் தூய்மை செய்துள்ள இடங்களில் அமைத்தார்கள்.

### உமாதேவியின் நோன்பு

பொருள்களெல்லாந் தொகுக்கப்பட்டவுடன் உமாதேவி நோன்பைத் தொடங்கினாள். கங்கையிலே நீராடித் திருவெண்ணீறு சிவகண்மணி முதலியவற்றை அணிந்து ஆனைமுகக் கடவுள் வழிபாட்டைத் தொடங்கினாள். இமவான் இயம்பிய முறைப்படியே முதல்நாள் செய்து முடித்தாள். ஒரு திங்கள் அளவும் உணவில்லாதிருந்து நோன்பை நிறைவேற்றினாள். இறுதி நாளில் முறைப்படி வழிபாட்டைச் செய்து முடித்த பிறகு முத்து மாலைகளால் அழகு செய்திருக்கின்ற பந்தரின்கீழ், கவரி முதலிய சின்னங்கள் விளங்கப் பலவித ஒலிக் கருவிகள் முழங்க, நெய்ப் பொங்கல், சுத்தப் பொங்கல், சர்க்கரைப் பொங்கல், தயிர்ச்சோறு, பாற்சோறு பலவகையான பிற உணவுகள் முதலியவற்றைப் படைத்து வணங்கினாள்.

### தானங்கள்

பிறகு அன்னதானம், ஆடை தானம், கன்னிகா தானம், கோதானம், பூதானம், இரணிய தானம், உபயமுகி தானம், எருமை தானம், குதிரை தானம், மகா தானம் முதலியவற்றைச் செய்து ஆனைமுகக் கடவுளை உள்ளத்திலே இருத்திப் பொன்னாற் செய்த வடிவத்தையும் குடத்தையும் பல பொருள்களோடு அந்தணருக்களித்தாள். மண்ணாற் செய்யப்பட்ட வடிவத்தை நீரிலே வைத்தாள். பிறகு இருப்பிடத்தை

யடைந்து உறவினர்களோடு உணவு கொண்டாள். இவ்வாறு சதுர்த்தி நோன்பை யியற்றியதன் பலனால் தன்னுடைய எண்ணம் நிறைவேறப் பெற்று இனிது மகிழ்ந்திருந்தாள்.

## 40. கர்த்தமன் சதுர்த்தி நோன்பு

### கர்த்தமன் என்னும் அரசன்

முன்னாளிற் கர்த்தமன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். அவன் உலகம் முழுவதையும் தன்னுடைய குடைநிழற்கீழ் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவனுடைய ஆணையுருளை எட்டுத் திக்குகளினுஞ் சென்றது. அவன் தன்னுடைய பகைவர்களையெல்லாம் வென்று தன்னாணையின்கீழ் வாழ்வார்க்கு எத்தகைய துன்பமும் ஏற்படாதவாறு அரசாட்சியை இனிது நடத்திக் கொண்டிருந்தான்.

### பிருகு முனிவர் வருகை

ஆனைமுகக் கடவுளை வழிபடுபவராகிய பிருகு முனிவர் ஒருநாள் அரசனிடத்திற்கு எழுந்தருளினர். கர்த்தமன் அம்முனிவரை வரவேற்றுப் பாராட்டிப் போற்றினான். செய்ய வேண்டிய வழிபாடுகளையெல்லாஞ் சிறப்பாகச் செய்தான். பிறகு முனிவரைப் பார்த்துப், "பெரியீர்! உலகத்தில் செல்வத்தை நுகருங்கால் இடையிடையே அழிவதும் மீண்டும் உண்டாவதும் இயற்கை. அடியேனுக்கு அவ்வாறில்லாமல் என்றும் ஒருதன்மையாகவே இருக்கிறது. அடியேன் செல்வப்பயனை இடைவிடாது நுகர்ந்து வருகிறேன். அழிவிலாச் செல்வம் அடியேனுக்குண்டாகியது எக்காரணத்தினால்? இதனை அடியேன் அறிந்திலேன். அறியுமாறு தெரிவித்தருளுதல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

பிருகு முனிவர் மறுமொழி

தவராசராகிய பிருகு முனிவர் அரசனைப் பார்த்து, " ஓ அரசனே! நீ முன் பிறப்பில் வைசிய குலத்திலே பிறந்து வறுமையுடையவனாக இருந்தாய். வறுமையின் கொடுமையால் அறங்களைக் கைவிட்டாய். உன்னுடைய உறவினர்கள் அனைவரும் உன்னைப் பலவாறு இழித்துரைத்தனர். அதனைக் கேட்ட நீ மிகுந்த மனவருத்தத்தை யடைந்தாய். இக் கொடியவர்களோடு வாழ்வதினும் காட்டிற்குச் சென்று உயிர் விடுவதே தகுதியானது என்று எண்ணினாய். வீட்டைவிட்டுக் காட்டிற்குச் சென்றாய். அங்கு முனிவர் இருப்பிடம் ஒன்றைக் கண்டாய். அவ்விடத்தில் பல முனிவர்கள் புடைசூழ்ந் திருக்கச் சவுபரி மகா முனிவர் என்பவர் எழுந்தருளியிருந் தார். நீ அவருடைய அண்மையிற் சென்று வணக்கஞ் செய்து நின்றாய். அம்முனிவர் உன்னுடைய முகத்தைப் பார்த்து, "நீ யார்? மன வருத்தத்தோடு இவ்விடத்திற்கு வரவேண்டிய காரணம் என்ன?" என்று கேட்டார். நீ அவரைப் பார்த்து, "அடிகாள்! அடியேன் வைசிய குலத் தவன். வறுமையுற்ற காரணத்தினால் சுற்றத்தினர் என்னை வெறுத்தனர். அதற்கு நான் மனம் பொறாதவ னானேன். மானமுடையோர் தமக்கோர் இழிவு வரின் உயிரை விடுவார்களேயல்லாமல் உயிரை வைத்துக் கொண் டிருக்க மாட்டார்கள். ஆகையால் நாமும் உயிரை விட்டு விடுதல் நலம் என்று முடிவு செய்தேன். காட்டிலே உயிர் விடக் கருதிக் காட்டை யடைந்தேன். முன்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனால் தேவரீருடைய இருப்பிடத்தை யடைந் தேன். அடியேனுக்கு இனிமேல் யாது குறையுளது?" என்று கூறிப் பலமுறை வணங்கினாய். உன்னுடைய வர லாற்றைக் கேட்ட அம்முனிவர் உன்னிடத்திலே அருள் கொண்டார். நீ வறுமையொழிந்து எண்வகைச் செல்வங் களையும் அடைந்து நீடூழி வாழ எண்ணினார். உனக்குச் செய்ய வேண்டிய உயிர்த் தூய்மைச் சடங்குகளைச் செய்து ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை உரைத்தருளினார். அதனைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையினையுங் கூறி

யருளினுர். நீ அவருடைய தவக்குடிலில் இருந்துகொண்டே அவர் உரைத்த முறைப்படி செய்துகொண்டிருந்தாய். அந்நாளில் விநாயக சதுர்த்தி வந்தது. அந்நன்னுளில் அம்முனிவர் ஆகமமுறைப்படி அச்சதுர்த்தி நோன்பை உனக்கு முடிப்பித்தார். பிறகு அந்நோன்பினைக் குறைவில்லாமல் செய்த சிறப்பினுல் உன்னிடத்தில் ஆனைமுகக் கடவுளுக்கு அருளுண்டாகியது. அளகாபுரியைப்போல் மணிமுதலான பொருள்கள் உன்னுடைய வீட்டில் நிறைந்திருக்குமாறு அருள்புரிந்தார். ஆனைமுகக் கடவுள் அருள் புரிந்ததைச் சவுபரி முனிவர் மெய்யறிவுப் பார்வையால் உணர்ந்தார். அச்செய்தியை உனக்குக் கூறி உன்னை வீட்டிற் கனுப்பினுர். நீ அவருடைய திருவடிகளை வணங்கி வாழ்த்தினுய். பிரியாவிடை பெற்றுக்கொண்டு உன்னுடைய நகருக்குச் சென்ருய். அவ்விடத்திலே உன்னுடைய இல்லத்தை உணர்ந்து கொள்ள முடியாமல் ஊரெல்லாம் தேடித்திரிந்தாய். பிறகு, அந்நகரிலுள்ள மாளிகைகளுட் சிறந்து விளங்கும் ஒரு மாளிகையின் அழகைக் கண்டு இதுதான் ஆனைமுகக் கடவுள் நமக்கு அருளிய இல்லம் என்று உணர்ந்து முற்றத்தை யடைந்தாய். முன்பு கைப்பொருளின்மையைக் கண்டு இகழ்ந்து கைவிட்ட சுற்றத்தினரெல்லாம் இப்பொழுது எதிர் கொண்டு பாராட்டிப் போற்றினர். நீ அவர்களோடும் மகிழ்ந்து இன்பங்களையெல்லாம் இனிது நுகர்ந்தாய். இப்பிறப்பிலும் அவ்வாறே அந்த நல்வினையின் பயனுய் நுகர்கின்ருய். இவ்வாறு பிறவிதோறும் நுகரவந்த இச்செல்வத்திற்கேது ஆனைமுகக்கடவுளின் சதுர்த்தி நோன்பு என்று அறியக்கடவாய். ஆகவே, அந்நோன்பினை எந்தக் காலத்திலுங் கைவிடாது கடைப்பிடித்து வரக்கடவாய்'' என்று கூறினுர். பிறகு தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார்.

### கர்த்தமன் வீடுபேறு

பிருகுமுனிவர் புகன்றவைற்றைக் கேட்ட கர்த்தமராசன் பேரின்பத்தில் மூழ்கினுன். ஒவ்வோராண்டிலும் விநாயக சதுர்த்தி நோன்பை மேற்கொண்டு முன்னிலும் மிகுதியான

இன்பங்களைக் குறைவறப்பெற்றுக் குபேரனும் நிகரல்ல னென்று கண்டோரெல்லாம் புகழ வாழ்ந்தான். பிறகு தன் னுடைய மகனுக்கு முடி சூட்டி நிலச்சுமையை அவனுடைய தோளின்மீது இறக்கினுன். தான் ஆனைமுகக் கடவுளுடைய திருவடியை அடைந்து சிறப்புற்ருன்.

## 41. நளன் சதுர்த்தி நோன்பு

### நளன்

நிலவுலகத்தில் நிடத நாட்டில் மாவிந்த நகரத்தில் நளன் என்னும் பெயரினையுடைய ஓர் அரசன் இருந்தான். அவன் கற்புடை மங்கையரும் மயங்கத்தக்க கட்டழகினை யுடையவன். இரப்பவரின் குறிப்பறிந் தீகின்ற கொடை நலம் உடையவன். செல்வத்திற் சிறந்த அளகேசனும் நாணத்தக்க பெருஞ்செல்வச் சிறப்புடையவன். பகைவர்களை யெல்லாம் வெற்றி கொள்ளத்தக்க பண்பு வாய்ந்தவன். அற நூல்களை யெல்லாம் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்து அதற் கேற்ப ஒழுகுஞ் சிறப்புடையவன்.

### கௌதம முனிவர் வருகை

நளன் தன்னுடைய அமைச்சர்களோடு அரசாட்சியைச் சீருஞ் சிறப்புமாக இனிது நடத்திக் கொண்டிருந்தான். ஒரு நாள் கௌதம முனிவர் அரசனுடைய அவைக்கு வந்தார். அரசன் அம்முனிவரைப் பணிந்து போற்றினுன். "அடியே னுக்குச் சிறந்த நோன்பு ஒன்றைத் திருவாய் மலர்ந்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். முனிவர் அரசனைப் பார்த்துக் கூறலானுர்.

### முற்பிறப்பின் செய்தி மொழிதல்

"அரசனே! நீ முற்பிறப்பில் கற்றவர்களாற் புகழ்ந்து பாராட்டப் பெற்ற கவுட நாட்டிற்கு அரசனுகிப் பல இன்பங்

களையும் நுகர்ந்து அரசியற்றிக் கொண்டிருந்தாய். அப்பொழுது பகைவர்களை வென்று உன்னுடைய செங்கோலை எல்லா நாடுகளிலுஞ் செலுத்த எண்ணினாய். அதன் பொருட்டு நாடுகடோறுஞ் செல்லத் தொடங்கினாய். வெற்றி முரசொலிக்க ஒரு காட்டின் வழியாகச் சென்றாய். அவ்வழியில் முனிவருடைய இருப்பிடம் ஒன்றைக் கண்டு அங்குச் சென்றாய். அவ்விடத்தில் கௌசிக முனிவர் எழுந்தருளியிருந்தார். நீ அவரைக் கண்டு வணங்கினாய். அம்முனிவர் உன்மீது அருளைக்கஞ் செலுத்தினார். தம்முடைய அறிவுப்பார்வையினால் உன்னுடைய வரவை யுணர்ந்தார். விரைவாக வீடுபேற்றை யளிக்கத்தக்க ஆனைமுகக் கடவுளுடைய சதுர்த்தி நோன்பை மறைமுறைப்படி கூறியருளினார். நீ பிறகு அம்முனிவரிடத்திலே விடைபெற்றுக் கொண்டு பகையரசர்களையெல்லாம் வென்றாய். எல்லா நாடுகளையும் வென்று உன்னுடைய தாக்கிக் கொண்டாய். பிறகு உன்னுடைய நகரத்தை யடைந்து சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடித்து அளவற்ற சிறப்போடும் வாழ்ந்து கொண்டிருந்தாய். அந்த நல்வினையினால் இப்பிறப்பிலும் அளவற்ற இன்பங்களை நுகருகின்றாய். ஆகவே கொன்றைமாலை சூடிய ஆனைமுகக் கடவுளின் சதுர்த்தி நோன்பு மிகச் சிறந்ததாகும். இனிமேல் வீட்டின்பத்தையும் எளிதிலடைதற்கு அந்நோன்பையே எப்பொழுதுங் கடைப்பிடிக்கக் கடவாய்'' என்று கூறித் தம்முடைய இருப்பிடத்திற்கு எழுந்தருளினார். பிறகு நளன் ஆண்டுதோறும் அந்நோன்பைக் கடைப்பிடித்து விரும்பியவற்றையெல்லாம் இனிது பெற்றுப் பிறகு மெய்யறிவுற்று வீடுபேற்றையும் அடைந்தான்.

## 42. சந்திராங்கதன் சிறப்படைந்தது

மாளவ மன்னன்

எல்லாவகையான மேன்மைகளும் பொருந்திய மாளவ நாட்டில் கன்ன நகரம் என்னும் பெயருடைய நகரம் ஒன்று இருந்தது. அந்நகரத்தில் சந்திராங்கதன் என்னும் பெய

ருடைய ஓர் அரசன் இருந்தான். அவ்வரசனுடைய மனைவி யின் பெயர் இந்துமதி. அரசன் அவளோடு எல்லாவகை யான இன்பங்களையும் இனிது நுகர்ந்து கொண்டிருந்தான்.

வேட்டைக்குச் செல்லுதல்

ஒருநாள் அமைச்சர்கள் அரசனைப் பார்த்து, "நம்முடைய நாட்டையழிக்கவல்ல விலங்குகள் காட்டிலே மிகுந்துவிட்டன. அவற்றை வேட்டையாடி யழித்தல் வேண்டும்" என்று இயம்பினர்கள். அரசன் அவ்விலங்குகளை வேட்டையாட முடிவு செய்தான். வேட்டையாள்களோடு காட்டிற்குச் சென்று விலங்குகளை வேட்டையாடி அழித்தொழித்தான்.

நாகலோக நங்கையர்கள்

அரசன் வேட்டையாடிக் கொண்டிருக்கிற சமயத்தில் சில அரக்கர்கள் வந்து சந்திராங்கதனை எதிர்த்தார்கள். சந்திராங்கதன் அவர்களோடு போரிட்டு அவர்களையும் தொலைத்தான். இச்சமயத்தில் ஓர் அரக்கி விரைந்து அந்த இடத்திற்கு வந்தாள். சந்திராங்கதனைப் பிடிக்குமாறு நெருங்கிவந்தாள். அவளுடைய கடுநடையையுங் கொக் கரிப்பையுங் கண்ட அரசன் தன்னுடைய ஆற்றலையிழந்தான். அக்காட்டிலிருக்கிற ஒரு மடுவிற் குதித்தான். அப்பொழுது அம்மடுவில் நாககன்னியர்கள் நீராடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அரசனைக் கண்டவுடன் மிகுந்த மகிழ்ச்சியடைந் தார்கள். இன்று நமக்குப் பெருஞ் செல்வங் கிடைத்தது என்று எண்ணினர்கள். அரசனைப் பார்த்து, "அரசனே! நாங்கள் நாகலோகத்து மங்கையர்கள். உன்னுடைய நல்வினையினல் எங்களை எளிதாகக் காணப்பெற்ருய். இனிமேல் உனக்கு யாதுங் குறைவில்லை. எங்களுடைய நகரமும் அங்குள்ள செல்வங்களும் சாவாமருந்தும் பிற இன்பங்களும் உன்னுடை யனவே" என்று கூறினர்கள். தங்களைத் தழுவி இன்புறுமாறு கூறினர்கள். சந்திராங்கதன் அவர்களைப் பார்த்து, "நான் ஏமாங்கத மன்னனுடைய மகன். யான் என்னுடைய

மனேவியை அல்லாமற் பிற மாதர்களேக் கனவிலுங் கருதேன். என்னிடத்தில் உங்களுடைய காரியம் பலியாது'' என்று கூறினன். ஆயினும் அம்மங்கையர்கள் சந்திராங்கதன்மீது கொண்ட மையலே யொழிக்கவில்லே. அவனே எவ்வாறேனும் வசப்படுத்தி விடலாம் என்னும் எண்ணத்தோடு பலவாறு முயன்ருர்கள். பிறகு தங்களுடைய உலகத்திற்குக் கொண்டு போய் அங்கு வைத்திருந்தார்கள்.

### இந்துமதியின் ஏக்கம்

அரசனேடு வேட்டைக்கு வந்த உறுதிச் சுற்றத்தினர் அரசனேப் பலவிடங்களினுந் தேடினர்கள். பிறகு அம்மடுவில் வீழ்ந்து இறந்துவிட்டதாக முடிவு செய்தார்கள். நகரத்தை நண்ணிச் சந்திராங்கதன் மனேவியாகிய இந்துமதிக்குச் செய்தியை இயம்பினர்கள். அதனேக்கேட்ட அவள் மிகுந்த துன்பத்தை யடைந்தாள். உறவினர்கள் தெளிவிக்க ஒருவாறு தெளிவடைந்திருந்தாள்.

### நாரதர் வருகை

மூவுலகங்களிலும் சுற்றித் திரிபவராகிய நாரத முனிவர் ஒருநாள் இந்துமதியிடத்திற்கு வந்தார். இந்துமதி நாரதரை வணங்கித் தளர்ச்சியோடு எதிர் நின்ருள். நாரதர் இந்துமதியைப் பார்த்து, ''உன்னே வருத்துகின்ற மனத் துன்பத்தை யொழித்துவிடு, உன்னுடைய கணவன் நாக லோகத்தில் இருக்கிருன். அவன் அவ்விடத்தை அகன்று இவ்விடத்தை அடைவதற்கு ஒருவழி இருக்கிறது. அஃது ஆனேமுகக் கடவளுடைய சதுர்த்தி நோன்பாகும். நீ அவ் விரதத்தைக் கடைப்பிடித்தால் உன்னுடைய கணவனேப் பெறுவாய். இனிமேல் உன்னுடைய கவலேயை விடு'' என்று கூறி ஓரெழுத்து மறைஸையும் உரைத்துச் சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையையும் உரைத்துச் சென்ருர்.

### இந்துமதி நோன்பு

இந்துமதி தன்னுடைய தலைவனை அடைந்ததுபோல் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தாள். நாரத முனிவர் நவின்ற சதுர்த்தி நாளின் வருகையை எதிர்நோக்கியிருந்தாள். அந் நோன்புநாள் வந்தவுடன் அந்நோன்பைக் கடைப்பிடிக்கத் தொடங்கிப் பன்னிரண்டு ஆண்டுகள் நாரதர் கூறிய நிறைப்படி ஆனைமுகக் கடவுள் வழிபாடு முதலியவற்றோடு கடைப்பிடித்தாள். ஆனைமுகக் கடவுள் இந்துமதியினுடைய வழிபாட்டிற்கு மகிழ்ந்தார். இந்துமதிக்குக் காட்சி தந்தார். அவளுடைய எண்ணம் திண்ணமாக நிறைவேறுமாறு திருவருள் புரிந்தார்.

### சந்திராங்கதன் மீளல்

சந்திராங்கதனிடத்திலே காதல்கொண்ட நாககன்னிகையர்கள் சந்திராங்கதனுடைய மனநிலையைக் கண்டு அஞ்சினார்கள். தாங்கொண்ட காதலை யொழித்தார்கள். சந்திராங்கதனைப் பலவாறு புகழ்ந்தார்கள். ஆடை யணிகலன்களால் அவனை அழகு செய்து குதிரையின்மீதேற்றி அளவற்ற பொருள்களைக் கொடுத்து முன் அழைத்துச் சென்ற மடுக்கரையிலே கொண்டுவந்து அவனுடைய இல்லத்திற்குச் செல்லுமாறு அனுப்பிவைத்தார்கள். பிறகு தாங்கள் தங்களுடைய இருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். சந்திராங்கதன் தன்னுடைய நகரத்தை நோக்கி வந்தான். சந்திராங்கதனுடைய வரவைக் கண்டவர்கள் அமைச்சர்கட்குத் தெரியப்படுத்தினார்கள். அமைச்சர்கள் விரைவாகச் சென்று சந்திராங்கதனை எதிர்கொண்டார்கள். மிகுந்த சிறப்போடு நகரத்திற்கு அழைத்துக்கொண்டு வந்தார்கள். சந்திராங்கதன் தான் நாகலோகம் போய்வந்த செய்தியை எல்லாருக்குந் தெரியப்படுத்தினான்.

### இன்புற்று வாழ்தல்

சந்திராங்கதன் விதவைக்கோலம் பூண்டிருந்த தன்னுடைய மனைவியைக் கண்டு வருந்தினான். பிறகு அறிஞர்கள்

கூறியவாறு செய்யவேண்டிய சடங்குகளை எல்லாஞ் செய்து மனைவியோடு இன்புற்று வாழ்ந்திருந்தான். இந்துமதி தன் கணவனைப் பார்த்துத் தன்னிடத்திற்கு நாரத முனிவர் எழுந்தருளிக் கூறிய செய்திகளையெல்லாஞ் சொன்னாள். தான் அம்முனிவர் கூறியபடியே ஆனைமுகக் கடவுளின் சதுர்த்தி நோன்பை மேற்கொண்டபடியினால்தான் எல்லா வகையான நன்மைகளும் இனிதுண்டாயின வென்று கூறினாள். சந்திராங்கதன் மனைவி கூறியதைக் கேட்டு மிகுந்த களிப்படைந்தான். ஆனைமுகக் கடவுளைப் பலவாறு புகழ்ந்து போற்றினான். தானும் தன்னுடைய மனைவியோடு ஆனைமுகக் கடவுளுடைய சதுர்த்தி நோன்பை இடைவிடாது கடைப்பிடித்து இறுதியில் பேரின்ப வீட்டை யடைந்து மகிழ்ந்தான்.

## 43. முருகக்கடவுள் வழிபட்டது

### தேவர்கள் தளர்ச்சி

முன்பு ஒரு காலத்திலே தாருகாசுரன் என்னும் பெயரையுடைய ஓர் அசுரன் இருந்தான். அவன் சிவபெருமானை நோக்கி அரிய தவத்தைச் செய்து நூற்றெட்டுயுகம் வரையில் அரசாள வரம் பெற்றான். மூன்றுலகங்களினும் தன்னுடைய ஆணையைச் செலுத்திக் கொண்டிருந்தான். அக்காலத்தில் தன் ஆணைக்குட்பட்ட தேவர்களையெல்லாஞ் சிறையிலிட்டுத் துன்புறுத்தினான். அவனுடைய சிறையிலகப்படாத இந்திரன், திருமால், நான்முகன் முதலிய மூவரும் மேருமலையை அடைந்து சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய துன்பம் சிவபெருமான் அருளும் புதல்வரால் ஒழியுமென்று விண்ணகத்திலிருந்து தெய்வவாக்கு உண்டாகியது. தவஞ்செய்து கொண்டிருந்தவர்கள் அத்திருவாக்கைக் கேட்டு மனமகிழ்ந்தார்கள். திருக்கைலையை அடைந்து சிவபெருமானை வழிபடச் சென்றார்கள். அங்குச் சிவபிரான் எழுந்தருளியிராமையை உணர்ந்து துன்புற்று வாடினார்கள்.

### உமாதேவியார் காட்சி

தேவர்களுடைய மனத் தளர்ச்சி நீங்குமாறு அப்பொழுது உமாதேவியார் எதிரே வந்தார். உமாதேவியைக் கண்ட தேவர்கள் மிகுந்த களிப்படைந்து வணங்கிப் போற்றினர்கள். தங்களுடைய துன்பத்தைப் போக்கி யருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். உமாதேவியார் தேவர்களைப் பார்த்து, "ஓ தேவர்களே! நம்முடைய தலைவராகிய சிவபெருமான் திருக்கைலாயத்தைச் சூழ்ந்திருக்கின்ற மூன்று மலைகள் முன்பு எழுந்தருளித் தேவர்கட்கு அருளுரை வழங்கியதைப்போல இப்பொழுது கோளகிரியில் சனகர் முதலிய முனிவர்கட்கு மெய்யறிவு வழங்கிக்கொண்டிருக்கின்றனர். அவர் இப்பொழுதிருப்பதைப்போல் யோகியாகவே இருப்பாராயின் சிவபெருமான் அருளும் புதல்வரால் துன்பம் ஒழியும் என்ற உருவிலிவாக்கு நிறைவேறமாட்டாது. ஆகவே அது கூடுமாறு நீங்கள் முயற்சி செய்வீர்களாயின் உங்களுடைய கவலை தீரும்'' என்று கூறித் தம்முடைய திருக்கோயிலை அடைந்தார்.

### தேவர்கள் முயற்சி

உமாதேவியார் உரைத்தருளிய செய்தியைக்கேட்ட தேவர்கள் கோளகிரியில் எழுந்தருளியிருக்கும் இறைவனிடஞ் சென்றூர்கள். சிவபெருமானுடைய யோகநிலையைக் கண்டு என்ன செய்வோமென்று ஏங்கினர்கள். ஒரு சூழ்ச்சியை எண்ணிக் காமனை யழைத்தார்கள். அவனைப் பார்த்து, "ஓ காமனே! நாங்கள் நெடுநாளாகத் தாருகாசுரனல் மிகுந்த துன்பத்தையடைந்திருக்கின்றனம். அத்துன்பத்தை நாங்கள் ஒழிக்குமாறு நீ கோளகிரியில் மோனத்தில் இருக்கும் இறைவன்மீது உன்னுடைய மலர்க்கணைகளைச் செலுத்தி அவர் உமாதேவியாரோடு கூடச்செய்தல் வேண்டும்'' என்று கூறினர்கள். தேவர்கள் கூறியதைக் கேட்ட காமன் மிகுந்த அச்சத்தையுங் கலக்கத்தையும் அடைந்தான்.

**காமன் எரிதல்**

பிறகு தேவர்களுடைய வேண்டுகோளை மறுக்கமுடியாத காமன், கோளகிரியை அடைந்தான். புலியை எழுப்பச் செல்லும் மானைப்போலச் சிவபெருமானிடஞ் சென்றான். தன்னுடைய மலர்க்கணையை அப்பரமன்மீது செலுத்தினான். சிவபெருமான் தம்முடைய நுதல்விழியைச் சிறிது திறந்து பார்த்தார். அவ்வளவில் காமன் உடல் கரிந்து பொரிந்து சாம்பராகியது.

**உமாதேவியார் வேண்டுகோள்**

காமன் எரிந்தொழிந்ததைக் கண்ட உமாதேவியார் சிவபெருமானிடம் வந்து அப்பெருமானைப் பணிந்தார். பிறகு பெருமானைப் பார்த்துப், "பெருமானே! சிறிதும் இரக்க மில்லாத தாருகாசுரன் செய்யுங் கொடுமையினால் மிகுந்த வருத்தத்தை யடைந்த தேவர் தெய்வ வாக்கைக் கேட்டுக் காமனை இவ்வாறு அனுப்பிவைத்தார்கள். அவர்கள் ஏவலின் படியே காமன் இவ்வாறு செய்தான். தேவரீர் அத் தேவர்கள்மீது அருள் சுரந்து திருவருள் வழங்குதல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். சிவபெருமான் கோளகிரியைவிட்டுத் திருக்கைலையை அடைந்து உமா தேவியாரோடு போகியாய்த் தேவ ஆண்டுகளில் அறுபதி னாயிரம் ஆண்டுகள் போகத்தைப் புரிந்துகொண்டு மகிழ்ந் திருந்தார்.

**தேவர்கள் தீக்கடவுளை அனுப்புதல்**

தேவர்கள் தங்களுடைய விருப்பம்போல் சிவபெருமான் உமாதேவியாரோடு சேர்ந்தும் அதனால் தங்களுடைய துன்பம் நீங்காமையைக் கண்டு உள்ளம் வருந்தினார்கள். சிவபெருமானிடத்திற்குத் தீக்கடவுளை அனுப்புவோம் என்று முடிவு செய்தார்கள். தீக்கடவுளைச் சிவபெருமானிடத்திற்கு அனுப்பினார்கள். தீக்கடவுள் ஒரு துறவியைப்போற் கோலங் கொண்டான். திருக்கைலையை அடைந்து உமாதேவியின் அந்தப்புரத்தின் பின்புறத்தில் நின்று, "ஓ இறைவியே!

எளியேனுகிய அடியேன் மிகுந்த பசியோடு வந்திருக்கிறேன் ; ஐயமிட்டு என்னுடைய குறையைப் போக்கவேண்டு''மென்று இறைவனும் இறைவியுங் கேட்குமாறு ஓ என்றலறி மூன்று முறை கூவினுன். தீக்கடவுள் கூவியதைக்கேட்ட சிவபெருமான் இனிமேல் இவனுடைய குறையைப் போக்குவதே முறையென்று எண்ணினுர். உமாதேவியாரும் தேவர்களுடைய துன்பத்தைப் போக்கி யருளவேண்டிக்கொண்டார். சிவபெருமான் திருவருள் சுரந்து தமது வீரியத்தை இறைவியினுடைய கையிலே தந்தருளினுர். உமாதேவியார் அதனைத் தீக்கடவுளுடைய கையிலே கொடுத்தருளினுர். தீக்கடவுள் அதனை உண்டருளினுன்.

### முருகக்கடவுள் தோற்றம்

தீக்கடவுளுடைய வயிற்றிற் சென்ற வீரியமானது தீக்கடவுளுக்கு மிகுந்த சூட்டைக் கொடுத்தது. அச்சூட்டைத் தீக்கடவுளாற் பொறுக்க முடியவில்லை. ஆகவே அவன் இமயமலைக்கு ஓடி அங்குள்ள சரவணப்பொய்கையில் அதனை விடுத்தனன். அவ்வீரியமானது குழந்தையாகியது. அக்குழந்தையைக் கண்டு திருமால் முதலிய தேவர்கள் மகிழ்ந்தார்கள். ''எங்களுடைய தவப்பயனே! பெறற்கருஞ் செல்வமே!'' என்று வாழ்த்தினுர்கள். கார்த்திகை முதலிய அறுவரையும் அழைத்து அக்குழந்தையைப் பாதுகாக்கச் சொன்னுர்கள். தாங்கள் திருக்கைலையை அடைந்து சிவபெருமானைக்கண்டு பணிந்தார்கள். சரவணப் பொய்கையில் குழந்தை தோன்றியிருத்தலைக் கூறினுர்கள். சிவபெருமான் உமாதேவியாரோடு சரவணப் பொய்கைக்கு எழுந்தருளினுர். இருவரும் தங்களுடைய மகனைக் கண்டார்கள். உமாதேவியார் ஆறு வடிவங்களாகத் தோன்றியுள்ள ஆறு குழந்தைகளையும் ஒன்ருகச் சேர்த்தெடுத்து ஒரு குழந்தையாகச் செய்தருளினுர். சிவபெருமான் திருமால் முதலிய தேவர்களைப் பார்த்து, ''அன்பர்களே! நீங்கள் தாருகாசுரனுல் துன்புற்று வருந்தியமைகண்டு இப்புதல்வனை நல்கிளுேம். இனி, இப்புதல்வனைக்கொண்டு உங்களுடைய காரியங்களை

நிறைவேற்றிக் கொள்வீர்களாக'' என்று கூறி உமாதேவி யோடு திருக்கைலைக்கு எழுந்தருளினர்.

### முருகன் திருவருள்

பிறகு இந்திரன் முதலிய தேவர்கள் தேவர்களின் படைத்தலைவனுகத் தோன்றியுள்ள கடவுளைக் கண்களாரக் கண்டு மகிழ்ந்தனர். அப்பெருமானுடைய பொன்னடியைப் போற்றி வணங்கினர். எங்களுடைய குறையைப் போக்கி யருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். முருகக் கடவுள் தேவர்களுடைய வேண்டுகோளுக்கு இரங்கினர். அவர்களைப் பார்த்து, ''ஓ தேவர்களே! இனிமேல் நீங்கள் தாருகனுடைய தொல்லையைக் குறித்து அஞ்சவேண்டாம். உங்களுடைய விருப்பப்படி அவனைக் கொன்று உங்களுடைய துன்பத்தைப் போக்கியருள்வோ''மென்று திருவாய் மலர்ந் தருளினர்.

### ஆனைமுகக் கடவுளை வழிபடுதல்

பிறகு முருகக்கடவுள் ஆனைமுகக் கடவுளை உள்ளத்தில் எண்ணி அவருடைய ஆறெழுத்து மறையை உருவேற்றிக் கொண்டிருந்தார். சில நாட்கள் சென்றன. ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார். முருகக்கடவுள் முன் தோன்றிப் பல மேன்மைகளைக் கொடுத்தருளினர். தாமேறியுள்ள மயிலையும் வழங்கி, ''உனக்கு மயில் கொடியோன் என்று பெயருண்டாகுக'' என்று திருவாய் மலர்ந்தருளினர்; பிறகு அங்கிருந்து மறைந்தார். முருகக்கடவுள் தமக்கு ஆனைமுகக் கடவுள் காட்சி தந்த இடத்தில் ஆனைமுகக் கடவு ளுடைய திருவடிவத்தை அமைத்தார். அவ்வடிவத்திற்கு இலக்க விநாயகரென்று பெயரிட்டார். இலட்சம் அறுகுமலர் முதலியவைகளைக் கொண்டு வழிபாடு செய்தார். பிறகு திருக்கைலையை அடைந்து சிவபெருமானைப் பணிந்தார். அவருடைய அருளைப் பெற்று வேற்படை முதலிய ஆயுதங் களைத் தாங்கித் தேவர்களோடு சென்று தாருகனைக் கொன்று தேவர்களுடைய துன்பத்தைப் போக்கியருளினர்.

## 44. காமன் வடிவம் பெற்றது

### இரதியின் வேண்டுகோள்

காமன் சிவபெருமானுடைய நுதற்கட்டீயினல் நீருகிய வுடன் அவனுடைய மனைவியாகிய இரதி தேவியானவள் பலவாறு வருந்திப் புலம்பினுள். திருக்கைலேயை அடைந்து சிவபிரானிடம் தன்னுடைய தலைவனை உயிர்ப்பித்துத் தர வேண்டும் என்று முறையிட்டுக் கொண்டாள்.

### சிவபெருமான் திருவருள்

சிவபெருமான் இரதி தேவியினிடத்தில் இரக்கங் கொண்டார். அவளைப் பார்த்து, "ஓ இரதியே! எம்மால் இறந்த காமனுனவன் உனக்கு மட்டும் எந்தக் காலத்திலும் உருவத்தோடு தோற்றியிருப்பான்" என்று திருவாய் மலர்ந் தருளினுர். காமன் உயிர் பெற்று எழுந்து வருமாறு தம்முடைய திருவுளத்தில் எண்ணினுர். உடனே அவன் எழுந்து வந்து சிவபெருமானுடைய திருவடிகளில் விழுந்து வணங்கினுன். பலவாறு போற்றிப் புகழ்ந்தான். சிவபெரு மானைப் பார்த்து, "எம்பெருமானே! தேவரீர் உலக மாதா வாகிய உமாதேவியைச் சேரும் வண்ணம் தேவர்களனை வரும் என்னைத் தூண்டி மலர்க்கணையை ஏவுமாறு செய் தார்கள். அதனுல்தான் அடியேன் தேவரீரிடத்தில் இந்தக் குற்றத்தினைச் செய்தேன். தேவரீர் இக்குற்றத்தினைப் பொறுத்தருளுதல் வேண்டும். பழையபடி கரும்பு வில்லினுல் எல்லோரையும் வெல்லும்படியான அதிகாரத்தை அடியே னுக்குக் கொடுத்துத் திருவருள் செய்யவேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். சிவபெருமான் காமனைப் பார்த்து, "ஐந்து திருக்கைகளையுடைய ஆனைமுகக் கடவுள் உனக்கு அவ்வதிகாரத்தைக் கொடுத்தருளுவர். நீ அக்கடவுளை வழிபடக் கடவாய்" என்று ஓரெழுத்து மறையையும் அவனுக்கு

உரைத் தருளினுர். அதனைக் கடைப்பிடிக்க வேண்டிய முறைமையையும் போதித்தருளினுர்.

### காமன் ஆனைமுகக் கடவுளை வழிபடுதல்

பிறகு காமன் சிவபெருமானிடத்தில் விடைபெற்றுக் கொண்டு இரதிதேவியோடு அங்கிருந்து புறப்பட்டான். முன்னர் அறுமுகக் கடவுள் வழிபாடு செய்த மயூரேசமென்னும் பதியை அடைந்தான். அப்பதியில் ஆயிரம் ஆண்டுகள் தங்கி ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை முறைப்படி உருவேற்றினுன். ஆனைமுகக் கடவுள் காமனுடைய வழிபாட்டிற்கு மனமகிழ்ந்தார். காமன்முன் காட்சி தந்தார். காமனைப் பார்த்துக், "காமனே! உன்னுடைய அன்புக்கு வியந்தோம். நீ விரும்பியவைகளைக் கேள்; கொடுத்தருள்கின்ருேம்" என்று சொன்னுர். காமன் களிப்படைந்தான். ஆனைமுகக் கடவுளைப் பார்த்துத், "தேவர்தந் தேவனே! அரசர்களும் படையெடுத்தற் கஞ்சும்படியான பெண்கள்மீது அடியேன் படையெடுத்து வெல்லுதல் வேண்டும். முன்போல் நல்ல உருவத்தை யடைந்து விளங்குதல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் உள்ளமிரங்கினுர். அவனைப் பார்த்து, "அன்பனே! இனிமேல் திருநெடுமால் கண்ணனுக உலகில் தோன்றப் போகின்ருன். அக்காலத்தில் நீ அவனுடைய மகனுவாய். உடனே உனக்கு நல்ல உருவம் உண்டாகும்" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினுர்.

### காமன் நல்வாழ்வு

பிறகு காமன் தனக்கு காட்சி தந்த இடத்தில் ஒரு திருக்கோயிலை உண்டாக்கினுன். அதில் ஆனைமுகக் கடவுளை அமைத்தான். அக்கடவுளுக்கு மகோற்கட விநாயகர் என்று பெயரிட்டான். காலையினும் மாலையினும் வழிபாடுகள் செய்து பேரின்பத்தில் மூழ்கியிருந்தான். இவ்வாறு வழிபாடு செய்து கொண்டு வருகிற காலத்தில் மகோற்கட விநாயகருடைய

பேரருளினால் முன்போலவே தன்னுடைய கரும்பு வில்லையும் ஐங்கணைகளையும் பெற்றான். ஏழுலகங்களினுந் தனது ஆணையுருளையை உருட்டி நலத்துடன் வாழ்ந்திருந்தான்.

### பிரத்தியும்னன்

பிறகு திருமாலானவர் கண்ணனாகத் தோன்றிப் பிறப்பெடுத்தார். காமன் அவருடைய புதல்வனாகப் பிறந்து பிரத்தியும்னன் என்கிற பெயரை யடைந்து நல்ல உருவத்தைத் தாங்கி எல்லா நூல்களையும் ஆராய்ந்துணர்ந்து மிகுந்த பேராற்றலோடு யாவரும் புகழும்படியாக வாழ்ந்திருந்தான். பிரத்தியும்னன் தாயாகிய உருக்குமணியும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு நல்ல பலன் பெற்றாள். பிறகு உருக்குமணி தன் மகனாகிய பிரத்தியும்னனும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு நல்ல பலனடையுமாறு செய்தாள்.

## 45. ஆதிசேடன் வழிபட்டது

### ஆதிசேடன் ஆணவம்

ஒரு காலத்தில் சிவபெருமான் திருக்கைலாய மலையில் உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தார். கணக்கற்ற தேவர்களும் முனிவர்களும் முனிவர் தலைவர்களும் வந்து சிவபெருமானை வணங்கித் தங்கட்கு வேண்டிய மேன்மைகளைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள். அச் சமயத்தில் சிவபெருமானுடைய சடைமுடியிலிருக்கின்ற ஆதிசேடன், நாம் இவ்வளவு பேரும் வணங்கும்படியாகச் சிவபெருமானுடைய திருமுடியிலிருக்கிறோம் அன்றோ என்று ஆணவங் கொண்டான்.

### ஆணவத்தின் பலன்

சிவபெருமான் ஆதிசேடனுடைய ஆணவத்தை அறிந்தார். தம்முடைய கைகளால் திடீரென் றிழுத்து நிலத்தின் மீது மோதினார். அவ்வளவில் ஆதிசேடன் வெள்ளிமலையில்

வீழ்ந்தான். அவனுடைய தலை ஆயிரம் பிளவாகப் பிளந்து போய்விட்டது. அவனுடைய உலகத்தைத் தாங்குகின்ற ஆற்றலும் அளவற்ற தவத்தாற் கிடைத்த பெருமைகளும் போய்விட்டன. அதனால் ஆதிசேடன் மிகுந்த துன்பத்தை யடைந்தான். நாம் முன்போலவே நன்னிலையை அடைதற்கு வழி யாது என்று எண்ணமிட்டான்.

### நாரதர் அறிவுரை

அச்சமயத்தில் நாரதர் சிவபெருமானைக் காணும் பொருட்டு வந்தார். அவர் ஆதிசேடனைப் பார்த்து, "ஆ! ஆ! ஈதென்ன தீவினை ? உனக்கு சேர்ந்த துன்பம் யாது?" என்று உசாவினர். துன்புற்று வீழ்ந்து கிடக்கின்ற ஆதிசேடன் மறுமொழி கூற முடியாமல் நாணமடைந்தான். நாரத முனிவர் தம்முடைய அறிவுப் பார்வையினால் நிகழ்ந்ததை உணர்ந்து கொண்டார். அவர் ஆதிசேடனைப் பார்த்து, "ஆதிசேடனே ! நீ ஆணவங்கொண்ட படியினால் சிவபெருமானுடைய சார்பை யிழந்து இத்தகைய தொல்லைக்கு உள்ளானாய். இக் குற்றம் நீங்குமாறு ஒருவழி சொல்லுகிறேன். அதனை அன்புடன் கேட்பாயாக ! தம்மை வேண்டிய அடியவர்கட்கு வேண்டியவாறு பல பெருமைகளையுந் தந்து காப்பாற்றும் ஆனைமுகக் கடவுளுடைய ஆறெழுத்து மறையைக் கடைப்பிடித்துப் போற்றக் கடவாய்" என்று கூறி ஆறெழுத்து மறையை உரைத்தருளினர்.

### ஆதிசேடன் வழிபாடு

அம்மறையைப் பெற்ற பெருமையினால் ஆதிசேடனுக்குத் தேகதிடம் உண்டாகியது. அவ்விடத்தைவிட்டு நீங்கிப் பிரவாள நகரத்தைச் சேர்ந்து மிகுந்த அன்போடு ஆறெழுத்து மறையை உருவேற்றினான். ஆனைமுகக் கடவுள் மனமகிழ்ந்தார். ஆனைமுகத்தோடும் பத்துத் திருக்கைகளோடும் பத்துப் படைக்கலன்களை ஏந்திக்கொண்டு சித்தி புத்தியோடு அரிமா ஊர்தியில் ஆதிசேடன் முன்பு காட்சி தந்தார்.

ஆதிசேடன் எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு பணிந்தெழுந்தான். அளவற்ற புகழ்ப்பாக்களைப் பாடினன். ஆதிசேடன் வழிபாட்டிற்கு ஆனைமுகக் கடவுள் உள்ளம் இரங்கினர். ஆதிசேடனைப் பார்த்து, "அன்பனே ! ஆயிரம் பிளவாகப் பிளந்திருக்கின்ற உன்னுடைய தலையானது அவ்வாறே ஆயிரம் தலைகளாகி விளங்கக் கடவது. நீ அவ்வாயிரந் தலைகளோடும் முன்போலவே நிலத்தைத் தாங்கியிருக்கக் கடவை. அல்லாமலும் ஐந்து தலைகளோடு சிவபெருமானுடைய சடைமுடியில் அமர்ந்திருக்கக் கடவாய். இப்போதிருக்கின்ற இவ்வடிவத்தோடு நமக்கு உதரபந்தனமாகவும் விளங்கக் கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினர். அண்டகோடிகளையெல்லாந் தாண்டி அப்பாற்சென்று விளங்கத் தக்க பேருருவமாகிய விசுவ ரூபத்தை எடுத்தார். ஆதிசேடனை எடுத்து வயிற்றிலே சுற்றிக் கொண்டார். உடனே தேவர்களனைவரும் மலர்மாரி பெய்தார்கள். ஆதிசேடன் அந்தப் பிரவாள நகரத்தில் மறைமுறைப்படி ஒரு திருக்கோயிலை அமைத்தான். அதனில் ஆனைமுகக் கடவுளை நிலைபெறுத்தி வழிபாடு செய்தான். தன்னுடைய முன்னைய நிலையை அடைந்து இன்புற்றுன்.

## 46. இந்திரவிமானம் மண்ணிழிந்தது

### சூரசேனன் என்னும் அரசன்

அழகிய சோலைகள் சூழ்ந்த மத்திய நாட்டில் சகத்திரபுரி என்னும் பட்டணத்தில் அரசன் ஒருவன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான் அவனுடைய பெயர் சூரசேனன். அவன் தன்னுடைய மனைவியாகிய புண்ணிய சீலை என்பவளோடு இன்ப வாழ்க்கையை இனிது நடத்திக் கொண்டிருந்தான். அவ்வரசன் ஒருநாள் அமைச்சர், வேள்வியாசான், படைத்தலைவர், ஒற்றர், சாரணர், உறுதிச் சுற்றத்தினர் ஆகியோர் புடைசூழ அரியணையில் அமர்ந்திருந்தான். அப்போது ஒரு விமானமானது தான் செல்லுங் கதிதவறி நிலத்தில் வந்து இறங்கியது.

**தேவேந்திரனைக் காண்டல்**

விமானம் இறங்கிய ஒலியைக்கேட்ட அரசன் தன்னுடைய ஒற்றர்களைப் பார்த்து, ''ஏதோ ஒரு தெய்வ விமானம் நிலத்தில் இறங்கியது. நீங்கள் விரைவாகவோடி அது வந்த வரலாற்றைத் தெரிந்துகொண்டு வரக் கடவீர்கள்'' என்று கட்டளையிட்டான். தானும் மிகு விரைவாகத் தன்னுடைய ஆட்டக் குதிரையின்மீது ஏறிக்கொண்டு புறப்பட்டான். சிறிது தொலைவில் விமானம் இறங்கியிருத்தலைக் கண்டான். அதன் அண்மையில் சென்று பார்த்தபோது அதனில் தேவேந்திரன் அமர்ந்திருந்தான். தேவேந்திரனைக் கண்ட சூரசேனன் மிகுந்த களிப்படைந்தான். அவனைப் பார்த்து, ''ஓ தேவலோக மன்னு! வேள்வியினுலும் வீரத்தினுலும் தவத்தினுலும் தானத்தினுலும் வாள் வித்தை முதலிய திறங்களினுலும் நிகரெவருமில்லாத தேவரீரை அடியேன் முன்பிறப்பிற் செய்த நல்வினையினுற் கண்டேன். அடியேன் பெறத்தக்க பயனை அடைந்தேன். தேவரீர் விண்ணுலகத்தை நீங்கி இம் மண்ணுலகத்தை யடைந்த செய்தியைத் திருவாய் மலர்ந்தருளவேண்டு''மென்று வேண்டிக்கொண்டான். விண்ணுலக மன்னன் மண்ணுலக மன்னனைப்பார்த்து, ''ஓ நிலவுலக அரசனே! நான் தேவர்களனைவரும் புடைசூழ அரியணையிலமர்ந்து அரசாட்சி செய்து கொண்டிருக்குஞ் சமயத்தில் நாரத முனிவர் அங்கு வந்தார். ''நிலவுலகத்தில் ஒருவர் ஆனைமுகக் கடவுளுடைய அருளைப் பெற்றுத் தெய்வத் தன்மை யடைந்து, அந்தவுடலில் தானே ஆனைமுகக் கடவுளுடைய வடிவத்தைப் பெற்று எல்லோரும் வணங்குமாறு வீற்றிருக்கின்றுர். அவருடைய பெயரைப் புருசுண்டி என்று புகலுவார்கள். அவரை யாமுங் கண்டு வந்தோம்'' என்று சொன்னுர். அதனைக்கேட்ட அளவில் அப் பெரியாரைக் காணவேண்டும் என்னும் அவாவானது எனக்குண்டாகியது. விண்ணுலகத்தைவிட்டுப் புறப்பட்டு மண்ணுலகத்திற்கு வந்தேன். அவர் எழுந்தருளியிருக்கின்ற இடத்திற்குப்போய் அவருடைய அடிகளை வணங்கிப் போற்றினேன். பிறகு அவரிடம் விடைபெற்றுக் கொண்டு

விண்ணுலகத்தை யடையப் புறப்பட்டேன். இவ்விடத்திற்கு நேராக வரும்போது இந்நகரத்தில் தொழுநோய் கொண்ட பெருந் தீவினையாளனாகிய ஒரு வைசியன் மகனுடைய பார்வையால் இவ் விமானம் தனது கதி தப்பி நிலத்தில் இறங்கிவிட்டது. இந் நகரத்தில் ஒருவன் சங்கட சதுர்த்தி நோன்பைக் கடைபிடித்திருக்கின்றான். அவனாலே இவ் விமானம் மண்ணை விட்டெழுந்து விண்ணிற் செல்லும்'' என்று கூறினான். இவைகளையெல்லாஞ் சூரசேன மன்னன் கேட்டுத், "தேவர் கோமானாகிய தாங்களுஞ் சென்று பணியத் தக்க தனிச் சிறப்பு வாய்ந்த அப் புருசுண்டி என்பவர் எக்குலத்தைச் சேர்ந்தவர்? அவர் செய்த தவங்கள் யாவை? அவைகளை எனக்குக் கூறியருள வேண்டு''மென்று வேண்டிக் கொண்டான்.

புருசுண்டி வரலாறு

தேவர் கோமான் சூரசேன மன்னனைப் பார்த்து, "ஓ அரசனே! தண்டகவனத்திலே திருமகளின் திருவருள் பொருந்திய சிறப்பினையுடைய பழமையான நகரம் ஒன்று இருக்கிறது. அந்நகரத்திற்கு நந்துரம் என்று பெயர். அந் நகரத்திற்கு அண்மையில் வேடச்சேரி ஒன்று இருக்கிறது. அச் சேரியில் ஆலகால நஞ்சுக்கு ஒப்பான கொடுஞ் செயல் களையுடைய விப்பிரதன் என்னும் பெயருடைய வேடன் ஒருவன் இருந்தான். அவ் வேடன் வழிப்பறி செய்வதில் மிகவுங் கெட்டிக்காரன். வழிப் போக்கர்கள் ஒருவரையுந் தவறவிடாமல் அவர்களுடைய பொருளைப் பறித்துவிடுவான். விப்பிரதன் இவ்வாறு வழிப்பறி செய்து கொண்டிருக்கிற காலத்தில் இவன் தங்கியிருக்கும் வழியாக அந்தணன் ஒருவன் வந்தான். அந்தணனைக் கண்ட வேடன் இன்று நமக்கு நல்ல பொருள் கிடைக்கும் என்று மனங்களித்தான். மிகுவிரைவாகச் செல்லும் அந்தணனைத் தானும் மிகுவிரை வாகப் பின்பற்றினான். வேடனைக் கண்ட அந்தணன் இன்று நமக்கு இறுதிக்காலம் நேர்ந்தது என்று அஞ்சினான்; அவ்வச்சத்தினால் மிகுவிரைவாக ஓடினான். வேடனால் அந்

தணைப் பிடிக்க முடியவில்லை. ஆகவே மனவருத்தத்தோடு திரும்பினான். அப்பொழுது அக் காட்டில் ஆனைமுகக் கடவுளுடைய திருக்கோயிலும் புனித நீரும் எதிரே தோன்றக் கண்டான். அங்குப் போய்த் தான் இளைப்பாறும்படி புனித நீரில் நீராடினான். நீர் வேட்கை தணியுமாறு தண்ணீர் குடித்தான். ஒரு மரத்தின் நிழலில் தங்கியிருந்தான். மனக் குறையோடு வேடன் தங்கியிருக்கையில் தவத்திற் சிறந்தவ ராகிய முற்கல முனிவர் அவ்வழியே சென்றார். அவரைக் கண்டவுடனே வேடன் விரைந்தெழுந்தான். வாளை யுருவிக் கொண்டு ஓடினான். முற்கல முனிவர் நின்று தம்முடைய விழிகளினால் அவனை உற்றுப் பார்த்தார். முனிவருடைய பார்வையின் பெருமையால் அவ் வேடனுடைய வாளும் அவ னுடைய அறியாமையும் அவனுடைய தீவினைகளும் அவனை விட்டு நீங்கின. அவனுக்கு மெய்யறிவு தோன்றியது.

வேடன் முற்கல முனிவரைப் பணிந்தான். "பெரியீர்! இப்புனித நீரில் நீராடிய சிறப்பாலும் தேவரீருடைய காட்சிப் பெருமையாலும் அடியேன் செய்த தீவினைகள் யாவும் பறந்து போயின. நற்கதி யடையவேண்டும் என்னும் நல்லறிவு அடியேனுக்கு உண்டாகியது. பெரியோர்கள் தீயோர்களை விரும்புவதில்லையாயினும் அப்பெரியோருடைய அருட்பார்வை யால் தீயோர்கள் நன்மையடையாமற் போவதில்லை. அடிகள் அடியேன்மீது அருள்வைத்து எவ்வகையிலேனும் எளியேனைக் காப்பாற்றியருளுதல் வேண்டும். அடியேனுக்கு இவ்வுலக வாழ்வில் எத்தகைய பற்றுக்கோடுமில்லை" என்று கூறினான். முனிவருடைய அடிகளிற் பன்முறை பணிந்தான். இரண்டு கைகளாலும் அவருடைய இரண்டு திருவடிகளையும் உடும்புபோற் பற்றிக்கொண்டான். தீயோர்கள் அடைக்கலம் புகுவார்களாயின் அவர்களைக் கைவிடுவது அறமல்லவாகை யால் இவனுக்கு எவ்வகையிலேனும் அருள் செய்ய வேண்டு மென்று முனிவர் எண்ணினார். அவன் வேடனாகையால் முறைப்படி அருளுரை வழங்கக் கூடாது என்று முடிவு செய் தார். ஆனைமுகக் கடவுளுடைய திருமறையை மட்டும் உரைக்கலாம் என்று முடிவு செய்தார். விரைவாக நீராடி

வருமாறு கட்டளையிட்டார். வேடனும் அவ்வாறே நீராடி வந்தான்.

அருளுரை

முற்கல முனிவர் அவ்வேடனுடைய முடிமீதும் தம்முடைய திருக்கையை வைத்தார். ஓம் கணேசாய நம: என்னும் மறையை அவனுடைய காதிலே உரைத்தார். அவனுக்கு முன்னால் உலர்ந்த தடியொன்றை நட்டார். அவனைப் பார்த்து, "அன்பனே! இத் தடிக்கு நாள்தோறும் காலந் தவறாமல் நீர் ஊற்றிக்கொண்டு வருதல்வேண்டும். அது தளிர்க்கின்ற வரையில் அதன் பக்கத்தில்தானே அமர்ந்து ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை மனத்தில் எண்ணி நான் கூறிய மறையை உருவேற்றி வருவாயானால் உனக்கு எல்லாவகையான சித்திகளுங் கைகூடும். நாமும் சில காலம் பொறுத்து இங்கு வருவோம்'' என்று கூறிவிட்டுத் தம்முடைய இருப்பிடத்திற்கு எழுந்தருளினர்.

வேடன் தவம்

வேடன் அளவற்ற மகிழ்ச்சி யடைந்தான். முற்கல முனிவர் மொழிந்தவாறு அத் தடிக்கு முக்காலமும் நீர் ஊற்றினன். அதன் அண்மையில் அமர்ந்து அருமறையை உருவேற்றிக் கொண்டிருந்தான். ஆயிரம் ஆண்டுகள் வரையில் இடைவிடாது உருவேற்றினன். அத்தண்டானது தளிர்த்துப் பூத்தது. அச் சமயத்தில் முற்கல முனிவர் அங்கு எழுந் தருளினர். விப்பிரதனுடைய மனவுறுதியைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார். முற்றத் துறந்த முனிவர்கட்கும் இத்தகைய உறுதிவருவது அருமையென்று எண்ணினர். கமண்டல நீரை விப்பிரதன்மீது தெளித்தார். அவனுடைய தீவினைகளெல்லாம் நீங்கின. முற்கல முனிவர் தெளித்த புனித நீரின் பெருமையால் அவனுடைய புருவ நடுவில் துதிக்கை யுண்டாகியது. அதனால் அவ்வேடன் ஆனைமுகக் கடவுளுடைய உருவத்தை யடைந்தான். பிறகு முனிவர்

அவனைத் தழுவிக்கொண்டு அவனுக்கு ஓரெழுத்து மறையை உரைத்தருளினுர். அவனைப் பார்த்து, "நீ இப்பொழுது அடைந்திருக்கிற வடிவத்தோடு ஒரு கற்ப காலம் வரையில் வாழக்கடவாய். நீ வளர்த்த மரமானது கற்பக மரமாகக் கடவது" என்று அருள் செய்தார். அம்மரம் அவ்வளவில் கற்பக மரமாகி ஒவ்வொருவரும் விரும்பியதை வழங்கியது. விப்பிரதன் தன்னுடைய புருவ நடுவில் தண்டந் தாங்கி யிருக்குந் தன்மையினுல் எல்லோராலும் புருசுண்டி என்று அழைக்கப்பெற்றுன். புருசுண்டி மேலும் ஆயிரம் ஆண்டுகள் வரை ஆனைமுகக் கடவுளுடைய அருமறையை உருவேற் றினுன். ஆனைமுகக் கடவுள் அவனுக்குக் காட்சி தந்தருளினுர். ஆனைமுகக் கடவுளைக் காணப்பெற்ற புருசுண்டி அவரைப் பலவாறு போற்றிமுன். தனக்குத் திருவடிப் பேற்றைத் தந்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அவன் வீடுபேற்றினை யடையத் தக்கவாறு அவனுக்கு அருளுரை வழங்கித் தம்முடைய இருப்பிடத்திற்குச் சென்றுர். இத் தன்மையினுல் இப்பொழுது அப் புருசுண்டி சீவன் முத்தராக இருக்கின்றுர்" என்று கூறினுன்.

சூரசேனன் தேவேந்திரனை மீளவும் பணிந்து, "இப்பொழுது இந் நகரத்தில் சங்கட சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடிக்கும் ஒருவனுல் இவ்விமானம் மீண்டும் விண்ணி லெழுந்து செல்லுமென்று கூறியபடியினுல் அந் நோன்பின் சிறப்பினையும் அடியேற்கு உரைத்தருள வேண்டு"மென்று வேண்டிக்கொண்டான். அதனைக்கேட்ட தேவேந்திரன் கூறலானுன்.

## 47. புருசுண்டி நோன்பு

### நாரதர் நமனுலகு செல்லல்

நாரத முனிவர் எமலோகத்தின் சிறப்பைக் காண எண்ணினுர். புறப்பட்டு அங்குச் சென்றுர். எமதருமன்

நாரதரை எதிர்கொண்டு போற்றினன். செய்யவேண்டிய வழிபாடுகளையெல்லாஞ் செய்தான். "தேவரீர் இங்கெழுந் தருளக் காரணம் யாது?" என்று உசாவினன். நாரதர் நமனைப் பார்த்து, "உன்னுடைய உலகத்தின் சிறப்பைக் காண்பதற்கு இங்கடைந்தோம்" என்று கூறினர். எமன் நாரதரை அழைத்துக்கொண்டு போய்ப் பல புதுமைகளைக் காட்டினன். பிறகு நிரயத்திற்கு அழைத்துக்கொண்டு போய் அங்குப் பலபேர் நிரயத்துன்பம் நுகர்ந்துகொண் டிருத்தலையுங் காட்டினன்.

புருசுண்டியின் உறவினர்

எல்லாவற்றையும் நாரத முனிவர் பார்த்துக்கொண்டு செல்லும்போது கும்பிபாகம் என்னும் நிரயத்தில் தேவர் களும் புகழ்ந்து வணங்கத் தக்க தவச்சிறப்பினையுடைய புருசுண்டி முனிவருடைய உறவினர்கள் கிடந்து வருந்து தலைப் பார்த்தார். சிவபெருமானுடைய திருவடிகளை மனத்தில் எண்ணிக்கொண்டு அங்கிருந்து மீண்டார். மிகுந்த அருளோடு புருசுண்டியிடத்திற்கு வந்து அவருடைய உறவினர்கள் நிரயத்தில் கிடந்து வருந்துதலைத் தெரியப் படுத்தினர். அவர்களையெல்லாம் நிரயத்திலிருந்து கரை யேற்றுவதற்கு ஆவன புரிய வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்.

**நோன்புப் பலனைத் தத்தம் செய்தல்**

புருசுண்டி முனிவர், நம்முடைய சுற்றத்தினர் நிரயத்தில் கிடந்து வருந்துதலை அறியாமற்போனேமே என்று உள்ளம் வருந்தினர். இனிமேல் இதற்கு யாது செய்யலாம் என்று எண்ணமிட்டார். பிறகு ஒரு முடிவுக்கு வந்தார். ஆனைமுகக் கடவுளுடைய சங்கட சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடித்து அதனை மேற்கொண்டார். அந்நோன்பினல் உண்டாகிய பலனை ஆனைமுகக் கடவுளுடைய திருக்கைகளில் தத்தஞ் செய்தார். இவ்வாறு தத்தஞ் செய்தவுடன் நிரயத்தில்

கிடந்து வருந்தியவர்கள் எல்லோரும் விமானங்களிலேறித் தேவலோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

## 48. கிருத வீரியன் தவம்

### கிருதவீரியன்

மேலுந் தேவேந்திரன் சூரசேனனைப் பார்த்துச் சொல்லலானான்: "ஓஅரசனே! சைய மலைச்சாரலில் எல்லாவகையான வளங்களும் நிறைந்த ஒரு பட்டணத்திலே அரசன் ஒருவன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவனுடைய பெயர் கிருதவீரியன். கிருத வீரியனுடைய மனைவியின் பெயர் சுகந்தை. இவர்கள் மிகுந்த சிறப்போடுவாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தும் மக்கட்பே றுண்டாகவில்லை. அதனால் மன வருத்தமடைந்த அரசனும் அவனுடைய மனைவியுங் காட்டிற்குச் சென்று காற்றையுஞ் சருகையும் புசித்து உடல் வருந்துமாறு தவஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

### பிதிர்கட்குச் செய்தியறிவித்தல்

கிருதவீரியனும் அவனுடைய மனைவியுந் தவஞ் செய்தலை நாரத முனிவர் உணர்ந்தார். பிதிருலகத்திற்குப் போய்க் கிருத வீரியனுடைய தந்தையைக் கண்டு, ''ஓ பிதிர்த் தேவனே! அறநெறியோடு அரசாட்சி செய்துவருகிற உன்னுடைய மகனுக்கு மக்கட் பேறுண்டாக வில்லையால் காட்டை யடைந்து தவஞ்செய்து கொண்டிருக்கிறான். அவன் மனைவியும் உடனிருந்து தவஞ்செய்து கொண்டிருக்கிறாள். இனிமேல் அவர்கட்கு மக்கட்பேறுண்டானாலன்றி அவர்கள் உயிர் வைத்திருக்கமாட்டார்கள். பிறகு உன்னுடைய வழிமுறையும் அழிந்துபோகும். ஆகவே உன்னுடைய மகனுக்கு மக்கட் பேறுண்டாகத் தக்க முயற்சியைச் செய்வாயாக,'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

## நான்முகனும் பிதிர்தேவனும்

நாரதர் நவின்ற மொழிகளைக் கேட்ட பிதிர் தேவன் உள்ளங் கலங்கினன். அப்போதே சத்திய லோகத்திற்குப் போய் நான்முகனைக் கண்டு வணங்கினன். "என்னுடைய மகனுக்கு மக்கட் பேறில்லாமற் போகக் காரணம் யாது?" என்று கேட்டான். நான்முகன் பிதிர்தேவனைப் பார்த்து, "ஓ பிதிர் தேவனே உன் மகனாகிய கிருதவீரியன் முற்பிறவியில் இப்போது வாழ்ந்திருக்கின்ற ஊரில் அரசர் வழிமுறையிற் பிறந்து சாம்பன் என்னும் பெயரைத் தாங்கிக் கணேசன் என்னும் பெயருடைய மகனைப் பெற்று வாழ்ந்திருந்தான். அவன் மிக வறிய நிலையில் துன்புற்றுக் காலங் கழித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் உணவுக்கு யாதும் அகப்படாமையினால் பசி நோயால் மிகுதியாக வருந்தினன். பசியின் கொடுமையைப் பொறுக்க முடியாமல் வழிப்பறித் துண்ண எண்ணினன். காட்டிலே புகுந்து கொள்ளையடிக்கத் தொடங்கினன். பன்னிரண்டு அந்தணர்கள் வழிச் செல்வதைப் பார்த்தான். அவர்கட்கு எதிரில் நமனுக்கு ஒப்பாகச் சென்றான். இரும்புத் தடிகொண்டு அவர்களை அடித்துக் கொன்றான். அவர்கள் உடல்களை இழுத்துக் கொண்டுபோய்க் குகைகளிற் போட்டுவிட்டு அவர்களுடைய பொருள்களைக் கைப்பற்றினன். பிறகு வீட்டிற்குச் சென்றான். தாளிட்டிருந்த கதவைப் பன்முறை தட்டினன். தன்னுடைய மகனை, "கணேசா! கணேசா! கணேசா!" என்று மூன்று தரங் கூவியழைத்தான். அவனுடைய மகனாகிய கணேசன் அன்று முழுவதும் உணவு அகப்படாமல் பட்டினி கிடந்த படியினால் தளர்ச்சியடைந்து இறந்துபோய்க்கிடந்த படியினால் கதவு திறப்பார் எவருமிலராயினர். ஆகவே சாம்பன் சுவரேறிக் குதித்து உள்ளே சென்றான். தன்னுடைய மகன் இறந்து கிடப்பதைப் பார்த்து மிகுந்த துன்பங்கொண்டான். தனக்கிருந்த பசியின் கொடுமையினாலும், மகன் இறந்தான் என்னுந் துன்பத்தினாலும், பார்ப்பனக் கொலையின் தீவினை சூழ்ந்து கொண்டபடியினாலும் அன்றிரவெல்லாம் தூங்காதிருந்தபடியினாலும் மறுநாட் காலையிற் சாம்பனும் இறந்

தொழிந்தான். அந்நாள் சங்கட சதுர்த்தியாக இருந்தது. அதற்கு முதல்நாள் மகனுகிய கணேசன் உணவு முதலியன இல்லாமலிருந்தபடியினுல் அவன் இறந்தவுடனே தெய்வ விமானம் வந்தது. அவன் அதில் ஏறிக்கொண்டு ஆனைமுகக் கடவுளுடைய உலகத்திற்குப் போய்ச் சேர்ந்தான். சாம்பனே அந்நாளில் தன்னுடைய மகனைக் கணேசா என்று மூன்றுதரம் அழைத்த நன்மையினுல் இப்பிறப்பில் உனக்குப் புதல்வனுகத் தோன்றிக் காமனுங் கண்டு நாணத்தக்க கட்டழகினையுடைய வனுய் உலகமெல்லாம் வணங்கத்தக்க அரசுரிமையை அடைந் தனன். ஆயினும் பார்ப்பனரைக் கொன்ற தீவினையினுல் இதுவரையினும் மக்கட் பேற்றை அடையாதவனுனுன். ஆகவே, உன்னுடைய மகனுகிய கிருதவீரியனுக்கு மக்கட்பேறு உண்டாக வேண்டுமென்னுங் கருத்திருக்குமானுல் மேற்கூறிய கொலைத் தீவினையின் எச்சம் ஒழியுமாறு ஆனைமுகக் கடவுளுடைய சங்கட சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடித்தல் வேண்டும். அந் நோன்பைக் கடைப் பிடிக்கவேண்டிய முறைமையை மொழிகிருேம் கேட்பாயாக'' என்று கூறலானுன்.

### சங்கட சதுர்த்தி நோன்பு

மாசித் திங்களில் அமரபட்சத்தில் செவ்வாய்க்கிழமை கூடிய சதுர்த்தியில் அந்நோன்பினைத் தொடங்கவேண்டும். அன்று கதிரவன் தோன்றுகின்ற சமயத்தில் எழுந்து நீராடல் முதலிய நாட்கடன்களை முடித்துக்கொண்டு திருவெண்ணீ றணிந்து சிவகண்மணி பூண்டு தூய்மையான இடத்தி லிருந்து ஆனைமுகக்கடவுளுடைய திருவடிகளை உள்ளத்தி லிருத்தி, ஓரெழுத்து மறை, ஆறெழுத்து மறை, திருப்பெயர் மறை என்னும் இம்மூன்றினையும் எண்ணி உணவு முதலியவற்றை வெறுத்துத் திங்கள் தோன்றியவுடனே ஆனைமுகக் கடவுளை எழுந்தருளச் செய்து வழிபாடு செய்தல் வேண்டும். பிறகு திங்களுக்கும் வழிபாடு நடத்தி மறைய வர்களை அழைத்து அவர்கட்கு அறுசுவையோடு உணவிடுதல் வேண்டும். இரவு முழுவதும் உறக்கமில்லாமல் ஆனைமுகக்

கடவுளுடைய பெருமையைக் கேட்டுக்கொண்டிருத்தல் வேண்டும். இந் நோன்பைச் சதுர்த்தி தோறும் ஓராண்டு வரையில் செய்கின்றவர்கட்கு மகப்பேறு முதலிய செல்வங்கள் உண்டாகும். மேலும் அந்நாளில் வன்னி மரத்தடியில் இருந்து அந்நோன்பைச் செய்வார்களாயின் கூன் குருடு முதலிய எச்சங்களொழித்து எல்லாப் பொருள்களேயும் வேண்டிய மட்டும் பெறுவார்கள். ஆகவே இந்நோன்பினை நீ மேற்கொள்வாயாக என்று பிதிர்தேவனுக்கு நான்முகன் கூறினன். இதனைக்கேட்டுப் பிதிர்தேவன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். நான்முகனை வணங்கி ஆனைமுகக் கடவுளுக்குச் செவ்வாய்க் கிழமையில் வருகிற சதுர்த்தி முதன்மையாக இருக்கக் காரணம் யாது என்று கேட்டான். அதற்கு நான்முகன் கூறலானன்.

## 49. அங்காரகன் வழிபாடு

### பரத்துவாசர்

முன்னாளில் நருமதை யாற்றங்கரையில் ஆனைமுகக் கடவுளுக்கு அன்பராகிய பரத்துவாசமுனிவர் என்னும் பெயருடைய ஒரு முனிவர் இருந்தார். அவர் ஒருநாள் நருமதையாற்றுக்கு நீராடச் சென்றார். அப்போது அழகிய மங்கையொருத்தி அவ்வாற்றுக் கரையிலே நின்றுகொண்டிருந்தாள். அப்பெண்ணைக் கண்ட பரத்துவாசர் காம மயக்கம் கொண்டு உள்ளங் கலங்கினர். அச்சமயத்தில் அவருடைய வீரியம் வெளிப்பட்டு நிலத்தில் வீழ்ந்தது. முனிவர் வருத்தமடைந்து அவ்விடம் விட்டுச் சென்றார். ஒருவாறு உள்ளந்தேறித் தவஞ் செய்துகொண்டிருந்தார்.

### பூமகன், அங்காரகன்

நிலத்தில் விழுந்த வீரியமானது விழுந்தவிடத்தில் தானே ஓர் இளமகவாகியிருந்தது. அதனை நிலமகள்

எடுத்து நமக்கு நற்பேறு கிடைத்தது என்று அன்போடு வளர்த்தாள். அக்குழந்தையானது செவ்வானம் போலச் சிவந்து அழல்போல ஒளி செய்திருந்த படியினுல் அங்காரகன் என்றும் வீரியமாய் நிலத்தில் விழுந்த பிள்ளையாதலால் பூமகன் என்றும் பெயர்பெற்றுன். பூமகன் ஒருநாள் தன் தாயாகிய நிலமகளைப் பார்த்து, ''என்னுடைய தந்தை யார்?'' என்று உசாவினுன். நிலமகள், ''உன்னுடைய தந்தை பரத்துவாச முனிவர்,'' என்று கூறினுள். பிள்ளையை அழைத்துக்கொண்டு முனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்ருள். முனிவரை வணங்கி. ''அடிகாள்! இச்சிறுவன் தேவரீருடைய வீரியத்திலிருந்து பிறந்தவன். இனிமேல் தேவரீரே இவனை வளர்த்தல் வேண்டும்,'' என்று கூறி முனிவரிடம் விட்டுச் சென்றனள்.

பரத்துவாசர் மகனை வளர்த்தல்

பரத்துவாசர் தம்முடைய மகனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாஞ் செய்தார். கல்வியையும் நன்கு கற்பித்தார். பிறகு ஆனைமுகக் கடவுளுடைய திருமறையை உரைத்து உருவேற்றித் தவஞ்செய்து கொண்டிருக்குமாறு கட்டளையிட்டார். அங்காரகன் வேருேர் இடத்திற்குச் சென்று ஆனைமுகக் கடவுளையெண்ணி ஆயிரம் ஆண்டுகள் தவஞ்செய்து கொண்டிருந்தான். ஆனைமுகக் கடவுள் அங்காரகனுடைய அருந்தவத்திற்கு இரங்கினுர். அங்காரகன் முன்பு தோன்றிக் காட்சி கொடுத்தார். அங்காரகன் விரைந் தெழுந்து ஆனைமுகக் கடவுளைப் பணிந்தான். இன்பக் கூத்தாடிப் பலவாறு போற்றினுன். ஆனைமுகக் கடவுள் அங்காரகனைப் பார்த்து, ''நாம் உன்னுடைய தவத்திற்கு வியப் படைந்தோம்; உனக்கு வேண்டிய மேன்மைகளைக் கேட்பா யாக'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். அங்காரகன் ஆனைமுகக் கடவுளைப் பார்த்துச், ''சுவாமி! தேவரீருடைய திருவடிகளில் இடைவிடாத அன்பும் தேவர்களோடு கூடி அமுதுண்ணத்தக்க உறவும் கோள்களோடு ஒன்ருக வதியும் பேறும் அடியேனுக்குக் கொடுத்தருளுதல் வேண்டும். தேவரீருடைய காட்சி கிடைக்கப்பெற்ற இந்நாள் சதுர்த்தி

யாதலால் இந்தச் சதுர்த்தி நாளில் எனது கிழமையாகிய அங்கார வாரஞ் சேர்ந்து வருகின்றபோது தேவரீரைப் போற்றுகின்ற பேர்கட்குத் தீவினைகளை ஒழித்தருள வேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே வரங்கொடுத்து மறைந்தருளினர்.

சங்கட சதுர்த்தி

பிறகு அங்காரகன் அவ்விடத்தில் ஒரு கோயிலைக்கட்டி அதில் தனக்குக் காட்சி கொடுத்த ஆனைமுகக் கடவுளின் வடிவத்தை அமைத்துப் பூசை செய்தான். இவ்வாறு சில காலம் பூசித்துக்கொண்டிருக்கையில் ஆனைமுகக் கடவுளுடைய பேரருளால் ஒரு தெய்வவிமானம் வந்தது. அதில் அங்காரகன் ஏறிக்கொண்டு தேவலோகம் போய்ச் சேர்ந்தான். தேவர்களோடு கூடி அமுதுண்டு களித்தான். ஒன்பது கோள்களில் ஒரு கோளானுன். ஆகையால் அவ்வங்காரகனுடைய நாளில் வருகிற சதுர்த்தியானது மற்றைய சதுர்த்திகளைவிட ஆனைமுகக் கடவுளுக்கு மிகுந்த களிப்பையளிப்பதாக இருப்பதன்றிக் கடைப்பிடிப்பவர்கட்கு எல்லா சங்கடங்களையும் போக்கத்தக்கதாகவும் இருக்கின் றமையால் அது சங்கட சதுர்த்தி என்று பெயர் பெற்றது. அங்காரகனுல் அமைக்கப்பட்ட ஆனைமுகக் கடவுளானவர் நினைத்த வரங்களைக் கொடுக்கின்றபடியால் எல்லாத் தேவர் களும் அவரை வழிபட்டுச் சிந்தாமணி விநாயகர் என்று பெய ரிட்டார்கள். அங்காரகன் அம்மூர்த்தியை அவந்திமா நகரத்திற்கு மேற்குப் புறத்தில் அமைத்துப் பூசித்தபடியால் அவ்விடத்திற்குக் காமதம் என்று வேருெரு பெயரும் வழங்குகின்றது.

## 50. திங்கள் வழிபட்டது

திங்கள் வசவுரை பெறுதல்

மேலுந் தேவேந்திரன் சூரசேன மன்னனைப் பார்த்துச் சொல்லுகிருன். முன்பு கிருதவீரியனுடைய பிதிர்தேவன்

நான்முகனைப் பணிந்து, "பெரியீர்! மேற்கூறிய அங்காரக சதுர்த்தியைத் திங்கள் தோன்றுங் காலத்தில் வழிபடச் சொன்ன வரலாற்றையும் திருவாய்மலர்ந்தருள வேண்டு" மென்று விண்ணப்பஞ் செய்தான். அதனைக்கேட்ட நான் முகன் சொல்லுகிருன். "ஓ பிதிர்தேவனே! முன்னொரு காலத்தில் தேவர்கள் தலைவனுகிய சிவபெருமானைப் போற்றி வழிபடுமாறு நான் திருக்கைலையை அடைந்தேன். அப்பொழுது சிவபிரான் ஆனைமுகப் பெருமானேடும் ஆறுமுகப் பெருமானேடும் அரசிருக்கை மண்டபத்தில் அமர்ந்திருந்தார். அப்பொழுது நாரதமுனிவர் அங்கு வந்தார். அவர் ஒரு மாங்கனியை இறைவன் திருமுன்பு வைத்துத் திருவடிகளில் எண்வகை உறுப்புக்களுந் தோயுமாறு பணிந்தெழுந்தார். பிறகு யாழினை மீட்டித் தேனுண்டு பெய்யும் முகிலைப்போல் இசையமுதத்தைப் பொழிந்தார். சிவபெருமான் நாரதருக்குத் திருவருள் செய்தார். பிறகு அவர் கொணர்ந்த கனியைத் திருக்கையிலெடுத்து என்னுடைய முகத்தைப் பார்த்து, "நான்முகனே! நம்முடைய இருபக்கங்களினும் ஆனைமுகனும் ஆறுமுகனும் அமர்ந்திருக்கின்றனர். இவர்கள் இருவரில் இக்கனியை எவருக்குக் கொடுக்கலாம்? அதனை நீ கூறுவாயாக" என்று சொன்னுர்.

நான் சிவபெருமானைப் பார்த்து, "கடம்ப மாலையை அணிந்த ஆறுமுகப் பெருமான் இளைஞராக இருக்கின்றமையின் இக்கனியை அவருக்குக் கொடுத்தலே தக்கது" என்று கூறினேன். சிவபெருமான் யான் கூறியதை யேற்று மாங்கனியை ஆறுமுகப் பெருமானுக்கே அளித்தருளினுர். இதனைக் கண்ட ஆனைமுகக் கடவுளுக்கு மிகுந்த சினம் உண்டாகிவிட்டது. உடனே கண்களில் தீப்பொறி பறக்குமாறு என்னை நோக்கினுர். சிவபெருமான் என்னுடைய தலையைக் கொய்த காலத்தினும் பார்க்க மிகுந்த அச்சத்தை யடைந்தேன். என்னுடனிருந்த கூட்டத்தோடு அப்பெருமானுக்கு அண்மையிற் சென்று திருவடிகளில் விழுந்து பலமுறை வணங்கிச், "சுவாமி! அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டேன்.

ஆனைமுகக் கடவுள் மனமிரங்கித் திருவருள் செய்தருளினர். அச்சமயத்தில் திங்கள் தன்னுடைய ஊழ்வலியால் உள்ளத்தின்கண் இகழ்ச்சி தோன்றச் சிறிது பல்லைக்காட்டி நகைத்தனன். திங்கள் இகழ்ச்சி நகை நகைத்ததை ஆனைமுகக் கடவுள் பார்த்து மிகுந்த சினங்கொண்டார். "நீ இப்பொழுது என்னைப் பார்த்துச் சிறிதேனும் அச்சமில்லாமல் நகைத்த படியினல் நீ உலகில் ஒளியின்றி மறைந்து போகக் கடவாய். உன்னுடைய உருவத்தைப் பார்த்தவர்களும் துன்பமடையக் கடவர்" என்று வசவுரை வழங்கினர். இவ்வசவுரையைப் பெற்றவுடனே திங்கள் விண்வழியாகத் திரிதலற்றுத் தன்னுடைய ஒளியுங் குன்றி மிகுந்த வருத்தத்தோடு தன்னுடைய இருப்பிடத்தில்தானே இருந்துவிட்டான். ஏளனமான நகையை எவரிடத்திற் செய்தாலும் பிறகு துன்பம் வருமென்பது உறுதி.

எள்ளலில் நகையெவர் இடத்துச் செய்யினும்
தொள்ளையி னுமது துன்பஞ் செய்வதே
ஒள்ளியர் முன்புரிந் துய்கு வாரெவர்
தெள்ளிய திங்களுந் தீது முத்தலால்.

### தேவர்கள் வேண்டுகோள்

திங்கள் ஒளி மழுங்கி மறைந்து போனமையால் தேவர்கட்கு அமுதபானங் கிடைக்காமற் போய்விட்டது. அவர்கள் தேவர் தலைவனகிய இந்திரனிடத்திற்கு சென்று முறையிட்டுக் கொண்டனர். இந்திரன் மிகுந்த துன்பமடைந்தான். இத்தொல்லையை ஆனைமுகக் கடவுளால்தான் போக்க முடியுமென்று உறுதிசெய்தான். தேவர்களையும் அழைத்துக் கொண்டு ஆனைமுகக் கடவுள் திருமுன் சென்றுன். அவருடைய அடிகளைத் தொழுது போற்றினன். "எளியவர்கட்கு அடைக்கலமாகவுள்ள பெருமானே! விண்ணுலகத்தார்கட்கு அமுதளித்தலும் மண்ணுலகத்தார்கட்கு உணவளித்தலும் திங்களுக்குரிய செய்கை யாகுமென்று ஏற்படுத்தியது தேவரீருடைய திருவருளே யன்றி வேறன்று. திங்கள்

இப்பொழுது இல்லாதபடியினுல் விண்ணுலகமும் மண்ணுலகமும் துன்பத்தையடைந்துள்ளன. சிறியோர் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டியது பெரியோர்களுடைய கடனுகையால் அறிவற்றவனுகிய திங்கள் செய்த குற்றத்தைத் தேவரீர் பொறுத்தருளுதல் வேண்டும். ஆக்கவும் அழிக்கவும் வல்ல பரம் பொருளே ! மிகுந்த துன்பத்தில் மூழ்கியிருக்கின்ற திங்களினுடைய வசவுரையைத் தேவரீர் அருள் செய்து நீக்கியருளுதல் வேண்டும்'' என்று பலமுறை பணிந்து வேண்டிக் கொண்டனன். இந்திரனுடைய வேண்டுகோளை ஆனைமுகக் கடவுள் ஏற்றருளினுர். "இந்திரனே! நெருப்புச் சுடுதலின்றிக் குளிர்ந்தாலும், இருள் கதிரவனை விழுங்கினுலும், நிலத்திற்குப் பொறுமைத் தன்மை நீங்கினுலும் நம்முடைய மொழி எக்காலத்தினும் மாறுந் திறமுடையதன்று. நம்மை அன்போடு போற்றியவர்கட்குத் துன்பம் உண்டாவதில்லை. ஆகவே திங்களுக்கு வந்த வசவுரையை நீக்க வேண்டுமென்று நீங்கள் யாவரும் பணிந்து அன்போடு கேட்டுக் கொள்ளுகிற படியினுல் அவனுக்குத் தீமையைச் செய்கின்ற வசவுரையைப் போக்கி முன்போல் உலாவுமாறு அருள்புரிந்தனம். ஆனுலும் ஆவணித் திங்களின் முன்பக்கத்தில் வருகின்ற நான்காவது நாளில்மட்டும் அவனை எவரும் பார்க்காதிருக்கக் கடவர். மறந்தேனும் பார்ப்பார்களானுலும், அவர்கள் பலவகைப்பட்ட தீவினைகட்கும் உரியவர்களாகித் துன்பக் கடலில் நின்றுங் கரையேற மாட்டார்கள். மற்றைய நாள்களிலெல்லாம் முன்போலவே அவன் வடிவத்தினை எல்லோரும் விண்ணின் கண் காணலாம்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

### திங்கள் அருள்பெறுதல்

ஆனைமுகக் கடவுளின் அருள்வாக்கினைக் கேட்ட தேவர்களனைவரும் "நாம் வாழ்ந்தோம் வாழ்ந்தோம்'' என்று துள்ளினுர்கள். இன்பக் கூத்தாடினுர்கள். ஆனைமுகக் கடவுளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு திங்களிடஞ் சென்றுர்கள். திங்களைப் பார்த்து ஆனைமுகக் கடவுள் அருள்புரிந்த தன்மையைக் கூறினுர்கள். ஆனைமுகக்

கடவுளின் ஓரெழுத்து மறையை உரைத்து, ''ஓ திங்களே! நீ நின்னுடைய உள்ளத்தில் ஆனைமுகக் கடவுளை இருத்தி அவர் மறையாகிய இவ்வோரெழுத்து மறையை இடைவிடாமல் இயம்பி அவருடைய பேரருளைப் பெற்றுக் கொள்ளக் கடவாய்'' என்று கூறித் தேவர் கோமான் தேவர்கள் அனைவரோடுந் தன்னுலகத்தை யடைந்தனன். பிறகு திங்கள் கங்கை யாற்றின் தெற்குக் கரைக்குச் சென்று எல்லாப் பேறுகளையுங் கொடுக்கும் சர்வ சித்தி நகரத்தில் இருந்து உள்ளத்திடத்தோடு ஓர் எழுத்து மறையை இருபத்திரண்டு ஆண்டுகள் இயம்பியிருந்தனன். ஆனைமுகக் கடவுள் அவனுக்கெதிரே தோன்றியருளினார். உடனே திங்கள் விரைந்தெழுந்து வணங்கினான். விழிகளில் இன்பநீரைச் சொரிந்தான். ''பெருமானே! அறிவிலியாகிய அடியேன் அறியாமையினால் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்து என்னை வருத்துகின்ற துன்பத்தைப்போக்கி மெய்யருளைத் தந்து காப்பாற்ற வேண்டு''மென்று வேண்டிக் கொண்டனன். ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்து, ''திங்களே! உனக்கு வேண்டிய மேன்மைகளையெல்லாம் முன்னரே கொடுத்திருக்கின்றோம். இன்னுமோர் மேன்மையுந் தருகின்றோம். அஃதாவது துன்பங்களை நீக்கிக்கொள்ள விரும்பினோர் அங்காரக சதுர்த்தி தோறும் நீ தோன்றுகின்ற சமயத்தில் நம்மை வழிபட்டு உன்னையும் போற்றக்கடவர். உன்னை எல்லோரும் வணங்கும்படியாக உன்னுடைய கலைகளுள் ஒன்று நம்முடைய முடியின்மீது இருக்கக்கடவது'' என்று இவ்வாறு அருள்செய்து திங்களை விண்ணிற் செலுத்தித் தாம் மறைந்தருளினார்.

### பாலசந்திர விநாயகர்

பிறகு திங்களானவன் தன்னுடைய முகத்திலுள்ள அழுக்குகளெல்லாம் ஒழியப் பெற்றதுபோல் உள்ளத்திலுள்ள அறிவின்மையாகிய இருளையும் போக்கியவனாய் எண்ணிறந்த ஒளிகளோடு கூடி முன்னிலும் மிகுந்த விளக்கத்தை யடைந்து அழகு பொருந்திய ஒரு கோயிலை உண்டாக்கினான். அதில்

ஆனைமுகக் கடவுளை அமைத்துப் பாலசந்திர விநாயகர் என்று பெயரிட்டுச் சிறந்த வழிபாடுகள் செய்தான். முன்போல் விண்ணிற் சென்ருன். பிறகு ஆனைமுகக் கடவுளுடைய திருமுடிக்கு ஓரணியாக இருக்கப்பெற்ற திங்களால் அமைக்கப் பட்டிருக்கும் அந்தப் பாலசந்திர மூர்த்தியை அன்று முதல் தேவர் முனிவர் முதலானேர் வழிபடுகின்றனர். மற்றும் வழிபடுகின்றவர்கள் எல்லாப் பேறுகளையும் பெறுகின்ற தன்மையினல் அத்திருவூர் சகல சித்தித்தலம் என்னும் பெயரையடைந்து எல்லாத் திருவூர்கட்கும் தலைமை பெற்று விளங்குகின்றது. ஆகவே சங்கட சதுர்த்தி நோன்பிற்குத் திங்கள் தோன்றுஞ் சமயத்தை முதன்மையாக மொழியப் பட்டது. மேலும் ஆனைமுகக் கடவுளுக்குச் செய்த குற்றத் திஞல் அழகிழந்து பலவகைப்பட்ட இடர்களுள் திங்களே அகப்பட்டுத் துன்புற்ருஞயின் அப் பெருமானுடைய மேன் மையை எவ்வாறறிந்து இயம்புதல் கூடும்? அழகும் நலமும் பெற விரும்பினவர்கள் ஆனைமுகக் கடவுளிடத்தில் மறந் தேனும் மனமொழி மெய்களால் குற்றஞ் செய்வார்களாயின் மிகுந்த துன்பத்தை நுகர்ந்து நிரயத்தில் அழுந்துவார்கள். ஆனைமுகக் கடவுளை குறைவில்லாமல் வழிபடுகின்றவர்கள் கட்டாயமாக அறுகினைக் கொண்டு வழிபட வேண்டும்'' என்று நான்முகன் பிதிர்தேவனுக்கும் அவன் தேவேந்திரனுக்கும் அவன் சூரசேன மன்னனுக்கும் சொன்னதாகச் சூதமுனிவர் சௌனகர் முதலிய முனிவர்கட்குச் சொன்ஞர்.

## 51. அறுகின் பெருமை

(தூர்வை மகத்துவம்)

மன்னன் வசவுரை படைதல்

ஓ சவுனகாதி முனிவர்களே! திங்கள் ஆனைமுகக் கடவு ளுடைய திருமுடிக்கு ஓர் அணியாகிய வரலாற்றையும் அங்காரக சதுர்த்தியில் திங்களை வழிபட வேண்டிய காரணத் தையுஞ் சொன்ஞேம். இனிமேல் அறுகின் பெருமையையும் அறைவோம் கேட்பீர்களாக.

தேவர் கோனுகிய இந்திரன் சூரசேன மன்னனை நோக்கிச் சொல்லுகின்ருன். "அரசனே! மீளவும் பிதிர்தேவன் நான்முகனை வணங்கி, நறுமணமுடைய பலவகையான மலர்களிருக்கவும் அறுகினுல் வழிபடவேண்டும் என்று கூறியது என்னை?" என்று கேட்டான். நான்முகன் பிதிர் தேவனைப் பார்த்துக் கூறுகின்ருன். அவந்தி என்னும் பட்டணத்தில் சுலபன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சுபத்திரை. அவ்வரசன் அறநெறி தவருமல் அரசியற்றிக் கொண்டிருக்குங் காலத்தில் மதுசூதனன் என்னும் பெயரையுடைய ஓர் அந்தணன் அரசனிடத்திற்கு வந்தான். அவன் வறுமையால் வருந்துகின்றவனுயும் சிவபெருமானிடத்திலே அன்பு கொண்டவனுயும் கையில் நீர் ஏனம் முக்கோல் ஆகியவற்றை யுடையவனுயும் இருந்தான். அவன் அரசனிடம் வந்து பொருளை யிரந்தான். அவ்வரசன் ஏற்போர்க்கு இல்லை யென்னுது கொடுக்கும் தன்மையுடையவனுக இருந்தும் பழைய ஊழின் வலியால் அந்தணனைக் கண்டு நகைத்தான். அரசன் நகைத்ததைக் கண்டு அந்தணன் உள்ளம் வருந்தினுன். ஊழின் வலியால் மிகுந்த சினத்தைக் கொண்டான். கண்களில் தீப்பொறி பறக்குமாறு அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! நீ சிறிதேனுங் கல்வியறிவுடையவனல்லன். கனவினை யொத்த செல்வச் செருக்கினுலன்ரே என்னை நோக்கி நகைத்தனை. நீ நகைத்தது என்னுடைய உள்ளத்தையும் உன்னுடைய குலத்தையுஞ் சுட்டுவிட்டது. ஆவின் பின்புறத்தை முகந்து பல்லைக் காட்டுங் காளையைப் போல என்னைக் கண்டு பல்லைக் காட்டினபடியால் நீ ஏரிற் பூட்டும் எருதின் வடிவத்தை யடைந்து புல்லையே உணவாக உண்ணக் கடவை" என்று வசவுரை வழங்கினுன்.

### மன்னன் மனைவியும் வசவுரை வழங்கல்

அந்தணன் கூறிய வசவுரையை அரசனுடைய மனைவி கேட்டாள். அவளுக்கு மிகுந்த துன்பம் உண்டாகியது.

அவள் அந்தணனைப் பார்த்து, "ஓ அந்தணனே! நீ உன்னுடைய உடல் முழுவதும் நல்வினையை நல்கும் திருவெண்ணீற்றினை விளங்குமாறு அணிந்துள்ளனை. ஆயினும் அதற்குத் தக்கவாறு உன்னுடைய உள்ளத்தில் இரக்கம் இல்லை. எவராக இருந்தாலும் தெரிந்துந் தெரியாமலும் ஒரு குற்றத்தைச் செய்தார்களாயின் அறிவுடையோர் அதனைப் பொறுத்துக் கொள்வார்களேயல்லாமல் சினமடைய மாட்டார்கள். நீ சிறிதேனும் ஏற்றத் தாழ்வினைப் பார்க்கவில்லை. உலகத்தை ஆளும் அரசன் என்றும் எண்ணவில்லை. அறிவற்ற கழுதையைப்போல வசவுரை வழங்கினுய். ஆகவே நீ கழுதையாகி ஆடை வெளுக்கும் வண்ணுனுடைய கையில் அகப்பட்டு அழுக்குத் துணி மூட்டைகளைச் சுமந்து சுமந்து வருந்தி மெலிவாயாக" என்று வசவுரை வழங்கினுள்.

அரசியும் வசவுரை யடைதல்

அரசியின் வசவுரையை அந்தணன் கேட்டு உள்ளங் கலங்கினுன். "பெண்ணே! குற்றம் உங்கள் மீதிருக்கின்றது. அதனை என்பாற் குறையிரந்து போக்கிக் கொள்ள நினையாமல், இழிகுலப் பெண்களைப்போல, என்னுடைய மேன்மையையும் பாராமல் கழுதையாகுமாறு வசவுரை வழங்கினையாதலால் நீ நல்லியல்பற்ற புலைச்சியாகி உண்பனவும் உடுப்பனவும் இல்லாமல் துன்பமுறக் கடவாய்" என்று வசவுரை வழங்கினன்.

வசவுரைப் பலனை மூவரும் அடைதல்

ஓ பிதிர்தேவனே! தீவினைகளெல்லாம் படர்வதற்குக் கொழுகொம்பாகிய வெகுளியினுல் அம்மூவருந் தங்களுக்குத் தாங்களே உண்டாக்கிக்கொண்ட வசவுரையின் பலன் உடனே உண்டாகத் தொடங்கியது. சுலபன் ஒரு காளையாகி அந் நகரத்தில் உள்ள ஓர் உழவனிடத்திற் சென்று துன்பமுற்றிருந்தான். மதுசூதன மறையவன் கழுதையாகி ஒரு வண்ணுன் கையில் அகப்பட்டு வருத்தமுற்றிருந்தான். மன்னன் மனைவியாகிய சுபத்திரை புலைச்சியாகி அந்நகரத்தின்

புறத்திலிருக்கும் புலேச்சேரியை அடைந்து வறுமையினுல் வாடினுள். அடக்க முடியாத பசியை உடையவளாகி எல்லோரும் இடும் ஐயத்தை உண்டு கொண்டிருந்தாள். இவ்வாறு நெடுங்காலஞ் சென்றது. ஒருநாள் எருது உழவனுடைய ஏரிற் பூட்டப்பெற்று அவனுடைய வயலே உழுதுகொண்டிருந்தது. கழுதை தன் முதுகெலும்பு நோக மூட்டையைச் சுமந்து கொண்டுபோய்வண்ணுன் துணிதுவைக்குந்துறையிற்போட்டு விட்டு வயலிற் புல்லே மேய்ந்துகொண்டிருந்தது. புலேச்சி குளிர் காய்வதற்காக மரப்பட்டை முதலியவைகளேத் தொகுக்கவும் புல்லறுக்கவும் அவ்வயலுக்குச் சென்ருள். இவ்வாறு மூவரும் அவ்வயலிற் கூடியபோது பெருமழை பெய்யத் தொடங்கியது. உழவன் எருதை அவிழ்த்துவிட்டுச் சென்ருன். அஃது அங்கிருந்தோடிப் பக்கத்திலிருந்த பிள்ளேயார் கோயிலுக்குட் புகுந்தது. மேய்ந்து கொண்டிருந்த கழுதையும் அக் கோயிலுக்குச் சென்றது. புலேச்சியும் அக் கோவிலுக்கு வந்து வெளிப்புறத்தில் தங்கினுள். இராப் பொழுது நெருங்கியது.

போரிடுதல்

கழுதையும் எருதும் மெதுவாகச் சென்று புலேச்சியிடமிருந்த புல்லேப் பிடுங்கித் தின்னத் தொடங்கின. புலேச்சி புல்லேக் கீழே போட்டுவிட்டுத் தடியொன்றை யெடுத்துக் கழுதையை அடித்தாள். கழுதை தனது காலால் எருதை உதைத்தது. எருது தன்னுடைய கொம்பினுல் கழுதையை முட்டியது. இவ்வாறு மூன்றும் ஒரே காலத்தில் போரிடலாயின. அன்று ஆனேமுகப் பிள்ளேயாருடைய சதுர்த்தி நாளாக இருந்தது. ஆனேமுகக் கடவுளே வழிபட்டு அக் கடவுளின் மறையை உருவேற்றிக் கொண்டிருந்த முனிவர்கள் தடியை எடுத்து வந்து கழுதையையும் எருதையும் புலேச்சியையும் அடித்து விரட்டினுர்கள்.

### அறுகு ஆனைமுகக் கடவுள் மேல் விழுதல்

மழை பெய்தபடியால் புலைச்சி வெளியே ஓடவில்லை. கழுதை காளை ஆகியவற்றோடு அவள் ஆனைமுகப் பிள்ளையாருடைய கோயிலைச் சுற்றிச்சுற்றியோடி வந்தாள். முனிவர்களும் விடாமல் அவைகளை விரட்டி விரட்டி இறுதியில் கோயிலுக்கு வெளியே விரட்டி விட்டார்கள். புலைச்சியும் எருதும் கழுதையும் கோவிலைச் சுற்றியோடுகையில் அவ் விலங்குகள் வாயில் மென்று கொண்டிருந்த புல்லும் புலைச்சி கையில் வைத்திருந்த புல்லும் ஆனைமுகக் கடவுள் திருமுன்பு விழுந்தன. அவைகளில் மூன்று புல் காற்றினால் ஆனைமுகக் கடவுளுடைய வடிவத்தின்மீது போய் விழுந்தன. புலைச்சி கையினின்றும் வீழ்ந்த புல் முடியின்மீதும், எருதின் வாயினின்றும் வீழ்ந்த புல் துதிக்கை மீதும், கழுதையின் வாயினின்றும் வீழ்ந்த புல் திருவடியின்மீதும் போய் விழுந்தன. புல் இவ்வாறு வீழ்ந்ததை முனிவர்கள் கண்டு மனம் வருந்தினார்கள். நீராடி வந்து திருக்கோயில் முழுவதையுந் தூய்மைப் படுத்தினார்கள். திருக்குடம் முதலியவைகளை வைத்து நீரை மறையினால் தூய்மைப்படுத்தி அதனை ஆனைமுகக் கடவுளுக்குத் திருமுழுக்குச் செய்தார்கள்.

### விண்ணக வாழ்வு

முனிவர்களால் அடித்துத் துரத்தப்பட்ட கழுதையும் எருதும் அடியுண்ட வருத்தத்தினாலும் காற்று மழையினாலும் உணவில்லாதபடியினாலும் வேறு போக்கிடங் காணாமையானும் இறந்தன. புலைச்சியும் அவ்வாறே இறந்தாள். ஆனைமுகக் கடவுள் தம்மீது வீழ்ந்த அறுகம் புல்லைத் தமக்கு வழிபாடு செய்ததாகவும் கோயிலைச் சுற்றிச்சுற்றி யோடியதை வலம் வந்ததாகவும், தீட்டு நேர்ந்து விட்டதென்று முனிவர்கள் செய்த முழுக்கைத் திருமுழுக்காகவுங் கொண்டு திருவருள் செய்ய வெண்ணினார். மூவரையும் அழைத்து வருமாறு தேவகணங்களை ஏவினார். தேவகணங்கள் உடனே ஒரு

விமானத்தைக் கொண்டு வந்து கழுதையையுங் காளையையும் புலைச்சியையும் அதில் ஏறச் செய்தனர்.

## 52. அறுகு வழிபாடு

(தூர்வையருச்சனை)

### முனிவருந் தேவ கணங்களும்

தவத்திற் சிறந்தவர்களே! காளை, கழுதை, புலைச்சி ஆகிய மூவரும் விண்ணகம் புகச் செய்த அறுகின் பெருமையை உரைத்தோம். இனிமேல் அறுகு வழிபாட்டையுங் கூறுவோம் கேட்பீர்களாக.

தேவர்கோன் சூரசேன மன்னனை நோக்கிச் சொல்லுகிறான். "அரசனே! நான்முகனைப் பிதிர்தேவன் வணங்கிப் புலைச்சி முதலிய மூவரும் தேவகணங்களால் கொண்டு வரப் பெற்ற விமானத்தில் ஏறிய பிறகு அங்கு நடந்ததென்னவென்று கேட்டான். நான்முகன் பிதிர்தேவனைப் பார்த்து, "ஓ பிதிர்தேவனே! அவ்வாறு மூவரும் விமானத்திலேறலும் அங்கிருந்த முனிவர்கள் மிகுந்த வியப்படைந்தார்கள். விமானங் கொண்டுவந்த தேவகணங்களைப் பார்த்து, "கழுதையையும் காளையையும் புலைச்சியையும் இவ்வாறு விமானம் ஏறச் செய்யவேண்டிய காரணம் என்ன?" என்று கேட்டார்கள்.

கணங்கள் சிறிது நின்று, "ஓ முனிவர்களே! இவர்களாற் சிதறப்பட்ட அறுகு ஆனைமுகப் பெருமானுடைய வடிவத்தில் வழிபாடாக விழுந்தபடியால் இவர்கள் இவ்வாறு தேவயாக்கை பெற்று விமானமேறப் பெற்றூர்கள்," என்றனர். இதனைக் கேட்ட முனிவர்கள், "ஓ தேவகணங்களே! இழிந்த பிறப்பினை யடைந்த இவர்கட்கு உயர்ந்த உலகத்தையடையத்தக்க நல்வினையை ஓர் அறுகு நல்கியதாயின் அவ்வறுகைக்கொண்டு ஆனைமுகக் கடவுளை வழிபடுஞ் சிறப்பை அடியேங்கட்குச் சொல்லியருள வேண்டு"மென்று வேண்டிக் கொண்டனர்.

### கவுண்டின்னிய முனிவர்

தேவகணங்கள் முனிவர்களைப் பார்த்து, "ஓ முனிவர்களே! தாபரம் என்கிற பெயரையுடைய நகரத்திற்குத் தெற்குத் திக்கில் ஓடைக் கரையைத் தமக்கு இருப்பிடமாகக் கொண்டு முனிவர் ஒருவர் வாழ்ந்திருந்தார். அவருடைய பெயர் கவுண்டின்னிய முனிவர். அவருடைய மனைவியின் பெயர் ஆசிரியை. அவள் கற்பிற் சிறந்தவள். அவர் தம்முடைய மனைவியோடு தவஞ்செய்து கொண்டிருந்ததன்றி, மறை முறைப்படி ஆனைமுகக் கடவுளை அமைத்து மிகுந்த பேரன்போடு நாடோறும் பதினுயிரம் அறுகைக் கொண்டுவந்து அதனுல் வழிபட்டுக் கொண்டிருந்தார்.

### ஆசிரியையின் ஐயம்

ஒருநாள் முனிவருடைய மனைவியாகிய ஆசிரியைதன் கணவராகிய கவுண்டின்னிய முனிவரைப் பணிந்து, "அன்புடைப் பெரியீர்! நறுமணம் மிகுந்த மலர்கள் பல இருக்கவும் அவைகளைக் கொண்டு வழிபாடு செய்யாமல் புல்லாகிய அறுகினைக் கொண்டு வழிபாடு செய்யவேண்டிய காரணம் என்னை? இதனை அடியாளுக்குத் தெரிவித்தருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். முனிவர் தம் மனைவியாகிய ஆசிரியையைப் பார்த்துப், "பெண்ணே! அறுகின் பெருமை மிக மறைமுகமானது. ஆயினும் நீ மிகுந்த அன்போடு கேட்கின்றபடியால் அதனைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

### காமங் கொண்ட இயமன்

முன்ஞெரு காலத்தில் இயமன் சிறப்பான நாள் ஒன்றில் விண்ணவர், கின்னரர், கருடர், விஞ்சையர், காரணர், முனிவரர் முதலிய யாவரும் பணிந்து புடை சூழ்ந்திருக்கக் கொலுமண்டபத்தில் ஒன்பான் வகைமணிகள் பதித்துச் செய்யப்பட்ட அரியணைமீது இனிது அமர்ந்திருந்தான். அப்பொழுது

தேவமாதர்கள் தங்களுடைய முழுத்திறமையையுங் காட்டிக் கூத்தியற்றிக்கொண்டிருந்தனர். தேவமாதர்களுள் மிகுந்த அழகுள்ளவளாகிய திலோத்தமை என்பவளுடைய மேலாடை நடித்துக்கொண்டிருக்கும்போது நழுவியது. அவள் மிகுந்த நாணமடைந்து தலைகுனிந்து பக்கத்தில் இருப்பவர்கள் அறியாவண்ணம் அவ்விடத்தை விட்டுச் சென்றாள். ஆடை நழுவிய பொழுது இயமன் அவளுடைய கொங்கைகள் இரண்டையும் நன்றாகப் பார்த்தான். அதனால் அவனுடைய உள்ளத்தில் மிகுந்த காமம் உண்டாகியது. காமத் தீயினால் கொளுத்தப்பட்ட இயமன் அந்தப்புரத்தை நோக்கிச் சென்றான். அவன் அந்தப்புரத்தை அடைவதற்குள் அவனுடைய வீரியம் வெளிப்பட்டு நிலத்தில் விழுந்தது.

அனலாசுரன் தோன்றுதல்

இயமனுடைய வீரியத்தில் இருந்து அனலாசுரன் என்னும் பெயரைக் கொண்ட ஓர் அவுணன் வெளிப்பட்டான். அவன் கலப்பையைப் போன்ற வெளுத்த கோரைப் பற்களையும், நீண்டு முறுகிச் சிவந்திருக்கின்ற முகமயிர்களையும், தீக் கொழுந்தினைப்போல் நிமிர்ந்திருக்கின்ற புற மயிர்களையும், தேவர்களுங் கண்டு அஞ்சத்தக்க உறுப்புக்களையும் உடையவனாக விருந்தான். அங்கிருந்தவர்கள் அனைவரும் அவனைக் கண்டு அஞ்சி அப்பால் ஓடிப்போயினர். இயமன் தன்னுடைய வீரியத்தில் இருந்து தோன்றிய அம்மகனைக் கண்டான். கண்ட அளவில் மிகுந்த அச்சம் உண்டாகியது. அவன் உள்ளே நுழையாதபடி கதவைத் தாளிட்டுக்கொண்டான், அனலாசுரன் இயமதருமனைத் தந்தையென்கின்ற மதிப்புக்காக விட்டு விட்டு அங்கிருந்து நீங்கினான். நிலவுலகத்திலிருந்த எல்லா உயிர்த் தொகைகளையும் புசித்தான். இந்திரன் முதலியவர்களையும் உண்டுவிடுவோம் என்று எண்ணி விண்ணுலகத்திற்குச் சென்றான். இந்திரன் முதலியோர் அனலாசுரனைக் கண்டு அஞ்சினார்கள். திருமாலிடஞ் சென்று தங்களுடைய துன்பங்களைக் கூறி முறையிட்டார்கள். திருமால் அனலாசுரனுடைய ஆற்றலை

எண்ணிப் பார்த்தார். இவன் ஆனைமுகக் கடவுளுடைய கையினுல் அழியத்தக்கவனே யல்லாமல் மற்றவர்களுடைய கையினுல் அழியத்தக்கவ னல்லன் என்று தெளிந்தார்கள். எல்லோரும் ஆனைமுகக் கடவுளின் அருமறையை உள்ளத்தில் எண்ணி உருவேற்றிப் போற்றினுர்கள். தம் குறைகளைக் கூறித் தொழுது முறையிட்டார்கள். ஆனைமுகக் கடவுள் திருவுளம் இரங்கினுர். அந்தண குலத்தில் தோன்றிய மாணியைப்போல் தேவர்கட்கு முன்னே தோன்றினுர். வந்திருப்பவர் ஆனைமுகக் கடவுளே என்று தேவர்கள் உணர்ந்து கொண்டார்கள். எண்வகையுறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தார்கள். "அருட் கடலே அடியேங்கள் படுகின்ற தொல்லையை ஒழித்து அருள் புரியவேண்டு"மென்று வேண்டிக்கொண்டார்கள்.

### அனலாசுரனை அழித்தல்

ஆனைமுகக் கடவுள் தேவர்களிடத்தில் திருவுள மிரங்கினுர். விண்ணுலகத்திற்குச் சென்ற அனலாசுரன் அங்கு தேவர்களைக் காணுதவனுய்ப் பலவிடங்களினுந் தேடிக் கொண்டு சென்ருன். பிறகு தேவர்கள் கூடியிருக்கும் இடத்தைக் கண்டுபிடித்தான். தேவர்களைக் கண்டவுடன் அவர்கட்கு முன்னே சென்ருன். அனலாசுரனுடைய வரவைக் கண்டதும் முனிவர்கள் அஞ்சி ஓட்டமெடுத்தார்கள். தேவர்க ளனைவரும் நடுநடுங்கி ஆனைமுகக் கடவுளுக்குப் பின்னுற் சென்று உயிரற்ற உடலைப்போல் இருந்தார்கள். ஆனைமுகக் கடவுள் தேவர்கள் படுந் துன்பத்தைக் கண்டார். அஞ்ச வேண்டாமென்று அருளுரை வழங்கினுர். தம்முடைய உண்மைவடிவத்தைக்கொண்டு அனலாசுரனுக்கு அண்மையிற் சென்ருர். அகத்திய முனிவர் கடலைக் குடித்தது போலவும் சிவபிரான் நஞ்சையுண்டது போலவும் அவனைத் தம்முடைய கையில் அடங்கும்படியாக எடுத்து, "அவுணனே! நீ இவ்வுலகத்தினை மிகுதியாகத் துன்புறுத்தினுயன்ருே இதைப் போல இன்னும் பழைமையான அளவற்ற உலகங்கள் நமது வயிற்றினுள் இருக்கின்றன. அவைகளையும் ஒரு கைபார்க்கக்

கடவாய்'' என்று கூறி விழுங்கி விட்டார். இப்புதுமையைக் கண்ட தேவர்களனைவரும் மிகுந்த வியப்படைந்தனர்.

### வெப்ப நோய்

ஆனைமுகக் கடவுளுடைய வயிற்றில் அனலாசுரன் அடங்கிய அளவில் எல்லா உயிர்த் தொகைகளினுடைய வயிறுகளினும் நெருப்புப் பற்றிக் கொண்டதைப்போல் கொடிய வெப்பமுண்டாகியது. தேவர்கட்கும் வெப்பம் உண்டாகியது. இதனால் எல்லோரும் மிகுந்த துன்பத்தை யடைந்தார்கள். ஆனைமுகப் பெருமானுடைய வயிறு குளிர்ந் தால் எல்லோருடைய வயிறுங் குளிரும் என்று உறுதி செய்தார்கள். இந்திரனுடைய ஏவலினால் திங்கள் தன்னுடைய அமுததாரைகளை அவர் திருமுடியின் மீதிருந்து சொரிந்து கொண்டிருந்தான். நான்முகனுடைய வேண்டு கோளால் சித்திபுத்திகள் அண்மையில் இருந்து தமது குளிர்ந்த உறுப்புக்களை ஒத்திக் கொண்டிருந்தனர். திருமால் அளவற்ற தாமரை மலர்களைக் கொண்டு வந்து ஆனைமுகக் கடவுளுக்கு எதிரே நீட்ட அவைகளைத் தாமே வாங்கி ஒத்திக் கொண்டார். சிவபெருமான் தம்முடைய திருவுடலில் அணிந்திருக்கின்ற ஆதிசேடன் முதலிய பாம்புகளைக்கொண்டு வந்து அணிந்தார். இப்படிப் பலர் பலவாருகச் செய்தும் ஆனைமுகக் கடவுளுடைய வெப்ப நோய் நீங்கவில்லை.

### அறுகு சொரிதல்

பிறகு எண்பதாயிரம் முனிவர்கள் அங்கு வந்து ஒவ்வொருவரும் இருபத்தோரறுகுகளை ஆனைமுகக் கடவு ளுடைய முடி முதல் அடிவரை சொரிந்தார்கள். அவ்வளவில் ஆனைமுகக் கடவுளுடைய தீ வெம்மை அடியோடு நீங்கியது. ஆனைமுகக் கடவுளுடைய திருவுடல் வெப்பம் நீங்கிய பொழுதே உயிர்த் தொகைகள் எல்லாவற்றினுடைய வெப்ப மும் நீங்கியது. மூவுலகங்களும் மகிழ்ச்சியை அடைந்தன. ஆனைமுகக் கடவுள் முனிவர்களைப் பார்த்து, ''அன்பர்களே! நமது உடலில் இருந்த வெப்பமானது நீங்கள் சொரிந்த

அறுகால் நீங்கியமையின், எம்மை வழிபாடு செய்பவர்கள் பலவகை மலர்கள் சார்த்தி வழிபடினும் அறுகில்லாமல் வழிபடுவார்களானுல் அத்தகைய வழிபாட்டிற்கு எத்தகைய பயனுமில்லாமல் போகும். வேறு வகையான மலர்களில்லா விடினும் அறுகு ஒன்றை மட்டுங் கொண்டு வழிபடுவாராயின் அவ் வழிபாடு மிகுவிரைவிற் பெரும்பயனைக் கொடுக்கும். மிகுதியாக அறுகு கொண்டு வழிபட முடியாதவர்கள் இருபத்தோரறுகாயினுங்கொண்டு வழிபடுதல் வேண்டும்'' என்று திருவாய் மலர்ந்து தேவர்கள் விரும்பிய மேன்மைகளைக் கொடுத்து மறைந்தருளினர். பிறகு தேவர்கள் ஒருகோயில் உண்டாக்கி அதில் ஆனைமுகக் கடவுளை அமைத்து அப்பெருமானுக்குக் காலானலப் பிரசமர் என்றும் பாலசந்திரர் என்றும் பெயரிட்டுத் தங்கள் தங்கள் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அன்று முதல் ஆனைமுகக் கடவுளுடைய வழிபாட்டிற்கு அறுகு சிறந்ததாகியது'' என்று கவுண்டின்னிய முனிவர் தம் மனைவிக் குரைத்ததாகப் பிதிர்தேவனுக்கு நான்முகன் சொன்னுன் என்று தேவேந்திரன் சூரசேன மன்னனுக்குச் சொன்னுன்.

## 53. அறுகை இரந்தது

(தூர்வை யாசகம்)

சனக மன்னன்

சவுனகாதி முனிவர்களே! ஆனைமுகக் கடவுள் அனலாசுரனை விழுங்கித் தேவர்களைக் காத்ததும், வெப்பம் நீங்குமாறு முனிவர்கள் அறுகு வழிபாடு செய்ததுஞ் சொன்னேம். இனிமேல் ஆனைமுகக் கடவுள் அறுகை இரந்த செய்தியையுங் கூறுகிறேம் கேட்பீர்களாக!

பலவகையான வளங்களோடு கூடிய மிதிலாபுரி என்னும் பட்டினத்தில் சனகன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். அவன், அன்பு, கலையறிவு, ஈகை, ஆண்மை,

வெற்றி, ஒழுக்கம் முதலிய யாவற்றையும் தனக்கே உரிமை யாகக் கொண்டிருந்தான். அவ்வரசன் அரசியற்றிக் கொண்டிருக்குங் காலத்தில் ஒருநாள் நாரத முனிவர் அரசனிடஞ் சென்ருர். அக்காலத்தில் அவ்வரசன் தானே பிரமம் என்னும் அறிவையுடையவனுய் நாரத முனிவருக்கு வழிபாடு செய்யாமலிருந்தான். நாரதர் நம்மை இவ்வரசன் வழிபடாதவனுயிருப்பினும் இவனுக்கு நாம் வாழ்த்துரை வழங்க வேண்டியது கடமை என்று எண்ணினுர். அரசனைப் பார்த்து, "அரசனே! கடவுளினுடைய திருவருளால் எல்லா வகையான செல்வங்களையும் பெற்றனை. நல்லொழுக்கங்களை யெல்லாம் மேற்கொண்டாய். இன்னும் வேண்டிய சிறப்புக் களையெல்லாம் கடவுள் உனக்குக் கொடுத்தருள வேண்டும்," என்று கூறினுர். நாரதர் நவின்ற வாழ்த்துரையைச் சனக மன்னன் கேட்டு நகைத்தான் "முனிவரே! நீர் வேறு பாடான அறிவினைப் பேசுவதற்கு வந்தீரோ? இஃதென்ன அறியாமை? இது வரையில் நீர் பெற்ற மெய்யறிவு இது தானே? வேறே கடவுள் இருக்கின்றனர் என்றும் அக்கடவுள் வேண்டிய செல்வங்களையெல்லாங் கொடுப்பர் என்றும் வேறுபடுத்திக் கூறுவது அறிவற்றவர்களுடைய உரையன்றோ? கடவுளோடு வேறுபாடில்லாமலிருக்கிற மெய்யறிவாளர் இவ்வாறு கூறுவார்களோ? எல்லாவற்றையும் கொடுக்கின்ற கடவுளும் அவைகளைப் பெற்று எல்லாவற்றையும் நுகருகின்ற போகியும் அவைகளைக் குற்றமாக வெறுக்கின்ற யோகியும் நானேயன்றி வேறில்லை," என்று இகழ்ந்துரைத்தான். சனகன் சாற்றிய மாற்றங்களைக் கேட்ட நாரதர், "அரசனே! நீ கடவுள் வேறு இல்லையென்று பேசினுயன்றோ? கடவுள் உண்டென்பதை நீ நாணுமாறு நான் இப்பொழுதே காட்டு கின்றேன்," என்று கூறி அவ்விடத்தை விட்டகன்று கவுண்டின்னிய முனிவரிடஞ் சென்ருர். கவுண்டின்னிய முனிவர் நாரதரை எதிர்கொண்டு போற்றினுர். அழைத்துக் கொண்டு வந்து ஓர் இருக்கையில் இருக்க வைத்தார். பல வகையான வழிபாடுகள் இனிது செய்து உரையாடினுர்.

### நாரதர் பிள்ளையாரை வேண்டுதல்

பிறகு நாரத முனிவர் அக்கவுண்டின்னிய முனிவர் வழி படுகின்ற ஆனைமுகக் கடவுள் திருமுன்பு சென்று, எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு பணிந்து எழுந்தார். கையில் யாழையேந்தி நரம்புகளைத் தடவிப் பற்பல இசைக ளோடும் அவருடைய பேரருளைப் பாடிப் போற்றினர். "தேவரீருடைய திருவருளால் சனக மன்னனுக்கு நிலவுலக அரசாட்சியும் அளவற்ற செல்வமும் உண்டாகியிருக்கின்றன. அவை தேவரீருடைய திருவருளாற் கிடைத்தனவென்று அவன் சிறிதும் நினைத்திலன். தேவரீரே மேலான பரம் பொருள் என்றும் எண்ணுகின்றிலன். பெரியோர்களைக் கண்டால் வந்தனை வழிபாடுஞ் செய்வதில்லை. தன்னையே மேலான பொருளாக எண்ணி ஆணவங் கொண்டிருக் கின்றனன். இத் தன்மைகளைத் தேவரீர்க் குணர்த்துமாறு இங்கே வந்தேன்," என்று கூறி மீண்டும் வணங்கி விடை பெற்றுச் சென்றார்.

### ஆனைமுகக் கடவுள் சனகனிடஞ் செல்லுதல்

ஆனைமுகக் கடவுள் சனகனுடைய பசு அறிவைப் போக்கிப் பதியறிவைக் கொடுத்து ஆட்கொண்டருள வேண்டும் என்று திருவுளங் கொண்டார். தொழு நோய் கொண்ட உடலோடு ஓர் அந்தணராகச் சனக மன்னனுடைய அரண்மனை வாயிலை யடைந்தார். வாயிற் காவலரைப் பார்த்து, "நாம் வந்திருக்கின்ற செய்தியை அரசனுக்கு அறிவிப்பீர்களாக" என்று சொன்னர். வாயிற்காவலர் சனக மன்னனிடஞ் சென்று வணங்கித், "தேவரீருடைய அரண்மனை வாயிலில் வறுமையால் வருந்துகின்ற பேர்களை நேற்று வரையிற் கண்டதில்லை. இன்று ஒருவரைக் கண்டோம். அவர் சிறந்த அந்தணராயும் தொழு நோய் கொண்ட உடலோடும் இருத்தலன்றித் துன்பமும் பசியும் உடையவராக இருக்கின்றார்" என்று சொன்னர்கள். காவலர்கள் கழறியதைக் கேட்ட சனக மன்னன், "அவ்வந்தணரை

இங்கு அழைத்துக்கொண்டு வருவீர்களாக,'' என்று கட்டளை யிட்டனன். அரசனுடைய கட்டளைப்படியே காவலாளர்கள் அவரை அழைத்துக்கொண்டுபோய் அரசன் முன்பு விட்டார்கள். கண்டாரனைவரும் வெறுப்புக் கொள்ளத் தக்க உடலோடிருக்கின்ற அந்தணரை அரசன் பார்த்தான். "நீர் எதனை விரும்பி இங்கு வந்தீர்?'' என்று கேட்டான். அந்தணராகி வந்த ஆனைமுகக் கடவுள் அரசனைப் பார்த்து, "அரசனே! முன்னர் என்னுடைய பசிநோய் நீங்குமாறு உணவிடுதல்வேண்டும்,'' என்று சொன்னார்.

**உணவிடக் கட்டளை**

அரசன் தன்னுடைய மகனை யழைத்து, ''இவ்வந்தணருடைய பசி தணியுமாறு அறுசுவைப் பொருள்களோடும் உணவிடுவாயாக!'' என்று கட்டளையிட்டனன். சனகனுடைய மகன் உணவிடுதற்கு இசைந்தான். அந்தணரை உள்ளே அழைத்துக்கொண்டு சென்றான். நறுமணம் ஊட்டிய நீரினால் அந்தணருடைய திருவடிகளை விளக்கி ஓர் இருக்கையில் இருக்கச்செய்து கீழே விழுந்து பணிந்தான்.

**உணவிடுதல்**

இரண்டு தலைவாழை இலைகளை ஒன்றாகச் சேர்த்து அவைகளில் சோறு கறி முதலிய எல்லா வகையான உணவுகளையுங் குறைவறப் படைத்துத், "தேவரீர் இனிமேல் அமுது செய்தருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். பக்கத்தில் இருந்து விசிறியைக் கொண்டு மெல்ல மெல்ல விசிறினான். அந்தணர், ''இவ்விலையிலிட்ட சோறுங் கறிவகைகளுமா என்னுடையபசியைப்போக்கப் போகின்றன?'' என்று கூறி அவைகளைத் தம்முடைய திருக்கையினால் தொட்டருளினார். அவ்வளவில் இலையில் இருந்த சோறு கறி முதலியன சிறிதுங் காணப்பெறவில்லை. அண்மையிலிருந்து படைத்தவர்கள் இதனைக் கண்டு அளவற்ற வியப்படைந்தார்கள். இளவரசன், உடனே சமையல்காரர்களை அழைத்து, ''நீங்கள் சமைத்து வைத்திருக்கின்ற எல்லா உணவுகளையுங் கொண்டுவந்து படைப்பீர்களாக,'' என்று சொன்னான்.

அவர்கள் சமைத்து வைத்திருந்த அளவற்ற உணவுகளைக் கொண்டுவந்து படைத்தார்கள். அவைகளை யெல்லாம் அந்தணர் உடனுக்குடன் உண்டருளினர். சமையற்காரர்கள் வியப்படைந்து நன்கு சமைக்கப்பட்டதும் சமைக்கப் படாததுமான உணவுகளையெல்லாங் கலன்களோடு கொண்டு வந்து படைத்தார்கள். அவைகளையும் அவ்வாறே உண்டருளினர். பிறகு மடைத்தொழிலாளர்கள் மன்னன் மகனைப் பார்த்து, "நாங்கள் சமைத்து வைத்திருந்த எல்லா உணவுகளையும் படைத்து விட்டோம். சிறிது நேரம் பொறுத்திருந்தால் அளவற்ற உணவுகளைச் சமைத்துக் கொண்டு வருகிறோம்," என்று சொன்னார்கள். அந்தணராக வந்த ஆனைமுகக் கடவுள் அதனைக் கேட்டுத் தமது திருமுடியை அசைத்து, "இனிமேல் வெந்த பிறகு என்னுடைய பசியை விலக்கும்போது விலக்குங்கள். இப் பொழுது வேகாதிருக்கின்றவைகளைக் கொண்டுவந்து விரைவாகப் படையுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினர். இதனைக் கேட்டு இளவரசன் மிகுந்த வியப்படைந்தான். இவர்க்கு அப்பொருள்களை அடிக்கடி எடுத்துக்கொண்டு வந்து படைப்பதினும் அப்பொருள்களை வைத்திருக்கின்ற எல்லாக் களஞ்சியங்களையும் திறந்து விடுவது நல்லது என்று எண்ணினன். அவ்விடங்களுக்கு அழைத்துக் கொண்டுபோய் அவைகளைத் திறந்து, "இவைகளிற் புகுந்து தங்களுக்கு வேண்டியவைகளைப் புசித்தருள்வீராக" என்று புகன்றான். அவ்வாறே அக்களஞ்சியங்களினும் வடவைத் தீயைப்போலப் புகுந்து எல்லாவற்றையும் உண்டருளினர்.

### பலவிடத்துப் பொருள்களையுங் கொணர்தல்

இந்தப் புதுமையான செய்தியைச் சனக மன்னன் அறிந்தான். விரைவாக எழுந்து வந்து அந்தணருடைய திருவிளையாடல்களைப் பார்த்தான். அந்நகரத்தில் உள்ளன வும், அந் நகரத்தைச் சூழ்ந்த நாடுகளில் உள்ளனவுமான பொருள்களையெல்லாம் மிக விரைவாகச் சென்று கொண்டு வருமாறு தன்னுடைய தூதர்கட்குக் கட்டளையிட்டான்.

தூதர்கள் அரசனுடைய கட்டளையை ஆங்காங்குள்ள எல்லா மக்களுக்கும் அறிவித்தார்கள். பல விடங்களிலிருந்தும் மக்கள் வெந்ததும் வேகாததுமான பொருள்களைக் கொண்டு வந்து குவித்தார்கள். ஆனைமுகக் கடவுள் அப்பொருள்களை யெல்லாம் நொடிப் பொழுதில் உண்டருளினர். இவ்வாறு எல்லாவற்றையும் உண்டருளிய புதுமையைக் கண்டவர்க ளனைவரும் அஞ்சினர்கள். இம்மறையவனுடைய பசி இன்னும் நீங்காதபடியினல் நம்மையும் எடுத்து விழுங்கி விடுதல் கூடும் என்று அஞ்சி நான்கு பக்கங்களினும் ஓடிப் போனர்கள்.

ஆனைமுகக் கடவுளை அகற்ற நினைத்தல்

அமைச்சர்கள் அனைவரும் நடுநடுங்கினர்கள். "இம் மறையவன் தேவனே அசுரனே பூதனே வேறெத்தகையவனே அறிகிலேம். இவன் மனிதனயின் இவ்வாறுண்ணத்தக்கவ னல்லன்" என்று ஐயுற்றுர்கள். சனகமன்னனும் மிகுந்த அச்சம் கொண்டான். "வடவைத் தீயே ஓர் உருவங்கொண்டு வந்ததோ, அல்லது சிவபெருமானுடைய நுதல்விழித் தீயோ," என்று உள்ளங் கலங்கினன். "நம்முடைய நாடும் நகரமும் யானையுண்ட விளாங்கனியைப் போலவும் உயிர் நீங்கிய உடலைப்போலவும் ஆய்விட்டதே!" என்ருன். "எல்லாப் பொருள்களையும் இவருக்கு முன்னுற் கொண்டு வந்து படைத்தும் இவருடைய பசி இன்னும் நீங்கவில்லை. இவருக்கு உணவளிக்கக் கூடியவர்கள் மனிதருக்குள் எவரும் இலர். தேவர் கூட்டத்தினும் எவரும் இரார். இனிமேல் நாம் இயற்றத்தக்க தெதையுங் காணேம். இவரை வெளிப் படுத்துவது எச்சூழ்ச்சியினல்" என்று எண்ணமிட்டான். பிறகு ஆனைமுகக் கடவுளுக்கு அண்மையில் வந்து "அடிகாள்! தேவரீர் அந்தணராயும், இவ்வுலகில் வறுமையால் மிகவும் வருத்தமுற்றவராயும் காணப்பட்டபடியினல் உமக்கு உணவிடு வதாக ஒப்புக்கொண்டேன். இவ்வாறு வெந்ததும் வேகாதது மாகவுள்ள பொருள்களையெல்லாம் வரவழைத்துத் தருகிறேன் என்று ஒப்புக்கொள்ளவில்லை. இவ்வாறு கொடுத்தும்

உம்முடைய பசிநோய் நீங்கிற்ருே வென்ருல் அதுவுமில்லை. எஞ்சியுள்ள பசியை நீக்கத்தக்கவர்களிடத்திற்கு எழுந்தருளலாம்,'' என்று கூறினுன்.

அரசனுக் கறிவு புகட்டல்

அரசன் கூறிய உரைகளை ஆனைமுகக் கடவுள் கேட்டார். ''ஆ! ஆ! அரசனே! உன்னுடைய செயல் நன்ருக இருக்கின்றது. இந்நாட்டில் இருப்பவர்கள் எல்லோரும் உன்னை வரையாது கொடுக்கும் வள்ளல் என்று சொல்வதை உண்மையென்று நம்பி என்னுடைய கள்ளப்பசியைப் போக்குதற்கு நின்னிடத்திற்கு வந்தேன். அவ்வாறு வந்த எனக்கு அப்பசியைத் தீயில் நெய்யைச் சொரிந்து மிகுதிப் படச் செய்வதைப்போலச் சிறிது உணவுகொடுத்து மிகுதியாகுமாறு செய்துவிட்டாய். மேலும் உம்முடைய பசிக்கு எல்லாப் பொருள்களையுங் கொடுத்து விட்டேன். இன்னுஞ் சிறிது பசியிருக்குமாயின் அதனைப் போக்கத்தக்கவர்களிடத்திற்குப் போகலாம் என்று எனக்கு வழிகாட்டுகின்ருய். உன்னுடைய மெய்ம்மையும் சீர்த்தியும் அருளும் மிக அழகாக இருக்கின்றன! பிரமம் நீயே என்றும் வேருெரு பிரமம் இல்லையென்றும் கொடுக்கின்றதும் ஏற்கின்றதும் உன்னுடைய விருப்பத்தினுல் ஆகியதென்றும் எண்ணி உறுதிகொண்டு இறுமாந்திருக்கின்ற உனக்கு என்னுடைய பசியைப் போக்குவதற்கு ஆற்றல் இல்லாமல் இருக்குமா? இன்னும் படைத்துக்கொடுப்பதற்கு விருப்பமில்லாமல் வஞ்சனையாகப் பேசுகின்ருய்போல் இருக்கிறது. எல்லையற்ற பொருள்களை ஆக்கவும் அழிக்கவும் ஆற்றலுள்ள பிரமம் நீயேயாகவும் உன்னிடம் இரந்து வந்த என்னுடைய பசியைப் போக்காமல், 'இல்லை போம்' என்று உரைப்பது அழகாகுமா? ஈவதற்கு இடமில்லாமல் துன்பப் படுகிற நீயோ பிரமமாவாய்? பிரமம் ஓர் இன்பத்தை விரும்பியும் அது கிடைக்க வேண்டுமென்று முயற்சி செய்து கொண்டும் இடையில் நேருகிற துன்பங்கட்கு வருந்தியும் இருக்குமோ? ஓ சனக மன்னனே! உன்னுடைய பிரமத் தன்மையைத் தீயிலே போடு,'' என்று கூறிச் சினந்து

திடீரென்று அவ்விடத்தை விட்டு நீங்கி அரண்மனை வாயிலைக் கடந்தார்.

சனகன் வருத்தம்

அவ்வாறு செல்லுகின்ற அந்தணரைச் சனக மன்னன் பார்த்தான். ''இவர் இயம்பியன மேலான மொழிகளாக இருப்பதுமன்றி இவருடைய செயல்களுஞ் சிறப்பாக இருக்கின்றன. இவர் யார் என்று அறிந்துகொள்ள முடியவில்லை. இதுவரையில் நான் மேற்கொண்டிருந்த கொள்கைக்குப் பழுது நேர்ந்துவிட்டது'' என்று நாணமுற்று வருத்தமடைந்திருந்தான்.

திரிசிரன்

வெளிப்பட்ட ஆனைமுகக் கடவுளாகிய அந்தணர் அந்நகரத்திலே மறைநெறி யொழுக்கங்களில் மறுவில்லாதவனும் திரிசிரன் என்னும் பெயரையுடையவனும், விரோசனை என்னும் மனைவியோடு வாழ்ந்து கொண்டிருக்கின்ற ஓர் எளிய அந்தணனுடைய இல்லத்திற்குச் சென்றார். அப்பொழுது ஆனைமுகக் கடவுளை வழிபட்டுக் கொண்டிருந்த திரிசிரன் ஆனைமுக அந்தணரைக் கண்டவுடன் விரைந்தெழுந்தான். எதிர்கொண்டு கீழே விழுந்து பணிந்தான். இரண்டு கைகளையுந் தலைமேற் கூப்பிக்கொண்டு நின்றான். ஆனைமுகக் கடவுள் திரிசிரனுக்கு அருள் நோக்கம் வழங்கினார். பிறகு அவனைப் பார்த்து, ''அன்பனே! செல்வச் சிறப்புடைய சனக மன்னன் அரண்மனைக்குச் சென்றோம். அவன் நம்முடைய பசியைச் சிறிது போக்கினான். எஞ்சிய பசியையும் போக்கிக் கொள்ளுமாறு உன்னுடைய இடத்திற்கு வந்தோம்,'' என்று புன்னகையோடு புகன்றருளினார். ஆனைமுகக் கடவுள் புகன்ற செய்தியைத் திரிசிரன் மனைவியாகிய விரோசனை கேட்டாள். அவள் ஆனைமுகக் கடவுளாகிய அந்தணனைப் பணிந்து, ''அடிகாள்! தடாகம் முழுவதையுங் குடித்துத் தணியாதிருக்கின்ற கொடிய தாகம் அதிலிருந்து கொண்டு

வந்த சிறிது நீரால் தணியப் போகின்றதா? நேற்று வரையில் ஐயமேற்றலால் அகப்பட்டதை உண்டு கொண்டிருந் தோம். இன்றைக்கு அதுவுமில்லாமல் இருக்கின்றோம். ஆனைமுகக் கடவுளை வழிபட்டு எஞ்சிய ஓர் அறுகு மட்டும் இருக்கிறது. அதனையன்றி வேறொன்றுமில்லை,'' என்று கூறினாள்.

அறுகைப் பெறுதல்

இவ்வாறு தங்களுடைய வறுமையை விரோசனை விளம் பியதும் அந்தணராய் வந்த ஆனைமுகக் கடவுள் உள்ளம் இரங்கினார். விரோசனையைப் பார்த்துப், "பெண்களுட் சிறந்தவளே! அன்பில்லாத உள்ளத்தையுடைய செல்வர்கள் கோடிக்கணக்கான பொருளைக் கொடுத்தாலும் நாம் அதனை விரும்ப மாட்டோம். எளியவர்கள் அன்போடளிப்பது எள்ளளவாயினும் அதுவே நமக்குச் சிறந்ததாகும். அவ்வாறு கொடுப்போர்க்கு நல்வினையும் அதனைப் பெறுவோர்க்குப் புகழும் உண்டாகும். நீங்கள் புல்லை எவ்வாறு உணவாகக் கொடுப்பது என்று சிறிதும் எண்ணமிடவேண்டாம். அதுவே எமக்கு நல்ல உணவாகும். ஆதலால் விரைவிற்சென்று அப்புல்லைக் கொண்டுவந்து கொடுப்பீர்களாக,'' என்று கூறினார். விரோசனை அவ்வறுகை எடுத்துக் கொண்டுவந்து நீட்டினாள். அதனைத் தம்முடைய கையினால் வாங்கி மென்று தின்று ஏப்பமிட்டனர்.

அருள் புரிதல்

ஆனைமுகக் கடவுளுடைய திருவருளினால் அக் கணத் திலேயே அவர்களுடைய பழைய கூரைவீடானது தங்க மயமான மாளிகையாக மாறிவிட்டது. அம்மாளிகைக்குள்ளே சோறு முதலிய எல்லாவகையான உணவுப் பொருள்களும், பொன், வெள்ளி, நெல் முதலான அளவற்ற செல்வங்களும் நிறைந்திருந்தன. அவைகளைக் கண்ட திரிசிரனும் விரோசனையும் அளவு கடந்த வியப்படைந்தார்கள். தங்களைப்

பொருந்தியிருந்த வறுமைக்கு விடை கொடுத்தனுப்பினார்கள். மிதிலை நகரினும் அதையடுத்த நாடுகளினுமிருந்து அவரவர்கள் முன்னர்க் கொண்டுவந்திருந்த பொருள்களெல்லாம் பின்னர் நூறு மடங்கு மிகுதியாக அவரவர்கள் வீட்டில் உண்டாயின. இப் புதுமையைக் கண்டவர்களெல்லாரும் மிகுந்த வியப்படைந்தார்கள்.

காட்சி நல்கல்

அந்தணக் கோலத்தோடுவந்திருந்த ஆனைமுகக்கடவுள் அவ்வடிவத்தை நீக்கித் தம்முடைய மெய்வடிவத்தைத் திரிசிரனுக்கும் விரோசனைக்குங் காட்டியருளினார். இருவருந் திகைப்படைந்தார்கள். அன்பும் அச்சமுங் கொண்டார்கள். மலர்களைக் கொண்டு வழிபாடு செய்து திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். பல புகழ்ப்பாக்களைப் பாடி இன்பக் கூத்தாடினார்கள். "அளவற்ற பிறவிகள் தோறும் செய்து முடித்த தவத்தினுங் கிடைத்தற்கரிய அருள்வடிவமே! தேவரீருடைய திருவடிகள் எளிதிற் பெற்றேமாகையால் இனிமேல் யாங்கள் இவ்வுலக வாழ்வை விரும்புகின்றிலம். தேவரீருடைய திருவடி நீழலில் இருக்கத் தக்க பேற்றினைக் கொடுத்தருளவேண்டு"மென்று வேண்டிக்கொண்டார்கள். ஆனைமுகக் கடவுள் அருள் செய்தார். அவர்களைப் பார்த்து, "அன்பர்களே! நீங்கள் அகம்பிரமம் என்று எண்ணியிருக்கும் இந்நாட்டரசன் நாணத்தை யடையுமாறு பெருஞ் செல்வத்தோடு வாழ்ந்திருந்து பிறகு திருவடிப் பேற்றினைப் பெறுவீர்களாக," என்று திருவாய் மலர்ந்தருளினார்.

சனகன் அருள் பெறுதல்

சனக மன்னன் தன்னுடைய அரண்மனையிலும் தனது ஆட்சியில் அடங்கியிருக்கிற நாடு நகரம் முதலிய எல்லாவிடங்களினும் அளவற்ற செல்வங்கள் அமைந்திருப்பதைப் பார்த்து மிகுந்த வியப்படைந்தான். தன்னிடம் உணவு வேண்டி வந்த அந்தணன் கடவுளேயாகும் என்று உறுதி

செய்தான். உடனே விரைவாக எழுந்து திரிசிரனுடைய மனைக்குச் சென்றான். இருக்கு முதலிய நான்கு மறைகளாலும் அறியப் பெருதவராகியும் அன்பர்களுடையஉள்ளமே கோயிலாகவும் வீற்றிருக்கும் ஆனைமுகக் கடவுளை எண் வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தான். கைகளைத் தலைமேற் குவித்துத் தொழுதான். "அறியாமையினால் அகம்பிரமம் என்று எண்ணி ஆணவங் கொண்டு நிரயத்தில் வீழ்ந்து மூழ்கிப் போவதற்கிருந்த அடியேனை அவ்வாறு மூழ்கிப் போகவிடாமல் தடுத்து நல்லறிவைக் கொடுத்தருளிய பெருமானே! தேவரீருடைய திருவருளுக்கு வணக்கம். நாரதமுனிவர் நவின்ற நல்வழிகளைச் சிறிதும் உணராதிருந்த சிறியேனைக் கரை சேர்க்குமாறு எழுந்தருளிய பெருமானே! தேவரீருடைய பேரருளுக்கு வணக்கம்," என்றிப்படிப் பலவாறு புகழ்ந்து போற்றினான். ஆனைமுகக் கடவுள் அருளுடையவராய், "ஓ அரசனே! இதுவரையிலும் உன்னிடத்தில் நிலைபெற்றுப் பிரமஞானம் போலிருந்த ஞானம் பிரமஞானம் அன்று. அது மயக்கத்தினால் உண்டாகிய அறிவு. உன்னைப் பிரமம் என்று எண்ணியது மறைமொழிகளைக் கொண்டா? குருவின் அருளுரையைக் கொண்டா? அல்லது உன்னுடைய நடைமுறையைக் கொண்டா? மறைமொழியைக் கொண்டெனின், 'ஏகமே வாத்வைதம் பிரஹ்மா' என்கிற மொழியில் பிரமம் ஒன்றே அது, அதனின் வேருக எண்ணப்பட்ட பதி பசு பாசங்களில் ஒன்ருகாமலும் வேருகாமலும், ஒன்ருகியும் ஒன்றல்லவாகியும், வேருகியும் வேறல்லவாகியும் வேருக இருப்பது என்று பொருள்படுகிறதேயல்லாமல், பிரமம் ஒன்றே என்றும் அப்பிரமத்தைத் தவிர இரண்டாவது பொருள் இல்லையென்றும் அப்பிரமம் நீயே என்றுமா பொருள் படுகின்றது? அப்பொருளே உண்மையாயின், 'அது நீயாகுய்' என்னும் தத்துவமசி வாக்கியமாகிய ஆசிரியன் அருளுரைக்கு என் செய்வாய்? ஏனெனின் இரண்டாவது பொருள் இல்லையாயின் அது என்பது எது? நீ என்பது யார், 'ஆனாய்' என்னும் நடைமுறைநிலை எது? உன்னுடைய நடைமுறையெனின், உண்ணும் பொருளைக் கண்டால் உண்பதும்,

உறக்கம் வருங்காலத்தில் உறங்குவதும் ஆகிய இத்தகைய செயல்களைத் தவிர வேறென்ன பயன் உண்டாகியுள்ளது ?" என்று இப்படிப் பலவாறு அருளுரை கூறிச் சனகனுடைய உள்ளத்தைத் தெளிவித்தார்.

## 54. அறுகு துலையேறியது

### ஆசிரியை ஐயம்

சூரசேனன் தேவேந்திரனைப் பார்த்து மேலுங் கூறுகின்றான். ஆனைமுகக் கடவுள் சனக மன்னனிடத்தில் தொழுநோயுடையவராகச் சென்று அவனுடைய பிறவிப் பிணியைப் போக்கித் தம்மை வழிபட்டுவரும் கவுண்டின்னிய முனிவர்பால் எழுந்தருளிய பின்னர், அம்முனிவருடைய மனைவியாகிய ஆசிரியை ஒருநாள் தன் கணவரைப் பார்த்து, "நம்முடைய கடவுளாகிய ஆனைமுகப்பெருமானின் திருவிளையாடலைக் கேட்டு மகிழவேண்டும் என்னும் விருப்பமுடையவளாக இருக்கின்றேன்" என்று சொல்ல, முனிவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தவராய் ஆனைமுகக் கடவுள் அப்பொழுது நிகழ்த்திய அறுகிரந்த விளையாடலை எடுத்துச் சொன்னார். ஆசிரியை அதனைக் கேட்டு மிகுந்த ஐய முடையவளானாள். அவள் முனிவரைப் பார்த்து, "என்னுடைய ஆருயிர்த்தலைவரே ! நாம் அந்த மிதுலாபுரி அந்தணனைப் பார்க்கினும் மிகுதியான அறுகைக் கொண்டுவந்து பூசை செய்து மலைமலையாகக் குவிக்கின்றோமே. ஆனைமுகக் கடவுள் நமக்குப் பெருஞ் செல்வத்தைக் கொடுக்காமல் வறுமையை வளர்த்து வருகின்றாரே ; இதற்கு யாது காரணம் ?" என்று கேட்டாள்.

### முனிவர் அறுகுகொடுத் தனுப்புதல்

எளிதில் எல்லாவகையான செல்வங்களையும் பெற்றுக் குபேரன் முதலியோரும் போற்றத்தக்க உயரிய நிலையில் இருக்கத்தக்கவரான பெருந்தவமுடைய கவுண்டின்னியர்

தம்முடைய மனைவி கூறியதைக் கேட்டுப் புன்னகை செய்தார். அறுகின் பெருமையை எல்லோரும் அறிந்துகொண்டு அதனுல் வழிபாடுசெய்து சிறப்படைய வேண்டுமென்று திருவுளத்தில் எண்ணினுர். மனைவியைப் பார்த்து, "நான் ஓர் அறுகு தருகின்றேன். அதனை யெடுத்துக்கொண்டு கற்பகமரம் முதலிய பெருஞ் செல்வம் படைத்த தேவேந்திரனிடத்திற்குப்போய் அவனிடம் அந்த அறுகைக்கொடுத்து, 'இதனுடைய நிறை எவ்வளவோ அவ்வளவு நிறை பொன் தரவேண்டும்,' என்றுகேட்டு வாங்கி வருவாயாக" என்று கூறித் தாம் வழிபாடு செய்த அறுகுகளில் ஒன்றை எடுத்துக் கொடுத்தார்.

ஆசிரியை விண்ணுலகடைதல்

ஆசிரியை தன்னுடைய கணவன் கொடுத்த அறுகை வணங்கிப் பெற்ருள். மிகு விரைவாக விண்ணுலகத்திற்குச் சென்று தேவர்கோனைக் கண்டாள். அவனைப் பார்த்து, "ஓ தேவர்கோவே! என்னுடைய கணவராகிய கவுண்டின்னிய முனிவர் இவ்வறுகை உன்னிடத்திலே கொடுத்து இவ்வறுகின் நிறைக்குத் தக்க பொன்னை வாங்கிவருமாறு கட்டளையிட்டனுப்பினுர்," என்று சொன்னுள். இதனைக் கேட்ட தேவர்கோன் மிகுந்த வியப்படைந்தான் ஆசிரியையை வணங்கிப் போற்றினுன். "தாயே! இவ்வறுகைக் குபேரனிடங் கொண்டு செல்வீராயின் இவ்வறுகின் நிறைக்குத்தக்க பொன்னையன்றி உமக்கு மேலும் வேண்டிய பொருளையும் பெறலாம்" என்று கூறினுன். தன்னுடைய தூதர்களைத் துணையாக அனுப்பினுன். ஆசிரியை குபேரனிடஞ் சென்ருள். குபேரன் ஆசிரியைக்குச் செய்யவேண்டிய சிறப்புக்களை யெல்லாஞ் செய்து போற்றினுன்.

தூதர்கள் செய்தி சொல்லுதல்

தூதர்கள் குபேரனைப் பார்த்து, "ஐயா! இந்த அம்மணியார் தம்முடைய கையில் வைத்திருக்கும் அறுகின்

நிறைக்குத் தக்க பொன்கொடுத்தனுப்புமாறு தங்களிடந் தெரிவிக்க இந்திரன் எங்கட்குக் கட்டளையிட்டுள்ளார்,'' என்று கூறினர்கள். இதனைக் கேட்ட குபேரன் "இவ்வறுகி னளவு பொன் கொடுப்பதற்காகவா இந்திரன் என்னிடம் அனுப்பினன்; ஆ ஆ மிக நன்ருக இருக்கிறது!'' என்று கூறிக் குறுநகை புரிந்தான். அளவிறந்த பொன்னைக் கொண்டுவந்து மலைபோற் குவிக்கச்செய்தான். பிறகு ஆசிரியையைப் பார்த்து, "ஓ அம்மணி! இவ்வறுகு எவ்வளவு? இதற்கு எவ்வளவு பொன் நிறையில் கிடைக்கப் போகிறது? இதனல் எவ்வாறு வறுமை ஒழியும்? ஆகவே, எவ்வளவு பொன் வேண்டுமோ அவ்வளவு பொன்னையும் எடுத்துக் கொண்டு போகலாம்,'' என்று மிகுந்த பெருமையோடு சொன்னன். ஆசிரியை குபேரனைப் பார்த்து, "ஓ குபேரனே! நீ உன்னுடைய செல்வச் சிறப்பிற்குத்தக்க மொழிகளையே செப்பினய். அதனைக் குறித்து எனக்கு மிகுந்த மகிழ்ச்சியே. ஆனலும், இவ்வறுகின் நிறைக்குரிய பொன்னையே வாங்கி வருமாறு என்னுடைய கணவனர் எனக்குக் கட்டளை யிட்டுள்ளார். உன்னுடைய அவாவின் அளவுக்குத்தக்க பொன்னைப் பெற்றுக்கொண்டு வருமாறு கட்டளையிடவில்லை. கற்புடைய மங்கையர்கட்குக் கற்பெனப் போற்றப்படுவது சொல்திறம்பாமையேயாம். ஆகவே, இவ்வறுகை ஒரு நிறை கோலில் இட்டு இதன் அளவுக்குத்தக்க பொன்னைக் கொடுத்தல் வேண்டும்,'' என்று கேட்டாள். குபேரன் அம்மையார் கூறியதைக் கேட்டு மிகுந்த வியப்படைந்தான். அம்மையாருடைய கற்புடைமையை வியந்து பாராட்டினன். உடனே ஒரு நிறைகோலைக் கொண்டுவந்து நாட்டச் செய்தான். ஆசிரியை தன் கையிலிருந்த அறுகை ஒரு தட்டில் வைத்தாள்.

### குபேரன் பொன்னளிக்கத் தொடங்குதல்

குபேரனுடைய ஏவலர்கள் "இந்த ஓர் அறுகிற்காகவா நம்முடைய தலைவர் இவ்வளவு பெரிய நிறைகோலை நாட்டினர். இது நல்ல புதுமைதான்'' என்று தங்களுக்குள்ளே எண்ணினர்கள். சிறிது பொன்னையெடுத்து மற்ருெரு தட்டில்

வைத்தார்கள். அறுகு வைத்த தட்டு நிலத்தினும் பொன் வைத்த தட்டு விண்ணினுமாக நின்றன. இதனைக் கண்ட குபேரன், "இஃதன்ன புல் பொன்னுயிற்றுப், பொன் புல்லாயிற்று! இதுவன்றோ புதுமையினும் புதுமை!'' என்று பெருமூச்செறிந்தான். ஏவலாளர்களைப் பார்த்து, "யான் இவ்வறுகை எளிதாக எண்ணினேன். இஃது எளிதான தன்று ; தெய்வத் தன்மையுள்ளதாகத் தெரிகின்றது. இச் செய்தியை உணர்ந்துதான் இதிலகப்படாமல் இந்திரன் ஒதுங்கிக்கொண்டான்போல் இருக்கிறது. இது நம்முடைய பொருளறையில் உள்ள பொன்னையும் என்னையுங் கொள்ளை கொள்ளும்போல் தெரிகின்றது. இனி அதனை எண்ணுவ தாற் பயனில்லை. நான் இவ்வம்மையார்க்கு இவ் வறுகின் நிறைக்கு மேலும் பொன்னைக் கொடுப்பதாக வாக்களித்து விட்டபடியால் இனிமேல் கொடுக்க முடியாதென்று கூற முடியாது. ஆகவே, நீங்கள் அறுகின் அளவுக்குச் சரியாகப் பொன்னைக் கொடுக்க வழி தேடுங்கள்'' என்று சொன்னுன்.

### கணக்கற்ற பொன்னை யிடுதல்

ஏவலாளர் குபேரனுடைய நோக்கத்தை யறிந்தனர். முன் நிறைகோலில் வைத்துள்ள பொன்னோடு மேலும் ஒரு தொடியளவு பொன்னைத் தட்டிலிட்டனர். அதற்கும் தட்டு இறங்கவில்லை. பிறகு ஒரு தூக்களவு பொன்னைத் தட்டில் தூக்கிவைத்தார்கள். அப்பொழுதுந் தட்டுக் கீழே யிறங்க வில்லை. பிறகு ஒரு துலாம் அளவு பொன்னை வைத்தார்கள். அப்பொழுதுந் தட்டு அப்படியே இருந்தது. இதனைக் கண்ட ஏவலாளர்கள் பொன்னைக் கண்டபடி மலைபோற் குவித்துத் தட்டைச் சரிசெய்ய முயன்றனர். எவ்வளவு பொன்னையிட்ட பொழுதிலும் தட்டு அப்படியே இருந்தது. இதனைக் கண்ட குபேரன் மேலும் பெருவியப்புக் கொண்டான். "இந்தப் புல் நல்ல புல்தான். இந்தப் புல்லின் நிறையளவு பொன் தந்தால் போதுமென்ற பெண்ணும் நல்ல சூழ்ச்சியுடையவள் தான். இச்சூழ்ச்சியை ஏற்பாடு செய்து அனுப்பிய முனிவரும் நல்ல முனிவர்தாம். நாம் இப்புல்லின் தன்மையை உண

ராமல் அகப்பட்டுக் கொண்டோம். இனிமேல் பலவற்றை எண்ணி ஆகப்போவதென்ன?'' என்று எண்ணினன். தன்னுடைய நகரத்திலுள்ள பொருள்களையெல்லாம் வரவழைத்து மேலோங்கியிருக்குந் தட்டில் வைத்தான். அப்பொழுதுந் தட்டு இறங்கவில்லை. இதனைக் கண்ட குபேரன் இத்தட்டுக் கீழுலகை நாடிக் கீழே இறங்காது. மேலுலகை நாடி மேலே போவதால் நாமும் மேல் உலகிற்குப் போவோம் என்று துணிந்தவனைப்போல் தன் மனைவியோடு நிறைகோலை வலம் வந்து வணங்கி அத் தட்டிலேறினன். அப்பொழுதும் அத் தட்டுக் கீழிறங்காமல் இந்திரனுலகை எட்டியது. அதனை இந்திரன் கண்டு, இஃதென்ன? குபேரன் தனக்குரிய புட்பக விமானத்தை விட்டுத் தட்டில் வந்திருக்கிருன். புட்பக விமானத்தை யாவர் கைப்பற்றிக்கொண்டனர் என்று எண்ணிக் குபேரனை நெருங்கினன்.

**எல்லோரும் முனிவரை அடைதல்**

குபேரன் இந்திரனைப் பார்த்து, "ஐயா! தேவர் கோனே! நான் உமக்கு என்ன குற்றஞ் செய்தேன்? உலகினர், 'செல்வத்திற் சிறந்தவன் குபேரன்' என்று என்னை இதுவரையில் வழங்கி வந்தார்கள். நெடுநாளாக வழங்கி வந்த புகழை 'ஒரு புல்லுக்கு நிகராகுமா குபேரனுடைய செல்வம்' என்று எல்லோரும் இகழ்ந்துரைக்குமாறு செய்துவிட்டீர்'' என்று சொன்னன். இந்திரன் குபேரன் இயம்பிய குறிப்பை உணர்ந்தான். "இவ்வளவு கனமுள்ள புல்லும் உலகத்தில் இருக்கின்றதா? அவ்வாருனல் நானும் என்னுடைய செல்வங்களோடு ஏறுகிறேன். அப்பொழுதாவது கீழே இறங்குகிறதா பார்ப்போம்'' என்று ஏறினன். அத்தட்டு இந்திரனையும் ஒரு பொருளாக மதித்துத் தாழவில்லை. இந்திரன் தனக்கு நேர்ந்துள்ள இழிவைப் போக்கிக் கொள்ள முத்தேவர்களையும் எண்ணினன். முத்தேவர்களும் வந்தார்கள். தட்டிலேறியுள்ளவர்களைப் பார்த்து வியந்தார்கள். தாங்களும் உடன் வந்த திருக்கூட்டத்தோடு தட்டிலேறினர்கள். அப்பொழுதும் அத்தட்டு நின்ற நிலையி

லேயே இருந்தது. அதனைக் கண்டு எல்லாரும் வியந்தார்கள். தங்கள் தங்கள் செல்வங்களை மிகச் சிறிது என்று எண்ணினார்கள். கவுண்டின்னியருடைய பெருமையைப் பெரிதாக மதித்தார்கள். இவ்வறுகு அம்முனிவருடைய தெய்வமாகிய ஆனைமுகக் கடவுளுடைய திருமுடியிற் சூட்டிய அறுகாக இருக்கும் என்று எண்ணினார்கள். சிவபெருமான் தேவர்களைப் பார்த்து, "அன்பர்களே! நாம் அனைவரும் இத் தட்டை விட்டிறங்கிக் கவுண்டின்னிய முனிவர்பாற் போவதே தக்கது," என்று கூறினார். அனைவரையும் தட்டைவிட்டிறக்கி அவரவர் ஊர்திகளுடன் வருமாறு செய்து தாமும் காளையூர்தியின்மேற் கவுண்டின்னிய முனிவர்பாற் சென்றார்.

முனிவர் பணிதல்

சிவபெருமான் வருகையைக் கண்ட முனிவர் திடுக்கிட்டெழுந்தார். எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தார். இருகைகளையும் குவித்து வணங்கி இன்பக் கூத்தாடிப் பாடிநின்றார். "அடியேன் செய்துவந்த தவத்தின் பயன் இன்று கிடைக்கப் பெற்றேன். இவ்வாறு எளிதாக வந்து காட்சி கொடுத்ததற்கு அடியேன் யாது நல்வினை செய்தேனோ அறியேன். ஆனைமுகக் கடவுளை அறுகினால் வழிபட்டுவந்த பயன்தானோ இது?" என்றார். சிவபெருமான் அருள்கூர்ந்து, "அறுகின் பெருமை இம்மட்டு மன்று. அதனை அளவிட்டுக் கூறுதலும் அருமை. சிறப்புமிக்க அறுகினைக் கொண்டு ஆனைமுகனை அன்போடு வழிபட்டு வருகின்ற உனக்கு யாது குறையுளது? நீயே நல்வினையுள்ளவன். உன்னைப்போன்ற அன்பர்கள் எவருமிலர். உனக்கு அளவிடற்கரிய செல்வத்தைக் கொடுத்தோம்," என்று அருள்புரிந்து மறைந்தருளினார். மற்றைத் தேவர்களும் வாழ்த்துரை வழங்கிச் சென்றனர்.

செல்வச் சிறப்படைதல்

பிறகு சிவபெருமானுடைய கட்டளையின்படி கற்பகமரம் காமதேனு முதலியன கவுண்டின்னிய முனிவர்பால் குடியா

விருந்து குறிப்பறிந்து வேண்டியவைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தன. இந்தப் புதுமையை ஆசிரியை கண்டாள். அவள் தன்னுடைய கணவனை வணங்கி, "என் ஆருயிர்த் தலைவரே! இன்றுதான் ஆனைமுகக் கடவுளுடைய பெருமையையும் அவருடைய அறுகின் சிறப்பையும், அக்கடவுளை இடைவிடாது வழிபட்டுவரும் தேவரீருடைய பெருமையையும் அறியலானேன்" என்று போற்றினுள். அன்று முதல் தானும் அறுகினுல் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு வந்தாள்.

### தேவகணங்கள் முடிவுரை

ஆகையால் நீங்களும் அவ்வறுகைக்கொண்டு ஆனைமுகக் கடவுளை வழிபடுவீர்களாக," என்று கூறித் தேவகணங்கள் விமானத்தைச் செலுத்திக்கொண்டு ஆனைமுகக் கடவுளின் உலகத்தை அடைந்தன. அவ் விமானத்தில் ஏறிச் சென்ற மூவரும் பிறவித் துன்பத்தை யொழித்து விண்ணுலகத்தில் நுகரத்தக்க இன்பங்களை நுகர்ந்து இறுதியில் ஆனைமுகக் கடவுளின் திருவடியில் இரண்டறக் கலந்தனர்.

### முனிவர்களும் நற்கதியடைதல்

அறுகின் பெருமையைக் கேட்ட முனிவர்களும் அறுகுகளைக் கொண்டு ஆனைமுகக் கடவுளை வழிபட்டார்கள். அவர்களும் விமானங்கள் வர அவைகளிலேறி ஆனைமுகக் கடவுளின் உலகத்தை அடைந்தார்கள். இப் புதுமையைக் கண்ணாரக் கண்ட அவ்வூரார்களும் அறுகினுல் வழிபட்டு மேலுலகஞ் சென்று இன்ப வாழ்வடைந்தார்கள். ஆகையால் உன் மகனுகிய கிருதவீரியனையும் அறுகைக் கொண்டு ஆனைமுகக் கடவுளின் சங்கட சதுர்த்தி நோன்பை நிறைவேற்றச் செய்வாயாக" என்று நான்முகன் பிதிர்த் தேவனுக்குக் கூறியருளினுன்.

## 55. வன்னியின் பெருமை

### முன்னுரை

சவுனகாதி முனிவர்களே! ஆனைமுகக் கடவுளினுடைய திருவடிகளில் சேர்க்கும் அறுகுக்கு இந்திரன் முதலானவர்களுடைய செல்வமும் ஒப்பாகாது என்று விளக்க அறுகு நிறைகோல் ஏறிய வரலாற்றைச் சொன்னோம். இனிமேல் வன்னியின் பெருமையை இந்திரன் சூரசேன மன்னனுக்குக் கூறிய வரலாற்றைக் கூறுகின்றேன்.

### வினவும் விடையும்

பிதிர்த்தேவன் நான்முகனைத் தொழுது, "அறுகு அகப்படாமற போனால் அப்பொழுது ஆனைமுகக் கடவுளை எதனால் வழிபடுவது?" என்று கேட்டான். நான்முகன் பிதிர்த்தேவனைப் பார்த்து, "ஆனைமுகக் கடவுளுக்கு அறுகைப்போல் சிறந்த பொருள் ஒன்றுங் கிடையாது. ஆயினும் அவ்வறுகைப்போல் வன்னியிலையும் மந்தார மலரும் அக்கடவுளுக்கு விருப்பமானவைகளாம். இவைகளுள் வன்னிதான் மிகச் சிறந்தது. வேறெப்பொருளில்லாவிட்டாலும் வன்னியொன்றிருந்தாற் போதும். இதனைக் கொண்டு வழிபடுவதாலும் எல்லா வகையான பேறுகளையும் பெறலாம். ஆகவே, அறுகு அகப்படாமற் போனால் வன்னியைக்கொண்டு வழிபடவேண்டும். வன்னியைக் கொண்டு வழிபட்டவர்கள் பெற்ற பேற்றினையும் கூறுகிறேன் கேட்பாயாக!

### வீமன் என்னும் வேடன்

விதர்ப்ப நாட்டில் எல்லா வகையான செல்வங்களும் நிறைந்து விளங்கிய ஆதாம் என்னும் நகரம் ஒன்று இருந்தது. அந்நகரத்தில் வீமன் என்னும் பெயருடைய வேடன் ஒருவன் இருந்தான். அவன் இரக்கம் என்பதையும் நன்மை யென்பதையுஞ் சிறிதும் உணரான். மனிதர்கள், விலங்குகள், பறவைகள் முதலியனவும் உலகில் வாழ்ந்திருக்கவேண்டும்

என்பதைச் சிறிதும் எண்ணிப் பார்க்கமாட்டான். தான் ஒருவன் மட்டும் உலகில் வாழவேண்டும் என்று எண்ணுவான். இத்தீவினையாளன் வழியிற் செல்லுகின்றவர்கள் எவராயினும் அவர்களை வழிமறித்துப் பொருளைப் பறிப்பான். விலங்குகளைக் கொன்று அவைகளின் தோலை விலைக்கு விற்பான். இவ்வாறு அவன் வாழ்ந்து கொண்டிருக்கிற காலத்தில் அந் நகரத்தில் உள்ள சிவன் கோயிலில் திருவிழா நடைபெற்றது. அவ் விழாவினைக் காணும்பொருட்டுப் பக்கத்தூரில் இருந்த அந்தணர்கள் வந்தார்கள். அவர்கள் விழாவினைப் பார்த்து விட்டுத் திரும்பித் தங்களூருக்குச் சென்றார்கள். அவர்களைக் கண்ட வேடுவன் விரைந்து சென்று வழியை மறித்தான். "ஓ அந்தணர்களே! இந்த உடலை ஏன் சுமந்து கொண்டிருக்கின்றீர்கள். இதுவுமல்லாமல் பொன்னையுந் துகிலையும் ஏன் சுமக்கின்றீர்கள்? இச்சுமை உங்கட்கு ஆகமாட்டா. இவைகளை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்," என்று இனிய மொழிகளைக் கூறுவான்போன்று அவர்களை நெருங்கி அவர்களுடைய பொருளைப் பறித்துகொண்டு அவர்களைக் கொலை செய்தான்.

**அரக்கன் தொடர்தல்**

வேடன் அந்தணர்களைக் கொலைசெய்த அளவில் அரக்கன் ஒருவன் வேடனைப் பின்தொடரத் தொடங்கினான். அவனுடைய ஆரவாரம் பெரிதாக இருந்தது. ஆரவாரத்தைக் கேட்ட வேடன் திரும்பிப் பார்த்தான். ஓர் அரக்கன் தன்னைத் துரத்தி வருதலைக் கண்டான். இனிமேல் நாம் பிழைக்கப் போகிறதில்லையென்று அஞ்சி விரைந்தோடி அங்கிருந்த ஒரு வன்னிமரத்தில் ஏறினான்.

**வன்னியிலை வீழ்தல்**

இவனேறிய விரைவினால் ஓரிலை உதிர்ந்து அதன் அடியில் எழுந்தருளியிருந்த ஆனைமுகக் கடவுளின் மீது விழுந்தது. வேடனைப் பின்தொடர்ந்த அரக்கனும் அவ்வேடனைப் பிடிப்பதற்காக அம்மரத்தில் ஏறினான். அவனேறிய விரைவினாலும்

ஓரிலை முன்போல் ஆனைமுகக் கடவுளின்மீது வீழ்ந்தது. மரத்திலேறிய இருவரும் ஒருவரையொருவர் கைகளால் இறுக்கிப் போரிட்டுக்கொண்டு குண்டுக்கட்டாய் நிலத்தில் விழுந்தார்கள். வீழ்ந்த விரைவினுல் இருவரும் இறந்தார்கள். உடனே பொன் விமானம் வர அதிலேறி ஆனை முகக் கடவுளின் உலகத்தை அடைந்தார்கள்.

**பழங்கதை**

ஓ பிதிர்த்தேவனே ! இந்த இரண்டுபேரும் முன் பிறப்பிற் செய்த தீவினையினுல் தீய காரியங்கள் செய்து நல்வினையினுலும் நல்லகதியை அடைந்தார்கள். அதனையுங் கூறுகிறேன். முன்கூறிய விதர்ப்பநாட்டில் புண்ணிய கீர்த்தி என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் கல்வியிற் சிறந்தவன் ; கொடை கொடுப்பதில் வள்ளல். வேள்விகள் செய்வதிற் சலிப்பில்லாதவன். அவ்வரசன் மதனுவதி என்னுந் தன்னுடைய மனைவியோடு இன்ப நலத்தை நெடுநாள் நுகர்ந்து இனிது வாழ்ந்திருந்தான். பிறகு மறுவுலகத்தையடைந்தான். அவனுடைய மனைவியும் உடன்கட்டையேறி மாய்ந்தனள். அவர்கட்குப் பேறில்லாமை யினுல் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளை அமைச்சர்கள் செய்து முடித்தனர். பிறகு ஒரு திங்கள் சென்ற பிறகு புதிய அரசனை ஏற்படுத்த எண்ணினர். எண்ணிய அவர்கள், நம் அரசனுடைய உறவினர்களில் துத்திரிடராசனுக்குச் சாம்பன் என்னும் பெயருடைய ஒருமகன் இருக்கின்றுனன்றே அவனை அரசனுகக் கொள்வோம் என்று முடிவு செய்தார்கள். அவனுடைய பிறப்பைச் சிறிதும் ஆராய்ந்து பாராமல் அவனுக்கு முடிசூட்டி அரசாட்சி செய்யச் செய்தனர். சாம்பன் நெடுநாள் ஒழுங்காக அரசாட்சி செய்தான்.

**சாம்பன் கொடுங்கோலனுகுதல்**

பிறகு பிறப்பின் தொடர்பான தீக்குணம் வரச் சாம்பன் அரசநெறி தவறி அசுரநெறியை மேற்கொள்ளத் தொடங் கினுன். நாள்தோறுங் கள்ளருந்தினுன். உயிர்களைக்

கொலைபுரிந்துண்டான். பிற மாதர்களைத் தழுவினான். பிறர் பொருளைக் கொள்ளையடித்தான் இவ்வாறு தீய செயல்களைச் செய்து தன்னுடைய நாட்டைக் காடாக்கினான்.

### துர்ப்புத்தி

அமைச்சர்கள், "இஃது அறமன்று" என்று கூறினார்கள். அவர்களை அப்பொழுதே சிறையிலடைத்து ஒறுத்தான். தன்னோடு ஒத்து நடக்கின்றவர்களைத் தன்னுடைய கண்ணெனக் கொண்டு போற்றுவான். இவனுடைய தன்மையை அமைச்சர்களில் கொடியவனாகிய துர்ப்புத்தி என்பவன் அறிந்துகொண்டு அரசனுடைய போக்குக்கு இணங்க நடந்தான். சாம்பன் துர்ப்புத்திக்குத் தன்னுடைய அதிகாரத்தைக் கொடுத்து, "நம்முடைய செயல்களை எவரேனும் இகழ்வார்களானால் அவர்களை உன்னுடைய விருப்பப்படி கொலை செய்வாயாக" என்று முழு அதிகாரங் கொடுத்தான். தான் விரும்பிய மாதர்களைத் தழுவி அவர்களுடைய இன்ப வெள்ளத்தில் படிந்திருந்தான். அரசனிடத்தில் முழு அதிகாரமும் பெற்ற துர்ப்புத்தி தன்னுடைய பெயருக்கேற்பப் பலவகையான தீமைகளையும் ஒழிவில்லாமற் செய்து எல்லாரையுந் திடுக்கிடச் செய்து கொடுங்கோல் செலுத்திக் கொண்டிருந்தான்.

### சாம்பன் பிறப்பு

பிதிர்த்தேவன் நான்முகனைப் பார்த்து, "முன்பு அமைச்சர்கள் இவனுடைய பிறப்பியலுணராமல் முடி சூட்டினர் என்று கூறினீரன்றோ? அப்பிறப்பியல்பு யாது? அதனைக்கேட்க விரும்புகின்றேன்" என்று சொன்னான். நான்முகன் பிதிர்த்தேவனைப் பார்த்து, "அச் சாம்பனுடைய தந்தையாகிய துத்தரிடன் அசுரர்களோடு கூடிவாழும் இயல்புடையவன். அதனால் தீத்தொழில் புரிவதற்கு அஞ்சாதவனாய் அசுரர்களைப் போலவே தீய காரியங்களைச் செய்து கொண்டு திரிந்தான். ஆயினும் மக்கட்பேறில்லாதவனாக வருத்தமடைந்து சிறிது தானதருமங்களுந் தவமுஞ் செய்

தான். என்ன செய்தும் மக்கட்பேறுண்டாகவில்லை. அதனால் மனைவியை வெறுத்திருந்தான். அக்காலத்தில் அவள் காமக்காழ்ப்பேறி ஒரு வலைஞனைக் கூடி இந்தச் சாம்பனைப் பெற்றாள். அதனால்தான் சாம்பன் தீயவனாக இருந்தான். பிறகு சாம்பன் ஒருநாள் அமைச்சர்களோடு காட்டிற்குச் சென்று வேட்டையாடிக்கொண்டிருந்தான். அப்பொழுது ஆனைமுகக் கடவுள் கோயில் ஒன்றை அங்குக் கண்டான். அக் கோவிலுக்குப் போய்ப் பூசைகள் முதலியன சிறப்பாகச் செய்து அமைச்சர்களோடு தன்னுடைய அரண்மனைக்குச் சென்றான்.

இறந்து நிரயமடைதல்

சாம்பன் மேலும் பல தீவினைகளைச் செய்துகொண்டிருந்து இறந்தான். இறந்த சாம்பனையும் கொடிய அமைச்சனையும் இயமதூதர்கள் கொண்டுபோய்க் கொடிய நிரயங்களிலெல்லாம் தள்ளிப் பலவாறு வருத்தினார்கள். அவர்கள் பட்ட கொடிய துன்பங்கள் கூறவியலாதன. இக்கொடியோர்களை வருத்தத் தொடங்கிய இயமதூதர்கள் உச்சியில் இருந்து மலவாய்வரை ஊடுருவும்படியாக வச்சிரத்தினாற் செய்த முள் முளைகளைச் செருகினார்கள். நஞ்சு தங்கிய பற்களையுடைய பாம்பின் வாயில் கொடுத்தார்கள். தசைகளைத் துண்டந் துண்டமாக அரிந்து அவர்களுடைய வாயிலேயே கொடுத்து உண்ணச் செய்தார்கள். நுங்கைத் தோண்டுவதைப்போலக் கண்களைத் தோண்டினார்கள். துள்ளி விழும்படியாக ஆயுதங்களைக் கொண்டு தறித்தார்கள். முடக்கிரும்புகளை மேல் வாய்களில் ஊடுருவக் குத்தி மேலாகத் தூக்கிச் சுற்றிலும் நெருப்பை மூட்டித் திருப்பித் திருப்பிக் காய்ச்சினார்கள். மதம் பொழிகின்ற யானையினுடைய கால்களில் தலைகளை இடறவிட்டார்கள். இருப்புலக்கைகளைக் கொண்டு மோதினார்கள். புழுக்கள் கிண்டுமாறு அவை நிரம்பிய கிடங்குகளிலிட்டார்கள். சீயுஞ் செந்நீரும் நிரம்பியிருக்கின்ற கிணற்றில் எறிந்தார்கள். உடலை இரண்டாகப் பிளந்தார்கள். உருக்கப்பட்ட செம்பை ஒன்பது தொளை

களினும் ஊற்றினார்கள். கரும்பை ஆலையிலிட்டு அரைப்பதைப்போல அரைத்தார்கள். செக்கிலிட்டு ஆட்டினார்கள். இன்னுங் கொடிய நிரயத்திலெல்லாம் இட்டுப் பதினாயிரம் ஆண்டு நூறாயிரம் ஆண்டு என்னுங் கணக்கின்படி போட்டு வதைத்தார்கள். இவ்வாறு துன்புறுத்தியபின் தீவினைகள் குறைந்துபோயின.

பலவகைப் பிறவிகளெடுத்தல்

எஞ்சிய தீவினையை இந்நிலவுலகிற் பிறப்பெடுத்து நுகர்ந்தொழிக்குமாறு இருவரும் காகமுங் கூகையுமாகவும், ஓந்தியும் வல்லூறுமாகவும், பாம்புந் தேளுமாகவும், நாயும் பூனையுமாகவும், கீரியும் பன்றியுமாகவும், நரியுஞ் செந்நாயுமாகவும், குதிரையுங் கழுதையுமாகவும், ஒட்டகமும் யானையுமாகவும், மீனும் முதலையுமாகவும், புலியும் மானுமாகவும், எருதும் எருமையுமாகவும் பிறப்பெடுத்தனர்.

முடிவுரை

இவ்வாறு இழிந்த பிறப்புக்களிலெல்லாம் பல முறை பிறந்து பிறந்து, இறுதியில் வேடனாகவும் அரக்கனாகவுந் தோன்றி வன்னிமரத்திலே ஏறி ஆனைமுகப் பெருமான்மீது வன்னியிலைகள் விழச் செய்த நல்வினையால் தீவினைகளையெல்லாம் ஒழித்தனர். முதலில் அவ் வேடன் சாம்பன் என்னும் அரசனாக இருந்தபோது தானுந் தன் அமைச்சனும் விளையாட்டாகக் கோயிலில் வழிபாடு செய்து சென்ற நல்வினை ஒன்று இருந்தபடியினால், அதுவே வன்னிமரத்திலேறவும் அதனிலை உதிர்ந்து வாமனரால் வழிபடப்பட்ட ஆனைமுகக் கடவுள்மீது வீழ்ந்து வழிபாடாகி வீடுபேற்றினைப் பெறவுஞ் செய்தது,'' என்று நான்முகன் பிதிர்த்தேவனுக்குக் கூறியருளினான்.

## 56. வன்னி விநாயகர் வரலாறு

### முன்னுரை

"சவுனகாதி முனிவர்களே! அரக்கனும் வேடனும் வன்னியின் பெருமையால் பொன்னுலகடைந்த செய்தியைச் சொன்னோம். இனிமேல் அவ் வன்னி நீழலில் எழுந்தருளிய வன்னி விநாயகர் வரலாற்றைத் தேவர்கோமான் சூரசேன மன்னனுக்குச் சொல்லியவாறு உங்களுக்குச் சொல்லுகிறோம் கேட்பீர்களாக" என்று சொல்லலானார். பிதிர்த்தேவன் நான்முகனைத் தொழுது, "வாமனர் என்பவர் யாவர்? அவர் வன்னிமரத்தடியில் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்ட காரணம் என்ன? அதனையும் அடியேனுக்குச் சொல்லியருள வேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். நான்முகன் நவிலலானான்.

### காசிப முனிவர்

"ஓ பிதிர்த்தேவனே! வாசி என்னும் எழுத்துக்களை யோக முறையால் எண்ணி நோக்குஞ் சிவயோகிகட்குச் சிவானந்தத்தை அளிக்கவல்ல தேசிகனையும், தேவதேவனையும் ஆடையற்றவனையுமிருக்கின்ற சிவபெருமானுடைய திருவைந்தெழுத்தை எப்பொழுதும் எண்ணித் திருவெண்ணீறு அணிந்து. கண்மணிமாலை புனைந்து அருமையான தவங்களைச் செய்கின்ற காசிப முனிவர் அதிதி, திதி என்னும் இரண்டு மனைவியர்களோடு கூடி வாழ்க்கை நடத்தினர். நல்வினையுடையவளாகிய அதிதி தான் பெற்ற இந்திரன் முதலிய தேவர்கட்கு உதவியாகத் திருமகள் கேள்வனாகிய திருமாலுந் தனக்கு மகனாக வரவேண்டும் என்னும் விருப்பத்தினால் பெரிய தவங்களைச் செய்துகொண்டிருந்தாள்.

### திதி

திதியாகிய மற்றவளோ தேவர்களினுஞ் சிறந்த மேன்மையும் மூவுலகங்களையுங் காக்கவல்ல ஆற்றலுமுடைய

மக்களைப்பெற வெண்ணினுள். மாலைநேரத்தில் தன்னுடைய கணவராகிய காசிபரை வணங்கி, ''என்ன காரணத்தினுலோ இம்மாலைப்பொழுதில் காமநோயானது என்னுள்ளத்தைச் சுட்டெரிக்கின்றது. தேவரீர் இப்பொழுது எனக்கு இன்பந் தராவிடில் நான் உயிர் வாழ்வது அரிது. நான் உயிர்வாழ வேண்டுமாஞல் இப்பொழுதே என்னைத் தழுவி இன்பமளிக்க வேண்டு''மென்று வேண்டிக் கொண்டாள். காசிபர் அவளுடைய விருப்பப்படி இன்பமளித்தார்.

### அசுரர்கள் தோன்றுதல்

காசிபர் திதியைத் தழுவியவுடன் தேவர்குலம் குறைவை யடையவும் அசுரர் குலந் தழைத்தோங்கவும் இரணியகசிபன், இரணியாக்கதன் என்னும் இரண்டு அசுரர்கள் தோன்றினர். இரணிய கசிபன் என்பவன் சிவபிரானை நோக்கி அரிய தவங் களைச் செய்தான். அவர் பால் பலவகையான படைக்கலங் களைப் பெற்றுன். அல்லாமலும், உள் - புறம், மண் - விண், இரவு - பகல், உயிர் திணை - அஃறிணை என்னும் இந்த இரண்டு பகுதிகளினுந் தனக்குச் சாவு நேராதிருக்கவும் தனது உதிரம் நிலத்தில் விழுந்தால் அதிலிருந்துந் தன்னைப்போல் உருவ முண்டாகி வரவும் மேன்மை பெற்றனன். பிறகு மறை யொழுக்கத்தினைக் கடந்து மூன்று உலகங்களையும் ஆண்டான். குறைவற்றிருக்கிற செல்வமென்னுங் குன்றிலேறித் தனக்கு எவ்வகையினும் சாவு இல்லையென்கிற உறுதியோடு இறுமாப் புற்றிருந்தான். திருமாலானவர் அவ்விரணிய கசிபனைக் கொல்வதற்காக ஒரு சூழ்ச்சியை நாம் தேடவேண்டும் என்று உள்ளத்தில் எண்ணினுர்.

### ஆனைமுகக் கடவுளை வழிபடுதல்

ஒருநாள் நிலவுலகத்திற்கு வந்து ஒரு வன்னிமரத்தடியில் ஆனைமுகக் கடவுளை அமைத்து மறை முறைப்படி வழிபாடு செய்தார். பிறகு ஓர் இருக்கையில் அமர்ந்து ஐம்புலன் களையும் அடக்கி ஆனைமுகக்கடவுளின் அருமறையை

உருவேற்றினுர். ஒருநாள் ஆனைமுகக் கடவுள் திருமால் முன்னர்த் தோன்றினுர். திருமால் ஆனைமுகக் கடவுளைப் போற்றி, "எல்லா உயிர்களையும் வருத்துகின்ற இரணிய கசிபனுடைய உயிரைப் போக்குமாறு அடியேனுக்கு மேன்மை தந்தருளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் திருமாலைப் பார்த்துத், "திருமாலே! உயர்திணையும் அஃறிணையுமல்லாத வடிவத்தைக் கொண்டு, உள்ளும் புறம்பும் அல்லாத வாசலில் இருந்துகொண்டு, பகலும் இரவும் அல்லாத மாலைப்பொழுதில் விண்ணும் மண்ணுமல்லாத மடியில் அவனை வைத்துக்கொண்டு, படைக் கலமல்லாத நகத்தினுலே அவனைக் கீறிப் பிளந்து, அவனுடைய குருதி நிலத்தில் விழாதபடி வாயால் உறிஞ்சி விடக் கடவாயாக," என்று கூறி அதற்கேற்ற ஆற்றலையும் அருள் செய்து மறைந்தருளினர்.

### இரணியகசிபனைக் கொல்லுதல்

பிறகு திருமால் மனித மடங்கலின் வடிவத்தை எடுத்துக் கொண்டு ஆனைமுகக் கடவுள் அருளிய சூழ்ச்சியின்படி இரணிய கசிபனைக் கொன்ருர். அவனுக்குப் பிறகு அரசாட்சியை இரணியாக்கதன் மேற்கொண்டான். ஆனைமுகக் கடவுளினுடைய அருளால் பன்றி வடிவம் எடுத்துக்கொண்டு இரணியாக்கதனையுங் கொன்ருர். ஆனைமுகக் கடவுள் அங்கெழுந்தருளிய திருமாலுக்கு அவ்வாருன மேன்மைகளை அளித்தமையால் விண்டுவிநாயக ரெனவும், குள்ளவடிவம் எடுத்த காலத்தில் அவ்வானைமுகக் கடவுளை வழிபட்டபடியால் வாமனகணேசர் எனவும் பெயர் பெற்ருர். அந்த வரலாற்றையுங் கேட்பாயாக.

### விரோசனன் முடிபெறுதல்

இரணியாக்கதனுடைய மகனுகிய விரோசனன் என்பவன் கதிரவனைக் குறித்து நெடுங்காலந் தவஞ்செய்தான். கதிரவன் மனமிரங்கி விரோசனனுக்கு முன்தோன்றினுன். "ஓ அன்பனே! உன்னுடைய தவத்திற்கு மகிழ்ந்தோம். இதனைப்

பெற்றுக்கொள்வாயாக'' என்று பொன்முடி ஒன்றை அவனுடைய கையிற் கொடுத்தான். "இம்முடியை உனது தலையில் அணிந்து கொண்டிருப் பாயானால் மூன்றுலகங்களும் உன்னுடைய ஆணைக் குள்ளாகும். உனக்கு எத்தகைய இடையூறும் வரமாட்டாது. இம்முடியினை அணியாமல் உள்ள உன்னுடைய தலையின்மேல் மற்றொருவருடைய கையை வைக்கப் பெறுவாயானால் உடனே உன் தலை நூறுபிளவு களாகப் பிளந்து உயிர்போய்விடும். ஆதலால் மறவாமல் கருத்துடன் இம்முடியை இடைவிடாமல் அணிந்து கொண் டிருக்கக் கடவாய்'' என்று கூறி மறைந்தனன். பிறகு விரோசனன் அம்முடியைச் சூடி மூன்றுலகங்களையும் அரசாட்சி செய்தான். மாவலி என்னும் பெயருடைய மகன் ஒருவன் விரோசனனுக்குப் பிறந்தான். இந்திரன் முதலிய தேவர்கள் வைகுந்தத்திற்குச் சென்று திருமாலை வணங்கி, "மூன்று உலகங்களினும் அவுணர்களுடைய அதிகாரம் மிகுதிப்பட்டு வருகின்றது. அதனைப் போக்கியருளுதல் வேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டனர்.

### திருமால் மோகினியாக வருதல்

திருமால் விரோசனனை அழித்தொழிக்கத் திருவுளங் கொண்டார். மாதர்களுந் தங்கள் உருவத்தை வெறுத்து ஆணுருவத்தை விரும்பத்தக்க மோகினி வடிவங்கொண்டு விரோசனன் எதிரில் சென்றார். மோகினியைக் கண்ட விரோசனன் அழலிடைப்பட்ட வெண்ணெயைப்போல் உருகினன். மிகுந்த மையல்கொண்டு மோகினியைப் பின் தொடர்ந்தான் விரோசனனைக் கண்ட மோகினி, அவனைப் பார்த்து, "ஓ அரசனே! நீ கலவித் தொழிலில் வல்லவ னென்று கேள்விப்பட்டு உன்னைக் கூடவேண்டும் என்னும் விருப்பத்தினால் இங்கு வந்தனன். என்னை நீ பின்தொடரு கிறபடியினால் என் எண்ணம் முடிவுபெறு மென்பதில் தடை யில்லை. ஆயினும் ஒன்று கூறுகிறேன் கேள்! எண்ணெய் தேய்த்து முழுகாதவர்களுடைய தோளை நான் எப்பொழுதுந் தழுவுவதில்லை. ஆகையால் நீ இப்பொழுது எண்ணெய்

தேய்த்து முழுதுவையாயின் நான் உன்னைச் சேர்வேன். விரைவில் எண்ணெய் கொண்டு வரச் சொல்வாயாக. அதனை நானே தேய்த்துவிடுகின்றேன்,'' என்று கூறினான்.

**விரோசனன் அழிதல்**

காமக் காழ்ப் பேறப்பெற்ற விரோசனன் முன்பு கதிரவன் முடியளித்த பொழுது மொழிந்த சொற்களை மறந்துவிட்டான். விரைவில் எண்ணெய் கொண்டு வருமாறு ஏவலாளர்கட்குக் கட்டளையிட்டான். அவர்களும் அவ்வாறே கொண்டு வந்தார்கள். விரோசனன் தன்னுடைய முடியை எடுத்துத் தரையில் வைத்தான். எண்ணெய் தேய்த்துவிடுமாறு மோகினியை வேண்டிக்கொண்டான். திருமாலாகிய மோகினி நல்ல சமயங் கிடைத்தது என்று மகிழ்ந்தார். அவனுக்கு எதிரில் நின்று எண்ணெயை அள்ளிவிட்டுத் தேய்ப்பதற்கு அவனுடைய தலையில் தம்முடைய கையை வைத்தார். அவ்வளவில் அவனுடைய தலை நூறு பிளவுகளாகப் பிளந்தது. விரோசனன் உடனே மாண்டொழிந்தான் மோகினியாக வந்த திருமால் விண்ணில் வந்திருக்கும் தேவர்களைப்பார்த்து, ''ஓ தேவர்களே! இதோ விரோசனனைக் கொன்றேன் பாருங்கள்' என்று பெருமுழக்கஞ் செய்தார். தேவர்கள் தங்களுடைய மனக் கவலையொழிந்தனர். திருமால் வைகுண்டம் அடைந்தார். விரோசனனுக்குப் பிறகு அவனுடைய மகனாகிய மாவலி தான் அரசாட்சியை மேற்கொண்டான்.

**மாவலி வேள்வி செய்தல்**

மாவலி சிவபிரானுடைய திருவடிகளை மறவாமல் அறநெறி முறைப்படி அரசாட்சியை உலகமெங்குஞ் செலுத்தினான். ஒருநாள் தன் குலகுருவாகிய சுக்கிரனை வரவழைத்து, ''எனக்கு உறவினனாகிய இந்திரன் மட்டும் விண்ணுலகத்திற்கு அரசனாகி அளவற்ற இன்பங்களை நுகர்ந்து கொண்டிருக்கிறான். அவை எனக்கு இல்லாமற் போனதற்குக் காரணம் என்ன? அதனை எனக்குக் கூறவேண்டும்,'' என்று வேண்டிக்கொண்டான். சுக்கிரன் மாவலியைப் பார்த்து, ''அறஞ்செய்தபேர்கள் இன்

பங்களை நுகர்வது இயற்கையாகும். அறஞ்செய்யாமல் தனது ஆற்றலாலும் பிறவி மேம்பாட்டாலும் அடைகின்ற இன்பங்களெல்லாம் செயற்கையாகும். அவை நீடித்தும் நிலை பெற மாட்டா. தேவர் கோமானாகிய இந்திரனே நூறு வேள்விகள் செய்து எல்லா இன்பங்களையும் தடையில்லாமல் நுகருகின்றான். பலபேர் அவனைப்போல் சரியாக நூறு வேள்விகள் செய்ய முடியாமல் இடை இடையே நேரிடும் இடையூறுகளாலும் அசுரர்களுடைய போராலும் அழிந்து விட்டனர். அந்த இன்பங்களை நுகர உனக்கு எண்ணமிருக்குமாயின் அவனைப்போல் நூறு வேள்விகளைச் செய்து முடிப்பாயாக'' என்று சொன்னான்.

சுக்கிரன் கூறிய உண்மையை மாவலி கேட்டு மகிழ்ந்தான். சமதக்னி, வசிட்டர் முதலிய முனிவர்களையழைத்துத் தொண்ணூற்றொன்பது குதிரை வேள்விகளைச் செய்து முடித்தான். நூறாவது வேள்வியையுஞ் செய்து முடிப்பதற்கு முயற்சி செய்துகொண்டிருந்தான். மாவலியினுடைய வேள்விகளைத் தேவர்கோன் உணர்ந்தான். அந்தோ நம்முடைய அரசும் அளவற்ற செல்வங்களும் கையைவிட்டுப் போய்விடும் போலிருக்கிறதே ; இதற்கு யாது செய்வது என்று உள்ளம் வருந்தினான். திருமாலிடஞ் சென்று தன்னுடைய குறைகளைக் கூறி முறையிட்டுக் கொண்டான்.

திருமால் இந்திரனைப் பார்த்து, ''இப்பொழுது நீ கூறிய மாவலி முறைப்படி வேள்வி செய்து வருகிறான். அறநெறி தவறாமல் அரசியற்றி வருகிறான். தனக்கு எப்பொழுதும் அழிவு நேராதபடி சிவபிரானை வழிபட்டு வருகின்றான். இத்தகைய மேம்பாட்டினையுடைய அவனை நான் யாது செய்ய முடியும் ? ஆயினும் நீ என்னிடத்தில் வந்து முறையிட்டபடியால் உன்னுடைய பதவிக்குக் குறைவு வராமல் காக்கும் வழியைத் தேடுகிறேன், நீ உன்னுடைய மனக்கவலையை ஒழிப்பாயாக'' என்று கூறி இந்திரனை அனுப்பிவைத்தார்.

### திருமால் சூழ்ச்சி

பிறகு திருமால் இந்த மாவலியானவன் நல்லொழுக்க முடையவனுக இருந்து வருகிறபடியால் இவனுடைய இறுதி வேள்வியை அழிப்பதற்கு உறவு முறையிற் சென்ருல்தான் காரியங் கைகூடும். அதனையே செய்வோம் என்று முடிவு செய்தார். தம்மை மகனுகப் பெறுவதற்கு விருப்பங்கொண்டு அரிய தவத்தினைச் செய்துகொண்டிருக்கிற அதிதிக்கு மகனுக முடிவு செய்தார். அவளுடைய கருப்பத்தில் குள்ள வடிவின ராகத் தங்கிப் பிள்ளையாகப் பிறந்தார். தந்தையாகிய காசிபர் திருமாலாகிய குள்ளப் பிள்ளையைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார். தம்முடைய மகனுக்குச் செய்யவேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்து ஐந்தாம் ஆண்டில் கல்வி கற்பிக்கவுந் தொடங்கினர். குள்ளராக வந்த செங்கண்மால் சிறிது காலத்திற்குள் எல்லாக் கலைகளையும் நன்கு கற்று அவைகளில் வல்லவரானர். பிறகு தம் தந்தையைப் பார்த்து, "அசுரனுகிய மாவலி இந்திரபதவியை அடைய விரும்பித் தக்க முறையில் தொண்ணூற்ருென்பது வேள்விகளைச் செய்து இப்பொழுது நூருவது வேள்வி செய்கின்றனன். நான் அந்த வேள்வியை அழித்து மாவலியையும் வென்று, இந்திரன் அப்பதவியைவிட்டு அகலாதிருக்கச் செய்ய எண்ணு கிறேன். அஃது எவ்வாறு முடியும்?" என்று கேட்டார்.

### ஆனைமுகக்கடவுளை வழிபடச் சொல்லுதல்

காசிபர் தம்முடைய மகனைப் பார்த்து மனமகிழ்ந்தார். "ஓ குழந்தாய்! நீ ஆனைமுகக் கடவுளுடைய திருவருளைப் பெறுவாயானுல் அது முடியும். அவருடைய அருளைப் பெறு தற்கு அவருடைய அருமறையிருக்கிறது. நீ அஞ்ச வேண்டாம்" என்று கூறி அம்மறையையும் உரைத்தருளினர்.

### வாமனர் வழிபாடு

பிறகு, வாமனராகத் தோன்றிய திருமால் தந்தையாக அமைந்த காசிபரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு

விதர்ப்ப நாட்டிற்குச் சென்றார். அந்நாட்டில் சுதேச நகரத்தில் வன்னிமர நிழலில் எழுந்தருளிய ஆனைமுகக் கடவுளைத் தொழுது, 'என் கடவுளே! என்னைக் காத்தருளும்'' என்று ஆனைமுகக்கடவுளின் அருமறையை ஓராண்டுவரையில் உருவேற்றி வந்தார்.

ஆனைமுகக்கடவுள் காட்சி

ஆனைமுகக்கடவுள் வாமனமாலின் வழிபாட்டிற்கு உள்ளம் மகிழ்ந்தார். அருள் செய்யத் திருவுளங் கொண்டார். மயிலூர்தியின்மீது பத்துத் திருக்கைகளோடும் யானை முகத்தோடும் அளவற்ற தேவகணங்கள் புடைசூழத் தோன்றியருளினார். வாமனமால் ஆனைமுகக்கடவுளைப் பணிந்து போற்றினார். இன்பக் கூத்தாடினார். கண்ணீர் அரும்பக் கைமலர்களைத் தலைமேற் குவித்து அளவற்ற புகழ்ப்பாக்கள் பாடினார். ஆனைமுகக்கடவுள் வாமனமாலைப் பார்த்து, ''உனக்கு வேண்டியதைக் கேள்; தருகிறோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். வாமனமால் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, ''எளியேற்குத் தமது திருவடிமீது இடைவிடாத பேரன்பு வேண்டும். தேவேந்திரனுக்கு அழிவில்லாத அரசு வேண்டும். அடியேன் நினைத்தவெல்லாம் எளிதிற் கைகூட வேண்டும். அடியேன் அறிந்தும் அறியாமலும் செய்கின்ற பிழைகளைப் பொறுத்தருளவேண்டும்'' என்று பலவாறு வேண்டிக் கொண்டார். ஆனைமுகக்கடவுள், ''அவ்வாறே ஆகுக'' என்று அருள்செய்து மறைந்தருளினார்.

வாமனமால் மீளல்

வாமனமால் மீளவும் ஆனைமுகக்கடவுளைப் போற்றி விடை பெற்றுக்கொண்டு தம்முடைய தந்தையின்பாற் சென்றார். தாம் மேன்மை பெற்ற செய்திகளையெல்லாங் கூறினார். முன்போல் ஆனைமுகக் கடவுளின் மறையை உருவேற்றிக் கொண்டிருந்தார்.

### மாவலிபாற் செல்லல்

இந்தச் சமயத்தில் மாவலியினுடைய நூருவது வேள்வியும் நடைபெற்றது. வாமனமால் அதனை அழிப்பதற்கு எண்ணினர். மாவலிபாற் சென்ருர். மாவலி வாமனமாலை எதிர்கொண்டழைத்துப்போற்றினன். வாமனமாலைப் பார்த்து, "அந்தணர்களிற் சிறந்தவரே! தேவரீர் யார்? எளியேன்பால் வந்த வேலையென்ன? அதனை அடியேனுக்குக் கூறியருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். வாமனமால் மாவலியைப் பார்த்து, "அரசனே! யான் காசிபருடைய மகன். நீ சிறந்த வேள்வியைச் செய்து கொண்டிருக்கிருய் என்று கேள்விப்பட்டேன். யான் தனியே இருந்து தவஞ் செய்ய எண்ணுகிறேன். அதன் பொருட்டு மூன்றடி நிலம் தானமாக அடியேனுக்குத் தருதல் வேண்டும். அதனைப் பெறும் பொருட்டே நின்னுடைய இடத்திற்கு வந்தேன்" என்று சொன்னர்.

### மாவலி தானஞ் செய்தல்

வாமனமாலினுடைய மாயமொழிகளை மாவலி கேட்டான். அம்மொழிகள் மாயமென்பதை உணர்ந்துகொள்ளும் ஆற்றல் அவனுக்கில்லை. ஆகவே அவன் வாமனமால் கூறியதைக் கேட்டு மகிழ்ந்தான். "ஓ அந்தணரே! நீர் பேரவா இல்லாத பெருந்தவம் உடையவர். உமக்குத் தானங் கொடுக்குமாறு நேரிட்டது என்னுடைய நல்வினையேயாகும். நீர் விரும்பிய படியே உமக்குக் கொடுத்தேன்" என்று சொன்னன். மாவலியினுடைய ஆசிரியனுகிய சுக்கிரன் மாவலியைப் பார்த்து, "ஓ அரசனே! நின்னிடத்தில் தானம் பெறுவான் வந்துள்ள இவன் பேரவா இல்லாத பெருந் தவத்தினன் என்று எண்ணதே. இவன் திருமாலாவன். உன்னிடத்திலே இந்த உலகங்களெல்லாவற்றையுங் கொள்ளைகொள்ள இம் மாயவுருவத்தை எடுத்துக்கொண்டு வந்துள்ளான்" என்று சொல்லித் தடுத்தான். இதனைக் கேட்ட மாவலி, "இவன் திருமாலாயின் மிக நல்லதாயிற்று. ஐயா! என் ஆசிரியரே! கொடாமையால் வருஞ்செல்வத்தினும் கொடுப்பதால் வருங்

கேடானது மிக மேலானது'' என்று சொல்லித் தானநீர் வார்ப்பதற்கு ஏனத்தை எடுத்தனன். அச்சமயத்தில் சுக்கிரன் ஒரு நுட்ப வடிவத்தை எடுத்துக்கொண்டு தண்ணீர் வராதபடி மூக்கின் வழியை அடைத்தான். இந்த வஞ்சனையை வாமனமால் அறிந்தார். கொடுத்தலைத் தடுத்த லால் வரும் பயன் இதுதான் என்று எல்லோரும் உணர்ந்து கொள்ளுமாறு தருப்பைப் புல் ஒன்றை உள்ளேவிட்டுக் குத்தினர். இதனால் சுக்கிரன் தன் விழிகளில் ஒன்றை இழந்து அப்பாற் சென்றனன். உடனே தானநீர் வெளிப் பட்டது. அதனை வாமனமால் கையேற்றார். உடனே எல்லா உலகங்களையும் அளக்கத் தக்க பெரு வடிவங்கொண்டார். தம் திருவடிகளால் மூன்று உலகங்களையும் இரண்டு அடி களால் அளந்தார். மூன்றாவது அடிக்கு நிலங் காணமல் அம்மாவலியின் தலையில் தமது காலை வைத்து அவன் பாதல உலகத்தை அடையுமாறு அழுத்தித் தம்முடைய வஞ்சனையைத் தீர்த்துக்கொண்டார். இந்திரனுக்கு விண்ணுலக அரசாட்சி நிலைபெற்றிருக்கச் செய்தார்.

மாவலியின் ஆட்சி

மாவலி சிவபிரானை வழிபட்ட நல்வினையினல் வாமனன் எண்ணி வந்ததை உணர்ந்தான். இந்திர வாழ்வைத் துரும் பென வெறுத்தான். அப் பாதல உலகத்தில் இருந்து கொண்டே தனது ஆணையை எல்லா உலகங்களினுஞ் செலுத்தினன். அறநெறிப்படி அரசாட்சி செய்து இந்திரனும் நாணுமாறு அளவில்லாத இன்பங்களை நுகர்ந்து கொண் டிருந்தான். திருமால் குள்ளவடிவங் கொண்டு மாவலியை அடக்கும் ஆற்றலை இவ் வன்னி விநாயகர்பால் பெற்றமை யால் வன்னி விநாயகர் என்று பெயர் பெற்றார். வன்னி விநாயகர், வாமன விநாயகர், விண்டு ,விநாயகர் என்னும் இம்மூன்று பெயர்களையும் நினைப்போரும் பூசிப்போரும் பேராற்றலைப் பெறுவார்கள்.

## 57. வன்னியால் நஞ்சு நீங்கியது

### முன்னுரை

ஓ சவுனகாதி முனிவர்களே! வன்னி விநாயகருக்கு விண்டு விநாயகர் என்றும் வாமன விநாயகர் என்றும் பெயருண்டாகிய காரணத்தைக் கூறினேம். இனிமேல் அவ்வன்னியால் நஞ்சு நீங்கிய புதுமையையுங் கூறுகிறேன். தேவேந்திரன் மேலுஞ் சூரசேன மன்னனைப் பார்த்து, ஓ அரசனே! நான்முகன் பிதிர்த்தேவனுக்கு வேருெரு கதையுங் கூறினன். அஃதாவது, முன்னொரு காலத்தில் உமாதேவியானவள் சிவபெருமானைப் பார்த்து, 'ஓ அருட்கடலே! எல்லா இலைகளையும்விட வன்னியிலையில் நம்முடைய மூத்த பிள்ளைக்கு அதிக விருப்பம் ஏற்படக் காரணம் யாது? அதனை அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டனள். சிவபெருமான் உமாதேவியைப் பார்த்து, ''ஓ தேவி! விண்ணுலகத்தினர் நல்வினையை விரும்புந்தோறும் தம்முலக வாழ்வை வெறுத்து விரும்புகின்ற மண்ணுலகத்தில் பிரியவிரதன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான்.

### பிரியவிரதன்

அந்தப் பிரியவிரதன் எண்ணற்ற தருமங்களையும் தானங்களையும் இடைவிடாமற் செய்து வறியவர்களுக்கெல்லாம் கணக்கு வழக்கில்லாமற் பொருள்களை வழங்கினன். எல்லா வகையான நற்குணங்களோடுஞ் சிறந்து விளங்கினன். அவனுக்குக், கீர்த்தி, பிரபை என்னும் பெயர்களையுடைய இரண்டு மனைவிகளிருந்தனர். கீர்த்தி என்பவள் மூத்தவள். பிரபை என்பவள் இளையவள்.

### இளையாள் மோகம்

பிரியவிரதன் இரண்டு மனைவியரையும் ஒரு படியாக எண்ணமல் பிரபை என்னும் இளையவளிடத்தில் மிகுந்த

மோகங்கொண்டு இளையாளிடமே இன்பங்களையெல்லாம் நுகர்ந்து செய்யவேண்டிய சிறப்புக்களையெல்லாம் அவளுக்கே செய்தான். அரசன், தன்னை இவ்வாறு ஒரு பொருட்படுத்தாத போதினும் மூத்தாள் அவைகளையெல்லாம் மனத்திற் கொள்ளாமல் தான் தன்னுடைய கணவனுக்குச் செய்ய வேண்டிய தொண்டுகளையெல்லாஞ் செய்து கற்பு நெறியில் ஒழுகி நின்றனள். இளையவளாகிய பிரபை மக்கட் பேற்றையும் அடைந்தாள். இதனுலும் அரசன் இளையவளிடத்தில் அதிகப் பற்றுக் கொண்டிருந்தான்.

### இளையாள் மூத்தாளை உதைத்தல்

இளையவள் மூத்தவளை ஒரு புழுவினுங் கீழ்ப்பட்டவளாக மதித்திருந்தாள். ஒருநாள் மூத்தவள் தன் காதலனுக்குப் பணிசெய்யும் பொருட்டு அவன் இளையாளோடு இருக்கு மிடத்திற்குச் சென்ருள். இளையாள் திடீரென்றெழுந்து, "நீ இங்கு ஏன் வந்தாய்?" என்று கூறி எட்டியுதைத்தாள் அதனை அரசன் பார்த்தும் பார்க்காதவனைப் போல இருந்தான். இளையவள் தன்னைக் காலாலுதைத்ததைக் கண்டிக்காமல் பேசாமலிருந்துவிட்ட கணவன் செய்கையை எண்ணி உள்ளம் வருந்திஞள். தான் எவ்வகையிலேனும் உயிரைப் போக்கிக் கொள்வது என்று முடிவு செய்தாள். அரண்மனையை விட்டு வெளிப்பட்டாள்.

### அருளுரை பெறல்

இவள் வெளியேறிய சமயத்தில் தெய்வத் தன்மை யுடைய ஓர் அந்தணன் பொருளிரத்தலின் பொருட்டு அங்கே வந்தனன் அவன் கீர்த்தியினுடைய மனக்கவலைகளை முகக் குறிப்பினுல் அறிந்தான். பிறகு அவளால் எல்லாவற்றையுங் கேட்டுத் தெரிந்து கொண்டான். அவன் கீர்த்தியைப் பார்த்து, "அம்மா! நீ இனிமேல் உன்னுடைய மனக்கவலைகளை யொழித்து விடு. உனக்கு எல்லா வகையான நன்மைகளும் உண்டாகுமாறு ஆனைமுகக் கடவுளை அன்போடு பூசனைசெய். அதனுல் உன்னுடைய கணவன் உன் வழிப்படுவான்"

என்று கூறி ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபடும் முறையையும் மறையையும் மொழிந்தான்.

### கீர்த்தி ஆனைமுகக் கடவுளை வழிபடல்

பிறகு கீர்த்தியானவள் இந்தச் செயல் தெய்வத் தன்மையினுல் ஏற்பட்டிருக்கிறதென்றுணர்ந்து மனக் கவலைகளை யொழித்தாள். முறைப்படி நீராடி ஆனைமுகக் கடவுளை வழிபடத் தொடங்கினுள். பூசைக்கு வேண்டிய பொருள்களைக் கொண்டுவருமாறு பாங்கியர்க்குக் கட்டளையிட்டாள். அவர்கள் கொண்டுவந்த வழிபாட்டுப் பொருள்களைக் கொண்டு, முன்பு நான்முகன் முதலானவர்களால் வழிபடப்பெற்று மந்தார மரத்தின் நீழலில் எழுந்தருளியிருக்கின்ற ஆனைமுகக் கடவுளை வழிபடத் தொடங்கினுள். நாள்தோறும் அறுகைக் கொண்டு வழிபட்டாள். ஒருநாள் அறுகு எங்கும் அகப்படாமற் போய்விட்டது. வழிபாட்டிற்குப் பொருள் தொகுக்கும் பாங்கியர் திகைத்து வருந்தினுர்கள். பல விடங்களினுந் தேடிப் பார்த்துவிட்டுத் தமக்கெதிரே இருந்த ஒரு வன்னி மரத்தின் இலையைப் பறித்துகொண்டு போய்க் கீர்த்தியைப் பார்த்து, "எம்மிறைவியே! இன்றைக்கு அறுகு எங்கும் அகப்படவில்லை. அதற்குப் பதிலாக வன்னியிலையைக் கொண்டு வந்திருக்கிறேம். அது கடவுள் வழிபாட்டிற்குப் பயன்படுமா பயன்படாதா என்பதையும் நாங்கள் அறியோம். ஆயினும் அதனைக் கொண்டே இன்று வழிபாட்டை நிறைவேற்ற வேண்டும்" என்று கூறினுர்கள். பாங்கியர் பகர்ந்ததைக் கேட்ட கீர்த்தி அறுகைக் கொண்டு வழிபடும் வழிபாடு இன்று இல்லாமற் போகின்றதே என்று உள்ளம் வருந்தினுள். வன்னியிலையைக் கொண்டே அன்று வழிபாட்டை முடித்தாள். இவ்வாறு வழிபாடு முடிந்தும் அறுகால் வழிபடாத குறை நீங்காதபடியால் உணவை ஒழித்திருந்தாள்.

### ஆனைமுகக் கடவுள் காட்சி

அன்றிரவில் ஆனைமுகக் கடவுள் பொன்போன்ற தம்முடைய சடாமகுடத்தில் அவள் வழிபட்ட வன்னியிலைக

ளெல்லாந் தோன்றுமாறு அவள் கனவில் எதிரில் வந்து நின்று, "நீ வன்னியாற் செய்த வழிபாட்டை நாம் ஏற்றுக் கொண்டோம். அது நமது சடைமீதிருக்கின்றது பார். அறுகு அகப்படாமையினுல் உனக்குண்டான மனக்கவலையை ஒழித்துவிடு. நாம் உன்னுடைய தூய்மையான வழிபாட்டிற்கு மனமுவந்தோம். உனக்கு வேண்டிய மேன்மைகளை யெல்லாந் தருகின்றேம் கேள்" என்று திருவாய் மலர்ந் தருளினர். கற்பிற் சிறந்த கீர்த்தியானவள் தன்னுடைய எண்ணத்தை வெளியிட நாணங்கொண்டாள். கீழே விழுந்து வணங்கி ஒரு புறமாக ஒதுங்கி நின்றாள். ஆனைமுகக் கடவுள் அவளைப் பார்த்து, "பெண்ணே! உன்னுடைய கணவன் இன்றுமுதல் உன்னிடத்தில் மிகுந்த அன்பு வைப்பான். உன் மாற்றாளுக்கு வெப்புநோய் உண்டாகும். அவள் எல்லா நன்மைகளையும் இழப்பாள். ஓராண்டுக்குள் நின் வயிற்றில் ஒரு மகன் பிறப்பான். அவனுக்குக் கிப்பிரப்பிரசாதன் என்று பெயரிடுவாயாக. அவனுக்கு அகவை நான்கு நடக்கும் பொழுது உன்னுடைய மாற்றாள் அவனுடைய உணவிலே நஞ்சு கலந்திடுவாள். அதனுல் அவன் மூர்ச்சை யடைவான். ஆனுல் இறக்கமாட்டான்" என்று அருளி மறைந்தார். கீர்த்தியானவள் விழித்தெழுந்தாள். தனது கனவை எண்ணி மகிழ்ந்தாள். பொழுது விடிந்தவுடன் வழக்கம்போல் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுப் போற்றினுள்.

### கனவு போல் காரியம் நடத்தல்

ஆனைமுகக் கடவுளுடைய செயலால் கீர்த்தியின் மாற்றாளாகிய பிரபைக்கு நீங்காத வெப்புநோய் உண்டாகியது. அதன்மூலமாய் அளவற்ற நோய்கள் வந்து துன்பஞ்செய்ய லாயின. அதனுல் அவள் தன்னுடைய அழகு முழுவதையும் இழந்தாள் இடைவிடாமல் ஆனைமுகக் கடவுளை வழிபடும் பெருமையினுல் கீர்த்தியினுடைய அழகு நாளும் மிகுந்து பேரழகாகியது. பிரியவிரதன் இளையாளிடத்தில் வெறுப்புக் கொண்டான். திருமகளைப்போல் விளங்கிய மூத்தவளிடத்தில் காதல் கொண்டு அவளிடத்தில் இன்ப வாழ்வு நடத்தினன்.

கீர்த்தி நாளடைவில் கருவுற்று நன்னுள் ஒன்றிலே ஓர் ஆண் குழந்தையைப் பெற்ருள். ஆனைமுகக்கடவுள் கட்டளையிட்டருளியபடி அக்குழந்தைக்குக் கிப்பிரப்பிரசாதன் என்று பெயரிட்டனர். கிப்பிரப்பிரசாதன் வளர்ந்து அகவை நான்கை அடைந்தான். கிப்பிரப்பிரசாதன்மீது பிரபை பொருமை கொண்டாள். இவன் உயிரோடிருப்பானுயின் நம்முடைய மகனுக்குப் பட்டமில்லாமற் போகும். ஆகவே இவனைக் கொன்றெழிப்பதுதான் தக்கது என்று முடிவு செய்தாள். உணவிலே நஞ்சைக் கலந்து கொடுத்து விட்டாள். நஞ்சு தலைக்கேறியபடியால் கிப்பிரப்பிரசாதன் தளர்ச்சியடைந்து வீழ்ந்து விட்டான். தந்தையாகிய பிரியவிரதன் தன்னுடைய மகனுக்குப் பலவகையான பரிகாரங்களைச் செய்தான். ஆயினும் அவைகளால் சிறுவன் தெளிவுபெற்று எழவில்லை. கீர்த்தி முன் தனக்கு ஆனைமுகக் கடவுள் அருளியதை எண்ணினுள். கிருச்சமத முனிவரிடம் எடுத்துச் சென்ருள். முனிவரைப் பணிந்து, ''என் மகனுக்கு உயிர்ப்பிச்சை தரவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள். அம் முனிவர் கீர்த்தியைப் பார்த்து, ''நீ முன்னர் வன்னியிலையினுல் ஆனைமுகக் கடவுளை வழிபட்டிருக்கின்ற நல்வினைப் பயனை உன்னுடைய மகன் கையில் தத்தஞ் செய்யக்கடவாய்'' என்று கூறினுர். கீர்த்தி இது செய்வது எனக்குப் பெரிய காரியமோ என்று அவன் கையில் அப்பொழுதே தத்தஞ் செய்தாள். உடனே சிறுவன் உறங்கி விழித்தவனைப் போல எழுந்தான். முனிவருடைய திருவடிகளிற் பணிந்தான். அவருடைய பேரருளைப் பெற்ருன்.''

## 58. வன்னி மந்தாரத் தோற்றம்

### வன்னியின் பெருமை

கீர்த்தியானவள் கிருச்சமதரைப் பணிந்தெழுந்து, ''பெரியீர்! வன்னியின் பெருமையை உணராமலே ஒருநாள் அதனைக்கொண்டு வழிபட்டேன். அதனுல் நஞ்சுண்டிறந்த

என்னுடைய மைந்தன் உயிர் பெற்றெழுந்தான். அந்த வன்னி எவ்வாறு தோன்றியது என்பதை அடியாளுக்குக் கூறியருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள். முனிவர் கீர்த்தியைப் பார்த்து, "எவரேனும் ஒருகால் வன்னி யென்று வாக்கினுற் கூறுவராயின் அவர்கள் கணக்கற்ற பிறவிகள் தோறுஞ் செய்த தீவினைகளெல்லாம் மிகுதியாக இருந்த போதிலும் தீயிடைப்பட்ட பஞ்சுபோல் அழிந் தொழியும். நினைப்பாராயின் மனத்தாற்செய்த தீவினை களெல்லாம் பறந்து போகும். அம் மரத்தை வலமாக வந்து நேரில் நின்று போற்றிக் கைகுவித்து வணங்குவாராயின் உடலாற் செய்த தீவினைகளெல்லாம் ஒழியும். ஐவகைத் தீயின் நடுவில் நின்று தவஞ் செய்வதனுல் உண்டாகின்ற பேறும், நோன்பு வேள்வி முதலியவைகளைச் செய்கின்ற படியினுல் வருகின்ற பேறும் ஒரு வன்னியிலையினுற்செய்த வழிபாட்டால் உண்டாகும் பயனுக்கு ஒப்பாக மாட்டா. அன்றியும் வன்னியிலையானது கணக்கற்ற இன்பங்களை ஒரு கணப்பொழுதிற் கொடுக்கும். ஆணவம் முதலிய மும்மலங்களையுங் கெடுத்து மெய்யறிவைக் கொடுத்து ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தில் வாழச் செய்யும். இதனுடைய பெருமையைக் கோடி கற்பகாலம் வரையிற் கூறினுலும் முடிவு பெற மாட்டாது.

### சமி என்னுந் தையல்

முன் காலத்தில் நந்தி கோத்திரர் என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் இருந்தார். அவருக்கு அவுரவர் என்னும் பெயருடைய மகன் ஒருவர் இருந்தார். இந்த அவுரவ ருடைய மனைவியின் பெயர் சுமேதை. அவுரவருக்குஞ் சுமேதைக்கும் ஒரு பெண் குழந்தை தோன்றியது. அதனு டைய பெயர் சமி. இந்தச் சமிக்குத் திருமணஞ் செய்யத் தாய் தந்தையர் தகுந்த கணவனைத் தேடிக்கொண்டிருந் தனர்.

### மந்தாரன் என்னும் மகன்

தௌமிய முனிவர் என்பவருக்கு மகன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் மந்தாரன். அவன் சவுனக முனிவருக்கு மாணவன். அவுரவர் தம்முடைய மகளாகிய சமிக்கு இந்த மந்தாரனே தகுந்த கணவன் என்று முடிவு செய்தார்.

### திருமணம்

எண்வகை மணத்தினுஞ்சிறந்த மணத்தினுல் அவனுக்கு முறைப்படி திருமணஞ் செய்து கொடுத்தார். மந்தாரன் அப்பெண்ணைத் தாய் வீட்டில் தானே விட்டுவிட்டுத் தான் முன் போலவே சவுனக முனிவரிடஞ் சென்று அவருடைய பணிகளைச் செய்துகொண்டு தவஞ் செய்திருந்தான். சில காலஞ் சென்றபிறகு மந்தாரன் சவுனகரிடத்தில் விடை பெற்றுக் கொண்டு அவுரவருடைய இருப்பிடத்தையடைந்தான். அப்பொழுது அவனுடைய மனைவியாகிய சமி பருவமடைந்திருந்தாள். இருவருக்கும் சேர்க்கை மணஞ் செய்வித்தனர். பிறகு மந்தாரன் தன்னுடைய மனைவியை அழைத்துக்கொண்டு தாய் தந்தையர் இருக்குமிடத்தை நோக்கிச் சென்ருன். அப்பொழுது வழியில் புருசுண்டி முனிவர் வந்தார். அவர் ஆனைமுகக் கடவுளுடைய வடிவம் பெற்றவர்.

### வசவுரை பெறுதல்

மந்தாரன் வந்த முனிவரை வணங்கவில்லை. அவருடைய தும்பிக்கையையும் வயிற்றையும் பார்த்து நகைத்தனன். மந்தாரனுடைய மனைவியாகிய சமியும் நகைத்தாள். இவர்கள் தம்மைப் பார்த்து நகைத்ததைப் புருசுண்டி முனிவர் கண்டார். அளவற்ற சினங்கொண்டார். "அறிவில்லாதவர்களே ! நான் ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவைப் பெற்றவன் என்று உணராமல் இகழ்ச்சியாக நகைத்தீர்களாதலால் நீங்கள் எவர்க்கும் உதவாத மரங்களாகக்

கடவீர்கள் !'' என்று வசவுரை வழங்கினர். வசவுரையைக் கேட்ட சமியும் மந்தாரனும் அஞ்சினர். உடனே அவருடைய அடிகளில் எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து வணங்கினர். அவரைப் பார்த்து, "எல்லாம் உணர்ந்தவரே ! அடியேங்கள் தேவரீருடைய பெருமையை உணர்ந்து கொள்ளாமல் அறிவின்மையாற் செய்த குற்றத்தினைப் பொறுத்தருளி வசவுரையிலிருந்து நீங்கி உய்யுமாறு அருள்புரிய வேண்டும்'' என்று பலமுறை போற்றி வணங்கினார்கள். புருசுண்டி முனிவர் சிறிது இரங்கி, ''நீங்கள் என்னுடைய வடிவத்தைப் பார்த்து நகைத்தபடியால் என் வடிவமுடைய ஆனைமுகப் பெருமான் உங்களிடத்திற்கு எழுந்தருளுவர். நீங்கள் இம் மரவடிவம் நீங்காமலே அவருக்கு உரிமையாவீர்கள். அது முதல் உலகம் உள்ள அளவும் உங்களை எல்லாரும் பணிவார்கள். முடிவில் முடிவில்லாத வீடுபேற்றையும் பெறுவீர்கள். ஆகவே நீங்கள் இக் காட்டில் தானே வாழ்ந்திருங்கள்'' என்று கூறித் தம்முடைய இருப்பிடத்திற்குச் சென்றார். மந்தாரன் மந்தாரமரமாகவும் சமி வன்னி மரமாகவும் ஆயினர்.

இருவரையுந் தேடுதல்

நாட்கள் சில சென்றன. மந்தாரனுடைய ஆசிரியராகிய சவுனக முனிவர் மனைவியை அழைத்து வருவதாகச் சென்றவன் ஏன் இன்னும் வரவில்லை? அவனைப் போற் குண நலங்களிற் சிறந்தவர்களும் நம்முடைய பணிவிடைகளில் உரிமை வைத்திருப்பவர்களும் வேறு எவரும் இலரே. இவ்வளவு நாட்கள் நம்மை விட்டுப் பிரிந்திருக்கமாட்டானே. அவனுக்கு எத்தகைய தொல்லை வந்ததோ என்று உள்ளம் வருந்தினர். எல்லாவற்றையும் மாணவர்களால் உணர்ந்து கொள்வோம் என்று முடிவு செய்தார். சில மாணவர்களை அனுப்பி வைத்தார். அம் மாணவர்கள் அவுரவருடைய இருப்பிடத்திற்கு விரைவாகச் சென்றனர். அவுரவரைக் கண்டு, அவருடைய அடிகளிற் பணிந்தனர். ''இங்கு வந்த தங்களுடைய மருகராகிய மந்தார முனிவர் எங்குச்

சென்றனர்?" என்று உசாவினர். அவுரவர் அவர்களைப் பார்த்து, "அவர் அப்பொழுதே தம்முடைய மனைவியை அழைத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டாரே. இன்னும் அங்கு வந்து சேரவில்லையா? நன்ருகத் தேடிப் பாருங்கள்'' என்று கூறினர். தம்முடைய பெண்ணின்மீது வைத்திருக்கின்ற பேரன்பினுல் தாமுஞ் சிலரையழைத்துத் தேடச் சொன்னர். அவர்கள் காடுகள் எங்குந் தேடிக் காணுதவர்களாயினர். சவுனகருடைய மாணவர்கள் பலவிடங்களிலுந் தேடிப் பிறகு உண்மையை உணர்ந்தனர். பிறகு அவர்கள் சவுனகரிடம் வந்து வசவுரைச் செய்தியை இயம்பினர்.

மாணவர்கள் கூறிய மொழிகளைக் கேட்ட சவுனக முனிவர் மனம் வருந்தினர். சிறிது நேரம் யோகத்திலிருந்து அவர்கள் புருசுண்டி முனிவரை இகழ்ந்ததையும் அவருடைய வசவுரையினுல் மரங்களானதையும் பிறகு அம் முனிவர் அவர்கள் செய்த வழிபாட்டிற்கு மனமிரங்கி உங்கட்கு ஆனைமுகக் கடவுள் வெளிப்பட்டுத் தோன்றுங் காலத்தில் எல்லா நன்மைகளும் உண்டாகும் என்று திருவாய் மலர்ந் தருளியதையுந் தெரிந்து கொண்டார். மாமனுராகிய அவுரவ முனிவரும் அவ்வாறே அறிந்துகொண்டார். தந்தையாகிய தௌமிய முனிவர் அவ்வாறே அறிந்துகொண்டு அதனுல் ஏற்பட்ட துன்பம் பொறுக்க முடியாமல் இறந்து போனுர்.

### சவுனகர் தவம்

பிறகு சவுனகமுனிவர் தம்முடைய மாணுக்கனுகிய மந்தாரனைக் குறித்தும், அவுரவ முனிவருடைய மகளாகிய சமியைக் குறித்தும் ஆனைமுகக்கடவுளை மனத்தில் எண்ணி ஆறெழுத்து மறையைக் கூறிக்கொண்டு பன்னிரண்டு ஆண்டுகள் தவத்தில் இருந்தார். பிறகு ஆனைமுகக்கடவுள் மனமிரங்கிச் சவுனக முனிவருக்கு எதிரில் தோன்றியருளினுர். உடனே சவுனகர் எழுந்து ஆனைமுகக்கடவுளுடைய திருவடிகளைப் பணிந்தார். பன்முறை புகழ்ந்து பாடினுர். ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்து, "அன்பனே! உனக்கு வேண்டிய வரத்தைக் கேள், தருகின்ருேம்'' என்று திருவாய்மலர்ந்

தருளினர். சவுனகர் மீளவும் ஆனைமுகக் கடவுளைத் தொழுது, "ஐயனே! மந்தாரன் என்பவனும், அவன் மனைவியாகிய சமி என்பவளும் புருசுண்டிமுனிவருடைய வசவுரையினல் தங்கள் தங்கள் பெயரினல் தானே மரங்களாகியிருக்கின்றனர். அவர்கள் அறிவின்மையாற் செய்த குற்றத்தைப் பொறுத்தருளி மரவுருவில் இருந்து மானிட உருவில் வருமாறு அருள் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்.

**மரங்கட்கு மாண்பருளுதல்**

ஆனைமுகக் கடவுள் சவுனக முனிவரைப் பார்த்து, "ஓ அன்பனே! நாம் அளிக்கும் வசவுரை நம்மால் தீரும். நம்முடைய அன்பர்களானுந் தீரும். அவர்கள் அளிக்கும் வசவுரை நம்மால் தீர்வது அருமை. தவத்திற் சிறந்த புருசுண்டியினுடைய வசவுரையினல் ஏற்பட்டுள்ள பலனை எவரும் விலக்குவ தருமை. ஆயினும் நீ எம்மிடத்தில் அன்பு பாராட்டித் தவஞ் செய்தபடியினல் அவர்கள் அம் மரங்களாக இருந்தே தேவர்கட்குங் கிடைத்தற்கரிய சிறப்புக்களை யெய்து மாறும் எம்மை வணங்குகின்றவர்களெல்லாம் அவர்களையும் வணங்குமாறு நாம் எந்நாளும் அவர்களுடைய நிழலில் எழுந்தருளியிருக்கிறோம். அறம் முதலிய நற்பயன்களை விரும்புகிறவர்களும், தீவினையால் வருகின்ற இடையூறுகளை நீக்கிக்கொள்ள விரும்புகின்றவர்களும் அம்மரங்களின் நிழலில் நம்மை வழிபட்டால் நற்பயன்களை யளிப்போம். அன்பில்லாதவர்களாயினும் செல்வமில்லாதவர்களாயினும் நற்குலத்தில் தோன்றாதவர்களாயினும், ஊக்கம் முதலிய குணமில்லாதவர்களாயினும் வன்னியிலையினலும் மந்தாரமலரினலும் நம்மை வழிபடுவார்களாயின் அவர்கள் விரும்பியவைகளை யெல்லாங் கொடுத்தருள்வோம்" என்று கூறி அம்மரங்களின் நிழலில் எழுந்தருளினர்.

அன்று முதல் சவுனகர் முதலிய முனிவர்களெல்லாம் அம்மரங்களினுடைய இலைகளாலும் மலர்களாலும் ஆனைமுகக் கடவுளை வழிபடலாயினர். பிறகு சமியின் தாயாகிய சுமேதை

வன்னிமர நிழலில் எழுந்தருளிய ஆனைமுகக் கடவுளை வழிபட்டு அவருடைய உலகத்திற்குச் சென்று வாழ்ந்திருந்தாள். அவுரவமுனிவர் தம்மகள் மீது கொண்டிருந்த விருப்பத்தால் வன்னியின் கருப்பத்திற் புகுந்து விண்ணுலகத்தார்க்குத் தேவருணவு வாங்கிக்கொடுக்கும் தொழிலில் அமர்ந்திருந்தார். அது முதல் அவரைச் சமிகருப்பரென்று பெரியோர்கள் அழைக்கலாயினர். ஆகவே, ஆனைமுகக் கடவுளுக்குரிய அறுகு, வன்னி, மந்தாரை என்னும் இவைகளின் பெருமையை அளவிட்டுரைக்க முடியாது. அறுகில்லாக் குறையை வன்னியிலை போக்குவதாலும் வேள்வித் தீயானது எப்பொழுதும் வன்னியில் தங்கியிருப்பதாலும் உலகின்கண்ணுள்ள எல்லா இலைகளினும் வன்னியிலையே சிறப்புடையதாயிற்று. அதனைச் சிவபிரானும் ஒரு கூறுகத் தமது சடைமுடியில் அணிந்துள்ளனர்'' என்று கீர்த்திக்குக் கிருச்சமத முனிவர் சொன்னுர்.

## 59. வன்னி வழிபாடு

### நான்முகன் வேள்வி

மேலுங் கிருச்சமத முனிவர் கீர்த்தியைப் பார்த்து, ''முன்னொரு காலத்தில் நான்முகன் தன் மனைவியர் இருவருள் சாவித்திரியை இல்லத்தில் வைத்துவிட்டுக் காயத்திரியை அழைத்துக்கொண்டு சையமலைச் சாரலை யடைந்தான். எண்டோள் வீசி நின்றுடும் பரமனைக் குறித்துத் தேவர்களெல்லாம் புடை சூழ்ந்திருக்கச் சிறந்த ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினுன். பிறைத் திங்களையும் பசிய அறுகையுஞ் சூடிய சடைமுடியினையுடைய ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபாடு செய்யாமல் வேள்வியைத் தொடங்கினுன். அதனுல் அவ்வேள்விக்கு இடையூறு நேரிடத் தொடங்கியது.

### சாவித்திரியின் சினம்

சாவித்திரியானவள் தன்னை வீட்டில் இருக்கச் செய்து விட்டுக் காயத்திரியோடு சென்று வேள்வி தொடங்கியிருத்தலைக் கேட்டு உள்ளம் புழுங்கினாள். மிகுந்த வெகுளியோடு வேள்விச் சாலைக்குச் சென்றாள். அங்கு வந்திருந்த திருமால் இந்திரன் முதலிய தேவர்களைப் பார்த்து, "என்னுடைய கணவன் என்னையன்றிச் செய்யத் தொடங்கிய வேள்விக்கு நீங்கள் அனைவரும் உடன்பட்டிருக்கின்றீர்களன்றோ? ஆதலால் நீங்கள் இப்பொழுதே வெவ்வேறாகத் தண்ணீர் வடிவமாகக் கடவீர்கள்" என்றாள். அவ்வளவில் அனைவருந் தனித்தனியே நீர் வடிவமெடுத்துப் பெருகிக் கணக்கற்ற அலைகளைப் பரப்பி வேள்விச் சாலை முழுவதும் அழியப் பரந்து அங்கு வைத்திருந்த எல்லாப் பொருள்களையும் வாரிக் கொண்டு சென்றனர்.

### கடவுட் பெண்டிரின் கலக்கம்

இவ்வாறு வேள்விக்கு வந்த திருமால் முதலிய தேவர்களனைவரும் தண்ணீர் வடிவாகப் போனதை அவரவர்களுடைய மனைவிமார்கள் அறிந்து கலங்கினார்கள். திருமகள் முதலிய எல்லாரும் அங்கு வந்தார்கள். அங்கிருக்கும் நான்முகனைப் பார்த்து, "நீர் செய்யத் தொடங்கிய வேள்வி நன்றாக முடிந்துவிட்டது. நீர் வேள்வித் தீயை வளர்ப்பதற்கு வரவில்லை. எங்களுடைய வயிற்றுத் தீயையே வளர்ப்பதற்கு வந்தீர். இவ்வாறும் வேள்வி செய்பவர் உளரோ? சாவித்திரியினுடைய சினத் தீயால் எங்கள் கணவர்கள் நீராகச் சென்றார்களே, இனிமேல் அவர்களுடைய தண்ணீர் வடிவம் மாறுவதற்கு வழி என்ன சொல்லுகின்றீர்?" என்று கேட்டார்கள்.

### நான்முகன் மறுமொழி

நான்முகன் கடவுட் பெண்டிரின் ஆரவாரத்தைப் பார்த்தான். ஒரு பெண்ணினுடைய சினமே நம்முடைய வேள்வியை

அழித்ததாயின், இவ்வளவு பேருடைய சினம் ஒன்ருகச் சேருமாயின் நம்முடைய கதி யாதாவதென்று எண்ண மிட்டான். ஒன்றுந் தோன்ருதவனுய் அவர்கட்கு இனிய மொழிகளைக் கூறி, "நீங்கள் சிறிது நேரம் பொறுத்துக் கொண்டிருங்கள். விரைவில் அஃது ஒழியவேண்டிய முயற்சி களைச் செய்து உங்களுடைய வருத்தங்களையெல்லாம் ஒழித்து விடுகிறேன்" என்று உறுதி சொன்ஞன்.

### நான்முகன் தவம்

பிறகு நான்முகன் சிவபிரானை உள்ளத்திலிருத்தி அரிய தவத்தைச் செய்தான். சிவபெருமான் நான்முகனுடைய தவத்திற்கு இரங்கினுர். அவன் எண்ணிய திருவுருவத்தோடு காளையூர்தியின்மேல் காட்சி கொடுத்தார். நான்முகன் சிவபிரானுடைய அடிகளைப் பணிந்து கற்பக மலர்களால் போற்றி வழிபட்டான். அக் கடவுளைப் பார்த்து, "ஓ அருட் கடலே! அன்பர்க் கெளியவனே! அடியேன் அரைக்கணப் போதில் அரும்பழி சுமத்தவல்ல அரிவையர்களிடத்தில் அகப் பட்டுக்கொண்டு அல்லற்படுகிறேன். ஆகவே தேவரீர் திருமால் முதலிய தேவர்களடைந்திருக்கின்ற தண்ணீர் வடிவத்தை மாற்றி அடியேனுடைய வேள்வியும் நிறைவேறு மாறு திருவருள் செய்யவேண்டு"மென்று வேண்டிக் கொண்டான்.

### இடையூற்றின் காரணம்

சிவபிரான் நான்முகனைப் பார்த்து, "ஓ நான்முகனே! வேள்விக் கிடையூறும் தேவர்கட்கு வசவுரையும் வந்த காரணத்தை நீ உணர்ந்துகொள்ளவில்லை. சாவித்திரிக்கு உண்டான சினம் அவளுடைய தன்று. நீ வேள்வி செய்யத் தொடங்கியபோது ஆனைமுகனுக்கு வழிபாடு செய்து அவனுடைய உடன்பாட்டைப் பெறவில்லை. ஆகவே ஆனைமுகன் உனக்கு இத்தகைய இடையூற்றை உண்டாக் கினுன். நீ ஆனைமுகனுடைய சினந் தணியுமாறு அவனை

வழிபடக் கடவாய். அவ்வாறு வழிபடுவாயானல் அதன்மேல் இடையூறுகள் நேரா'' என்று திருவாய் மலர்ந்து மறைந் தருளினர். நான்முகன் தன்னுடைய மனக்கோணலை ஒழித்தான். திருமால் முதலியோருடைய மனைவியரைப் பார்த்து, ''உங்கள் தலைவர்கட் குண்டாகிய வசவுரை ஒழியுங்காலம் நேரிட்டது. நீங்கள் அனைவரும் ஆனைமுகக் கடவுளை உள்ளன்போடு வழிபடக்கடவீர்கள்'' என்று கூறினன்.

### ஆனைமுகக் கடவுளை வழிபடுதல்

நான்முகன் நவின்றதைக் கேட்ட திருமகள் முதலாயி னோர் நாம் உய்ந்தோம் என்று மகிழ்ச்சி யடைந்தார்கள். முன்னொரு காலத்தில் திருமால் அரக்கரை அழிக்குமாறு கருநாடக நாட்டில் ஒரு பொழிலில் உள்ள ஒரு மந்தார நீழலின்கண் அமைத்து வழிபட்ட வக்கிரதுண்டப் பிள்ளையாரை யடைந்து பலவகையாக வழிபட்டனர். பலநாள் வழிபட்டு அன்பு செய்தும் ஆனைமுகக் கடவுள் அவர்கட்குமுன் தோன்ற வில்லை. எல்லாரும் ஒன்ருகச் சேர்ந்து நாம் இவ்வாறு வழிபட்டும் ஆனைமுகக் கடவுள் நம்மிடத்திற்கு எழுந்தருளாத தற்குக் காரணம் என்னை? நாம் செய்து வருகின்ற வழி பாட்டில் யாதேனும் குறை நேரிட்டதோ என்று மனங்கலங்கிக் கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் அவர்களுடைய மனக் கலக்கம் ஒழியுமாறு வானொலி ஒன்று உண்டாகியது. அவ் வொலி, ''நீங்கள் ஆனைமுகனைக் காண விரும்பினல் வன்னியிலை யினல் வழிபடக் கடவீர்கள்'' என்று முழங்கியது. அதனை அனைவருங் கேட்டுப் பெருமகிழ்ச்சி யடைந்தார்கள். வன்னியிலை கொண்டு வழிபடத் தொடங்கினர்கள். சில நாட்களானவுடன் ஆனைமுகக் கடவுள் பெருச்சாளி யூர்தியின் மீது அவர்கள்முன் தோன்றியருளினர். மாதர்கள் அனைவரும் இன்பக்கடலில் மூழ்கிப் பன்முறை கீழே விழுந்து வணங்கிப் போற்றினர். ஆனைமுகக் கடவுள் அவர்கள் அனைவருக்கும் அருள்செய்து, ''நீங்கள் வேண்டிய வரங்களைத் தந்தோம்'' என்று கூறி மறைந்தருளினர்.

### தண்ணீர்வடிவம் நீங்குதல்

அம் மாதர்களுடைய கணவர்கள் அனைவரும் தண்ணீர் வடிவம் நீங்கித் தங்கள் இயற்கை வடிவத்தோடு மாதர்களிடம் அணுகினர், அவர்களனைவரும் அவர்களைத் தழுவி மகிழ்ந் தனர். தாங்கள் ஆனைமுகக் கடவுளை வழிபட்ட செய்தியைக் கூறினர். அதனைக் கேட்ட தேவர்கள் வியப்படைந்தனர். அவர்களும் ஆனைமுகக் கடவுளிடத்தில் அன்புடையவர்களாய், மற்ருெரு மந்தார நீழலில் ஆனைமுகக் கடவுளை நிலைபெறுத்தித் தண்மை பொருந்திய வன்னியிலையினுல் வழிபாடு செய்து அப்பெருமானுக்கு ஏரம்பப் பிள்ளையார் என்று பெயரிட்டுத் தத்தம் இருப்பிடங்கட்குச் சென்றனர்.

### தேவர்கள் வழிபாடு

தேவர்களனைவரும் தத்தம் இருப்பிடங்களில் ஆனைமுகக் கடவுளை வழிபடத் தொடங்கினர். இந்திரன் தன்னுடைய வெள்ளைமந்தார மரத்தடியிலும், மற்றவர்கள் தங்கள் தங்கள் உலகில் மந்தாரமரத்தை உண்டுசெய்து அவைகளினடியிலும் ஆனைமுகக்கடவுளை நிலைபெறுத்தி வழிபாடு செய்யலாயினர். நான்முகன் பன்னிரண்டு ஆண்டுகள் வரையிலும் வழிபட்டு அவருடைய அருளால் சாவித்திரியினுடைய மனக்குறையைப் போக்கிப் பின்னர் அவளோடு மண்ணுலகத்தை யடைந்து முன் தொடங்கிய வேள்வியை மீளவுந் தொடங்கி அதனை முடித்துச் சத்தியலோகஞ் சென்ருன்.

### வன்னி வழிபாடு

வன்னியிலையினுடைய பெருமை இவ்வாருகும். இன்னும் அதனுடைய பெருமையைச் சொல்லப் புகுந்தால் மேன் மேலும் பெருகும். புலையர்களாயினும் காலையில் எழுந்து வன்னி மரத்தை வழிபடுவார்களாயின் உடனே எல்லாத் தீவினைகளும் ஒழிந்து அந்தணர் குலத்தில் பிறப்பர். அந்தணர்கள் வழிபடுவார்களாயின் மறையின் மறைகள் பொருள்கள் அனைத்தையும் உணர்ந்து மெய்யறிவு பெறு

வார்கள். சத்திரியர் வழிபடின் இவ்வுலகம் முழுவதையும் தமது ஆணையுள் அடக்குவார்கள். வைசியர் வழிபடின் நிறைந்த செல்வத்தைப் பெறுவார்கள். சூத்திரர் வழிபடின் மேலான கதியை அடைவார்கள். ஆகையால் ஆனைமுகக் கடவுளை இன்னும் வன்னியிலையால் வழிபடுவாயெனின் உன்னுடைய விருப்பங்கள் உடனே நிறைவேறும்'' என்று கூறினர்.

## 60. கிப்பிரப்பிரசாதன் வழிபட்டது

### முன்னுரை

சவுனகாதி முனிவர்களே! தேவர்களுடைய மனைவிமார்கள் வன்னியிலையினால் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுத் தங்கள் தலைவர்கள் அடைந்த வசவுரையைப் போக்கிக் கொண்ட வரலாற்றினைச் சென்னோம். பிறகு கீர்த்தியின் மகனாகிய கிப்பிரப்பிரசாதன் வழிபட்ட செய்தியைக் கூறுகிறோம்: தேவேந்திரன் மேலுஞ் சூரசேன மன்னனைப் பார்த்து, ''அரசனே! சிவபிரானை உமையவள் மீளவுந் தொழுது, 'தேவரீருடைய திருவருளால் வன்னியிலையினுடைய மேன்மையையும் அது நம்முடைய ஆனைமுகனுக்கு மகிழ்ச்சி யளிக்கின்ற செய்தியையுந் தெரிந்துகொண்டேன். அதன் பிறகு கீர்த்தி என்பவளும் அவளுடைய மகனும் என்ன செய்தனர் என்பதனையுங் கூறியருள வேண்டும்' என்று வேண்டிக்கொண்டனள். சிவபிரான் உமையவளைப் பார்த்துக் கூறலானார்.

### முனிவர் அருள்புரிதல்

கீர்த்தி யென்பவள் கிருச்சமத முனிவரைப் பணிந்து, ''முனிவர் பெருமானே! என்னுடைய மகனாகிய இவனுக்கு எக்காலமும் ஓர் இடையூறு நேராதிருத்தற் பொருட்டும்; எல்லா உலகங்களும் இவனுடைய ஆணைவழியில் நிற்றற் பொருட்டும் ஆனைமுகக் கடவுளுடைய திருமறைகளில்

உருவேற்றுவதற்கு எளிதாகவும் விரைவில் பயனைத் தரத் தக்கதாகவும் உள்ள ஒரு மறையை இவனுக்கு உரைத்தருள வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டாள். கிருச்சமத முனிவர் கீர்த்தியினுடைய வேண்டுகோளுக்கு இணங்கினர். கிப்பிரப்பிரசாதனை நீராடி வருமாறு கட்டளையிட்டார். அவன் அவ்வாறே நீராடி வந்தான். அவனுக்குத் திருநீறு அணிவித்து ஆனைமுகக் கடவுளுடைய நாலெழுத்து மறையை உரைத்தருளினர். அம் மறையைக் கடைப்பிடிக்கும் முறை யையுந் தெரியப்படுத்தினர். ''இம் மறையைக் காசிப்பதியில் எழுந்தருளியிருக்கும் துண்டி விநாயகர் திருமுன் சென்று உருவேற்றக் கடவை'' என்று கட்டளையிட்டார். கீர்த்தி யானவள் கிருச்சமத முனிவரைப் பணிந்து, ''இவ்வுலகில் எண்ணற்ற திருவூர்கள் இருக்கின்றன; அவ்வாருகக், காசிப் பதிக்குச் சென்று உருவேற்றுமாறு கட்டளையிட்டதற்குக் காரணம் யாது ?'' என்று உசாவினள்.

### காசிப்பதியின் சிறப்பு

கிருச்சமத முனிவர் கீர்த்தியைப் பார்த்து, ''இன்ன தன்மையனென்று எவராலும் அறியவொண்ணுத சிவபிரான் அருளால் நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம், எண்பத்து நூருயிரம் உயிர்வகை ஆகியவைகளில் மாறிமாறிச் சுழன்றுவரும் உயிர்த் தொகைகளும் இவைகளில் இழிந்த யோனிகளினின்று நீங்கி மறை முதலியவைகளை ஓதியுணர்தற் குரிய நால்வகை வகுப்பினுள் வரப்பெற்றவரும், அவருட் சிறந்த மெய்யறிவுடையவர்களும், அவ்வறிவினல் பாசநீக்கம் வரப்பெற்றவர்களும் எளிதில் வீடுபேற்றை யடையவேண்டி இவ்வுலகின்கண் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சிவப்பதிகள் பல. அவற்றுள் காசி வீடுபேறளிக்கும் நகரங் களில் ஒன்று. இது கொடுக்கும் வீடுபேறு சாரூபமுத்தி. இவ் வீடுபேற்றினைச் சிவபெருமான் யாவராயினும் அங்கு உடல் நீங்கப்பெறின், அவர்கட்குத் தாரகப் பிரணவ மறையை அருளி எளிதாகப் பெறுமாறு செய்கின்றனர். பிறகு அவர்கள் வேறு வேறு உலகங்களில் வேறு வேறு வடிவங்களையும்

பெறுதலொழிந்து சிவலோகத்தில் சிவசொரூபம் பெற்றிருக்கும் பெற்றியராவர். அவ்வுலகில் எவ்விடத்தில் இருக்கத்தக்கவரெனின் சிவபிரானுக்கு அண்மையில் இருக்கத்தக்கவராவர். இம் மூன்றையும் அடையப்பெற்ற அவர் பெறுதற்கரியது ஒன்றுமில்லை. காசியில் இறக்கப் பெற்றவர்கட்கு வீடுபேற்றை மிக எளிதாகத் தருதலால் விசுவநாதருக்கு இணையான தெய்வமும், காசிப் பதிக்கு இணையான சிவப்பதியும், மணிகர்ணிகைக்கு இணையான புனித நீரும் எவ்வுலகினும் இல்லையென்பது உறுதி. அவிமுத்தம் என்று கூறப்பெறும் அக் காசிப் பதியில் எழுந்தருளிய விசுவநாதக் கடவுளை ஒரு கற்பத்தில் நான்முகன் முதலான மூவரும் வழிபட்டுப் படைப்பு முதலிய தொழில்களைப் பெற்றதுமல்லாமல் சிறந்த மேன்மைகளையும் பெற்றிருக்கின்றனர். இந்திரன் முதலிய திக்குப் பாலகர்களும், மற்றைய தேவர் அரக்கர் தானவர் உரகர் முதலியோரும் தங்கள் தங்கள் பதவியை இங்குப் பூசித்து நிலைபெறச் செய்துகொண்டனர்.

### திருமால் வழிபாடு

''முன்னொரு காலத்தில் திருமாலானவர் விசுவநாதப் பெருமானுக்குத் திருமுழுக் காட்டுவதற்காகப் பாதலலோகம் வரையில் ஆழ்ந்து நீர் நிறைந்திருக்கவல்ல ஒரு தடாகத்தைத் தோண்டி அத் தடாக நீரைக் கொண்டு திருமுழுக்கு வழிபாடு முதலியன செய்து அதன் கரையில்தானே தவஞ்செய்து கொண்டிருந்தார். அதற்கு விசுவநாதர் அருள்சுரந்து உமாதேவியோடு காளையூர்தியில் தோன்றியருளினர். உடனே திருமால் விரைந்தெழுந்து அவருடைய அடிகளிற் பலமுறை பணிந்தார். மறை முதலியவைகளாற் போற்றினர். அவர் அன்புக்கு விசுவநாதர் வியந்து தமது திருமுடியைச் சிறிது துலக்கினர். அவரது காதில் அணிந்திருந்த உரக குண்டலத்தினின்றும் ஒரு மணியானது சிதறி அத்தடாகத்தில் வீழ்ந்து அழுந்தியது. அது முதல் அப்புனித நீர்க்கு மணிகர்ணிகை என்னும் பெயருண்டாயிற்று. பிறகு ஒரு காலத்தில் பகீரதன் விண்ணகக் கங்கையைக் கொண்டுவந்து

அதில் விடுத்தான். அதனுல் பகீரதி என்னும் பெயருண்டாகியது. ஆகவே அப்புனித நீரில் வாழ்ந்திருக்கின்ற உயிர்த் தொகைகளும் அதில் படர்ந்து வளருகின்ற கொடிகள் கயல்கள் முதலியவைகளும் அதில் வீழ்ந்த எலும்பினையுடைய உயிர்த் தொகைகளும் அப்புனித நீரால் தெளிக்கப்பட்ட பிற உயிர்களும் வீடுபேற்றை யடைகின்றன. எங்கும் நிறைவாக உள்ள சிவபெருமான் அப்பதியில் எக்காலத்தினும் நீங்காது வீற்றிருக்கின்றமையால் அங்கு எப்பொழுதும் தேவர்கள் முனிவர்கள் முதலாயினுரும் தங்கியுள்ளனர். அக்காசி விசுவநாதர் திருமுன்பு எழுந்தருளியுள்ள துண்டி விநாயகக் கடவுளை அளவற்ற தேவர்கள் வன்னி, அறுகு, மந்தாரை இவைகளினுல் வழிபட்டுப் பெறுதற்கரிய மேலான பேறுகளைப் பெற்றிருக்கின்றனர்'' என்று கூறி இருவருக்கும் விடை கொடுத்தார்.

### கீர்த்தி மகனுடன் காசியை அடைதல்

கீர்த்தியும் அவளுடைய மகனுகிய கிப்பிரப்பிரசாதனும் காசிப்பதியை அடைந்தனர். மணிகர்ணிகையில் நீராடி துண்டி விநாயகருடைய திருவடிகளைப் பணிந்து அப்பதியில் தானே தங்கியிருந்தனர். மாசித் திங்களில் அமரபக்கத்தில் பதினுன்காவது நாள் வந்தவுடன் அன்று காலையில் எழுந்து நாட்கடன்களை முடித்துக்கொண்டு நாலெழுத்து மறையை வன்னி மரத்தடியில் இருந்து உருவேற்றினர். திங்கள் தோன்றியவுடன் எல்லா வகையான வழிபாட்டுப் பொருள்களோடும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு அறுகு, வன்னி, மந்தாரம் இவைகளினுல் போற்றி செய்தனர். பிறகு அவருடைய திருவுருவத்தை மனத்தில் எண்ணியிருந்தனர்.

### ஆனைமுகக் கடவுள் காட்சி

ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார். ஐந்து திருமுகங்களும் பத்துக் கைகளும் உடையவராய் அரிமா ஊர்தியில் காட்சி கொடுத்தார். கீர்த்தி தன்னுடைய மகனேடு பணிந்தாள். ''ஓ துண்டிவிநாயகப் பெருமானே! நான்முகன்

முதலிய முத்தேவர்கட்கும் முத்தொழில் அளித்தவரே! முதலும் நடுவும் இறுதியும் அற்று விளங்குகின்ற கடவுளே! தேவரீருடைய சீரிய காட்சியினால் நாங்கள் மேலான தவத்தையுடையவர்களாயினேம். யாங்கள் பல பிறவிகளினும் செய்த தீவினைகள் யாவும் நீங்கப் பெற்றேம். எல்லாப் பயன்களையும் எளிதில் பெற்றேம். என் மகனாகிய இவன் இனிமேல் எக்காலத்தினும் எத்தகைய இடையூற்றாலும் வருந்தாமல் நீண்ட வாணாள் கல்வி செல்வம் முதலியவை களோடு எல்லாருக்கும் தலைமையாயிருக்கத்தக்க மேன்மை யைக் கொடுத்தருள வேண்டும். எல்லா வகையான சிறப்புக் களோடும் வாழவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள்.

### ஆனைமுகப் பெருமான் அருள் செய்தல்

ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்து அவள் விரும்பிய எல்லா மேன்மைகளையும் கொடுத்தார். மேலும் அவளைப் பார்த்து, ''அன்பிற் சிறந்தவளே! உன் மகனாகிய இவன் இவ்வுலகில் ஆயிரம் ஆண்டுகள் வரையில் வாழ்ந்திருப்பான். ஆயிரம் வேள்விகள் செய்வான். இறுதிக் காலத்தில் மெய் யறிவைப் பெற்று, நம்மையடைவான்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். அவனுடைய கையில் மூவுலகத்தாரும் அஞ்சத்தக்க வச்சிரப்படையை அளித்தார். அவனுக்குப் பரசுபாணி என்று ஒரு பெயருங் கொடுத்தார்; பிறகு மறைந் தருளினார்.

### ஊருக்குத் திரும்புதல்

கீர்த்தியும் அவளுடைய மகனும் மறுநாட் காலையில் எழுந்து, கங்கையில் நீராடித் துண்டி விநாயகரைப் பணிந்து அப்பதியை விட்டுப் பிரிவதற்கு மனமில்லாமல் பிரிந்து பல காடுகளைக் கடந்து தங்களுடைய ஊராகிய கன்னபுரியை நெருங்கினர். தன்னுடைய மனைவியும் மைந்தனும் வருதலைப் பிரியவிரதன் உணர்ந்தான். அவர்களை அழைத்துக்கொண்டு

வருமாறு அமைச்சர்களை அனுப்பினுன். அவர்கள் ஊரை அழகு செய்து கீர்த்தியைச் சிவிகைமீதும் கிப்பிரப்பிரசாதனை யானைமீதும் ஏறச்செய்து அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு சென்றனர். இருவரும் பிரியவிரதனைப் பணிந்தனர். அவன் இன்பக் கடலில் மூழ்கியவனுய்த் தன்னுடைய இரண்டு கைகளாலும் எடுத்து மகனைத் தழுவிக்கொண்டான். அவர்கள் வெளியிற் சென்றது முதல் நடந்த செய்திகளையெல்லாம் உசாவினுன். நிகழ்ந்தவைகளையெல்லாம் கீர்த்தி சொன்னுள். அதனைக் கேட்டுப் பிரியவிரதன் மகிழ்ச்சியடைந்தான்.

## ஆட்சியும் வீடுபேறும்

பிரிய விரதன் தன் மகனுகிய கிப்பிரப்பிரசாதனுக்கு முடிசூட்டித் தனது அரசாட்சிச் சுமையை அவனுடைய தோளில் இறக்கினுன். பிறகு தான் காட்டிற்குச் சென்று மனத்தூய்மையோடு தவஞ் செய்துகொண்டிருந்தான். கிப்பிரப்பிரசாதன் ஒளி வீசுகின்ற மணியினுல் ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவத்தைச் செய்து அதனைத் தனது கழுத்தில் அணிந்துகொண்டான். ஆயிரம் வேள்விகளைச் செய்து முடித்தான். ஆயிரம் ஆண்டுகள் வரையிலும் அரசாட்சியைத் திக்கனைத்தினுஞ் செலுத்தினுன். இறுதிக் காலத்தில் ஆனைமுகக் கடவுளுடைய அருளினுல் தெய்வ விமானம் வர அதிலேறிக்கொண்டு ஆனைமுகக் கடவுள் உலகத்தை அடைந்தான். கணக்கற்ற கற்பகாலம் வரையில் அங்கிருந்து எல்லாப் போகங்களையும் நுகர்ந்து இறுதியில் பேரின்ப வீடுபேற்றை யடைந்தான்.

## முடிவுரை

உமையே! ஆனைமுகனுக்கு வன்னியிலையில் விருப்பமுண்டான காரணத்தையும் அவ்வன்னி வரம் பெற்றிருக்கின்றமையையுஞ் சொன்னேம். ஆனைமுகனையும் எம்மையும் வேருக எண்ணற்க. அவ்வன்னியிலை ஆனைமுகனுக்கு விருப்பமானதாகையால் அதனை நாமும் அணிந்துகொண்டோம்.

## 61. கிருதவீரியன் வழிபட்டது

சங்கட சதுர்த்தி நோன்பு

தேவேந்திரன் சூரசேன மன்னனைப் பார்த்து "அரசனே! நான்முகனுல் சங்கட சதுர்த்தி நோன்பின் பெருமைகளை யெல்லாம் நன்ருகக் கேட்ட பிதிர்த்தேவன் மீளவும் அவனைப் பணிந்தெழுந்து, "சங்கட சதுர்த்தி நோன்பை முடித்த பின்பு நடத்தவேண்டிய முறைமைகளையுங் கூறியருள வேண்டு"மென்று வேண்டிக் கொண்டான். அதற்கு நான்முகன் இசைந்து, "அன்பனே ! அந்நோன்பினைத் தொடங்கிய திங்களிலாவது ஐந்தாந் திங்களிலாவது ஏழாந் திங்களிலாவது வருகின்ற நான்காவது நாளையில் ஒரு குடம் அமைத்து, அதன்மீது ஒரு தட்டை வைத்து, அதன்மீது ஆடையை விரித்து, அதன்மீது மறையெழுதிய பொறியை வைத்து, அதன்மீது சித்திபுத்தியோடு கூடிய ஆனைமுகக் கடவுளைப் பொன்னினுல் செய்தமைத்து மறை முறைப்படி வழிபடவேண்டும். பதினுயிரம் ஐயாயிரம் ஓராயிரம் நூற்றெட்டு என்னுந் தொகையில் தனக்கியன்ற மட்டும் ஆகுதி கொடுத்துக் குறுணி எள்ளைத் தானஞ் செய்தல் வேண்டும். பொருள் படைத்த செல்வனுயின் கோதானம் முதலியவைகளையுஞ் செய்தல் வேண்டும். அந்தணர் இருபத்தொரு பேருக்கு அன்னதானஞ் செய்தல் வேண்டும். பிறகு ஆனைமுகப் பெருமானை உள்ளத்தில் எண்ணி அவர்கள் உண்டு மிகுந்த உணவைத் தானருந்துதல் வேண்டும். பிறகு மறைப் பொறியையும் உருவத்தையும் ஆசிரியருக்குத் தானஞ் செய்தல் வேண்டும். இம்முறைப்படி செய்தால் அந்நோன்பின் பலன் நிறைவேறும். இந்நோன்பினை உமாதேவியார் ஆறு திங்கள் கடைப்பிடித்துச் சிவ பெருமானுடைய இடப்பாகத்தைப் பெற்ருர். தமயந்தி நான்கு திங்கள் கடைப்பிடித்துக் காட்டில் திரிந்த நளன் தன்னிடம் வரப்பெற்ருள். அகத்திய முனிவர் மூன்று திங்கள் கடைப்பிடித்துக் கடல் நீரை யுண்டார். கண்ண பகவான் ஒருநாள் கடைப்பிடித்து வாணுசுரனை வென்ருர்.

மேலும் இந்நோன்பினை யானுந் திருமாலும் இந்திரன் முதலிய தேவர்களும் இடையூறுற்ற காலங்களிலெல்லாம் கடைப்பிடித்து வேண்டிய நன்மைகளைப் பெற்றிருக்கிறேம். ஆனைமுகக் கடவுளுடைய நோன்பைப் போலச் சிறந்த பயனைத் தரும் நோன்பு வேறு ஒன்றுமில்லை. இதனை நன்ருக எண்ணிப் பார்க்கக்கடவாய்'' என்று நான்முகன் நவின்றுன்.

**பிதிர்த்தேவன் கட்டளை**

நான்முகன் நவின்றவைகளைக் கேட்டுப் பிதிர்த்தேவன் மகிழ்ச்சியடைந்தான். அடியேனும் அடியேனுடைய வழி முறையும் ஈடேறப் பெற்றேம் என்று பலமுறை போற்றினுன். தனக்கு நான்முகன் கூறிய சங்கட சதுர்த்தி நோன்பு முதலான பெருமைகளையெல்லாம் எழுதினுன். எழுதப் பட்டதைத் தன்மகனுகிய கிருத வீரியனுடைய கனவிற் சென்று அவனுடைய கையில் கொடுத்தான். ''மைந்தனே ! ஆனைமுகக் கடவுளுடைய நோன்பைப்பற்றி இதனில் எழுதப் பட்டிருக்கிறது. எழுதப்பட்டுள்ளதனை அந்தணர்களால் உணர்ந்து அவ்வாறே நோன்பைக் கடைப்பிடித்து வருவா யானுல் மக்கட்பேறுண்டாகும்'' என்று கூறித் தன்னுடைய உலகம் போய்ச் சேர்ந்தான்.

**கிருத வீரியன் வழிபாட்டு முறைகளை யறிதல்**

கிருதவீரியன் விழித்தான். கனவிற் கண்ட தந்தையை நனவிற் காணுமல் வருந்தினுன். தன்னுடைய கையிலுள்ள தைப் பார்த்து மகிழ்ந்தான். அதுவரையில் தான் கொண் டிருந்த மனக் கவலையையும் துன்பத்தையும் ஒழித்தான். தன் மனைவியை அழைத்து அவளிடம் தான் கண்ட கனவினைக் கூறினுன்.

**கிருத வீரியன் வழிபாடு**

பிறகு காட்டைவிட்டு நாட்டையடைந்தான். தன் னுடைய அமைச்சர் முதலானவர்கட்குச் செய்தியைத் தெரியப் படுத்தினுன். அந்தணர்களையழைத்து வழிபாட்டு முறை

எழுதப்பட்டிருந்த தாளினை அவர்களிடங் கொடுத்துப் படிக்கச் சொன்னான். அவர்கள் படித்து அதனில் எழுதப்பட்டிருந்தவைகளையெல்லாங் கிருத வீரியனுக்குக் கூறினார்கள். பிறகு கிருதவீரியன் மாசித்திங்கள் அமர பக்கத்தில் அங்காரக சதுர்த்தி நாளில் காலையில் எழுந்து நீராடல் முதலிய கடன்களை முடித்துத் திருவெண்ணீறணிந்து கண்மணி மாலை பூண்டு சங்கட சதுர்த்தி நோன்பைத் தொடங்கினான். ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை மனத்தில் இருத்தி ஓரெழுத்து ஆறெழுத்து முதலிய மறைகளை உருவேற்றிக் கொண்டு ஏழாந்திங்களில் தன்னுடைய குல குருவாகிய அத்திரி முனிவரை வரவழைத்தான். திருமுழுக்கிற்குரிய பொருள்களையும் வழிபாட்டிற்கேற்ற மலர்களையும் படைத்தற்கேற்ற படைப்புப் பொருள்களையும் புகைவழிபாடு சுடர் வழிபாடு ஆகியவைகட்கு வேண்டியவைகளையுந் தொகுத்து வைத்துக்கொண்டு ஆனைமுகக் கடவுள் வழிபாட்டைத் தொடங்கினான். செய்யவேண்டிய முறைப்படி செய்து முடித்தான். இறுதியில் குரு வழிபாட்டையுஞ் செய்து அவருக்குத் தக்கவாறு தானங் கொடுத்தான் வழிபாடு செய்த குடம் முதலியவைகளையும் அவருக்களித்தான். மறையோதும் அந்தணர்கட்கு ஆயிரம் ஆக்களைத் தானஞ் செய்தான். அவ்வளவுக்கேற்ற பொருள்களையுங் கொடுத்தான். பிறகு வழக்கம் போல் அரசாட்சியைச் செய்துகொண்டிருந்தான்.

**கால் கைகளில்லாத கான்முளை**

கிருத வீரியனுடைய மனைவியாகிய சுகந்தை கருப்பமுற்றாள். பத்தாந் திங்களில் ஒரு மகனைப் பெற்றாள். அம் மகனுக்குக் கால்களுங் கைகளும் இல்லை. பிற உறுப்புக்களெல்லாம் மிக அழகாக அமைந்திருந்தன. அக்குழந்தையைச் சுகந்தை பார்த்து மனங் கலங்கினாள். எம்முடைய பங்கில் தான் இத்தகைய குழந்தை வரவேண்டும் என்று துன்பப் பட்டாள். அரசன் செய்தியை உணர்ந்தான். தானும் வந்து அப் பிள்ளையைப் பார்த்தான். மிகுந்த துன்பங்கொண்டான்.

பிறகு தன்னுடைய மனத்தைத் தானே தேற்றிக்கொண்டான். மனேவியைப் பார்த்து, "இப்பிள்ளை ஆனேமுகக் கடவுளுடைய நோன்பின் பலனுக உண்டாகியிருக்கிருன். ஆகவே இவனுக்குள்ள குறையை ஆனேமுகப் பெருமானே அகற்றியருள்வார். நீ எதற்குங் கவலைப்படவேண்டாம்" என்று மனேவிக்குத் தேறுதல் உரைகள் கூறிவிட்டுப் பின் அக்குழந்தைக்குச் செய்யவேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்தான். அந்தணர்கட்கு மணிகளையும் பொன்னையும் மழைபோலச் சொரிந்தான். கார்த்தவீரியன் என்று பெயரிட்டான். கார்த்தவீரியனுக்கு ஆண்டு பன்னிரண்டு நிரம்பியது.

### தத்தாத்திரேய முனிவர்

ஒருநாள் தத்தாத்திரேய முனிவர் தற்செயலாகக் கிருதவீரியனிடத்திற்கு வந்தார். கிருதவீரியன் அவரை எதிர்கொண்டு பணிந்து போற்றினுன். ஓர் இருக்கையில் இருக்கச் செய்தான். பிறகு அவரைப் பார்த்து, "அடிகாள்! அடியேன் பல நாள் அரிய தவங்களைச் செய்து ஒரு மகனைப் பெற்றேன். அவனே பகைவர்களெல்லாங் கண்டு நகைக்குமாறு கால்களுங் கைகளும் இல்லாதவனுகப் பிறந்தான். யான் செய்த தவங்களில் யாதேனுங் குற்றமுண்டாயிற்ருே என்னவோ தெரியவில்லை. வெகுகாலமாக மக்கட்பேறற்றவனுக விருந்தேன். மகனேப் பெற்றும் மனக்குறை நீங்கிய பாடில்லை. அடியேன்மீது தேவரீர் அருள் செய்து அவனுடைய முடம் நீங்குவதற்கான வழியைக் கூறுதல் வேண்டும்" என்று சொல்லி வேண்டிக்கொண்டான்.

தத்தாத்திரேய முனிவர் உள்ளம் இரங்கினுர். "நாம் உன்னுடைய புதல்வனேக் காணும் பொருட்டே இங்கு வந்தோம். ஆகையால் விரைவில் அவனே இங்குக் கொண்டு வருவாயாக" என்று கட்டளையிட்டார். அவ்வாறே அப்புதல்வனே எதிரிற் கொண்டுவந்து சேர்த்தார்கள். தத்தாத்திரேயர் அம்மகனேப் பார்த்தார். பிறகு அரசனேப்பார்த்து, "அரசனே! நீ இப்புதல்வனேக் குறித்து எவ்வகையான மன

வருத்தமுங் கொள்ளவேண்டியதில்லை. இவன் இவ்வுலகம் முழுவதற்கும் பேராழி மன்னனாக இருப்பான்" என்று கூறினர். அம்மகனுக்குத் தீக்கைசெய்து ஆனைமுகக் கடவுளுடைய ஓர் எழுத்து மறையை உரைத்துவிட்டுச் சென்றார்.

## கார்த்த வீரியன் தவம்

பிறகு கார்த்தவீரியன் தன்னுடைய தந்தையாகிய கிருத வீரியனைப் பார்த்து, "எந்தையே! நான் தத்தாத்திரேய முனிவர் உரைத்தருளிய மறையைக் கடைப்பிடித்துத் தவஞ் செய்தற்கு எண்ணுகிறேன். என்னைக் காட்டிற்குக் கொண்டு போய் விடுதல் வேண்டும்" என்று சொல்லி வேண்டிக் கொண்டான். அவ்வாறே அரசன் கார்த்த வீரியன் தவஞ் செய்தற்குரிய ஏற்பாடுகளைச் செய்தான். [கார்த்தவீரியன் காட்டில் இருந்துகொண்டு உணவு முதலியவைகளை வெறுத்து ஆனைமுகக் கடவுளைக் கருத்திலிருத்தி ஐம்பொறிகளையும் அடக்கி ஓரெழுத்து மறையை இடைவிடாது உருவேற்றிக் கொண்டான். ஆண்டுகள் பன்னிரண்டு சென்றன. கார்த்த வீரியன் செய்கின்ற தவத்திற்கு ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார்.

## ஐந்துகைக் கடவுள் அருள்புரிதல்

அவ்விடத்தில் இருந்த ஒரு தடாகத்தினிடமாக அளவற்ற தேவர்களொடுந் தோன்றினர். கார்த்த வீரியன் எழுந்து வணங்க முடியாதபடியால் தன்னுடைய மனத்தால் பலமுறை வணங்கினன். அவனுடைய வணக்கத்திற்கு ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்தார். "அன்பனே! நீ விரும்பிய மேன்மைகளைக் கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினர். கார்த்த வீரியன் ஆனைமுகக் கடவுளைப் பார்த்துப் "பெருமானே! முடவனாகிய என்னுடைய முகத்தைப் பார்த்து, முழுவதுங் காத்தருளவேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் அவனுக்கு இரண்டு கால்களையும் ஆயிரங்

கைகளையுங் கொடுத்து அதற்கேற்ற ஆற்றலையும் அருளினர். பிறகு மறைந்து போனர்.

### நான்முகன் முதலியோர் அருளுதல்

ஆனைமுகக் கடவுளோடு வந்திருந்த நான்முகன் முதலிய எல்லாத் தேவர்களும் கார்த்தவீரியனைப் பார்த்து, "நீ ஒரு கற்ப காலம் வரையிலும் வாணுள் பெற்றிருப்பாயாக! எல்லாருக்கும் நன்மையே செய்வாயாக! எதிர்த்து வருகின்ற பகைவர்களையெல்லாம் ஐந்நூறு கணைகளால் வென்று வாழ்ந்திருப்பாயாக!" என்று அருள்புரிந்தார்கள்.

### கைகாலுண்டாதல் முதலியன

ஆனைமுகக் கடவுள் அருள்புரிந்த அப்பொழுதே கார்த்த வீரியனுக்கு இரண்டு கால்களும் ஆயிரங் கைகளும் உண்டாயின. அவன் ஆனைமுகக் கடவுளுடைய அருளை எண்ணி எண்ணி மனமுருகினுன். இன்பக் கண்ணீர் சொரிந்தான். அவர் மறைந்தருளிய திக்கைப் பார்த்துப் பன்முறை வணங்கினுன். சிற்பநூன் முறைப்படி பொன்னுலும் மணியாலும் ஒரு கோயிலமைத்தான். ஆனைமுகப் பெருமான் பவள ஒளியோடும் எழுந்தருளிக் காட்சி கொடுத்தபடியால் பவளத்திஞல் ஓர் உருவத்தைச் செய்து அவ்வுருவத்தைக் கோயிலில் அமைத்து வழிபாடு செய்தான். அப்பிள்ளையாருக்குப் பிரவாளப் பிள்ளையார் என்றும் அக்காட்டிற்குப் பிரவாளக் காடு என்றும் பெயர் வழங்குகின்றது. அந்தப் பிள்ளையார் மிகப் பெருமை பொருந்தியவராக விளங்குகின்ருர். பிறகு அக் காட்டின்கண் ஒரு நகரத்தை உண்டாக்கி அதற்குத் தரணிதர நகரம் என்று பெயரிட்டான். தன்னையாட்கொண்ட பிள்ளையாருக்குத் தரணிதரப் பிள்ளையார் என்று மற்ருெரு பெயரும் இட்டான். இராவணனும் அந்தப் பிள்ளையாரை வழிபட்டு இலங்கையரசாட்சி பெற்ருன். பஞ்ச பாண்டவர்களும் அவரை வழிபட்டுத் துரியோதனனை வென்று அரசாட்சி பெற்றனர். இத்தன்மையான சிறப்பினையுடைய சங்கட

சதுர்த்தி நோன்பு செய்த பலனில் ஒருநாட் பலனையாராகிலும் நம்முடைய கையில் தானஞ் செய்தால் இவ்விமானம் விண்ணில் எழும்பும் என்று தேவேந்திரன் சூரசேனனுக்குச் சொன்னான்.

## 62. சூரசேனன் வழிபட்டது

**தொடக்கவுரை**

சவுனகாதி முனிவர்களே! கிருதவீரிய மன்னன் ஆனைமுகக் கடவுளினுடைய சங்கட சதுர்த்தி நோன்பைக் கடைப்பிடித்துக் கார்த்தவீரியனைப் பெற்றதைக் கூறினோம். சூரசேன மன்னன் வழிபாடு செய்த திறத்தினையுங் கூறு கிறோம். சூரசேனன் இந்திரனைப் பணிந்து, "தேவலோக மன்னனே! அங்காரக சதுர்த்தி நோன்பின் பெருமையையும், அறுகு வன்னி மாந்தாரை இவைகளின் பெருமையையும் அடியேனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உரைத் தருளினீர். அப்புதுமைகளையெல்லாம் ஐயமில்லாமல் அறிந்து கொண்டேன். இத் தன்மை பொருந்திய சிறந்த நோன்பை எவருங் கூறக் கேட்டதில்லை. தேவரீர் அடியேன்மீது அருள் சுரந்து செப்பினீர். அதற்கு அடியேன் செய்யுங் கைம்மாறு ஒன்றுமில்லை" என்று கூறிப் பாராட்டினான். எவ்வா றாயினும் அங்காரக சதுர்த்தியைக் கடைப்பிடிக்கின்ற ஒரு நோன்பியைக் கண்டுபிடித்து இவ் விமானத்தை விண்ணி லெழுப்ப வேண்டும் என்று முடிவு செய்தான். நான்கு திக்குகளினும் ஆட்களை அனுப்பினான்.

**ஒரு புலைச்சி**

அவ்வாட்கள் பலவிடங்களினுந் தேடிக்கொண்டு வந் தார்கள். அப்பொழுது மற்றொரு விமானம் விண்ணில் இருந்து மண்ணில் இறங்கியது. அதனைக் கண்டு அதன் செய்தியை அறிவோமென்று அண்மையிற் சென்றனர். அவ்விமானத்தில் இருந்த தேவகணங்கள் அந்நகரத்தில்

இறந்த ஒரு புலைச்சிக்குத் தெய்வயாக்கையைக் கொடுத்துச் சிறப்போடு அவ் விமானத்தில் ஏற்றுதலைக் கண்டார்கள். இஃதென்ன புதுமையென்று வியப்படைந்தார்கள். தேவ கணங்களைப் பணிந்து, "ஓ கணநாதர்களே! இவள் இப் பிறப்பில் புலைச்சியாக இருந்தனள். அணுவளவேனும் அறமென்பதனைச் செய்தறியாள். முற்பிறப்பில் யாதேனுஞ் செய்திருக்கின்ருளோ அதனை அறியோம். அரிய தவத்தினை யுடையவர்கட்கும் கிடைத்தற்கரிய இத்தெய்வவிமானத்தை இவளுக்குத் தந்தீர்களாகையால் இவளுடைய நல்வினை இன்னதென்று இயம்பியருளவேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர். தேவகணங்கள் இசைந்தார்கள்.

சுந்தரி

"வங்காள நாட்டில் சாரங்கதரன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். அவனுக்குச் சுந்தரி என்னும் பெயருடைய ஒரு மகளிருந்தாள் அவள் சித்திரன் என்னும் பெயருடைய இளவரசனுக்கு மனைவியானுள். அவள் தன்னுடைய இசையறிவாலும், மருண்ட பார்வையினுலும் அழகினுலும் அனைவரும் அவளிடத்தில் மயங்கும்படி விளங்கினுள். சுந்தரி கற்பு என்பதைச் சிறிதும் உணராதவளாய்க் கணவன் ஒருவன் இருக்கின்ருன் என்பதையும் மறந்து தன்னை விரும்பிய எல்லாரையுங் கலந்து திரிந்தாள். அவளுடைய தீய ஒழுக்கத்தினைக் கணவன் உணர்ந்து, "அறிவில்லாதவளே! எனது குலத்தைக் கெடுப்பதற்கு நீ வந்து சேர்ந்தாய். இனிமேல் நீ வீட்டை விட்டு வெளியே செல்லுவையாயின் உன்னைக் கொலைசெய்வேன்" என்று கூறி அவளைக் காவலில் வைத்தான். அவள் அடங்கியிருப்பவளைப்போற் சில நாள் இருந்தாள். மனத்திற் கபடங்கொண்டாள். தன் கணவன் உறங்குஞ் சமயத்தில் வாளைக்கொண்டு கணவனுடைய உயிரைப் போக்கினுள். பிறகு தன்னுடைய விருப்பம் போல் வேறு ஆடவர்களிடத்திற் சென்று மகிழ்ந்திருந்தாள். காவலாளர் இளவரசனைக் கொன்றவள் இவளே என்பதனை யுணர்ந்து கைகளைக் கட்டி அரசனிடம் இழுத்துச் சென்று

செய்தியை உரைத்தார்கள். அரசனுடைய கட்டளைப்படி அவளைக் கொன்றனர். உடனே எமதூதர்கள் அவளைக் கொண்டுபோய் அளவற்ற காலம் கொடிய நிரயங்களிலெல்லாம் போட்டு வருத்தித் துன்புறுத்தினர்கள். பிறகு இந் நகரத்திலுள்ள சேரியிலே புலைச்சியாய்ப் பிறக்குமாறு செய்தார்கள்.

உண்டாகிய நல்வினை

இவள் முன்பிறப்பு முழுவதும் தீவினைகளைச் செய்தாளே யல்லாமல் ஒரு தினையளவேனும் நல்வினையைச் செய்யவில்லை. இப் பிறவியிலும் இது வரையிலும் எத்தகைய நல்வினையையும் செய்யவில்லை இவள் இத்தகைய கொடியவளாக இருந்த போதினும் இன்று காலையிற் கள்ளருந்திப் பகலெல்லாம் வெறியோடு கிடந்தாள். பொழுதுபோன பின்பு சிறிது வெறி நீங்கியது. பசி மிகுதியாகியது. அதனல் உணவு தேட வெளியே புறப்பட்டாள். ஒரு வீட்டின் பக்கத்திற் சென்ருள். இன்று விநாயக சதுர்த்தியாகையால் அவ் வீட்டினர் சதுர்த்தி நோன்பினைச் செய்து முடித்து ஆனைமுகக் கடவுளுக்குப் படைத்த உண்பொருள்களில் தாங்கள் உண்டு எஞ்சியதைத் தெருவிற் கொண்டு வந்து வீசினர்கள். இப் புலைச்சியானவள் உடனே அதனையெடுத்துத் தன்னுடைய பசி நீங்குமாறு தின்ருள். மேலும் அவ்வீட்டினர், "கணபதி! கணபதி!! கணபதி!!!" என்று போற்றினர்கள். இவளும் அதனைக் கேட்டுத் தானும் அவ்வாறே மூன்று முறை மொழிந்தாள். இவள் சங்கட சதுர்த்தி நோன்பில் தம் முடைய திருப்பெயரைச் சொன்னுள் என்று ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார். இவளை அன்போடு அழைத்துக் கொண்டு வருமாறு எங்கட்குக் கட்டளையிட்டார். அவ்வாறே யாங்கள் வந்து இவளுக்குத் தெய்வ யாக்கையைக் கொடுத்து விமானத்தி லேற்றினேம். இதுதான் காரணம்" என்று தேவகணங்கள் கூறின. இதனைக்கேட்ட தூதர்கள் மீண்டும் தேவகணங்களைப் பார்த்து, "ஓ கணத்தலைவர்களே! இந்திரன் விண்ணிற் செல்லுகின்றபோது ஒரு நோயாளியினுடைய

பார்வையினுல் அவனுடைய விமானங் கதி தப்பி இப் பட்டணத்தில் இறங்கிவிட்டது. அது மீண்டும் விண்ணி லெழுமாறு செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். தேவகணங்கள் தூதர்களைப்பார்த்து, "எங்களுடைய தலைவரின் கட்டளை யாதோ அதனைத் தான் யாங்கள் செய்யலாமே யல்லாமல் மற்றவற்றைச் செய்தல் கூடாது" என்று கூறி விட்டு விமானத்தை விண்ணிற் செலுத்திக் கொண்டு சென்ருர்கள். விமானத்தில் இருந்த புலைச்சிக்குப் புலையுடல் ஒழிந்து தெய்வ உடல் உண்டாகியது. அவளுடைய பார்வை இந்திர விமானத்தின்மீது பட்டது. அவ்வளவில் இந்திர னுடைய விமானமும் விண்ணில் எழும்பிச் சென்றது.

### சூரசேனன் வழிபாடு

தூதர்கள் தங்களுடைய அரசனிடத்திற்குப் போய்ப் பணிந்து, விண்ணில் இருந்து மற்ருெரு விமானம் வந்ததையும் அது மீண்டுந் தன் வழியிற் சென்றதையும் அதனுல் இந்திர விமானம் விண்ணில் எழுந்ததையுங் கூறினுர்கள். எல்லா வற்றையும் அரசன் கேட்டான். இரண்டு விமானங்களையும் தொழுதான். பெரும் பொருள் பெற்ருற் போல மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தான். தன்னுடைய அரண்மனைக்குப் போய் வசிட்ட முனிவரை வரவழைத்தான். மாசித்திங்கள் அமர பக்கத்தில் நேர்ந்த அங்காரக சதுர்த்தியில் ஆனைமுகக் கடவுளை மனத்தில் எண்ணி மறைமுறைப்படி நோன்பினை மேற்கொண்டான். திங்கள்தோறும் வருகின்ற சதுர்த்தசியில் இடைவிடாமல் வழிபட்டு வாழ்கின்ற காலத்தில் ஆனைமுகக் கடவுளுடைய பேரருளால் தேவகணங்கள் ஒரு விமானத்தைக் கொண்டு வந்து அரசன் முன்பு நிறுத்தினுர்கள். அரசன் மகிழ்ச்சிகொண்டு அவ்விமானத்திடஞ் சென்று பணிந்து நின்ருன்.

### சூரசேனன் விமானமேறுதல்

தேவகணங்கள் அரசனைப் பார்த்து, "ஓ அரசனே! உன்னை அழைத்துக்கொண்டு வருமாறு ஆனைமுகக் கடவுள்

எங்கட்குக் கட்டளையிட்டுள்ளார். ஆகவே இவ்விமானத்தில் ஏறவேண்டும்'' என்று கூறினார்கள். அரசன் தேவகணங் களைப் பார்த்து, "ஓ கணத் தலைவர்களே! இவ்வூரி லுள்ளவர்கள் ஒரு கணப்பொழுதுகூட என்னை விட்டுப் பிரிந்திருக்க மாட்டார்கள். அவர்களையும் என்னோடு அழைத்துக் கொண்டு செல்லவேண்டும்'' என்று சொன்னான். தேவகணங்கள், "உன்னுடைய விருப்பப்படியே செய்யலாம்'' என்று கூறினார்கள். அரசன் நகரத்தார்களும் விமானமேறக் கட்டளை யிட்டான். அந் நகரில் இருந்தவர்கள் அனைவரும் விமானத்தில் ஏறினர். பிறகு அரசன் தன்னுடைய உறவினர்கள் முதலியவர்களோடு விமானத்தில் ஏறினான்.

## தொழுநோய் கொண்ட வணிகன்

நகரத்தார்கள் விமானத்தில் ஏறியபொழுது தொழுநோய் கொண்டிருந்த ஒரு வணிகனும் ஏறினான். அவ் வணிகன் மிகுந்த தீவினையாளனாகையால் விமானம் விண்ணுக்கெழாமல் மண்ணிலேயே இருந்தது. விமானம் விண்ணிலெழாத காரணத்தைக் கண நாதர்கள் உணர்ந்தார்கள். அரசனைப் பார்த்து, "அரசனே! இவ் விமானத்தில் ஏறியிருக்கிறவர் களில் தொழுநோய் கொண்ட ஒரு வணிகன் இருக்கிறான். அதனால் இவ் விமானம் விண்ணில் எழவில்லை. அவ்வணிகன் முன் பிறவியிற் பெருந் தீவினை செய்தவனாகையால் இப் பிறவியில் இவ்வாறு நோயினால் வருந்துகிறான்.

## முற்பிறப்பு வரலாறு

அவனுடைய முன்பிறப்பு வரலாற்றையும் கூறுகிறோம் கேட்பாயாக என்று கூறலானார்கள். கவுடநாட்டில் தவசீலன் என்னும் பெயருடைய ஓர் அந்தணன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சானகி. இவர்கட்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்குப் புதன் என்று பெய ரிட்டார்கள். அவன் வளர்ந்து கல்வி கற்றுச் சிறந்தவனாக விளங்கினான். அவனுக்குப் பேரழகு வாய்ந்த சாவித்திரி

என்னும் பெண்ணைத் திருமணஞ் செய்துவைத்தார்கள். அவன் அவளோடு வாழ்ந்து கொண்டிருந்தான். தீவினையினுல் அவனுக்குக் கெட்ட ஒழுக்கங்கள் உண்டாயின. விலைமாதர்களுடைய கூட்டுறவை மேற்கொண்டான். அவர்களிடத்தில் தானே உணவு புசித்தலையும் மேற்கொண்டிருந்தான். அவனுடைய தாய் தந்தையர்கள் மகனைக் காணுமல் வருந்தியிருந்தார்கள். அகவை முதிர்ந்திருந்த அவர்களால் வெளியிற் சென்று தேடுவதற்கும் இயலவில்லை. அகவை முதிர்ந்து வருந்தியிருந்த தவசீலன் மகன் மீது கொண்ட பற்றுதலால் தடியூன்றிக் கொண்டு தெருக்கடோறுந் தேடிக் கொண்டு சென்ருன். அப்பொழுது வீமன் என்னும் பெயருடைய ஒருவன் தவசீலனுக் கெதிரே வந்தான். தவசீலன் வீமனிடம் தன்னுடைய மகனைப்பற்றி உசாவினுன். வீமன் தவசீலனைப் பார்த்து, ''உம்முடைய மகன் விலைமகளிருடைய மோகத்தில் மூழ்கிக் கிடக்கிருன்'' என்று சொன்னுன்.

### தந்தையும் மைந்தனும்

தவசீலன் தங்கியிருக்குமிடத்தை உசாவியறிந்து கொண்டு அவன் இருக்கும் வீட்டு வாசலில் நின்றுகொண்டு, தன் மகனைக் கூப்பிட்டான். உள்ளேயிருந்த புதன் புறப்பட்டு வெளியே வந்தான். தவசீலன் அவனைப் பார்த்து, ''மைந்தனே! விலைமகளிருடைய மையலில் விழலாமா? உன்னைப்போல் அறிவற்றவர்கள் இவ்வுலகத்தில் இருக்கிருர்களா? நல்லொழுக்கங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டாயே. மறையோதுதலையும் மறந்தாயே. அழகிய குலப்பெண் வருந்திக்கொண்டிருக்குமாறு செய்தாயே'' என்றிப்படிப் பலவாறு சொல்லிப் புலம்பினுன்.

### தந்தை மாளல்

தந்தை கூறியவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த அத் தீவினையாளன் மிகுந்த சினங்கொண்டான். முழுப் பலத்தையுங்கொண்டு தந்தையினுடைய கன்னத்தில் அறைந்தான். முதுமையால் வாடியிருந்த தவசீலன் அந்த

அடியைத் தாங்கமுடியாமல் இறந்தான். தீவினையாளனாகிய புதன் தந்தை யிறந்ததற்குச் சிறிதும் வருந்தாமல், ''இது தான் உனக்குச் சரியான தண்டனை'' என்று கூறி ஒருவருக்குந் தெரியாதபடி பிணத்தைப் புதைத்துவிட்டான்.

தாய் மாளல்

பிறகு அந்தத் தீவினையாளன் வீட்டிலிருந்த பொருள்களையெல்லாங் கொண்டுவந்து விலைமகளுக்குக் கொடுக்கலாம் என்று எண்ணித் தன்னுடைய வீட்டிற்குச் சென்றான். தாயானவள் இவனைத் தழுவிக்கொண்டு, ''இது வரையில் எங்குப் போயிருந்தாய்? 'இன்னவிடத்திற்குச் செல்லுகிறேன்' என்று கூறிவிட்டுச் சென்றால் வாய்முத்தஞ் சிந்திப் போகுமோ? உன்னுடைய தந்தை உன்னைக் காணாமல் இரவு பகல் உணவுமில்லாமல் வாடி வருந்தினார். இப்பொழுதும் உன்னைத் தேடிக்கொண்டுதான் சென்றிருக்கிறார். நீ போய்த் தேடி அவரை அழைத்துக்கொண்டு வருவாயாக'' என்று சொன்னாள். இதனைக் கேட்டு அவன் மிகுந்த சீற்றத்தையடைந்தான். ''தந்தையைத் தேடுவதற்காகவோ இங்கு வந்தேன்!'' என்றான். ஒரு தடியை எடுத்துத் தாயைப் பலங்கொண்ட மட்டும் ஓங்கியடித்தான். அவள் துடிதுடித்து மாண்டாள் அவளுடைய பிணத்தையுங் குழி தோண்டிப் புதைத்தான்.

மனைவியையுங் கொல்லல்

தீவினையாளன் தன்னுடைய தாயையுங் கொன்றொழித்ததை அவனுடைய மனைவி கண்டாள் அவனைப் பார்த்து, ''அந்தோ என்ன காரியஞ் செய்துவிட்டாய்? ஈன்றோர்களைக் கொலை செய்வோரும் இவ்வுலகில் உளரோ? தீவினையையும் பழியையும் எண்ணிப் பார்க்காமற் போனாயே. இதனை அரசன் அறிந்தால் இப்பொழுதே உன்னைக் கொலைசெய்வானே. எல்லாரும் அஞ்சத்தக்க கொடிய காரியத்தையன்றோ செய்திருக்கிறாய்? இனிமேல் நீ உய்ந்து கடைத்தேறவேண்டுமென்றால் நான் நவில்வதைக் கேள். விலைமகள் மீதிருந்த

விருப்பத்தினுல் வீட்டிலிருந்த பொருள்களையெல்லாம் அழித்து விட்டாய். அகவை முதிர்ந்த தாய் தந்தையர்களையும் இழந்துவிட்டாய். உன்னுடைய செயல்களை அரசன் அறிந்தால் கடுமையாக ஒறுப்பான். விலைமகளிர்களுடைய இன்பத்தை நுகர்ந்தால் சில நாளைக்குள் உயிரையும் உடலையும் வாட்டும்படியான தீராத நோய்கள் வந்து சேரும். அறிவுடையோர் வெறுக்கத்தக்க குற்றங்களெல்லாம் இப்பொழுது வந்ததுபோல வந்து சேரும். உள்ளத்தில் அன்பில்லாதவர்களைச் சேரும் உன்போன்றவர்கட்கு உணவு தானுங் கிடைக்குமோ?

*உயிரெலாம் உருக்கித் தீரா உறுபெரு நோயுஞ் சின்னுள்*
*பயிலுற வந்து மூளும் பண்புளார் வெறுக்கத் தக்க*
*செயிரெலாம் இவ்வா றெய்தும் தீங்குசெய் வின்போல் வார்க்கும்*
*அயினியுங் கிடைக்குங் கொல்லோ அகத்திலன் பிலரைத் தோயின்.*

இளமையினுலும் அழகினுலும் கற்பினுலும் பொருந்திய உள்ளத்தினுலும் எனக்கு ஒப்பான பெண்களும் உளரோ ? நீ தளர்ச்சியடையாதபடி அளவற்ற இன்பங்களை இவ்விலைமகளிரைப் போல உனக்கு அளிப்பேன். நீ என்னிடத்தில் தானே எப்பொழுதும் இன்புற்றிருக்கலாம். மேலும் தழுவுதற்கு விலக்காகச் சொல்லப்பட்டிருக்கின்ற காலங்களினும் நீ சேரவேண்டுமென்று விருப்பங்கொண்டால் யான் இசைவேனேயல்லாமல் மறுப்பேனே ? நீ என்னிடத்தில் எவ்வாறிருந்தாலும் பழிப்பும் தீவினையும் இல்லை. அதனுல் தருமமும் புகழும் உண்டாகும். மற்றைப் பெண்களிடஞ் சென்ருல் எல்லா வகையான தீவினைகளும் உண்டாகும். ஆகையால் இவை எல்லாவற்றையும் நன்ருக எண்ணி இனியாவது கடைத்தேறும் வழியைப் பின்பற்றுவாயாக'' என்று சொன்னுள். எல்லாவற்றையும் அடக்கமாகக் கேட்டுக் கொண்டிருந்த தீவினையாளன் சீறியெழுந்தான். ஒரே உதையாக உதைத்துத்தள்ளி அவளைக் கொன்ருன். இதனை அரசன் அறிந்தால் தன்னை வருத்துவான் என்று எண்ணினுன். வீட்டிலிருந்த அணிகலன்கள் முதலிய எல்லாப்

பொருள்களையும் எடுத்துக் கொண்டு அன்றிரவில்தானே விலைமகளையும் அழைத்துக்கொண்டு அந்நகரத்தைவிட்டு நீங்கினான். முனிவர்கள் இருக்கும் ஒரு காட்டையடைந்து அங்குத் தங்கினான்.

### வசவுரை பெறுதல்

தீவினையாளனாகிய புதன் வந்து தங்கிய காட்டில் தாலிவன முனிவர் என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவர் நீராடச் சென்ற சமயத்தில் அவருடைய இருப்பிடத்திற்குள் நுழைந்து அம்முனிவருடைய மனைவியின் கையைப் பற்றி இழுத்தான். அவள் மிகுந்த சினங்கொண்டு அவனுடைய கையை உதறினாள். கண்களில் தீப்பொறி பறக்குமாறு விழித்து நோக்கினாள். அவனைப் பார்த்துப், "பொல்லாதவனே ! உன்னுடைய காளைப்பருவத்தினாலும் உடற்றிமிராலும் என் கையைப் பற்றினாய். இனிமேல் இந்த இனிய இன்பத்தை மறந்தும் நுகரமுடியாதபடி ஊனை நாறுகின்ற தொழுநோய் உனக்கு உண்டாகக் கடவது" என்று வசவுரை வழங்கினாள். அவள் அவ்வாறு கூறிய அளவில் அவனுடைய உடலழகு முழுவதும் ஒழிந்தது. உடல் முழுவதும் புண்ணுஞ் சீயும் செந்நீரும் பெருகி வழிந்தது. பார்த்தவர்கள் அச்சமடையத்தக்க இழிந்த வடிவத்தோடு அங்கிருந்து வெளிப்பட்டான். விலைமகள் இருந்த இடத்திற்கு வந்தான். இவனைக் கண்டதும் அவள் வெறுப்படைந்து விலகினாள். பிறகு காப்பாற்றுவாரில்லாமல் அக்காட்டில் தானே அலைந்து திரிந்து இறந்தான். பிறகு எம தூதர்கள் கொண்டுபோய் நிரயங்களிலெல்லாம் இட்டு வருத்தினார்கள். பிறகு எஞ்சிய தீவினையினால் தொழுநோயுடையவனாய் இவ்வாறு பிறந்தான். இவனை நீ விட்டுவிட்டு வருவாயானால் இவ்விமானம் விண்ணிலெழும்" என்று கூறினார்கள்.

### தீவினையைப் போக்கல்

சூரசேனன் தீவினையாளனாகிய தொழுநோயாளனிடத்தில் இரக்கங்கொண்டான். தேவகணங்களைப் பார்த்து,

"இவனுடைய தீவினைகளைப் போக்கித் தூய்மையாளனாக்கி உடனழைத்துக்கொண்டு செல்லும்படியான வழியைத் தேடவேண்டு"மென்று சொன்னான். தேவகணங்கள் இசைந்தார்கள். அவனை அண்மையில் அழைத்து அவன்மீது அருளோக்கஞ் செலுத்தினார்கள். பிறகு அவனுடைய தீவினைகளெல்லாம் ஒழியுமாறு கணபதி மறையை மூன்று முறை அவனுடைய காதில் உரைத்தார்கள். அவன் தூய்மையுடையவனானான். பிறகு சூரசேனன் விமானத்தோடு மேலெழுந்து ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தையடைந்தான். அங்கு நெடுங்காலம் இன்பத்தை நுகர்ந்து பிறகு வீடுபேற்றையடைந்தான்.

## 63. பரசுராமன் அருள்பெறுதல்

### கிருதவீரியன் தவம்

"ஓ சவுனகாதி முனிவர்களே! இதுவரையிலும் ஆனைமுகக் கடவுளுடைய சங்கடசதுர்த்தி நோன்பைச் சூரசேன மன்னன் கடைப்பிடித்துத் தன்னுடைய கூட்டத்தோடு வீடுபேறடைந்த வரலாற்றினை விளம்பினோம். இனிமேற் பரசுராமன் வழிபட்டு அருள்பெற்ற வரலாற்றினைக் கூறுகிறோம்.

முன்பு பவழவனத்தில் பவழத்தினால் ஆனைமுகக் கடவுளை அமைத்து வழிபாடு செய்த கார்த்தவீரியனானவன் பிறகு தன்னுடைய தந்தையாகிய கிருதவீரியனிடம் வந்து வணங்கினான். கிருதவீரியன் மகிழ்ந்து வாழ்த்துரைகள் கூறினான். தன்னுடைய மகன் ஆனைமுகக் கடவுளுடைய பேரருளால் இரண்டு கால்களையும் ஆயிரங் கைகளையும் பெற்று வந்தமையை எண்ணி எண்ணி மனமகிழ்ந்தான். தன்னுடைய அரசுரிமையை மகனிடம் ஒப்புவித்துவிட்டுத் தான் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபடுதலை மேற்கொண்டான். ஆனைமுகக் கடவுள் தம்மை வழிபடுவோர் சிறிது நல்வினையுடையவர்களாயினும், மிகுந்த தீவினையுடையவர்களாயினும்

அவர்கட்கு எண்ணற்ற மேன்மைகளை அளிக்கத்தக்கவராதலின் அருள் சுரந்து கிருதவீரியனைத் தம்மிடம் அழைத்து வருமாறு தேவகணங்களை அனுப்பினர். அவர்கள் தெய்வ விமானம் ஒன்றை விண்வழியாகக் கொண்டுவந்தார்கள். கிருதவீரியன் தன்னுடைய மனைவியோடும் உறுதிச் சுற்றத்தினரோடும் தெய்வவடிவம் பெற்று அவ்விமானத்தில் ஏறினன். ஆனைமுகக் கடவுளுடைய உலகத்தையடைந்து பேரின்பக் கடலில் மூழ்கினன்.

### கார்த்தவீரியன் அரசாட்சி

பிறகு கார்த்தவீரியன் அரசர்களனைவரும் பாராட்டத் தக்க பேராற்றலோடு உலகம் முழுவதையுந் தன்னுடைய ஆணையில் நிற்கச் செய்தான். பகைவர்களனைவரையும் வென்றான். இந்திரனுங் கண்டு நாணமடையவும் பாவாணர்களெல்லாம் புகழவும் அளவற்ற சிறப்போடு அரசாட்சி செய்தான். தேவர்கள் அனைவரும் ஏவல் கேட்கும்படியாக வாழ்ந்திருந்தான்.

### சமதக்கினி முனிவர்

கார்த்தவீரியன் அவ்வாறு அரசாட்சி செய்துகொண்டிருக்கிற காலத்தில், பொழில்களாலும் பொய்கைகளாலும் சூழப்பட்ட சையவரைச் சாரலில் சமதக்கினி என்னும் முனிவர் ஒருவர் ஐம்பொறிகளையும் அடக்கித் தவஞ்செய்து கொண்டிருந்தார். அவருடைய மனைவியின் பெயர் இரேணுகை. அவள் கற்பிற் சிறந்தவள். இவர்கள் இருவருக்கும் திருமாலே பிள்ளையாகத் தோன்றினர். அவ்வாறு தோன்றக் காரணம் பிருகு முனிவர் கொடுத்த வசவுரை என்பர். இவ்வாறு தோன்றிய திருமால் பரசுராமர் என்னும் பெயரோடு தாய் தந்தையர்கட்கு பணி செய்திருந்தார். அவர் ஒரு காலத்தில் நைமிசக் காட்டிற்குச் சென்று அங்கிருந்த முனிவர்களோடு சிறிதுகாலந் தங்கியிருந்தார்.

### கார்த்தவீரியன் வேட்டைக்கு வருதல்

ஒருநாள் கார்த்தவீரியன் வேட்டையாடக் காட்டிற்குப் படைகளோடும் உறுதிச் சுற்றத்தினரோடும் வந்தான். வேட்டையாடுதலை முடித்துக்கொண்டு நகரத்திற்குத் திரும்பினுன்.

### முனிவரைக் காணுதல்

திரும்பும்பொழுது தனக்கு எதிரே முனிவர்கள் தவஞ் செய்யுங் காடு ஒன்றைக் கண்டான். அக்காட்டில் சமதக்கினி முனிவர் தவஞ்செய்து கொண்டிருக்கிருர் என்பதை உணர்ந் தான். முனிவரைக் கண்டு எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு விழுந்து பணிந்தான். பலவாறு போற்றினுன். முனிவர் கார்த்தவீரியனைப்பார்த்து, "நீயார்? இங்கு வந்த காரணம் என்ன ?" என்று உசாவினுர். கார்த்த வீரியன் முனிவரைப் பார்த்து, "அடிகாள்! அடியேன் கார்த்த வீரியன். யான் வேட்டையாடி வரும்போது முன் செய்த நல்வினையினுல் தேவரீருடைய இருப்பிடத்தைக் கண்டேன். தேவரீருடைய அருளுங் கிடைத்தது. இதைவிட மேலான சிறப்பு வேறு என்ன வேண்டும்?" என்று சொன்னுன். முனிவர் மகிழ்ந்தார். 'அரசனே! உன்னுடைய புகழுடம் பைப்பற்றி இதுவரையிலும் கேள்வியுற்றிருந்தனன். இப் பொழுது உன்னுடைய பூதவுடம்பையுங் காணப்பெற்றேன். நின்னுடைய வரவினுல் என்னுடைய மனம் மகிழ்ச்சியை அடைந்தது. நண்பகற்பொழுதாயிற்று நீ வேட்டையாடித் தளர்ச்சியடைந்திருக்கிருய். ஆகவே இவ்விடத்தில் தானே சாப்பிட்டுவிட்டு மெதுவாகப் பட்டணத்திற்குச் செல்லலாம்" என்று சொன்னுர். முனிவர் மொழிந்ததைக் கேட்ட கார்த்த வீரியன், "பெரியீர்! தங்களைப் போன்ற அருந்தவர்களிடத்தில் தண்ணீரேனும் அருந்திச் செல்வது மிகுந்த நல்வினையை உண்டாக்குவதாகும். நானே தனியாக வந்தவனல்லன். என்னேடு அளவற்ற பேர் வந்துள்ளனர். என்னுடைய நகரமும் அண்மையில்தான் உள்ளது. ஆகவே அடிகள்

அருளோடு விடை கொடுத்தருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். கார்த்தவீரியன் கழறியதைக் கேட்ட முனிவர், "அரசனே ! அதனைக் குறித்துச் சிறிதுங் கவலைப்படவேண்டாம். உன்னோடு வந்திருப்பவர்கள் எவ்வளவு பேராக இருந்தாலும் உணவிடுவோம். பக்கத்தில் கான்யாறு ஒன்றுள்ளது. நீங்கள் அனைவரும் அந்த ஆற்றுக் கரைக்குப் போய்ச் சிறிது நேரம் களைப்பாறியிருக்கலாம்'' என்று கூறினர்.

### முனிவர் விருந்து

பிறகு தம்முடைய மனைவியாகிய இரேணுகையை அழைத்து, "அரசன் இன்றுஇங்குவிருந்துண்ணவருகின்றான்'' என்று கூறினர். பிறகு காமதேனுவை எண்ணினர். உடனே காமதேனு வந்தது. அதனை முனிவரும் அவருடைய மனைவியும் வணங்கி வழிபட்டனர். அதனிடத்தில் விருப்பத்தை விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அஃது உடனே அவ்விடத்தில் அழகிய நகரம் ஒன்றை அமைத்தது. அறுசுவைகளோடுங் கூடிய நால்வகை உணவுகளையும் படைப்போர்களையும் பொற்கலன்களையும் அமைத்து முனிவருக்கு அறிவித்தது. முனிவர் மகிழ்ந்து அரசனை அழைத்து வருமாறு ஏவலர்கட்குக் கட்டளையிட்டார். அவர்கள் அவ்வாறே அரசனை அழைத்து வந்தனர். அரசன் ஒரு புதுமையான நகரத்தைக் கண்டு மிகுந்த வியப்படைந்தான். அரசனுக்கு நடைபெற வேண்டிய சிறப்புக்களெல்லாம் நடைபெற்றன. அவ்விடத்தில் இதுவரையிலும் தான் எங்கும் பார்த்திராத பலவகையான உணவுப் பொருள்களைக் கண்டான். ஈதென்ன மாயம் என்று அறிவுமயங்கினன். முனிவருடைய அடிகளிற் பணிந்து அவருடைய கட்டளையின் படி தன்னுடைய கூட்டத்தினரோடு சாப்பிட்டு முடித்தான். பிறகு முனிவரைப் பார்த்துப், "பெரியீர்! நான் ஆற்றிற்குச் சென்று திரும்பி வருவதற்குள் இஃதொரு சிறந்த நகரமாயிற்றே ; அல்லாமலும் பலவகையான பொருள்களும் எங்கும் நிறைந்துள்ளனவே. இவையனைத்தும் எவ்வாறுண்டாயின ? இது மாயமோ அல்லது தேவரீருடைய தவப்

பெருமையோ ? இதனை அடியேற் கியம்பியருள வேண்டு'' மென்று வேண்டிக்கொண்டான். முனிவர் அரசனைப் பார்த்துப் புன்னகை புரிந்தார். "அரசனே ! இவைகளனைத்தும் மாயம் என்று எண்ணற்க. என்னுடைய தவப் பெருமையினுல் இவ்வளவு சிறப்புக்களையும் காமதேனுவைக் கொண்டு செய்திருக்கிறேன்'' என்று சொன்னுர்.

## அவாவும் பொருமையும்

முனிவர் மொழிந்தவைகளைக் கேட்ட கார்த்தவீரியன் பெருமூச்செறிந்தான். முனிவரிடத்தில் பொருமைகொண்டான். எவ்வகையினுலாவது காமதேனுவைத் தான் கைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்று எண்ணினுன். உடனே முனிவரைப் பார்த்துப் "பசிக்குக்காய் கனி முதலியவைகளைத் தின்று உடலை வருத்திக் காட்டில் தவஞ்செய்து கொண்டிருக்கின்ற தேவரீருக்கு இத்தகைய காமதேனுவினுல் எத்தகைய பயனும் இல்லை. பேரரசனுக இருக்கின்ற எனக்கு அக் காமதேனுவைக் கொடுத்தால் பலகாரியங்கட்குப் பயன்படும். மேலும் அஃது என்னிடத்தில் இருப்பது தகுதியும் ஆகும். ஆகவே, எனக்கு அதனைக் கொடுத்தருள வேண்டும். கொடுக்காவிட்டால் வலுக்கட்டாயமாகக் கொண்டு போவேன்'' என்று சொன்னுன்.

## முனிவர் முனிவுடன் மொழிதல்

கார்த்தவீரியன் கழறியதைக் கேட்டுச் சமதக்கினி முனிவர் மிகுந்த சினமடைந்தார். "பிச்சைக்கு வந்தவன் பெண்டு பிடித்ததைப் போல நீ வந்த காரியம் மிக நன்ருக இருக்கிறது. நீ மன்னர்கட்குரிய நன்னடைகளையுடையவனென்று முன்னர் எண்ணினேன். பின்னர் தான், உன்னுடைய வஞ்சநெஞ்சத்தை அறிகிறேன். பிறர் பொருளைக் கைப்பற்றிக் கொள்ள எண்ணுதல் அறமாகுமா ? அக்காமதேனுவை உன்னுடையதாக்கிக் கொள்ள முடியுமானுல் அதைக் குறித்து என்னைக் கேட்கவேண்டாம். காலந்தாழ்த்தாமல் கைப்பற்றிக் கொள்ளலாம்'' என்று கூறினுர்.

### காமதேனுவைப் பிடித்தல்

முனிவர் மொழிந்தவைகளைக் கார்த்தவீரியன் கேட்டான். தன்னுடைய படையினருக்குக் குறிப்புக்காட்டினான். படையினர் காமதேனுவின் பக்கத்திற் சென்றார்கள். காமதேனு இக்காவலன் சமதக்கினி முனிவருக்கு உட்பகையானான் என்று அறிந்துகொண்டது. மிகுந்த சினத்தோடு பெருமூச்சு விட்டது. அப்பெருமூச்சினால் அண்மையில் வந்த அனைவருஞ் சுருண்டு விழுந்து பஞ்சுபோல் இறந்தொழிந்தனர். அதனைக் கண்ட கார்த்தவீரியன் மிகுந்த சினவெறி கொண்டான். நால்வகைப் படைகளையும் அதன் மீது ஏவினான். காமதேனு அப்படைகளையெல்லாம் ஓடுமாறு செய்தது. கார்த்தவீரியன் நமக்குத் தோல்வி வருகிறதே என்று வருந்தினான். மிகுந்த சினவெறிகொண்டு கையில் வில்லையெடுத்தான். கணைகளைச் செலுத்தினான். அவைகளைக் காமதேனுவின் கணைகள் விலக்கியதோடு கார்த்தவீரியன்மீது கணக்கற்ற கணைகளைச் செலுத்தின. கார்த்தவீரியனுக்குப் பலங்குன்றியது. இனிமேல் எவ்வகையிலேனும் முனிவரைக் கொல்லவேண்டுமென்று மனதிற் செற்றங் கொண்டான். அங்கு நில்லாமல் ஓடிப்போனான். காமதேனு இனிமேல் கார்த்த வீரியன் திரும்ப மாட்டானென்று முடிவுசெய்து முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னுடைய படைகளோடு விண்ணுலகம் போய்ச் சேர்ந்தது.

### முனிவரைக் கொல்லுதல்

பிறகு, முனிவர் வழக்கம்போல் தவத்தைச் செய்து கொண்டிருந்தார். நாள்கள் சில சென்றன. ஒரு நாள் கார்த்தவீரியன் முனிவர் தவஞ்செய்து கொண்டிருக்கும் பொழுது அவருடைய அண்மையில் சென்றான். ஒருவாளினால் அவரைக் கொன்றான். அதனை முனிவருடைய மனைவியாகிய இரேணுகை கண்டாள். "அடா பொல்லாதவனே! உண்ட வீட்டுக் கிரண்டகஞ் செய்பவர்களுள் உனக்கொப்பான தீவினையாளர்கள் எங்கேனும் உளரோ? உன்னுடைய குலம் முழுவதும் அழியும்படியான வழியைத் தேடிக்கொண்டாயே.

இத்தகைய ஒழுங்கின்மை எந்த அரசருக்காயினும் பொருந்துமோ? தவஞ் செய்பவர்களைக் கொலைசெய்வது அரசர்களுடைய முறையோ?'' என்று சொன்னாள்.

### பெண் கொலை

கார்த்தவீரியன் அவள்மீதும் இருபத்தொரு கணைகளை ஏவினான். இரேணுகை துடித்து வீழ்ந்தாள். தன்னுடைய மகன் வருகையை எதிர்பார்த்துக்கொண்டு உயிரை விடாமல் வைத்துக்கொண்டிருந்தாள். பரசுராமர் தற்செயலாக நைமிசக் காட்டைவிட்டுப் புறப்பட்டு அங்குவந்து சேர்ந்தார். தந்தை மாண்டு கிடத்தலையும் தாய் உயிரைக் கையிற் பிடித்துக் கொண்டிருத்தலையுங் கண்டார். இரேணுகை நிகழ்ந்த செய்திகளை மகனிடம் இயம்பினாள். இயம்பி முடிந்ததும் இறந்தாள்.

### பரசுராமர் துணை

இரேணுகை இயம்பியவைகளை யெல்லாங் கேட்ட பரசுராமர் அளவற்ற சினங்கொண்டார். தந்தை தாய்க்குச் செய்யவேண்டிய இறுதிக் கடன்களையெல்லாஞ் செய்து முடித்தார். சமதக்கினி முனிவர் நான்முகன் உலகத்தை அடைந்தார். இரேணுகை உலகமெல்லாம் வணங்கும்படியான தெய்வத்தன்மையை அடைந்தாள். கார்த்தவீரியனை ஒழிக்க எண்ணிய பரசுராமர் தவஞ்செய்து அதற்கேற்ற ஆற்றலை யடைய வெண்ணினார். கைலாயமலையை அடைந்து சிவ பெருமானைக் குறித்துத் தவஞ் செய்தார். இறைவன் அன்பு கூர்ந்து தோன்றினார். ஆனைமுகக் கடவுளை வழிபட்டு அடைய வெண்ணியவைகளை அடையலாம் என்று திருவாய் மலர்ந்தருளினார். பரசுராமர் மயூரேசம் என்னும் பதியை அடைந்து ஆனைமுகக்கடவுளை வணங்கி அரிய தவத்தைச் செய்தார். தவத்திற் கிரங்கிய பிள்ளையார் பரசுராமர் முன் தோன்றினார். அப்பொழுது தேவர்கள் மலர்மாரி பெய்தனர். பரசுராமர் ஆனைமுகக் கடவுளைக் கண்டவுடன் திடுக்கிட்

டெழுந்தார். கண்களில் இன்பக் கண்ணீர் சொரியத் தொழுது போற்றி நின்ருர். ஆனைமுகக் கடவுள் பரசுராமரைப் பார்த்து, "அன்பனே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்" என்று திருவாய் மலர்ந்தருளினர். பரசுராமர் ஆனைமுகக் கடவுளை மீளவுந் தொழுதார். "என்னுடைய தாய் தந்தையர்களைக் கொன்ற கார்த்தவீரியனுடைய குலமே யல்லாமல் அரசர் குலம் என்று சொல்லப்படுகிற எல்லோரையுங் களைந்து வெல்லுமாறு அடியேனுக்கு அருள்புரிய வேண்டு''மென்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே திருவருள் புரிந்தார். மாருத ஆற்றலும் மழுவாயுதமுங் கொடுத்தார். பிறகு மறைந்தார். பரசுராமர் கார்த்த வீரியன் முதலாயுள்ள அரசர் குலங்களையெல்லாம் அழித்து அவர்கள் ஆண்டு கொண்டிருந்த நகரங்களை அந்தணர்கட்கு வழங்கினர். மேலுந் தோன்றும் அரசர் குலங்களையெல்லாம் அழித்தொழிப்பதாகச் சூளுரை புகன்ருர்.

## 64. இராவணன் வழிபட்டது

### இராவணன் கைலைக்குச் செல்லுதல்

இலங்கைக்கு அரசனுகிய இராவணன் திருக்கைலை மலைக்குச் சென்ருன். ஓரிடத்தில் அமர்ந்து தவத்தைச் செய்தான். சிவபெருமான் இராவணனுடைய தவத்திற்கு உள்ளம் மகிழ்ந்தார். அவனுக்கு முன் தோன்றினர். இராவணன் சிவபெருமானைப் பலவாறு போற்றிப் பாராட்டினன். சிவபெருமான் இராவணனைப் பார்த்து, "உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் தருகிருேம்," என்று உரைத்தருளினர். இராவணன் மேலுஞ் சிவபிரானைத் தொழுது, "பெருமானே! விண்ணுலகம் முதலிய எல்லா உலகங்களும் அழியுங் காலத்தினும் இலங்கை மட்டும் அழியாது நிலை பெற்றிருக்க வரந்தருதல் வேண்டும்," என்று வேண்டிக் கொண்டான். சிவபெருமான், "அவ்வாறே ஆகுக" என்று அருள் செய்தார். ஒரு சிவலிங்கத்தை இராவணனுடைய

கையிலே கொடுத்து, ''ஓ இராவணு! இச்சிவலிங்கத்தை உன்னுடைய இலங்கைப்பதியில் கொண்டுபோய் அமைத்து அன்போடு வழிபட்டுவரக் கடவாய். இதனைக் கொண்டு போகும்போது மனத்தூய்மையோ டிருத்தல் வேண்டும்; ஊர்திகளின்மீது ஏறிச் செல்லுதல் கூடாது; அவ்வாறு செல்லும்போது வழியில் நிலத்திலே இதனை வைத்தல் கூடாது; வைத்துவிடின் பிறகு எடுக்க முடியாது. இதனை மறந்துவிடாதே'' என்று கூறிக் கையிலே கொடுத்தருளினர். இராவணன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். சிவலிங்கத்தோடு காடுகளையும் மலைகளையுங் கடந்து கடல்சூ ழிலங்கையை நோக்கிக் கடுவிரைவாகச் சென்று கொண்டிருந்தான்.

### தேவர்கள் சூழ்ச்சி

இராவணன் இவ்வாறு சிவலிங்கம் பெற்றுச் சென்று கொண்டிருத்தலைத் தேவர்கோன் உணர்ந்தான். அந்தோ இராவணன் இந்தச் சிவலிங்கத்தை இலங்கைக்குக் கொண்டு போய்ச் சேர்த்து வழிபடத் தொடங்கி விடுவானுயின் எக்காலத்தினும் அவன் அழிய மாட்டானே! இதற்கு யாது செய்வதென்று அஞ்சினன். தேவர்கள் அனைவரும் தன்னைச் சூழ்ந்து வரத் திருக்கயிலையை அடைந்தான். அங்கெழுந் தருளியுள்ள ஆனைமுகக் கடவுளின் திருவடிகளில் விழுந்து பணிந்தான். ஆனைமுகக் கடவுள் தேவர்கோனைப் பார்த்து, ''நீ இங்கு வந்ததற்குக் காரணம் யாதோ?'' என்று உசாவினர். இந்திரன் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, ''பெருமானே! இராவணன் சிவபெருமானிடத்தில் இருந்து சிவலிங்கம் ஒன்றைப் பெற்றுக்கொண்டான். அதனை இலங்கையிலே கொண்டுபோய் வைத்து வழிபாடு செய்ய முடிவு செய்திருக்கிருன். அவ்வாறு கொண்டுபோய் வைத்து வழிபாடு செய்வானுயின் பிறகு அவனை எவராலும் அழிக்க முடியாது. அவன் நாள்தோறும் தேவர்களுக்குத் துன்பம் விளைவித்துக்கொண்டே யிருப்பான். ஆகவே அவன் இலங்கைக்குப் போய்ச் சேருவதற்குமுன் அவனுக்கு ஓர் இடையூற்றை உண்டாக்கி எங்களைக் காப்பாற்றியருள

வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் இந்திரனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினர். உடனே வருணனை யழைத்து, "நீ இராவணனுடைய வயிற்றிலே சிறுநீரைப் பெருகச் செய்வாயாக'' என்று கட்டளையிட்டருளினர். வருணன் ஆனைமுகக் கடவுள் கட்டளைப்படியே இராவணனுடைய வயிற்றில் சிறுநீரைப் பெருகச் செய்தான். அவ்வளவில் இராவணனுக்குச் சிறுநீர்த் துன்பம் பெரிதாகிவிட்டது. உடனே சிறுநீரைக் கழிக்காவிட்டால் வயிறு வெடித்துவிடும்போல் இருந்தது. அவனல் நடக்கவும் முடியவில்லை; நிற்கவும் முடியவில்லை செய்வகை யறியாமல் திகைத்தான். நான்கு பக்கங்களையும் பார்த்தான்.

## ஆனைமுகக்கடவுள் வருகை

இந்தச் சமயத்தில் ஆனைமுகக் கடவுள் ஓர் அந்தணச் சிறுவனாக ஆங்கு எழுந்தருளினர். மிகுந்த தொல்லைப் பட்டுக்கொண்டிருந்த இராவணன் அந்தணச் சிறுவனாகிய ஆனைமுகக் கடவுளைப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். ஆனைமுகக் கடவுளாகிய அந்தணச் சிறுவனோடு அன்பாக உரையாடத் தொடங்கினன். 'அப்பா! எனக்குச் சிறுநீர் கழிக்கவேண்டிய துன்பம் பெரிதாக இருக்கின்றது. நான் போய்ச் சேரவேண்டிய இடமோ நெடுந்தொலையில் இருக்கிறது. உன்னைத் தவிர இங்கு வேறொருவரையுங் காணேன். ஆகவே நீ என்மீது அன்பு வைத்து, நான் சிறுநீர் கழித்து வருமளவும் இந்தச் சிவலிங்கத்தைக் கையிலே வைத்துக் கொண்டிருக்கவேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுளாகிய அந்தணச் சிறுவர் ஐயிருமுகத்தனைப் பார்த்து, "ஐயா! நீ யார்? இச் சிவலிங்கத்தை உமக்கு யார் கொடுத்தது? இதனை அமைத்து வழிபடவேண்டிய இடம் எது? இந்த இலிங்கம் உமக்குச் சிறியதாக இருந்தபோதினும் நான் சிறுபிள்ளையாகையால் எனக்குப் பெரியதாகத்தான் இருக்கும். இதனைத் தாங்கக் கூடிய ஆற்றல் எனக்கு இல்லை. நீரோ அதனை வலுக் கட்டாயமாக என்னிடத்திற் கொடுக்கின்றீர். இத்தகைய

துன்பவேளையில் ஒருவருக்கு உதவி செய்ய வேண்டியது கடமையேயாகும்,'' என்ருர். இராவணன் தன்னுடைய கையிலிருந்த சிவலிங்கத்தை அந்தணச் சிறுவரிடங் கொடுத்தான். அந்தணச் சிறுவர் இராவணனைப் பார்த்து, ''என்னல் இந்தச் சிவலிங்கத்தைத் தாங்க முடியாமற் போனுல் மூன்று முறை உன்னைக் கூப்பிடுவேன். அவ்வளவில் நீ வந்து இலிங்கத்தைப் பெற்றுக்கொண்டு விடவேண்டும். அவ்வாறு வராமற் போவாயானுல் நான் இலிங்கத்தை நிலத்தின்மீது வைத்து விடுவேன்'' என்று கூறினுர். இராவணன், ''அப்படியே ஆகட்டும்'' என்று கூறிவிட்டுத் தான் போய்ச் சிறுநீர் கழிப்பதற்கு உட்கார்ந்தான். சிறுநீர் சிறிது நேரத்தில் நின்று விடவில்லை. நீண்டநேரம் வந்துகொண்டேயிருந்தது.

**சிவலிங்கத்தை நிலத்தில் வைத்தல்**

சிறிது நேரம் சிவலிங்கத்தை வைத்துக்கொண்டிருந்த அந்தணச் சிறுவர், ''ஓ இராவணு!'' என்ருர். இதனைக் கேட்ட இராவணன் திடுக்கிட்டான். என்னுடைய வயிற்றிலுள்ள நீரில் சிறிதுகூட இறங்கவில்லை. அதற்குள் இவன் கூப்பிட்டுவிட்டானே என்று எண்ணினுன். அந்தணச் சிறுவரோ மேலும் இரண்டு முறை கூப்பிட்டுவிட்டுச் சிவலிங்கத்தை நிலத்தில் வைத்து விட்டார். இராவணனுக்குப் பெருகிக் கொண்டிருந்த சிறுநீரும் நின்றுவிட்டது. இராவணன் எழுந்து கால்களைக் கழுவிக்கொண்டு விரைந்தோடி வந்தான். தன்னுடைய இருபது கைகளாலும் சிவலிங்கத்தைத் தூக்கினுன். சிவலிங்கம் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. மண்ணைக் கெல்லித் தூக்குவதற்கு முயற்சி செய்து பார்த்தான். அப்படியும் தூக்க முடியவில்லை. இராவணன் தன்னுடைய முழு ஆற்றலையுங் கொண்டு தூக்கியபோது அச்சிவலிங்கம் பசுவின் காதைப்போலக் குழைந்து வந்தது. ஆகவே அவ்விலிங்கம் கோகர்ணம் ஆய்விட்டது. முழுப்பலங்கொண்டு தூக்கிப் பார்த்தும் எழும்பாத அவ்விலிங்கத்தை இராவணன் இது மகா பலமுடையது என்று சொன்னுன். எனவே அவ்விலிங்கம்

வைக்கப்பட்ட இடம் கோகர்ணம் எனவும் அவ்விலிங்கம் மகா பலேஸ்வர லிங்கம் எனவும் பெயர் பெற்றன.

## ஆனைமுகக் கடவுளுக்கும் இராவணனுக்கும் போர்

இராவணன் சிவலிங்கத்தை நிலத்தில் வைத்த போலி யந்தணச் சிறுவனாகிய ஆனைமுகக் கடவுள்மீது மிகுந்த சினங் கொண்டான். தன்னுடைய கையாற் பிள்ளையாருடைய தலையிற் குட்டினான். ஆனைமுகக் கடவுள் தம்முடைய அந்தணக் கோலத்தை மாற்றினார். உண்மையான வடிவத்தை எடுத்துக் கொண்டார். இராவணனைத் தம்முடைய தும்பிக்கையால் தூக்கினார்; அவனுடைய தலையானது அண்டமுகட்டில் முட்டுமாறு மேலே யெறிந்தார். மீளவுந் தம்முடைய திருவடிகளால் அவன் பாதாள உலகத்தில் அழுந்துமாறு நிலத்தில் விழத் தள்ளினார். பந்தாடுவதைப் போல அவனை மேலுங் கீழுமாக வீசினார். இராவணனுடைய உடலெலும்புகளெல்லாம் நொறுங்குமாறு செய்தார். ஆனைமுகக் கடவுளுடைய ஆடலை இராவணனால் பொறுக்க முடியவில்லை. அவன் பலவாறு கதறி ஓலமிட்டான். ஆனைமுகக் கடவுளைப் பார்த்துப், "பெருமானே! அடியேன் செய்த குற்றங்களைப் பொறுத்தருளுதல் வேண்டும். அடியேன்மீது அருள் செய்து ஆட்கொள்ளாவிட்டால் இனி யான் அழிந்தொழிவேன். அடியேனுக்கு உயிர்ப்பிச்சை தந்தருளுதல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

## ஆனைமுகக் கடவுள் அருளல்

இராவணனுடைய வேண்டுகோளுக்கு ஆனைமுகக் கடவுள் இரங்கினார். இராவணன் உயிர் பிழைக்குமாறு தம்முடைய கடைக்கண் பார்வையினை அவன்மீது செலுத்தினார். பந்தாடுதலை நிறுத்தி இராவணனை நிலத்திலே விட்டார். இராவணன் ஆனைமுகக் கடவுளைப் போற்றிப் புகழ்ந்து வணங்கினான். ஆனைமுகக் கடவுள் இராவணனைப் பார்த்து, "ஓ இராவணனே! நீ உனது கையால் நமது

முடியில் எவ்வாறு முன்பு குட்டினையோ அவ்வாறு குட்டிக் கொள்,'' என்று கட்டளையிட்டருளினர். இராவணன் தன்னுடைய தலையில் இருந்து உதிரம் ஒழுகுமாறு குட்டிக் கொண்டான். அவன் குட்டிக்கொண்டதற்கு ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்தார். ''எவரேனும் இவ்வாறு நமக்குமுன் குட்டிக்கொள்ளுவார்களானல் அவர்கட்கு நேரும் எத்தகைய துன்பத்தினையும் ஒழித்தருளுவோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். இராவணனுக்கு வேண்டிய மேன்மைகள் பலவற்றையுங் கொடுத்து மறைந்தருளினர். இராவணன் இலங்கையை எய்தித் தனக்கு நேர்ந்த இன்ப துன்பங்களை எண்ணி இனிது மகிழ்ந்திருந்தான்.

## 65. அகத்தியர் வழிபட்டது

**சீர்காழியில் வானவர்கோன்**

சிவபெருமானிடத்திற் பலவகையான சிறப்புக்களையும் பெற்ற சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன் செய்த தொல்லைகளைப் பொறுக்க முடியாத இந்திரன், தன்னுடைய மனைவியாகிய இந்திராணியோடும் இம் மண்ணுலகத்தையடைந்தான். சீர்காழி என்னுஞ் சிவப்பதியிற் சிவபெருமானைப் போற்றி வழிபட எண்ணினன். அதன் பொருட்டு மலர்ப்பொழில் ஒன்றை அமைத்தான். நாள்தோறும் நறுமலர்களால் இறைவனைப் பூசைசெய்து வழிபட்டுக்கொண்டிருந்தான். சூரபன்மனுடைய கட்டளையினல் முகில்கள் மழை பொழியவில்லை. அதனல் இந்திரன் உண்டாக்கிய பூம்பொழில் தண்ணீரில்லாமல் காய்ந்துவாடத் தொடங்கியது. இந்திரன் இத் தொல்லைக்கு யாது செய்யலாம் என்று உள்ளம் வருந்திக்கொண்டிருந்தான். அப்பொழுது தெய்வத் திருவாக்கொன்று, ''ஓ இந்திரனே! நீ சிறிதும் அஞ்சாதே. ஆறுவந்து உன்னுடைய பூம்பொழில் செழித்தோங்கச் செய்யும்'' என்று உண்டாகியது. அதனை இந்திரன் கேட்டு மகிழ்ந்திருந்தான்.

## நாரதர் வருகை

அச் சமயத்தில் நாரதமுனிவர் அங்கு எழுந்தருளினர். அவரைக் கண்ட இந்திரன் போற்றி வழிபாடு செய்தான் தன்னுடைய மனக்குறையை நாரதரிடஞ் சொன்னன். நாரதர் இந்திரனைப் பார்த்து, "ஓ இந்திரனே! நீ அதன் பொருட்டுக் கவலைப்பட வேண்டாம். திருக்கைலையில் இருந்த காவிரியாற்றைச் சிவபெருமான் அகத்திய முனிவருக்குக் கொடுத்திருக்கின்றனர். அதனை அவர் தம்முடைய கமண்டலத்தில் அடைத்து எடுத்துக்கொண்டு போகிருர். இப்பொழுது சையமலைச் சாரலிலே வந்து தங்கியிருக்கின்ருர். அவ் ஆறு பெருகி வருமாயின் உனது பூம்பொழில் பட்டுப் போகாமல் பிழைக்கும். அக் காவிரியை இங்குக் கொண்டு வரத் தக்க ஆற்றலுடையவர் ஆனைமுகக் கடவுள் ஒருவரே யல்லாமல் வேறு எவரும் இலர். ஆகவே நீ விரைவில் அவருடைய திருவடிகளைப் போற்றி வழிபடக் கடவாய்" என்று கூறிவிட்டுச் சென்ருர்.

## அமரர்கோன் ஆனைமுகக்கடவுள் வழிபாடு

இந்திரன் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டான். பலவாறு புகழ்ந்து போற்றினன். ஆனைமுகக் கடவுள் இந்திரனுடைய வழிபாட்டிற்கு உள்ளம் இரங்கினர். இந்திரன் முன் தோன்றி, "உனக்கு வேண்டியது யாது?" என்று உசாவினர். இந்திரன் மேலும் ஆனைமுகக் கடவுளைத் தொழுது, "பெருமானே! அடியேன் சிவபூசையின் பொருட்டு வைத்த மலர்ப்பொழில் மழையில்லாமல் வாடுகின்றது. அது செழித்தோங்குமாறு ஆற்றை இங்குக் கொண்டுவருதல் வேண்டும். இப்பொழுது சையமலைச் சாரலில் எழுந்தருளிய அகத்திய முனிவர் தம்முடைய நீர்க்குடுவையில் காவிரி யாற்றை அடைத்து வைத்திருக்கின்றனர். இந் நாடெல்லாஞ் செழிக்குமாறு தேவரீர் அவ்வாற்றை இங்குப் பெருகி வருமாறு செய்தருளல் வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே செய்வதாக அவனுக்கு அருள்புரிந்தார்.

காக வடிவாய்க் காவிரியை வெளிப்படுத்தல்

ஆனைமுகக் கடவுள் காகவடிவங்கொண்டு சையமலைக்குச் சென்றார். அகத்திய முனிவருடைய நீரேனமாகிய கமண்டலத்தின்மீது உட்கார்ந்தார். அகத்திய முனிவர் தம்முடைய கையை அசைத்து ஆனைமுகக் கடவுளாகிய போலிக் காக்கையை விரட்டினார். காகம் பறந்தது ; கமண்டலம் கவிழ்ந்தது. ஆனைமுகக் கடவுள் அந்தணச் சிறுவராக நின்றார். அவ்வாறு நிற்பவரை அகத்தியர் பார்த்தார். இவன் அசுரனாக இருக்கவேண்டும் என்று எண்ணினார். தம்முடைய கைவிரல்களை மடக்கிக்கொண்டு ஆனைமுகக் கடவுளைக் குட்டச் சென்றார். ஆனைமுக அந்தணர் அஞ்சியவரைப்போல ஓடினார். அகத்திய முனிவர் அவரைத் துரத்திக்கொண்டு பின்னால் ஓடினார். இருவருக்குஞ் சிறிது நேரம் ஓடுவதும் நிற்பதுமாகப் போராட்டம் நடைபெற்றது. ஆனைமுகக் கடவுளைத் துரத்தியோடிய அகத்தியர் தளர்ச்சியடைந்து நின்றார்.

ஆனைமுகக் கடவுள் காட்சி

ஆனைமுகக் கடவுள் தம்முடைய அந்தணக் கோலத்தை மாற்றினார். ஆனைமுகத்தோடு காட்சி தந்தார். ஆனைமுகக் கடவுளைக் கண்ட அகத்தியர் திகைத்தார். அச்சமும் அன்புங் கொண்டார். எண்வகை உறுப்புக்களும் நிலத்தில் தோயுமாறு கீழே விழுந்து வணங்கினார். ஆனைமுகக் கடவுளைக் குட்டுதற்கு மடக்கிய தம்முடைய கையினால் தம்முடைய தலையிலே நன்றாகக் குட்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுள் அகத்தியருடைய வழிபாட்டிற்குத் திருவுள மகிழ்ந்தார். "உனக்கு வேண்டியதைக் கேள், தருகிறோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். அகத்தியர் ஆனைமுகக் கடவுளை மீளவுந் தொழுது, "பெருமானே! தேவரீருடைய திருவிளையாடல்கள் அடியேனால் அறியுந்தரத்ததோ, சிவபெருமானிடத்திற் பெற்றுக் கமண்டலத்தில் அடைத்து வைத்திருந்த காவிரி நீரைச் சிறிதுமில்லாதபடி தேவரீர் கவிழ்த்து விட்டது யாது காரணங் கொண்டோ அறிகிலேன். அடியேன் சிவபிரானுடைய

கட்டளைப்படி பொதிய மலைக்குச் செல்லுகிறேன். அங்கு அவருக்கு முழுக்காட்டுமாறு காவிரியை அருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுள் திருவுள மிரங்கினார். அகத்தியரைப் பார்த்து, ''ஓ குறுமுனியே! இந்திரன் சிவபிரானைப் பூசிக்குமாறு ஒரு பூம்பொழில் வைத்தனன். அப்பொழில் மழையின்மையால் வாடிப் போயிற்று. அப்பொழில் செழிக்குமாறு உன்னுடைய கமண்டல நீரைக் கவிழ்த்தனம். இனிமேல் உனது கமண்டலத்தை நிரப்பித்தருகிறோம்'' என்று திருவாய் மலர்ந்தார். விரைவாகப் பாய்ந்து செல்கின்ற காவிரியின் நீரைத் தம் கையினால் அள்ளிக் கமண்டலத்தை நிரப்பினார். மேலும் பல வரங்களைக் கொடுத்து மறைந்தருளினார். ஆனைமுகக் கடவுளுடைய பேரருளினால் காவிரியானது இந்திரனுடைய பூம்பொழிலிற் பாய்ந்து கடலுக்குப் போய்ச் சேர்ந்தது. இற்றைநாள்வரையில் அக் காவிரி மக்கட்குப் பயனையளித்துக் கொண்டிருக்கிறது.

## 66. காசிபர் முதலானோர் வழிபட்டது

### காசிப முனிவர்

முன்னோர் ஊழிக்கால முடிவில் நான்முகன் தன்னுடைய உள்ளத்தால் ஏழு மக்களைப் படைத்தான். அம் மக்களுள் காசிபமுனிவர் அறிவும் மேன்மையும் உள்ளவராகத் திகழ்ந்தார். ஆகவே நான்முகன் அவருக்கு ஓரெழுத்து மறையை உரைத்து அதனை உருவேற்றும் முறைமையையுந் தெளிவுபடக் கூறினார். ''மைந்தனே நீ ஐம்பொறிகளையும் அடக்கி ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளில் மனத்தை நிறுத்தி நான் கூறிய மறையை உருவேற்றித் தவஞ் செய்வாயாக. அவ்வாறு உருவேற்றினால் ஆனைமுகக் கடவுள் எழுந்தருளித் திருவருள் செய்வார். அவ்வருளாற்றலைக் கொண்டு படைப்புத் தொழிலைச் செய்வாயாக'' என்று சொன்னான். நான்முகனுடைய அறிவுரையைப் பெற்ற காசிபர் தவஞ்

செய்யச் சென்ருர். ஆயிரம் தேவ ஆண்டுகள்வரை தவஞ் செய்து கொண்டிருந்தார். அதன்பின் ஆனைமுகக் கடவுள் காசிபருக்கு முன்தோன்றிக் காட்சி கொடுத்தார். காசிபர் விரைந்தெழுந்து ஆனைமுகக் கடவுளைப் பன்முறை வணங்கினுர். பலவாறு புகழ்ந்து போற்றினுர்.

### ஆனைமுகக் கடவுள் அருள்

ஆனைமுகக் கடவுள் காசிப முனிவரைப் பார்த்து, ''அன்பனே! உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் தருகின்ருேம்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். காசிபர் ஆனைமுகக் கடவுளைப் பார்த்துப், ''பெருமானே! உலகத்தில் அடியேன் உயிர்த்தொகைகளைப் படைக்குமாறு வரங் கொடுத்துத், தேவரீர் கசியபந்தர் என்னும் பெயரோடு எனக்கு மகவாகி வரவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே அருள்செய்து மறைந்தார்.

### காசிபர் மக்கட் பேறு

பிறகு காசிபர் தம்முடைய இருப்பிடத்திற்குச் சென்று தம்முடைய மனைவிமார் பதினுல்வரோடுங் கூடி இன் புற்றிருந்தார். அவர்களுடைய கருப்பத்திலே யிருந்து தேவர்கள் அசுரர்கள் முதலானவர்கள் தோன்றினுர்கள். அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும் உண் டாயின. அவர்கட்குக் காசிபர் ஆனைமுகக் கடவுளினுடைய திருமறைகளை ஆராய்ந்தொடுத்து, ஒன்று, நான்கு, ஐந்து, எட்டு, பன்னிரண்டு, பதினுறு, பத்தொன்பது என்னும் எழுத்துக்களுள்ள மறைகளை முறைப்படி உரைத்தருளினுர்.

பிறகு அவர்களனைவரும் ஒவ்வொரு மறைகளைக் கடைப் பிடித்து ஆனைமுகக்கடவுளை வேறு வேருகத் தங்கள் உள்ளத்தில் எண்ணித் தேவ ஆண்டுகளில் ஆயிரம் ஆண்டுகள் தவஞ் செய்தனர். அவர்களுடைய தவத்திற்கு ஆனைமுகக் கடவுள் திருவுள மகிழ்ந்தார். அவர்கள் தம்மை

எவ்வாறு உள்ளத்திலெண்ணி உருவேற்றினார்களோ அவ்வாறே அவர்கள் முன் தோன்றினர்.

சிலர் முன் அரிமா ஊர்தியில் வந்தார்; சிலர் முன் மயில் ஊர்தியில் வந்தார். சிலர் முன் பெருச்சாளி யூர்தியில் வந்தார். சிலர் முன் மான் ஊர்தியில் வந்தார். சிலர் முன் கதிரவனொளி போலவும், சிலர் முன் திங்களொளி போலவும், சிலர் முன் முகில் நிறம் போலவும் வந்தார். சிலர் முன் இரண்டு கைகளோடும், சிலர் முன் நான்கு கைகளோடும், சிலர் முன் ஆறு கைகளோடும், சிலர் முன் எட்டுக் கைகளோடும், சிலர் முன் பத்துக் கைகளோடும், சிலர் முன் பன்னிரண்டு கைகளோடும், சிலர் முன் ஆயிரம் கைகளோடும் வந்தார். சிலர் முன் இளைஞராக வந்தார்; சிலர் முன் காளையாக வந்தார்; சிலர் முன் முதியவராக வந்தார்.

இவ்வாறு பற்பல வடிவங்களைக் கொண்டு எல்லோருக்கும் காட்சி தந்தார். உடனே அவர்கள் அனைவருந் திடுக்கிட்டெழுந்தார்கள். தங்கள் தங்கட்கு இயன்றபடி கீழே விழுந்து வணக்கஞ் செயதார்கள். பிறகு அவர்கள் அனைவரும் ஆனைமுகக் கடவுளைப் புகழ்ந்து பாடலானார்கள்.

### காரிய சித்தி மாலை

(க) பந்தம் அகற்றும் அநந்தகுணப்
பரப்பும் எவன்பால் உதிக்குமோ
எந்த உலகும் எவனிடத்தில்
ஈண்டி இருந்து கரக்குமோ
சந்த மறையா கமங்கலைகள்
அனைத்தும் எவன்பால் தகவருமோ
அந்த இறையாங் கணபதியை
அன்பு கூரத் தொழுகின்றாம்.

(உ) உலகம் முழுதும் நீக்கமற
ஒன்றாய் நிற்கும் பொருளெவனவ்
வுலகிற் பிறங்கும் விகாரங்கள்
உறாத மேலாம் ஒளியாவன்

உலகம் புரியும் வினைப்பயனை
ஊட்டுங் களைகண் எவனந்த
உலக முதலைக் கணபதியை
உவந்து சரணம் அடைகின்ரும்.

(௩) இடர்கள் முழுதும் எவனருளால்
எரிவீ ழும்பஞ் செனமாயும்
தொடரும் உயிர்கள் எவனருளால்
சுரர்வாழ் பதியும் உறச்செய்யும்
கடவுள் முதலோர்க் கூறின்றிக்
கருமம் எவனால் முடிவுறுமத்
தடவு மருப்புக் கணபதிபொன்
சரணம் சரணம் அடைகின்ரும்.

(௪) மூர்த்தி யாகித் தலமாகி
மூந்நீர் கங்கை முதலான
தீர்த்த மாகி அறிந்தறியாத்
திறத்தி னலு முயிர்க்குநலம்
ஆர்த்தி நாளும் அறியாமை
அகற்றி அறிவிப் பானெவனெப்
போர்த்த கருணைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்ரும்.

(௫) செய்யும் வினையின் முதல்யாவன்
செய்யப் படுமப் பொருள்யாவன்
ஐய மின்றி உளதாகும்
அந்தக் கருமப் பயன்யாவன்
உய்யும் வினையின் பயன்விளைவில்
ஊட்டி விடுப்பான் எவனந்தப்
பொய்யில் இறையைக் கணபதியைப்
புகழ்ந்து சரண மடைகின்ரும்.

(௬) வேதம் அளந்தும் அறிவரிய
விகிர்தன் யாவன் விழுத்தகைய
வேத முடிவில் நடனவிலும்
விமலன் யாவன் விளங்குபர

நாத முடிவில் வீற்றிருக்கும்
நாதன் எவனெண் குணனெவனப்
போத முதலைக் கணபதியைப்
புகழ்ந்து சரணம் அடைகின்றோம்.

(எ) மண்ணி னோரைங் குணமாகி
வதிவான் எவன்நீர் இடைநான்காய்
நண்ணி யமர்வான் எவன் தியின்
மூன்றாய் நவில்வான் எவன்வளியின்
எண்ணும் இரண்டு குணமாகி
இயைவான் எவன்வான் இடையொன்றாம்
அண்ணல் எவனக் கணபதியை
அன்பில் சரணம் அடைகின்றோம்.

(அ பாச அறிவில் பசுவறிவில்
பற்றற் கரிய பரன்யாவன்
பாச அறிவும் பசு அறிவும்
பயிலப் பணிக்கும் அவன்யாவன்
பாச அறிவும் பசு அறிவும்
பாற்றி மேலாம் அறிவான
தேசன் எவனக் கணபதியைத்
திகழச் சரணம் அடைகின்றோம்.

என்று பலவாறு புகழ்ந்தார்கள். ஆனைமுகக் கடவுள் அவர்கள் அனைவருக்கும் பலவகையான வரங்களைக் கொடுத்தார். மேலும் அவர்களைப் பார்த்து,

இந்த நமது தோத்திரத்தை
யாவன் மூன்று தினமும்மைச்
சந்தி களில்தோத் திரஞ்செயினும்
சகல கரும சித்திபெறும்
சிந்தை மகிழச் சுகம்பெறுமெண்
டினமுச் சரிக்கின் சதுர்த்தியிடைப்
பந்த மகல ஓரெண்கால்
படிக்கில் அட்ட சித்திபெறும்.

திங்கள் இரண்டு தினந்தோறும்
　　திகழ ஒருபான் முறையோதில்
தங்கும் அரச வசியமாம்
　　தயங்க இருபத் தொருமுறைமை
பொங்கு முழுவ லால்கிளப்பில்
　　பொருவின் மைந்தர் விழுக்கல்வி
துங்க வெறுக்கை முதற்பலவும்
　　தோன்றும் எனச்செப் பினர்மறைந்தார்.

**கோயிலமைத்து வழிபடல்**

இப்பால் இவர்கள் எல்லாரும் தனித்தனியே கோயில் அமைத்துத் தங்கட்குக் காட்சி கொடுத்தவாறு வடிவங்களமைத்துப் பூசித்து வழிபட்டார்கள்.

## 67. ஆயிரம் திருப்பெயர்கள்

**பலன்**

ஆனைமுகக் கடவுளுக்கு 'ஓம் கணேசாயநம:' என்பதை முதலாகவும், 'ஓம் அனந்தவானந்த சுகாய நம:' என்பதை இறுதியாகவும் கொண்டு ஆயிரத்து இருபத்து நான்கு திருப்பெயர்கள் உள்ளன. அந்தப் பெயர்களை எவரேனும் மனத் தூய்மையோடு விடியற்காலையில் முறையாகக் கூறுவார்களாயின் அவர்கள் இம்மை மறுமைப் பயன்களை அடைவார்கள். அல்லாமலும், வாணாள், உடல்நலம், செல்வம், ஆற்றல், சிறப்பு. புகழ், மேன்மை தெளிவு, சாந்தி, அருள், பொறுமை, புலமை முதலிய எல்லா வகையான சிறப்புக்களையும் அடைவார்கள்; மேலும் அவர்கட்கு அரசர் முதலானோர் வசப்படுவார்கள். இடாகினி பூதம் பேய் முதலியவைகளால் தொல்லை யேற்பட மாட்டாது. பகை, தீக்கனு, கலகம், தீயசெயல், கொலை, வறுமை, துன்பம் முதலிய யாவும் ஒழிந்து போகும். அரசாட்சி, எண்வகைப் பேறு, முக்காலஞானம், வாய்மை, ஒழுக்கம், கொடை, கல்வி முதலானவை

எக்காலத்தினுங்கூடி நிற்கும். குறை நோய், இருமல் நோய், காச நோய், பெரு வயிறு முதலிய பலவகையான நோய்கள் ஒழியும்.

சுருக்கம்

ஆயிரந் திருப்பெயர்களைக் கூறிப் போற்ற முடியாதவர்கள், கணபதி, ஏரம்பன், மோகன், தரணிதரன், கலாதரன், கசிய பந்தன், மகாகணபதி, சிப்பிரப்பிரசாதனன், ஆசார பூரகன், வரதன், சயன், அமுதமந்திரன், இலக்க கணபதி, வரச்சிகதன், பீசவிநாயகன் மங்கல விநாயகன், உருண்டி விநாயகன், பிரிய கணபதி, சித்தி விநாயகன், சிந்தாமணி விநாயகன், மகோற்கடன் என்னும் இருபத்தொரு திருப்பெயர்களை யேனும் கூறிப் போற்றுதல் வேண்டும்.

உபாசன காண்டம்

முற்றும்.

# இரண்டாவது லீலா காண்டம்

## 68. வக்கிர துண்டர்

தெய்வம் யாதனைச் சேர்ந்தெவர் போற்றினும் அந்தத்
தெய்வ மாயிருந் தவர்க்கருள் வரங்களைச் செறிக்கும்
தெய்வந் தேர்வரும் பிரமமா கியவிநா யகனே
தெய்வம் யாவையும் வழிபடுந் தேவனு மவனே.

### வக்கிர துண்டர்

ஆனைமுகத்தினையுடைய கணேசப் பெருமான் ஒவ்வொரு யுகத்திலும் அடியார்கட்கு அருள் செய்வதற்குப் பலவேறு வகையான உருவங்களைத் தாங்கியருள்வார். அவ்வாறு அவர் கொண்டருளிய வடிவங்கள் கணக்கற்றவைகளாயினும் சிவபெருமான் முருகக் கடவுளுக்குப் பன்னிரண்டு திருவிளையாடல் திறங்களை உரைத்தருளினர். அவை வக்கிர துண்டர், சிந்தாமணி விநாயகர். கசானனர், விக்கினராசர், மயூரேசர், பாலசந்திரர், தூமிரகேது, கணேசர், கணபதி, மதோற்கடர், துண்டி விநாயகர், வல்லபை விநாயகர் என்பனவாம். இவற்றுள் வக்கிர துண்ட விநாயகரைப் பற்றிய வரலாறு முன்னர் உரைக்கப்பட்டது. எஞ்சியன இப்பொழுது கூறப்பெறுகின்றன.

## 69. சிந்தாமணி விநாயகர்

### அபிசித்து

முன் காலத்திலே தமிழ் நாட்டிலே அபிசித்து என்னும் பெயரையுடைய ஓர் அரசன் இருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் குணவதி. அபிசித்து தன் மனைவியோடு

இன்ப வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தான். ஆயினும் அவனுக்கு நெடுநாள் மக்கட் பேறு உண்டாக வில்லை. அதனால் மனம் வருந்திய அரசன் அரசாட்சியை அமைச்சர்களிடம் ஒப்புவித்துவிட்டுத் தன்னுடைய மனைவி யோடு காட்டை நோக்கிச் சென்றான். அப்பொழுது வழியிலே முனிவருடைய இருப்பிடம் ஒன்று காணப்பட்டது. அரசன் அதற்குள் நுழைந்தான். அங்கே வைசம்பாயனர் என்னும் பெயரையுடைய முனிவர் ஒருவர் எழுந்தருளியிருந் தார். அம்முனிவர் பெருமையிற் சிறந்தவர். அவர் திருநீறுஞ் சிவகண்மணியுமாகக் காட்சி கொடுத்தார். அவரைக் கண்ட அபிசித்து மன்னன் அவருடைய அடிகளில் அடியற்ற மரம் போல் வீழ்ந்தான். வீழ்ந்தவன் எழுதலின்றி வீழ்ந்தபடியே கிடந்தான். அபிசித்து மன்னனை முனிவர் அருளோடு நோக்கினார். "அரசனே! எழுந்திரு. நீ யார்? உனக்குண் டாகிய தொல்லை யாது?" என்று உசாவினார். அரசனோ முனிவருடைய கேள்விக்கு மறுமொழியளிக்கவும் இல்லை; எழவும் இல்லை. முனிவர் தம்முடைய மெய்யறிவுப் பார்வை யினால் அரசனுக்குள்ள குறையை அறிந்துகொண்டார். "அரசனே! உனக்கு மக்கட் பேறு உண்டாகக் கடவது" என்று வாழ்த்துரை கூறினார். முனிவர் உரையைக் கேட்ட அரசன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான்.

### தவஞ்செய்யக் கட்டளை

அபிசித்து மன்னன் உடனே எழுந்து தன்னுடைய இரு கைகளையுந் தலைமேற்குவித்து முனிவரை வணங்கினான். அவரைப் பார்த்துப், "பெரியீர்! அடியேன் தமிழ் நாட்டரசன். என்னுடைய பெயரை அபிசித்து என்று கூறுவார்கள். நான் வெகுகாலமாக மக்கட்பே றில்லாமல் வருந்துகிறேன். அக் குறையைப் போக்கிக் கொள்ளும் பொருட்டே தேவரீர்பால் வந்து சேர்ந்தேன். கடவுளின் வாக்குப் பொய்த்தாலும் முனிவர்களுடைய வாக்குப் பொய்க்காது. அடியேனுக்கு மக்கட்பே றுண்டாதற்குத் தக்க வழியைத் தேவரீர் காட்ட வேண்டும்" என்று சொன்னான். முனிவர் அரசனிடம் மண

இரங்கினர். சிவபெருமானுடைய ஐந்தெழுத்து மறையை அரசனுக்கு அறிவுறுத்தியருளினர். பின் அரசனைப் பார்த்து, "அரசனே! கடலும் ஆறும் ஒன்ருகக் கலக்கும் இடத்திற்கு மேற்புறத்தில் ஒரு காடு இருக்கின்றது. அக்காட்டிலே ஒரு தடாகமிருக்கின்றது. அந்த இடத்திற்குப் போய் உன் மனைவி தொண்டு செய்ய நீ நான்கு திங்கள் வரையில் இம் மறையை உருவேற்றிப் பிறகு செய்யவேண்டிய கடமைகளைச் செய்து உன்னுடைய நகரத்திற்குச் செல். அவ்வாறு செய்வாயானல் உனக்கு மக்கட்பேறு உண்டாகும்" என்று கூறி அரசனை அனுப்பினர்.

### நான்முகனேடு நற்றவம்

முனிவர் மொழிந்ததை அரசன் செவிக்கமுதமாகக் கேட்டான். அவரிடம் விடைபெற்றுக் கொண்டு மனைவி யோடு அவ்விடமிருந்து புறப்பட்டான். முனிவர் கூறிய காட்டிலுள்ள தடாகக் கரையை அடைந்தான். அவ்விடத்தில் இவ்வரசனுக்கு முன்னரே நான்முகன் தன் மனைவியாகிய கலைமகள் தொண்டு செய்யத் தவஞ்செய்து கொண் டிருந்தான். அபிசித்து மன்னன் நான்முகனையும் கலை மகளையும் வணங்கித் தான் ஒரு பக்கத்தில் அமர்ந்து தவஞ் செய்யலானன். குணவதியுங் கலைமகளுந் தங்கள் கணவர் கட்குப் பணிசெய்யும் நேரம் போகப் பிற வேளைகளில் ஒன்ருகச் சென்று காய் கனி முதலியவைகளைத் தேடிக் கொண்டுவந்து தங்கள் கணவர்க் களித்துக் கொண் டிருந்தனர்.

### கலைமகளின் காமம்

இவ்வாறிருக்குங் காலத்தில் ஒருநாள் கலைமகளுக்குக் காமம் உண்டாகி அது மிகுதியாகிவிட்டது. அவள் முறுவல் அரும்பவும், கொங்கைகள் விம்மவும், கூந்தல் அவிழ்ந்து சோரவும், மேகலை நெகிழவும் திடீரென்று தன் கணவன் மடிமீதிலேறி அமர்ந்தாள். அவ்வளவில் நான்முகனுக்குங் காமம் உண்டாகிவிட்டது. அவன் அவளைத் தழுவத்

தொடங்கினான். அவ்வளவில் கலைமகளுக்கு நல்லறிவு உண்டாகியது. தவஞ்செய்வோரின் தவத்தை அவமாக்கித் தழுவுதல் தக்கதன்று என்று அவள் உணர்ந்தாள். பலவாறு தேறுதல் உரைகளைக் கூறித் தன்னைத் தழுவுதல் தக்கதன்று என்று சொன்னாள். கலைமகள் கழறியவைகளை நான்முகன் கேட்கவில்லை. வலுக்கட்டாயம் செய்யத் தொடங்கினான். அவள் எழுந்து ஓடலானாள். நான்முகன் பின்தொடர்ந்தான். நான்முகனுடைய செயலைக் கண்டோர் உணவு முதலியவைகளை ஒழித்துத் தவஞ்செய்பவர்களாயினும் காமக் கடலைக் கடப்பது கடினமென்று பேசிக்கொண்டார்கள்.

### வீரியம் வெளியாதல்

அச்சமயத்தில் நான்முகனுடைய வீரியம் வெளிப்பட்டது. நான்முகன் முன்னர்த் தவஞ்செய்து கொண்டிருந்த இடத்தையடைந்து நீராடல் முதலியவைகளை முடித்துக் கொண்டு மேலும் தன்னுடைய முயற்சியில் ஈடுபட்டான்.

### குணவதி கருப்பம்

பிறகு முழுத்திங்கள் நாள் வந்தது. அந்நாளில் அபிசித்து மன்னன் தன்னுடைய மனைவியோடு கடலில் நீராடிவிட்டு வந்தான். அப்பொழுது குணவதிக்கு நீர்வேட்கை மிகுதியாகியது. விரைவாகத் தடாகத்திற்குச் சென்று தண்ணீர் பருகினாள். வெளிப்பட்டிருந்த நான்முகனுடைய வீரியம் அத்தடாகத் தண்ணீரிற் கலந்திருந்தபடியால் அது குணவதியின் வயிற்றுக்குட் சென்று கருப்பத்திற்கேது வாயிற்று. நான்கு திங்கள் முடிந்த பிறகு அரசன் தன்னுடைய மனைவியோடு நகரத்தை அடைந்தான்.

### கணன்

பத்தாந்திங்களில் பாராளுமன்னனுடைய மனைவி மைந்தன் ஒருவனைப் பெற்றாள். அரசன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். பிறந்தநாட் குறிப்பு முதலியன எழுதிச் செய்ய

வேண்டிய சடங்குகளைச் செய்தான். மகனுக்குக் கணன் என்று காலக்கணிதர்கள் கழறியவாறு பெயர் வைத்தான். கணன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தான். கணனுடைய செயல்கள் வியக்கத்தக்கனவாக இருந்தன. அரைக் கணப்பொழுதில் அளவற்ற தொலை சென்று திரும்புவான். ஒருநாள் திங்கள் கிழக்குத் திக்கில் தோன்றி விண் வழியாக வரக்கண்டவன் விரைவாகச் சென்று அவனுடைய கைகளைப் பிடித்தான். திங்கள் அஞ்சினான். கணனைத் தொழுது வணங்கினான். தனக்கு யாதுந் தொல்லை செய்யக்கூடாது என்று நல்ல மொழிகளைப் பேசி அவனிட மிருந்து விடுபட்டான். ஒருநாள் மதங்கொண்ட யானை யொன்று மும்மதங்களைப் பொழிந்து கட்டுத்தறியை முறித்துக் கொண்டு மிகுந்த சினத்தோடு வெளிப்பட்டது. அது பாகர்களையெல்லாங் கொன்று மக்களுக்கு மிகுந்த தொல்லை யளித்துக்கொண்டு திரிந்தது. அதனால் நகரத்தார் மிகுந்த துன்பமடைந்தார்கள். மதங்கொண்ட யானையின் செய்தியைக் கணன் உணர்ந்தான். அதன் அண்மையில் சென்று அதன் கன்னத்தில் புடைத்து மத்தகத்தைக் கிழித்தான். மத்தகத்தி னின்றும் உதிரப் பெருக்கு உண்டாகியது. உதிரப் பெருக்கும் மத நீரும் ஒன்றுபட்டுப் பெருகியது. மிகுந்த துன்பத்தை அடைந்த அந்த யானை மிகு விரைவில் இறந்தொழிந்தது.

### கணன் தவம்

பல புதுமையான விளையாடல்களை நடத்திக் கொண் டிருந்த கணன் அகவையிற் சிறியவனாக இருந்தாலும் ஆற்றலிற் பெரியவனாக விளங்கினான். அறம், தானம், ஒழுக்கம், தூய்மை, விருந்தோம்பல் இறைவழிபாடு. மெய்யறிவு முதலிய பண்புகள் கணனிடஞ் சிறந்து விளங்கின. கணன் ஒரு நாள் தன்னுடைய தந்தையைப் பணிந்து தவஞ் செய்வதற்கு உடன்பாடு பெற்றுக்கொண்டு காட்டிற்குச் சென்றான். நீர்நிலையின் கரையொன்றில் அமர்ந்து திருநீறு சிவகண்மணி முதலிய சிவக்குறிகளைப் பூண்டு இறைவனை வணங்கித் திருவைந்தெழுத்தை உருவேற்றிக்கொண்டு

ஆயிரம் ஆண்டுகள் வரையில் தவத்தில் இருந்தான். பிறகு ஒற்றைக்காலில் நின்று பல ஆண்டுகள் தவஞ் செய்தான். கணன் தவஞ்செய்த இடத்தில் தென்றற் காற்றையல்லாமல் பிற காற்று வீசவில்லை. கதிரவன் மிகுதியாகக் காயவில்லை. மழை அளவுகடந்து பெய்யவில்லை. விலங்குகளும் பறவைகளும் ஒன்றற்கொன்று பகைகொள்ளவில்லை. கணனுடைய கடுந்தவத்தில் இருந்து தீயுண்டாகியது. அத்தீ தெய்வலோகமெங்கும் பரவிச் சுட்டது. அதனைப் பொறுக்க முடியாமல் தேவர்கள் வருந்தினார்கள். இவன் விண்ணுலக இன்பத்தை விரும்பித் தவஞ் செய்கின்றானோ என்று அஞ்சினார்கள். எல்லோரும் ஒருங்கு கூடித் திருக்கைலையை அடைந்தார்கள். சிவபெருமானைப் பணிந்து மறைமொழிகளினால் போற்றினார்கள். ''எம்பெருமானே! கணன் என்பவன் கடுமையான தவத்தைச் செய்கின்றான். அவனிடத்திலிருந்து தவத்தீயானது பிறந்து விண்ணுலகத்தை வாட்டி வருத்துகின்றது. அதனால் நாங்கள் அனைவருந் தேவரீரிடம் அடைக்கலம் புகுந்தோம். எங்களுடைய துன்பத்தைப் போக்கியருளுதல் வேண்டும்'' என்று கூறி வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான், ''அஞ்ச வேண்டாம்'' என்று அவர்கட்கு அருளுரை புகன்று தெளிவு பெறச் செய்தார். காளையூர்தியின்மீது மலைமகளோடு எழுந்தருளினார். கடுந்தவம் புரியும் கணனுக்கு முன்னால் தோன்றினார். கணன் விரைந்தெழுந்து இறைவனைப் போற்றிப் பணிந்தான். சிவபெருமான் கணனைப் பார்த்து, ''அன்பனே! உனக்கு வேண்டியவைகளைக் கேள், தருகிறோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

### கணன் மேன்மை பெறுதல்

கணன் மீண்டுஞ் சிவபெருமானைத் தொழுது வணங்கினான். இரு கைகளையுந் தலைமேற் குவித்து, ''எம்பெருமானே! தேவரீருடைய திருவடித் தாமரை மலர்களில் எக்காலத்தினும் மாறாத அன்பும் மேலான செல்வமும் அடியேனுக்கு அருளவேண்டும்'' என்று வேண்டிக்

கொண்டான். சிவபெருமான் கணன் விரும்பிய மேன்மைகளை யெல்லாங் கொடுத்து நீண்ட வாழுளையும் வழங்கிக் கைலைக்கு எழுந்தருளினர். கணன் தன்னுடைய நகரத்தை யடைந்தான். தாய் தந்தையர்களைக் கண்டு வணங்கினன். தான் அருள் பெற்ற செய்திகளையெல்லாம் தாய் தந்தையர்களுக்குக் கூறி அவர்களோடு மகிழ்ந்திருந்தான்.

### கணன் அரசாட்சி

கணனுடைய தந்தையாகிய அபிசித்து மன்னன் கணனுக்குத் திருமணஞ் செய்து வைத்தான். சிலநாள் சென்ற பிறகு கணனுக்கு முடிசூட்டுதல் செய்து தன்னுடைய அரசுரிமையையுங் கணனிடங் கொடுத்தான். தான் இறை வழிபாடு செய்துகொண்டு தன்னுடைய காலத்தைக் கழித் தான். கணன் அரசாட்சியை மேற்கொண்டவுடன் பிற நாடுகளையுங் கைப்பற்றத் தொடங்கினன். விசுவசித்து, பிரமதன், கிரந்தன், விதந்து என்கிற நான்கு அமைச்சர் களையும் தன்னுடைய மக்களாகிய சூலபாணி சுலபன் என்கிறவர்களையும் உடனழைத்துக் கொண்டு பெரும்படை களோடு நமனும் அஞ்சிக் கண்புதைக்குமாறு புறப்பட்டான். எதிர்த்த அரசர்களையெல்லாம் வென்று தனக்குக் கப்பங் கட்டுமாறு செய்தான். நிலவுலகிலுள்ள எல்லா நாடுகளையும் தன்வழிப்படுத்தினன். தேவலோகத்திற்குச் சென்று கற்பக வனத்தில் இருந்த தேவேந்திரனுடைய உச்சைச் சிரவம் என்னும் குதிரையைப் பிடித்துத் தான் அதன்மீது ஏறிக் கொண்டான். இச் செய்தியைத் தேவேந்திரன் தன்னுடைய தூதர்களால் உணர்ந்தான்.

### இந்திரனோடு போர்

இந்திரனுக்கு மிகுந்த சினமுண்டாகிவிட்டது. அவன் போர்க்கோலங் கொண்டான். வச்சிரப்படையை எடுத்துக் கொண்டு வெள்ளை யானையின்மீது ஏறிப் புறப்பட்டான். தேவர்களனைவரும் படைக்கலங்களோடு தேவேந்திரனைச்

சூழ்ந்து சென்றார்கள். எல்லாப் பக்கங்களினும் போர்ப் பறைகள் முழங்கின. போர்க் கோலங்கொண்டு புறப்பட்ட இந்திரன் தன்னுடைய நாட்டிற்கு வந்து தன்னுடைய குதிரையின்மீதே ஏறிக்கொண்டுபோர்க் கோலத்தோடிருக்கிற கணராசனைக் கண்டான். கண்டவுடன் இந்திரனுக்குச் சிறிது அச்சமுண்டாயிற்று. இவ்வீரனோடு போர் செய்து வெற்றி பெறுவது இயலாத காரியம். இவனை நன்மொழிகளாலேயே வழிக்குக் கொண்டுவர வேண்டும் என்று எண்ணினான். கணனைப் பார்த்து, "ஓ கணனே! நல்ல குணனே! நீ மிகவுஞ் சிறந்தவனாகத் திகழ்கின்றாய்; அன்புகூர்ந்து என்னுடைய குதிரையை விட்டுவிடுவாயாக" என்று சொன்னான். கணன் இந்திரனைப் பார்த்து, "ஓ இந்திரனே! உன்னுடைய வெள்ளையானை முதலியனவும் எனக்கு உரிமை யாகத் தக்கன" என்று சொன்னான். இதனைக் கேட்டவுடன் இந்திரன் சினங்கொண்டான். தன்னுடைய படையைத் தூண்டிப் போர் செய்யத் தொடங்கினான். கணனால் வெறுத்து ஒதுக்கப்பட்டிருந்த படைத் தலைவன் ஒருவன் இந்திரனை எதிர்த்துப் போரிட்டான். இந்திரனுடைய படைகளை யெல்லாம் எதிர்த்து அழித்தான். படைத்தலைவன் ஒருவனால் தனக்கு ஏற்பட்ட தோல்வியைக் கண்டு இந்திரன் நாணினான். தன்னுடைய வெள்ளை யானையைக் கணனுக்கு அண்மையிற் செலுத்திக் கணனுடைய மார்பில் தன்னுடைய வச்சிரப் படையால் தாக்கினான். அதனால் கணன் சிறிது நேரம் மூர்ச்சையானான். ஆனால் சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்து தன்னுடைய குதிரையை இந்திரன் பக்கமாகச் செலுத்தினான். தன்னுடைய வாட்படையினால் இந்திர னுடைய குலிசப் படையைத் தாக்கிக் கீழே வீழ்த்தினான். அதனால் இந்திரன் சிறிது தளர்ச்சியடைந்தான். இந்திர னுடைய தளர்ச்சியைக்கண்ட ஐராவதம் கணனோடு போரிடத் தொடங்கியது. கணன் ஐராவதத்தையுந் தாக்கிக் கீழே வீழ்த்தினான். பிறகு கணனும் இந்திரனும் மற்போர் செய்யலானார்கள். கணன் இந்திரனுடைய முடியில் உதிர வெள்ளம் பெருகுமாறு குட்டினான். அதனால் இந்திரன் தளர்வடைந்து தோல்வியுற்றான். கணன் இந்திரனைப்

பார்த்து, "ஓ இந்திரனே ! இனிமேல் எதற்கும் அஞ்ச வேண்டும். நான் உனக்கு விண்ணுலக அரசாட்சியைக் கொடுக்கிறேன். எனக்கு இவ்விண்ணுலகச் செல்வமும் ஆட்சியும் வேண்டியதில்லை. இனிமேல் என்னுடைய ஆணைக்கு அஞ்சி நடந்துகொள்ளக் கடவாய்; அடங்கி நடவாமல் போனால் தண்டனைக் குள்ளாவாய்'' என்று கூறி மற்ற உலகங்களையும் வெற்றி கொள்ளுமாறு சென்றான்.

### திருமால் முதலியோரை வெல்லுதல்

கணன் திருமால் நான்முகன் முதலியவர்களுடைய உலகங்கட்குச் சென்றான். அவர்கள் இவனைக் கண்டு அஞ்சினார்கள். இனிமேல் நமக்கு யாது நேரிடுமோ என்று எண்ணிக் கலங்கினார்கள். யாவரும் மிகுந்த வணக்கத்தோடு கணனை யெதிர்கொண்டார்கள் ; கையுறைகள் வழங்கிப் பாராட்டிப் பணிந்து சென்றார்கள். கணன் மகிழ்ந்து அவர்கள் அனைவருக்கும் அருள் செய்தான்.

### திரும்புதல்

பிறகு கணன் நிலவுலகத்திற்குத் திரும்பினான். தன்னுடைய தாய் தந்தையர்களைக் கண்டு வணங்கினான். தேவர்களால் தனக்குத் தரப்பெற்ற கையுறைப் பொருள்களை அவர்கள் முன் வைத்துத் தான் தேவர்களை வென்று வந்த செய்திகளையெல்லாங் கூறினான். பிறகு அறச்செயல்களை நன்கு செய்துகொண்டு அரசாட்சியை நடத்திக் கொண்டிருந்தான்.

### கணன் வேட்டைக்குச் செல்லுதல்

கணன் இனிது வாழ்ந்திருக்குங் காலத்தில் ஒருநாள் வேடர்கள் சிலர் கணனிடம் வந்து காட்டில் விலங்குகள் மிகுதியாகித் தொல்லை கொடுப்பதாகவும் அவைகளை வேட்டையாடி அழித்தல் வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார்கள்.

கணன் வேட்டையாட விரும்பினுன். வேட்டைப் படைகளோடு புறப்பட்டுக் காட்டிற்குச் சென்ருன். வேட்டையாடிப் பல விலங்குகளையுங் கொன்றெழித்தான்.

## கபில்முனிவர் இருப்பிடத்தை யடைதல்

கணன் வேட்டையை முடித்துக்கொண்டு புறப்பட்ட பொழுது நீர்வேட்கை மிகப் பெற்றவனுனுன். அதனுல் மிக வருந்தி அமைச்சர் முதலியவர்களோடும் வேட்டைப் படைகளோடும் காட்டினுள்ளே புகுந்து சென்ருன். ஓரிடத்தில் தேவருலகிற்கு ஒப்பான இடம் ஒன்று தோன்றியது. அங்கிருந்த ஆறு ஒன்று தெளிந்த இனிய நீரையுடையதாகத் திகழ்ந்தது. கணன் அவ்வாற்றைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். அதில் நீராடித் தன்னுடைய நீர்வேட்கையைத் தணித்துக்கொண்டு படைகளோடு அங்கு அமர்ந்திருந்தான். காய்கனி கிழங்கு முதலியவற்றை உண்டு பசியாறினுன். அக்காட்டில் கபிலமுனிவர் தம்முடைய மாணவர்களோடு தங்கித் தவஞ்செய்து கொண்டிருந்தார். அம்முனிவருடைய மாணவர்கள் இருவர் நீராடுதற் பொருட்டு ஆற்றிற்கு வந்தனர். அவர்கள் கணனையும் அவனுடைய படைகளையும் கண்டனர். திரும்பித் தம்முடைய ஆசிரியராகிய கபில முனிவரிடஞ் சென்று அரசனும் அவனுடைய படையும் வந்திருக்குஞ் செய்தியையுந் தெரியப்படுத்தினர். கபில முனிவர் அரசனையும் படைகளையுந் தம்மிடம் அழைத்து வருமாறு கட்டளையிட்டார். மாணவர்களும் கணனுக்குச் செய்தியைக் கூறினுர்கள். அவனை அவனுடைய படை களோடு அழைத்துக் கொண்டுபோய்த் தம்முடைய ஆசிரியரிடம் விட்டார்கள். கணன் கபிலமுனிவரைக் கண்டு தொழுது வணங்கினுன். கபிலமுனிவர் கணனுடைய பெயர் ஊர் முதலிய செய்திகளை உசாவினுர். கணன் தன்னுடைய பெயர் ஊர் காட்டிற்கு வேட்டையாடவந்த செய்தி முதலியவை களைக் கூறினுன். கணன் கழறியவைகளைக் கேட்டுக் கபிலர் மகிழ்ந்தார். கணனைப் பார்த்து, "ஓ அரசனே! நம்முடைய இருப்பிடத்திற்கு வந்தவர்கள் பசியோடு சென்றதில்லை.

ஆகவே இங்கு உணவு கொண்டு உன்னிருப்பிடஞ் செல்வாயாக" என்று கூறினர்.

**கபிலர் விருந்து**

கபிலமுனிவர் தம்முடைய மார்பிலே தெய்வத் தன்மை பொருந்திய சிந்தாமணி ஒன்றை அணிந்திருந்தார். அம் மணியை முனிவர் கையிலெடுத்து ஓர் உயரிய இருக்கையில் வைத்து வழிபாடு செய்தார். அம் மணியைப் பார்த்து, "இங்கு வந்திருக்கின்ற எல்லாருக்கும் விருந்து செய்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். சிந்தாமணி அழகு பொருந்திய ஒரு நகரத்தை உண்டாக்கியது. அந்நகரில் அளவற்ற மாளிகைகளையும் விருந்திற்கு வேண்டிய பொருள் களையும் உண்டாக்கியது. அரசனுக்கும் அவனுடைய படை கட்கும் விருந்து செய்தது. அவ்விருந்தின் சிறப்பைக் கண்ட கணன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான்.

**நன்மை செய்தவர்கட்குத் தீமை செய்தல்**

சாப்பாடு முடிந்த பிறகு கணன் கபிலமுனிவரைப் பணிந்து, "பெரியீர்! தேவரீர் படைப்பு முதலிய தொழில் களைச் செய்ய விரும்பினும் ஒரு நொடிப் பொழுதிற் செய்து முடிக்கவல்ல ஆற்றலுடையவர். ஆகவே தாங்கள் தவச் சிறப்பினுலேயே எல்லாக் காரியங்களையுஞ் செய்து முடிக்கலாம். அவ்வாருகப் பெருமையிற் சிறந்த சிந்தாமணி தங்களுக்கேன்? அம் மணியினை அடியேனுக்குத் தந்தருள்வீர்களாக" என்று கேட்டான். கபிலமுனிவர் கணனைப் பார்த்து, "ஓ கணனே! இந்தச் சிந்தாமணி என்னுடைய உயிரினுஞ் சிறந்ததாகும். ஆகையினுல் இதனைக் கொடுக்க முடியாது. இதனைத் தவிர வேறு எது வேண்டுமாயினுங் கேள், தருகிறோம்" என்று கூறினர். இதனைக் கணன் கேட்கவில்லை. பகற் பொழுதிற் கணன் பிறந்தவனுகையால் தீய குணத்தையே மேற் கொண்டான். வலுக்கட்டாயமாகக் கபிலமுனிவரிடமிருந்து பறித்துக்கொண்டான். அதனுல் கபிலர் மிகுந்த சினங் கொண்டார். "அறிவற்றவனே! மூவுலகத்தின் கண்ணும் அரசாட்சியைச் செலுத்துகின்ற நீ என்னுடைய பொருளைக்

கவர்ந்து கொண்டனையன்றோ? எனக்குத் துன்பத்தை யுண்டாக்கிய நீ விரைவில் அழிந்தொழிவாய். பொல்லாத வனே! என் முன் நிற்பையானுல் வசவுரை வழங்கி உன்னை நீருக்கி விடுவேன். ஆகவே விரைவாக உன்னுடைய இருப் பிடத்திற்குப் போய் விடுவாயாக'' என்று சொன்னுர். கணன் கபிலருக்குச் சிறிதும் அஞ்சவில்லை. சிந்தாமணியை முனிவரிடந் திரும்பக் கொடுக்கவுமில்லை. அம் மணியோடு தன்னுடைய நகரத்திற்குச் சென்முன். தாய் தந்தையர் களிடம் நிகழ்ந்ததைக் கூறி அரசாட்சியை நடத்திக்கொண் டிருந்தான்.

### கபிலர் கடுந்தவம்

கணன் சென்ற பிறகு கபிலமுனிவர் தம்முடைய சிந்தாமணியை எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டார். கொடியவனுகிய கணனை எவ்வாறு அழிப்போம் என்று எண்ணினுர். நீங்காத துன்பத்தை யுடையவராய் உணவு முதலியவைகளை யொழித்துக் கணனை யொழிக்கவேண்டு மென்று கடிய தவத்தைச் செய்தார். பலநாள் தவஞ்செய்த பிறகு திருமாலினுடைய மாயையானது நான்கு திக்குகளினும் நிறைந்து தீப்பிழம்பாக எங்கும் மூடிக் கபிலருடைய கண்ணுக்குத் தெரியும்படியாக நின்றது. அதனைக் கண்ட கபிலர் ஈதென்ன தொல்லையென்று அச்சங்கொண்டார். அம் மாயை முனிவரைப் பார்த்து, "நான் மாயாசத்தி; என்னுடைய பெயர் சாருகாசினி. உமக்குத் துன்பத்தை யுண்டாக்கிய கணன் சிவபெருமானுடைய திருவருளினுல் அழியாத மேன்மையைப் பெற்றிருக்கிருன். முத்தொழிலிலும் வல்லவராகிய ஆனைமுகக் கடவுள் திருவுருக்கொண்டு வருவாரெனில் அப்பொழுதே கணனுக்கு அழிவுண்டாகும்; ஆகவே ஆனைமுகக் கடவுளை எண்ணித் தவஞ் செய்வீராக'' என்று கூறியது.

### ஆனைமுகக் கடவுள் காட்சி

கபிலர் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுப் போற்றும் முறையினைச் சாருகாசினியிடமே கேட்டுத்தெரிந்துகொண்டு

ஆனைமுகக் கடவுளை நோக்கி அரிய தவத்தைச் செய்தார். ஆனைமுகக் கடவுள் சித்திபுத்திகளோடு கபிலருக்குக் காட்சி கொடுத்தார். ஆனைமுகக் கடவுளைக் கபிலர் தொழுது வணங்கித் தமக்கு வேண்டிய மேன்மைகளை யெல்லாங் கேட்டுக்கொண்டதோடு கணன் அழிந்தொழியுமாறும் அருள்புரிய வேண்டுமென்று வேண்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுள் கபிலரைப் பார்த்து, "உனக்குத் துன்பத்தை யுண்டாக்கிய கணன் அழிந்தொழியவும், எல்லா உயிர்களுக்கும் நன்மை யுண்டாகவும் உன்னுடைய இருப்பிடத்தின் கண் யாம் தோன்றி யருளினோம்; கணனை யழித்து உனக்கு அருள்செய்கின்றோம்" என்று திருவாய் மலர்ந்தருளினர். இதனைக் கேட்டுக் கபிலர் மகிழ்ச்சியடைந்தார்.

### கணன் கனவு

ஆனைமுகக் கடவுளுடைய அருளைக் கபிலர் பெற்ற அன்று இரவு கணன் தீய கனவு ஒன்று கண்டான். அக்கனவு கபில முனிவர் அளவற்ற படைகளோடு வந்ததாகவும் அம் முனிவரோடு பலவகையான படைக் கலங்களையேந்திய ஒருவன் தன்னுடைகளெல்லாவற்றையும் விழுங்கியதாகவும் பிறகு அவன் ஒரு மழுப்படையைத் தன்மீது விட அப்படை அவனுடைய தலையை அறுத்துத் தள்ளியதாகவும் அமைந்திருந்தது. கணன் தன்னுடைய தந்தை அமைச்சர்கள் முதலிய அனைவரையும் அழைத்துத் தான் கண்ட கனவைக் கூறினன். அதன் பொருட்டுத் தான் யாது செய்ய வேண்டுமென்று உசாவினன். அமைச்சர்களில் ஒருவன், கபிலருடைய சிந்தாமணியைக் கைப்பற்றிய படியால் இப்பொழுது தொல்லையேற்படப் போகிறதென்ருன். வேருேர் அமைச்சன் அப்படியொன்றும் நேரிடாதென்ருன். வேருேர் அமைச்சன் கபில முனிவர் மீது படையெடுத்துச் சென்று தாக்கி அவரை வெல்லவேண்டும் என்ருன். கபில முனிவர் மீது படையெடுத்துச் செல்வதற்குரைத்த அமைச்சனுடைய சொல்லே கணனுக்குச் சிறந்ததாகத் தோன்றியது. ஆகவே கணன் கபிலர்மீது போருக்குப் புறப்படுமாறு தன்னுடைய படைகட்குக் கட்டளையிட்டான்.

### தந்தையின் அறிவுரை

எல்லாவற்றையுங் கேட்டுக் கொண்டிருந்த அபிசித்து மன்னனாகிய கணனுடைய தந்தை தன் மைந்தனுடைய மனப்போக்கைக் கண்டு மனங் கொதித்தான். அவன் தன்னுடைய மகனைப் பார்த்து, "ஓ மகனே! நீ என்ன வேலை செய்கின்றாய்? தேவர்கள், முனிவர்கள் முதலிய எல்லாருக்கும் பகைவனானாய். அதற்குத் தக்கவாறு தீய கனவுங் கண்டாய். அக் கனவு பொய்யாகமாட்டாது. நல்ல கனவினால் நன்மை யுண்டாகும். தீய கனவினால் தீமை யுண்டாகும். தவத்திற் சிறந்த கபில முனிவர்மீது நீ இப்பொழுது படையெடுத்துச் செல்வது தக்கதன்று. கடலைப் போன்ற மிகு பெரும் படையிருந்தாலும் பெரியோர்களை வெற்றிகொள்வது மிக அருமையாகும். நீ உய்யத்தக்க வழியை நான் சொல்லுகிறேன் கேள்; நீ முன்பு அம் முனிவரிடத்திலிருந்து கைப்பற்றிக்கொண்டு வந்த சிந்தாமணியை அவரிடஞ் சேர்த்துவிட வேண்டும். மணியை முன்னதாக அவரிடம் அனுப்பிவிட்டுப் பிறகு நீ அவரிடஞ் சென்று அவரைப் பணிந்து அவருக்குச் சின முண்டாகாதவாறு நடந்துகொள். அதனால் கபிலருடைய பகையிலிருந்து விடுபட்டு உய்வைப் பெறலாம்" என்று சொன்னான். தந்தையினுடைய உரையைக் கணன் ஏற்றுக்கொண்டிலன். அவன் தன்னுடைய தந்தையைப் பார்த்துத், "தேவரீர் உரைக்கும் மொழிகள் யான் கேட்கத்தக்கனவல்ல. சிறியவர்களானோர் மானங்கெடாத காரியங்களை யெடுத்துக் கூறினால் மானத்தைக் காக்க விரும்பினோர் அதனையேற்றுக் கொள்ளுதல் வேண்டும். பெரியவர்களானோர் மானக் கேடான காரியங்களை யெடுத்துக் கூறினால் அதனை மானங் காக்க விரும்பினோர் ஒருபோதும் கேளார்" என்று கூறிப் படையெடுத்தற் குறுதிசெய்து படைகளைத் திரட்டினான்.

### கபிலர்மீது படையெடுத்தல்

கபிலருடைய இருப்பிடத்தை நோக்கிப் பெரும்படை புறப்பட்டது. இதனை இந்திரன் முதலிய தேவர்களும் கண்டு

அஞ்சினர்கள். கணன் படையோடு வந்தபோது கபிலர் ஆனைமுகக் கடவுளுக்கு வழிபாடு செய்துகொண்டிருந்தார். கபிலருடைய மாணவர்களிற் சிலர் கணன் படையெடுத்துக் கொண்டு வந்திருக்குஞ் செய்தியைக் கபிலரிடந் தெரியப் படுத்தினர். கணனனவன் தன்னுடைய நல்வினைப் பயனல் கபிலருடைய இருப்பிடத்தில் தோன்றியுள்ள ஆனைமுகக் கடவுளைக் கண்டான். அவ்வானைமுகக் கடவுள் தான் கனவில் கண்டதைப் போல் இருப்பதையும் பார்த்தான். ஆனைமுகக் கடவுளின் பக்கத்தில் சித்திபுத்திகள் அமர்ந்திருத்தலையும் பார்த்தான். அக்கடவுளால் தனக்கு அழிவு வருதல் திண்ணம் என்று எண்ணினன்.

### கபிலர் முறையீடு

கபிலர் கணன் தன்மீது படையெடுத்துப் போர் செய்ய வந்திருத்தலை யுணர்ந்தும் சிறிதும் பதற்ற மடையவில்லை. வழக்கம்போல் வழிபாட்டைக் குறைவில்லாமல் நிறை வேற்றினர். கணனையழித்துத் தம்மைப் பாதுகாத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் கணனேடு போர் செய்தற்குத் தம்முடைய அரிமாவூர்தியில் ஏறக் கருதினர். ஆனைமுகக் கடவுளின் எண்ணத்தைச் சித்திதேவியார் உணர்ந்தார். அவர் ஆனைமுகக் கடவுளைப் பார்த்துத், "தேவரீர் போர் செய்யும் பொருட்டுச் செல்ல வேண்டியதில்லை. தங்களுடைய அருள் நோக்கத்தை மட்டுஞ் சிறிது என்பால் செலுத்தியருளினற்போதும். வருகின்ற படைகளையெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் யான் அழித்தொழிக்கின்றேன்" என்று பணிவுடன் தெரியப்படுத்திக் கொண்டார். ஆனைமுகக் கடவுள், "அவ்வாறே சென்று வென்று வருவாயாக" என்று உடன்பாடு தந்து தாம் அத்தேவியாருடைய ஆற்றலிற் புகுந்தருளினர்.

### சித்திதேவி போருக்குச் செல்லுதல்

ஆனைமுகக் கடவுள் உடன்பாடு தந்தவுடன் சித்தி தேவியார் மனக்களிப்புற்றுப் போருக்குப் புறப்பட்டார்.

படைத்துணையில்லாமல் தனிமையாகவே போருக்குச் சென்றார். சித்தி தனிமையாகப் போர் செய்ய வருதலைக் கணன் பார்த்தான். ஒரு பெண் நம்மோடு போர் செய்தற்கு வருவது மிகு அழகு என்று வியந்துகொண்டே போருக்குப் புறப்படத் தொடங்கினான். கணனுடைய மக்களாகிய சுலபனுஞ் சூலபாணியும் தம்முடைய தந்தையைப் பார்த்து, "ஒரு பெண்பாலோடு தாங்கள் போர் செய்யுமாறு புறப்படுதல் தக்கதன்று. எங்களைப் போருக் கனுப்புவீராக" என்று வேண்டிக்கொண்டனர். கணன் அவ்வாறே அவர்களைப் போருக்கனுப்பினான். "போரில் வெற்றியடைந்தால் இங்கு வாருங்கள். வெற்றி பெறாமல் தோல்வி யடைவீர்களாயின் என்முன் வருதல் வேண்டாம்" என்றுங் கூறியனுப்பினான். கணனுடைய மக்கள் பெரும் படைகளோடு சித்திதேவியை எதிர்த்துப் போரிடச் சென்றனர். பெரும் படை தம்மை நோக்கிப் போர்செய்ய வருதலைக் கண்ட சித்தியார் ஓர் இமைப்போதில் அளவற்ற படைகளைப் படைத்தருளினார். அப்படைவீரர்களிற் பலர் பல கைகளோடும் பல தலைகளோடும் அமைந்திருந்தனர். சித்திதேவியின் படைக்கும் கணனுடைய படைக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. அளவற்ற படைகள் அழிந்தொழிந்தன. சித்திதேவியார் ஒரு பெரிய வீரனைப் படைத்தார். அவ்வீரன் இலக்கம் என்னும் எண்ணினையுடைய கைகளோடும் படைக்கலங்களோடும் இருந்தபடியால் அவன் இலக்கன் என்று பெயர் பெற்றான். அவன் கணனுடைய படையிற் புகுந்து தான் ஒருவனே கணக்கற்ற படைகளை அழித்தொழித்தான். இறுதியில் கணனுடைய மக்களிருவரையும் ஆனைமுகக் கடவுள் திருமுன் கொண்டுபோய் நிறுத்தினான். அவர்களுக்கு அருள்செய்ய வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டான். கணனுடைய அமைச்சர்கள் அவனுடைய மக்கள் இருவரும் போரில் தோல்வியடைந்து இலக்கனால் பிடித்துக்கொண்டு போகப் பட்ட செய்தியைக் கூறினர். அதனைக் கணன் கேள்வியுற்றுப் பலவாறு புலம்பினான்.

### கணன் போருக்குப் புறப்படுதல்

அமைச்சர்கள் வருந்துகின்ற கணனுக்கு நல்லுரைகள் கூறித் தெளியப்படுத்தினர்கள். "நாம் போருக்குச் செல்வோம். தங்களுடைய மக்கள் உயிரோடிருப்பார்களாயின் மீட்டுக்கொண்டு வருவோம்" என்று கூறினர்கள். கணன் எஞ்சியிருந்த படைகளைத் திரட்டிக்கொண்டு போருக்குப் புறப்பட்டான். கணன் போருக்கு வருகிற செய்தியை ஆனைமுகக் கடவுள் கேள்வியுற்றுத் தாமும் தேவிமார்களோடு போருக்குப் புறப்பட்டார். கபிலர் இருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்த கணன் கபிலரைப் பார்த்து, "ஓ கபிலா! கருடனைப் பாம்புகள் வெல்வதுண்டோ? நீ என்னை வெல்வதற்கு இந்தப் பிள்ளையாரை உண்டாக்கினுய். இவனை என்னுடைய அருளுக்குரியனும்படி விட்டுவிடுவாயாக! அவ்வாறு விட்டு விடாமற் போவாயானல் உன்னையும் உனக்குத் துணையாக வந்த இவனையும் ஒரே கணையினல் கொன்று விடுவேன். இவ்வுலகிலுள்ள முனிவர்கள் அருளே வடிவாகிக் குணத்திற் சிறந்தவர்களாய் அறுவகைக் குற்றங்களையுங் கெடுத்துக் கடவுளுடைய திருவடிகளை அடைவார்கள். உன்னுடைய குணமோ இதற்கு மாறுபாடாக இருக்கிறது. பொருள் ஒன்றனையே விரும்பி யிருக்கிற நீ எவ்வாறு முனிவனுனுயோ தெரியவில்லை. எனக்குப் பகைவர்களாகத் தோன்றியவர்கள் எத்தகைய பேராற்றல் படைத்தவர்களாக இருந்தாலும் அவர்களை ஒரு நொடிப்பொழுதில் அழித்தொழிப்பேன். பேராற்றல் படைத்த எனக்கு ஒரு சிறு துன்பத்தைத் தானும் செய்ய உன்னல் இயலுமோ? உன்னலேயே உனக்குக் கேடுநேரிட்டிருக்கிறது. இனிமேலாயினும் உய்யும் வழியைத் தேடுவாயாக" என்று சொன்னன்.

### கபிலர் மறுமொழி

கணன் கழறியவைகளைக் கேட்ட கபில முனிவர் கடுஞ் சினங் கொண்டார். கணனைப் பார்த்து, "உண்ட வீட்டிற் கிரண்டகஞ் செய்த கொடியவனே! கடலைப் போன்ற தீவினை கட்கெல்லாம் நீ இருப்பிடமானுய். தேவர்கட்கெல்லாம்

இழிவுண்டாக்கினாய். மையலென்னுஞ் சேற்றில் மயங்கினாய். உன்னைக் கொல்லுதற்குப் பரம்பொருளே ஆனைமுகக் கடவுளாகத் தோன்றியிருக்கின்றார். நீ விரைவில் மாண்டொழியப் போகின்றாய். இறந்தொழியப் போகுஞ் சமயமாதலின் அளவு கடந்து துள்ளுகின்றாய். இனிமேலாயினும் ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளில் அடைக்கலம் புகுந்து உய்தற்காம் வழியைத் தேடக் கடவாய்'' என்று கூறினார். கபிலர் கூறியவற்றைக் கேட்ட கணன் கொதித்தெழுந்தான். தன்னுடைய வில்லை வளைத்து ஆனைமுகக் கடவுள்மீது பல கணைகளைச் செலுத்தினான். அவை ஆனைமுகக் கடவுள் மீது பட்டு நீறாயின. ஆனைமுகக் கடவுள் தம்முடைய இருக்கையை விட்டு எழவில்லை தம்முடைய கையிலேந்திய மழுவைப் பார்த்து, "நீ தேவர்கள் முதலியோரை வருத்துகின்ற இத் தீயோனுடைய தலையை அறுத்து மீளக் கடவை' என்று திருவாய் மலர்ந்தருளினார். அம் மழுவானது நஞ்சைப் போலச் சீறிக்கொண்டு வந்தது. அதனாற் பன்னிரண்டு கதிரவர்களுங் கரிந்தார்கள். எட்டுத் திக்குகளும் ஒளி வடிவாயின. எட்டுக் குலமலைகளும் எரிந்துபோயின. நிலம் வெடித்தது; கடல் முழுவதும் வறண்டுவிட்டது. அண்டங்களெல்லாம் நொறுங்கின. உலகம் நீறுகிவிட்டது. அஞ்சும்படியாக வந்த மழுப்படை கணனுடைய முடியை அறுத்து வீழ்த்திக் கங்கையில் நீராடி ஆனைமுகக் கடவுளுடைய திருக்கையை மீண்டும் அடைந்தது. தேவர்கள் மலர்மாரி சொரிந்தார்கள்.

## அபிசித்து செய்தியறிதல்

ஆனைமுகப் பெருமான் ஏவிய மழுப்படையானது நொடிப் பொழுதில் கணராசனைக் கொன்றொழித்ததைக் கண்ட யாவரும் மிகுந்த வியப்படைந்தார்கள். மழுப்படையானது கணனுடைய உயிரை வாங்கச் சென்ற பொழுது அஞ்சியோடிய அமைச்சர்கள் கணனுடைய தந்தையாகிய அபிசித்து மன்னனிடம் போய்க் கணன் மாண்டொழிந்த செய்தியைக் கூறினார்கள். அதனைக் கேட்ட அபிசித்துத் தன்னுடைய

உறவினர்களுக்கெல்லாஞ் செய்தியைத் தெரியப்படுத்தினுன். அவர்களோடு அழுது புலம்பி வருந்தினுன். அமைச்சர்கள் அபிசித்துவுக்குத் தெளிவுரை கூறித் தேற்றினுர்கள். அபிசித்துப் போர்க்களத்திற்குப் போய்த் தன்னுடைய மகன் பிணத்தைப் பார்த்துப் புலம்பினுன். பிறகு தன்னுடைய மகனுக்குச் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளையெல்லாஞ் செய்து உடலை எரியூட்டி விட்டுத் தன்னுடைய இருப்பிடத்திற்குத் திரும்பினுன்.

### சிந்தாமணியைக் கொடுத்தல்

சிந்தாமணியினுல் தன் மகனுக்கு ஏற்பட்ட அழிவை யறிந்த அரசன் அம்மணியைக் கபிலரிடம் சேர்த்துவிட எண்ணினுன். மறுநாள் சிந்தாமணியை எடுத்துக்கொண்டு அமைச்சர்களோடு கபிலருடைய இருப்பிடத்திற்குச் சென்ருன். சித்திபுத்திகளோடு எழுந்தருளியுள்ள ஆனைமுகக் கடவுளின் திருவடிகளின் முன்பு சிந்தாமணியை வைத்தான். பன்முறை பணிந்தெழுந்தான். பிறகு கபில முனிவரையும் போற்றிப் பரவினுன். அங்கு தன்னுடைய பெயரர்களாகிய சுலபனையுஞ் சூலபாணியையுங் கண்டு மகிழ்ந்தான். அவர்களை அறநெறி தவருத அரசியலில் நிறுத்தியருள வேண்டுமென்றுந் தனக்கு வீடுபேற்றினைத் தந்தருள வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டான்.

### ஆனைமுகக்கடவுள் அருள்புரிதல்

அபிசித்து மன்னன் கூறியவற்றைக் கேட்டு ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்தார். தம்மிடம் அடைக்கலம் புகுந்திருந்த கணனுடைய மக்களுக்கு அருள் புரிந்தார். அபிசித்து மன்னன் தன்முன் வைத்த சிந்தாமணியை எடுத்துக் கபில முனிவருடைய கையிலே கொடுத்தருளினுர். கபில முனிவர் ஆனைமுகக் கடவுளைத் தொழுதார். அம்மணியினை ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளிலே வைத்துப், "பெருமானே! தேவரீர் எல்லா உயிர்களும் உய்யுமாறு இங்கு தோன்றிச் சிந்தாமணியைக் கவர்ந்த கணராசனை யழித்து அதனை

மீளவும் எனக்களித்தபடியினுல் தேவரீரைச் சிந்தாமணி விநாயகர் என்று எல்லாரும் போற்றுதல் வேண்டும். இம் மணியினைத் தேவரீர் அணிந்தருளுதல் வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டார். அபிசித்து மன்னனும் அவ்வாறே வேண்டிக் கொண்டான். ஆனைமுகப் பெருமான் எல்லோரும் மகிழுமாறு சிந்தாமணியினைத் தம்முடைய திருக்கழுத்திலே அணிந்தருளினுர். அப்பொழுது தேவர்கள் மலர்மாரி பெய்தார்கள். விண்ணுலக ஒலிக்கருவிகள் முழங்கின. சிந்தாமணியை அணிந்த காரணத்தினுல் அவ் விநாயகருக்குச் சிந்தாமணி விநாயகர் எனவும், கபில முனிவருடைய இருப்பிடத்தில் தோன்றிய காரணத்தினுல் கபில விநாயகர் எனவும், மலர்ந்த முகத்தோடு எழுந்தருளிய படியினுல் சுமுக விநாயகர் எனவும் திருப்பெயர்கள் உண்டாயின. அபிசித்து மன்னன் தன்னுடைய பெயரர்களோடு தன்னுடைய நாட்டிற்குத் திரும்பினுன். நாட்டை இருவருக்கும் பங்கிட்டுக் கொடுத்து அரசாட்சி செய்யச் செய்தான். தான் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தான்.

### ஆனைமுகக் கடவுள் மறைதல்

கபில முனிவர்க்கு அருள் செய்ய எழுந்தருளிய ஆனைமுகக் கடவுள் கபில முனிவருக்குப் பலவகையான சிறப்புக்களையும் வழங்கி அவ்விடத்திலிருந்து மறைந்தருளினுர். கபில முனிவர் அவ்வானைமுகக் கடவுளைத் தம்முடைய உள்ளத்திலே பிணித்துக் கொண்டார்.

### சிந்தாமணி வரலாறு

சவுனகர் முதலியோர் சூதமுனிவரைப் பார்த்துக் "கபில முனிவருக்குச் சிந்தாமணி எவ்வாறு கிடைத்தது? அதனைக் கூறியருளுதல் வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர். சூதமுனிவர் சொல்லலானுர்: "முன்னெரு காலத்தில் தேவேந்திரன் நிலவுலகிலுள்ள புதுமைகளைப் பார்க்க விரும்பினுன். பார்த்துவிட்டுத் திரும்பிச் செல்லும்போது அவனுக்குப் பசியுந் தாகமும் மேலிட்டன. கபில முனிவர் இருப்பிடத்திற்குச் சென்றுன். கபில முனிவரைப் பணிந்து

நின்ருன். தவத்திலிருந்த கபிலமுனிவர் தேவேந்திரனைப் பார்த்து, "இங்கு உண்டுவிட்டுச் செல்வாயாக" என்று கூறித் தேவேந்திரனுக்கும் அவனேடிருந்த மற்றவர்கட்கும் சிவபெருமானுடைய திருவருட் டுணைகொண்டு அரிய விருந்து செய்தார். அவ்விருந்து இந்திரன் தன்னுலகில் உண்டறியாத புதுமை வாய்ந்ததாக விளங்கியது. அவ் விருந்தினுல் மனமகிழ்ந்த அவன் இம் முனிவருக்கு நாமும் ஏதேனும் கைம்மாறு செய்யவேண்டுமென்று விரும்பினுன். திருமாலால் இந்திரனுக் களிக்கப்பட்ட சிந்தாமணி என்னுந் தெய்வமணி இந்திரனுடைய பொருளறையில் இருந்தது. அம்மணி நினைத்தவைகளை யெல்லாம் நினைத்த போதே கிடைக்கச் செய்ய வல்லது. இந்திரன் அம்மணியை உடனே கொண்டு வரச் செய்து அதனைக் கபில முனிவருக்குக் கொடுத்து விட்டுத் தான் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு சென்ருன். அம்மணியைப் பெற்ற கபில முனிவர் இன்றியமையாத சமயங்களில் அதனைப் பயன்படுத்திக்கொண்டு தாம் தம் முடைய உயிரினுஞ் சிறந்ததாக அதனைப் பாதுகாத்து வைத்துக்கொண்டிருந்தார்" என்று கூறி முடித்தார். இதனைக் கேட்ட சவுனகர் முதலிய முனிவர்கள் கபிலருக்குச் சிந்தாமணி கிடைத்த செய்தியை அறிந்து கொண்டனர்.

## 70. கசானன விநாயகர்

### சிந்தூரன்

முன்ெருரு கற்பத்தில் நான்முகன் சத்தியலோகத்தில் இருந்தபொழுது கொட்டாவி விட்டனன். அக் கொட்டாவி யில் இருந்து ஓர் ஆடவன் தோன்றினுன். தோன்றிய உடனே மூவுலகங்களினும் குருதிமாரி பொழிந்தது. அவ் வாடவன் செம்பரத்தம் பூவைப் போன்ற சிவந்த நிறத்தினை யும் பத்துத் திக்குகளினுஞ் சென்று வீசும்படியான இயற்கை மணம் வாய்ந்த வடிவத்தினையும் விண்வரையில் ஓங்கிப் பருத் திருக்கும் உடலினையும் காமனைப் போன்ற கட்டழகினையும் பத்துத் தலைகளையும் உடையவனுய் நான்முகனுக்கு முன்னே

நின்றான். அவ்வாறு நின்றவனை நான்முகன் பார்த்து, "நீ யார்?" என்று கேட்டான். அதற்கு அவன், "நான் உன்னுடைய முகத்திலிருந்து தோன்றியமையால் உனக்கு மகனாவேன். நீ ஒன்றுமறியாதவனைப் போற் கேட்டது மிகவும் புதுமையாக விருக்கிறது. நான் வாழ்வதற்கு நீ இடத்தைக் கூறுவாயாக" என்று கேட்டான். நான்முகன் அவனுடைய தோற்றத்தையுஞ் செருக்கையுங் கண்டு அச்சங் கொண்டான். அவனைப் பார்த்து 'மகனே! நீ சிவப்பு நிறமுடையவனாக இருத்தலின் உன்னுடைய பெயர் சிந்தூர னாகும். மூவுலகையுஞ் சுற்றிப் பார்த்து நீ தங்கியிருத்தற்குத் தக்க இடத்தினைத் தேர்ந்தெடுத்துக் கொள்வாயாக! உலகம் முழுவதும் உனது வழிப்பட்டதாகுக. திருமால் முதலிய தேவர்களாலும் உனக்கு எக்காலத்திலும் எத்தகைய அச்சமும் இல்லாதொழிக நீ சினங்கொண்டு எவரையேனும் உன்னுடைய கைகளால் தழுவுவாயானால் உடனே அவர்களுடைய உடல் நீறாகுக. தேவர்களால் விடப்படுகின்ற படைகளால் உனக்கு அழிவு உண்டாக மாட்டாது. இச் சிறப்புக்களையெல்லாம் நான் உனக்கு அன்பினால் கொடுத்தனவென்று கொள்க' வென்று சொன்னான். நான்முகன் கொடுத்த சிறப்புக்களை யெல்லாம் பெற்றுக்கொண்ட சிந்தூரன் நான்முகனைப் பார்த்து "எந்தையே! தவம், தானம், நோன்பு முதலியவைகளில்லாத எனக்கு எல்லா மேன்மைகளையும் எளிதிற் கொடுத்தருளினாய். இதற்கு யான் மிகுந்த மகிழ்ச்சி யடைகிறேன்" என்று கூறி விடைபெற்றுக்கொண்டு நிலவுலகத்தினை நோக்கிப் புறப்பட்டான்.

வளர்த்தகடா மார்பிலே பாய்ந்தது

புறப்பட்டுச் செல்லுகின்றவனுக்கு உள்ளத்தின்கண் ஐயமொன்று எழுவதாயிற்று. தம்முடைய தந்தை தவம் தானம் முதலிய எதுவுஞ் செய்யாத நமக்குப் பல சிறப்புக்களைக் கொடுத்தருளினார். இந்தச் சிறப்புகளெல்லாம் பொய்யோ மெய்யோ என்பதே அவ்வையமாகும். ஆகவே ஆராய்ந்து பார்த்து உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டும் என்று எண்ணினான். மீளவும் நான்முகன் இருக்கு

மிடத்திற்கு வந்தான். ஏழுகடல்களும் நிலைகலங்கவும், உலகப்பிண்டங்கள் பிளக்கவும், மூன்றுலகங்களும் நடுங்கவும், விண்மீன்கள் உதிரவும், கற்பங்களெல்லாங் கலங்கவும், பறவைகளெல்லாம் அழியவும், மரங்களெல்லாம் வீழவும் பேராரவாரஞ் செய்து கொண்டு நான்முகனைத் தன்னுடைய கைகளால் தழுவிப் பிடிக்கத் தொடங்கினான். சிந்தூரனுடைய செயலைக் கண்டு நான்முகன் அஞ்சினான். அவனைப் பார்த்து, "அட அறிவற்றவனே! நீ இத்தகைய கொடியவனென்றறியாமல் உனக்குப் பல சிறப்புக்களைக் கொடுத்து விட்டேன். என்னையே கொல்லத் துணிந்தாயல்லவா? இனிமேல் உன்னைக் கொல்வதற்கு ஆனைமுகக் கடவுள் தோன்றியருள்வார்" என்று வசவுரை வழங்கினன். நான்முகன் நவின்றதைக் கேட்ட சிந்தூரன் மிகுந்த சினங்கொண்டான். மீளவும் ஒரு பெருநகை புரிந்தான். அதனை நான்முகன் கண்டு அஞ்சினான். அலறிப் பெருமூச் செறிந்தான். அங்கிருந்து ஓடி வைகுண்டத்தை யடைந்து திருமாலடிகளில் வீழ்ந்தனன்.

## நான்முகனும் திருமாலும்

திருமால் நான்முகனைப் பார்த்து, "ஓ நான்முகனே! உனக்கு நேர்ந்த தொல்லை யாது?" என்று உசாவினார். நான்முகன் நிகழ்ந்த செய்திகளை யெல்லாம் திருமாலுக்குக் கூறினான். அந்தச் சிந்தூரனை எவ்வாறேனும் அழித்தொழித்துத் தன்னைப் பாதுகாத்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். நான்முகன் நவின்றவைகளைக் கேட்ட திருமால் உள்ளம் வருந்தினார். ஆய்ந்தோய்ந்து பாராது செய்கிற காரியங்கள் இவ்வாறுதான் தீமையைப் பயக்கும் என்று கூறினார். மேலும் நான்முகனைப் பார்த்து, "இனிமேல் உன்னாலும் என்னாலும் அவனைத் தொலைக்க முடியாது. வினைவசத்தால் வருந் தீமைகளை எவராலும் விலக்கமுடியாது. நீ தேவர்களனைவருக்குந் தீமையை உண்டாக்கிவிட்டாய். மறைநெறிகளெல்லாம் அழிந்தொழியுமாறு செய்தாய். நம்மைப் போன்றவர்கட்கெல்லாம் மிகுந்த தாழ்வை உண்டாக்கி விட்டாய்" என்று கூறினார். இருவரும்

இவ்வாறு உரையாடிக்கொண்டிருக்கும்போது சிந்தூரனும் அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். சிந்தூரன் நான்முகனையுந் திருமாலையும் பார்த்துக் களிப்படைந்தான். அவன் திருமாலைப் பார்த்து, "ஓ திருமாலே! நீ என்னோடு போர் செய்ய வராமற் போவாயெனின், உன்னையும் உன்னை யடுத்திருக்கிற நான்முகனையும் இப்பொழுதே சாம்பராக்கி விடுவேன்" என்று சொன்னான். சிந்தூரன் செய்தியைக் கேட்ட திருமாலும் உள்ளம் நடுங்கினார் அந்நடுக்கம் வெளியில் தோன்றாதபடி மறைத்துக்கொண்டார். நல்ல மொழிகள் நவின்று இவனிடமிருந்து பிழைக்கவேண்டுமென்று முடிவு செய்தார்.

### சிவபிரானிடம் செல்ல விடுத்தல்

திருமால் சிந்தூரனைப் பார்த்து, "ஓ வீரனே! ஒப்பானவர் களோடு, போர் செய்யவேண்டுமே யல்லாமல் எளியவர் களோடு போர் செய்யக்கூடாது. நானோ ஓர் ஆலிலையில் ஒன்றிக் கொண்டிருக்கிறவன். இந் நான்முகனோ வண்டேறக் கூடத் தாங்காத தாமரை மலரில் வசித்திருப்பவன். நான் உலகங்களைக் காப்பவன். நான்முகன் உலகங்களைப் படைப் பவன். நாங்களிருவரும் மிக எளியவர்களாகையால் உன்னோடு போர் செய்யமாட்டோம். நீயோ எல்லோரையும் வெல்லத் தக்க பேராற்றல் படைத்தவன். உன்னோடு போர் செய்வதற்குத் தகுதியானவர் சிவபெருமான் ஒருவர் தாம். அவர் உலகங்களையெல்லாம் அழித்தொழிப்பவர் இதுவரை யில் பல பேர்களை அழித்தொழித்திருக்கின்றார். நாங்களிரு வரும் ஆணவங்கொண்டு துள்ளுகிறபொழுதெல்லாம் அவர் தாம் எங்களை வந்து அடக்குகின்றார். மலைகளிலெல்லாம் பெரிய மகாமேருமலையை அவர் தம்முடைய கையில் வில்லாகப் பிடித்திருக்கின்றார். மலைகளெல்லாம் ஒன்றாய்த் திரண்டாற் போன்ற தோள்களுடையவர். அச் சிவபெருமானுடைய மனைவியோ மலைகளுக்கெல்லாம் அரசனான இமயமலை யரசனுடைய மகள். அச் சிவபெருமான் வீற்றிருக்குமிடமோ வெள்ளிமலை. இத்தகைய பல சிறப்புக்களினால் அவர் எல்லோருக்கும் தலைவராக விருக்கின்றார். ஆகவே அவரோடு

போர் செய்து உன்னுடைய ஆண்மையைக் காட்டுவையானல் உனக்குப் புகழுண்டாகும்'' என்று கூறினர்.

சிந்தூரன் கைலை சேர்தல்

திருமால் செப்பிய எல்லாவற்றையுஞ் சிந்தூரன் கேட்டான். கள்ளைக் குடித்து வெறிகொண்டவனைப் போலத் துள்ளிக்குதித்தான். ஊழிக்காலத் திடியேற்றைப் போல ஆரவாரஞ் செய்தான். திருக்கைலையை நோக்கிப்பாய்ந்தான். சிந்தூரன் சென்றபோது சிவபிரான் யோகத் திருந்தமையால் சிந்தூரன் வந்ததை உணர்ந்துகொள்ளவில்லை. உமாதேவி சிந்தூரனுடைய நிலையைக் கண்டு அஞ்சினள். உமா தேவியைக் கண்ட சிந்தூரன் அவளைப் பிடிக்க ஓடினன். சிவபெருமான் புறநாட்டங்கொண்டார். சூலப்படையை ஏந்திச் சிந்தூரனுக்கு முன்னே சென்ருர். அச்சமயத்தில் ஆனைமுகக் கடவுள் இருவருக்கும் நடுவில் அந்தணளராகத் தோன்றினர். அவர்களிருவரையும் பார்த்து, "நீங்கள் போர் செய்து உங்களுடைய ஆற்றலைக் காட்டுங்கள் பார்ப்போம்'' என்று கூறி இருவருக்கும் நடுவில் தம்முடைய பரசுப்படையை நட்டுவிட்டுத் தாம் ஒரு பக்கத்தில் நின்று பார்த்துக்கொண் டிருந்தார் இருவரும் நீண்ட நேரம் போரிட்டார்கள். இவ்வாறு போரிட்டுச் சிவபெருமானை வெல்ல முடியாது என்று எண்ணிய சிந்தூரன் அவரைத் தம்முடைய கைகளால் தழுவச் சென்ருன். அப்பொழுது பரசுப்படை மேலெழும்பிச் சிந்தூரனைத் தடுத்தது. அதனை மீறிச் செல்லச் சிந்தூரனல் இயலவில்லை. அப்பொழுது அந்தணக்கோல ஆனைமுகக் கடவுள் சிந்தூரனைப் பார்த்து, "இனிமேல் நீ சிவ பெருமானுடைய சூலப்படையினல் நீருவை. கால காலராகிய சிவபெருமானையும் பகைக்கலாமோ?'' என்று திருவாய் மலர்ந்தருளினர். இதனைக் கேட்டுச் சிந்தூரன் அச்சங் கொண்டான். இனிமேல் நாம் இங்கிருந்தால் அழிவதற்கைய மில்லை. இவ் வந்தணன் கூறிய சொல் உறுதியாகும் என்று எண்ணினன். உடனே அவ்விடத்தை விட்டு நீங்கி நில வுலகத்திற்குச் சென்ருன்.

### ஆனைமுகக் கடவுளும் அம்மையாரும்

சிந்தூரன் சென்ற பிறகு உமாதேவியார் அந்தணக் கோலத்துடன் வந்த ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, 'ஐயா ! எதிரே வந்த பகைவனை எளிதாக விரட்டிவிட்ட தாங்கள் யார் ?'' என்று கேட்டனர். ஆனைமுகக் கடவுள் இக் கேள்விக்கு வாயினால் மறுமொழி கூறவில்லை. சித்தி புத்தி களோடு அம்மையாருக்குக் காட்சி தந்தனர். ''அம்மையே நாம் இந்தச் சிந்தூரனை அழித்தற் பொருட்டு உம்முடைய திருவயிற்றிற் பிள்ளையாராகப் பிறப்போம்'' என்று கூறி மறைந்தார். இதனை உமாதேவியார் கேட்டுக் களிப்புற் றிருந்தார்.

### சிந்தூரன் தொல்லை

நிலவுலகத்தை நோக்கிச் சென்ற சிந்தூரன் பல சோலைகள், ஆறுகள், காடுகள், நகரங்கள், நாடுகள் முதலிய வற்றை அழித்தொழித்தான், பல வீரர்களும் அந்தணர்களும் முனிவர்களும் சிந்தூரனால் தழுவப்பட்டு அழிந்தொழிந்தனர். மறையொழுக்கங்கள், தவங்கள், தானங்கள், வேள்விகள், அறங்கள் முதலிய யாவுங் கெட்டொழிந்தன. இந்திரன் முதலிய தேவர்கள் வேள்வியிற் பெறும் உணவு கிடைக்காமல் திண்டாடினார்கள். நிலவுலகம் முழுவதையும் பாழ்படுத்திய சிந்தூரன் மீளவும் தேவருலகைப் பாழ்செய்யச் சென்றான். தேவர்கள் அஞ்சினார்கள். நான்முகனிடஞ் சென்று முறை யிட்டார்கள். நான்முகன் தானும் மிகுந்த துன்பத்துளழுந்தி னான். இனிமேல் இதற்கு யாது செய்யலாம் என்று உள்ளங் கலங்கினான். பிறகு ஒருவாறு தெளிவடைந்து ஆனைமுகக் கடவுளைப் பலவாறு புகழ்ந்து தேவர் முதலியோருடைய தொல்லையைப் போக்கியருள வேண்டுமென்று முறையிட்டுக் கொண்டான்.

### ஆனைமுகக் கடவுள் அருள்

ஆனைமுகக் கடவுள் நான்முகன் முதலியோர் மீது திருவருள் சுரந்தார். தேவர்களைப் பார்த்துத், ''தேவர்களே!

உங்களுடைய போற்றுதலுக்கு யாம் உளம் மகிழ்ந்தோம். உமாதேவியினுடைய வயிற்றிற் பிள்ளையாகப் பிறந்து சிந்தூரனை அழித்தொழித்து உங்களுடைய துன்பத்தைப் போக்குவோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

### ஆனைமுகக் கடவுள் தோற்றம்

பிறகு ஆனைமுகக் கடவுள் உமாதேவியாருடைய வயிற்றிற் கருவாயினர். உமாதேவியாருடைய விருப்பப்படி சிவபிரான் உமாதேவியாரைப் பரியலி என்னும் இடத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றூர். அங்கு உமாதேவியார் இனிது மகிழ்ந்து தங்கியிருந்தார். சிவபெருமான் யோகத்தி லிருந்தார். ஒருநாள் கயமுகாசுரன் என்பவன் அந்த இடத்திற்கு வந்து சிந்தாமணியால் அமைக்கப்பட்டிருக்கிற புதுமையான மண்டபத்தைத் தன்னுடைய கொம்பினுல் முட்டி யெடுத்து நிலத்தில் விழத் தள்ளினுன். இந்தக் கயமுகாசுரன் சிவபிரானுக்கு அன்பன். இவ்வாறு கூறிக் கொண்டு வந்த சூதமுனிவரைச் சவுனகர் முதலியோர் பார்த்துச், "சிவபிரானுக்கு அன்பனுக உள்ளவன் யானை முகத்தையுடைய அசுரன் ஆனதற்குக் காரணம் யாது?'' என்று உசாவினர்.

### கயமுகாசுரன் வரலாறு

சூதமுனிவர் சொல்லலானுர்: ''முன்னெரு காலத்தில் மயேசுரன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். நான்கு மறைகளையும் ஓதியுணர்ந்தவன். பதினெண் புராணங் களையும் வழுவறக் கேட்டுத் தெளிந்தவன். அறநூல்களை அறிந்தவன். திருநீறு, சிவகண்மணி முதலியவற்றை அணிந்து முக்காலத்தினும் சிவபூசை செய்பவன். அவனிடம் மெய்யறிவு சிறந்து விளங்கியது. அவன் மனு முறைப்படி அரசாட்சியை நன்கு நடத்திக்கொண்டிருந்தான். ஒருநாள் பிருகற்பதி தேவர் அவ் வரசனிடத்திற்கு வந்தார். அவ் வரசன், அவரை எதிர்கொண்டு வரவேற்றுப் போற்றினுன். பணிந்தெழுந்து நின்ருன். பிருகற்பதி தேவர் அரசனுடைய வழிபாட்டிற்கு மனமகிழ்ந்தார். அரசனைப் பார்த்து, ''அரசனே!

நாம் உன்னுடைய ஆண்மை, புகழ், நேர்மை, ஊக்கம், பண்பு முதலிய நல்லியல்புகளேக் கேள்வியுற்றுக் கண்டு போகுமாறு இங்கு வந்தனம். நாம் கேள்விப் பட்டதைவிடப் பன்மடங்கு சிறப்பாக விளங்குகின்றன உன்னுடைய குண நலன்கள். நம்முடைய அடிகளில் வணங்கிய உன்னுடைய தலையானது முனிவர்கள், தேவர்கள், பெரியோர்கள் முதலியவர்களால் வணங்கப் பெறுஞ் சிறப்பினையடைக'' என்று அருள்புரிந்தார். அதனை அரசன் கேட்டு அளவற்ற மகிழ்ச்சி கொண்டான். பிருகற்பதியை பார்த்து, ''அடிகாள்! தேவரீர் கூறியருளிய திருவாக்கு எப்பொழுது பலிக்கும்?'' என்று உசாவினன். பிருகற்பதி தேவர் அரசனைப் பார்த்து, ''அரசனே! நீ எப்பொழுது யானையிடத்திற் பிறக்கின்றனையோ அப்பொழுது நமது வாக்குப் பலிக்கும். உடனே சிவபிரானுடைய திருவருளால் வீடு பேற்றினையும் அடைவாய்'' என்று கூறி விட்டு எழுந்து சென்றார். பிறகு ஒரு காலத்தில் அரசன் தன்னுடைய நாடுகளையெல்லாஞ் சுற்றிப் பார்த்தற்பொருட்டு அளவற்ற படைகளோடு பட்டணத்திலேயிருந்து புறப்பட்டுச் சென்றான். அப்பொழுது அரசனுக்கெதிரே நாரதமுனிவர் வந்தார். பிருகற்பதியின் வாக்குப் பலிக்கும் காலம் நேரிட்டது. அரசன் எக்காரணத்தினலோ நாரதமுனிவரைப் போற்றி வழிபடாமற் சென்றான். அதனல் சினங்கொண்ட நாரதர், ''ஓ அரசனே! நீ காட்டில் சுற்றித் திரிகிற யானை போல என்னை வணங்காது சென்றமையால் இப்பிறவி முடிந்த பின்பு யானைக் கூட்டத்தினுள் யானை முகனாகப் பிறந்து கயமுகாசுரன் என்னும் பெயரோடு சிலகாலஞ் சுற்றித்திரிக. பிறகு சிவபெருமானுடைய கையினல் உன்னுடைய தலை அறுபட்டொழிக. மேலும் அப்பெருமானுடைய திருவருளினாலே திருக்கைலையின்கண் மேன்மை பெறுக'' என்று வசவுரை வழங்கிச் சென்றனர். இதனை அரசன் கேட்டுப் பிருகற்பதியின் வாக்குக்கிணங்க இவ்வசவுரை அமைந்திருக்கிறது என்று எண்ணிக்கொண்டு சென்றான். மேலும் பல காலம் மனித உடலோடு உலகத்தில் வாழ்ந்திருந்தான். வாணாள் முடிந்த பிறகு பிரியலி என்னுங் காட்டிலிருந்த யானையின்பால் யானைமுகனாகப் பிறந்தான். அதனல்

கயமுகாசுரன் என்று பெயர் உண்டாகியது. பழம்பிறப்பின் அறிவு அரசனுக்கு நீங்காமல் இருந்தது. மேலும் சிவபிரானிடத்துள்ள அன்பும் அப்படியே இருந்தது. பிருகற்பதியின் வாக்குப் பலிக்கும் பொருட்டே சிவபெருமான் எழுந்தருளிய மண்டபத்தைத் தன்னுடைய கோட்டினுல் முட்டியிடித்தான். அவனுடைய தலை முனிவர்கள் முதலிய பெரியோர்களால் பணியப் பெற்றிருந்த சிறப்பையுங் கூறுகிரேம்.

கயமுகாசுரன் சிவபெருமான் அமர்ந்திருந்த மண்டபத்தைத் தள்ளியதும் அங்கிருந்த தேவர்கள் முதலியோர் அச்சமடைந்தார்கள். சிவபெருமான் சினங்கொண்டார். கயமுகாசுரன் மீது தம்முடைய சூலப்படையைச் செலுத்தினர். அப்படை அவனுடைய உடலிற் பாய்ந்தது. அதனுல் அவன் தளர்ச்சி யடைந்து, "சிவாய நம" என்று கூறிக்கொண்டு நிலத்தில் வீழ்ந்தான். இதனைக் கேட்டதும் சிவபெருமானுக்கு அவனிடத்தில் அன்புண்டாகியது. அவர் அவனைப் பார்த்து, "உனக்கு வேண்டிய மேன்மைகளைக் கேள். கொடுத்தருளுவோம்" என்று திருவாய் மலர்ந்தருளினுர். கயமுகாசுரன் தனக்கு வீடு பேற்றைக் கொடுக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டான் இறைவனும் அவ்வாறே கொடுத்தருளினுர். அவனுடைய தோலைத் தாம் உடையாக அணிந்துகொண்டார். கயமுகனுடைய தலையைத் தம்முடைய அன்பன் தலையென்று பக்கத்திலே வைத்துக்கொண்டார்.

### கருவைச் சேதித்தல்

கயமுகாசுரனுல் தள்ளப்பட்ட மண்டபத்தைச் சிவகணங்கள் ஒழுங்கு செய்தன. சிவபிரானும் உமாதேவியும் மனமகிழ்ந்து வழக்கம்போல் திருவிளையாடல் செய்து கொண்டிருந்தார்கள். சிந்தூரன் எல்லா உலகங்களினும் சுற்றித் திரிந்தான். எதிர்த்து வந்தவர்களையெல்லாந் தழுவி நீருக்கினுன். மீளவுந் தன்னுடைய இருப்பிடத்திற்கு வந்துமிகுந்த ஆணவங்கொண்டிருந்தான். நான்முகன், திருமால், உருத்திரன் என்னும் மூவரும் நமக்குத் தோல்வியடைந்

தார்கள். இந்திரன் முதலியோர் நம்மைக் கண்டவுடன் அஞ்சிப் பதுங்கினுர்கள். நம்முடைய பேராற்றல் மிகவுஞ் சிறந்து விளங்குகின்றது. நமக்கு ஒப்பாவார் எங்குமிலர் என்று தனக்குத் தானே கூறி இறுமாப்படைந்திருந்தான். அப்பொழுது உருவற்ற வாக்கு ஒன்று, "ஓ சிந்தூரா! தன்னைத் தானே புகழ்ந்து கொள்வோனுக்கு உடனே அழிவு வரும். உனக்கு அழிவு காலம் நெருங்கியபடியினுல் உன்னை நீயே புகழ்ந்து கொள்ளுகிருய். நிலையில்லாத உடலை நிலையாகக் கருதி ஆணவங்கொண்டு குதிக்கின்ருய். உன்னைக் கொல்வதற்கு உமாதேவியின் வயிற்றில் ஆனைமுகக் கடவுள் குழந்தையாகி வளருகின்றனர். இன்னுஞ் சில காலத்திற்குள் உன்னுடைய பெயரும் இல்லாமல் ஒழிந்துபோவாய்" என்று கூறி அடங்கியது. இதனைச் சிந்தூரன் கேட்டு உள்ளங் கலங்கினுன். அந்தோ நமக்கு அழிவுநேரிடும் போலிருக்கிறதே என்று உள்ளங் கலங்கினுன். நம்மைக் கொல்ல வளருகின்ற கருவை இப்பொழுதே அழித்துத் தொலைக்க வேண்டுமென்று முடிவுசெய்தான். கயிலை மலைக்குப் போய் உமாதேவியைத் தேடிப்பார்த்தான். அங்கு இல்லாதபடியினுல் பிறவிடங்களினுந் தேடினுன். பிரியலி காட்டிற்குள் நுழைந்து அதன் நடுவில் இருந்த பூங்காவில் உமாதேவியைக் கண்டான். தகுந்தசமயம் பார்த்து காற்று வடிவமெடுத்து உமாதேவியின் வயிற்றில் புகுந்தான். அங்கு வளருகின்ற குழந்தையின் தலையை அறுத்து வெளியே கொண்டுவந்தான். விந்த மலையை அடுத்துள்ள நருமதையாற்றின் பக்கத்திலே போட்டு விட்டுத் தன்னுடைய இருப்பிடம் போய்ச் சேர்ந்தான். ஆனைமுகக் கடவுளுடைய தலை விழுந்த இடம் பெரிய பள்ளமாகியது. அப்பள்ளம் கணேசர் குண்டம் என்று பெயர் பெற்றது. அத் தலையினின்றும் பெருகிய குருதி யானது ஆருக வோடிய படியால் அது சோணநதி என்னும் பெயரோடு விளங்கலாயிற்று. கணேச குண்டத்திற்கு அண்மையில் இருக்கிற சிலைகளனைத்தும் அக்குண்டத்திற் சரிந்து வீழ்ந்து ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவத்தை யடைந்து உலகம் முழுவதும் வழிபடத்தக்க சிறப்புடன் விளங்குகின்றன. அந்த இயற்கை வடிவங்களை யெடுத்து

எவரேனும் முறைப்படி வழிப்பட்டு வருவராயின், அவர்கள் விரும்பியவைகளெல்லாங் கைகூடும். சிந்தூரன் செய்த கொடிய செயல் சிந்தூரனுக்கும் கருவாகிய வளருகிற ஆனைமுகக் கடவுளுக்குந் தெரியுமேயல்லாமல் வேறு யாருக்குந் தெரியாது. உமாதேவியார் கூட இச்செயலினை உணரார். ஆனைமுகக் கடவுள் தம்முடைய தலைபோயும் கருப்பத்தில் நன்றாகவே வளர்ந்து கொண்டிருந்தார்.

### ஆனைமுகக் கடவுள் தோற்றம்

உமாதேவியார்க்குப் பேறுகாலம் நெருங்கியபடியால் சிவபெருமான் உமாதேவியாரைத் திருக்கைலைக்கு அழைத்துக் கொண்டு சென்றார். உரியகாலத்தில் பிள்ளைப் பேறு உண்டாயிற்று. ஆனைமுகக் கடவுள் சித்திபுத்திகளோடு உமாதேவியார் முன் தோன்றினார். "நாம் முன் கூறியபடியே பிறந்தோம்" என்று கூறி மறைந்தருளினார்.

### உமாதேவியார் வருந்தல்

பிறகு உமாதேவியார் தலையற்ற குழந்தை யொன்று தமக்குப் பிறந்திருத்தலைக் கண்டு திடுக்கிட்டார். உள்ளம் வருந்திப் பதைபதைத்தார். "அந்தோ என்னுடைய மகனை யாரோ எடுத்துக் கொண்டுபோய்த் தலையை அறுத்து விட்டு என்முன் கொண்டுவந்து போட்டு விட்டார்களே" என்று புலம்பினர். பலவாறு வருந்தினர். சிவபெருமான் இச் செய்தியை உணர்ந்தார். நான்முகன் முதலிய தேவர்களை அழைப்பித்தார்.

### நான்முகன் உண்மை உணர்ந்தான்

நான்முகன் முதலிய தேவர்கள் திருக்கைலைக்கு வந்து கூடினார்கள். தலையற்ற குழந்தை பிறந்திருத்தலைப் பார்த்தார்கள். தேவர்கள் "தலையில்லாமற் குழந்தை பிறப்பது மிக விந்தை; இதனைக் கடலிலே போடவேண்டும்" என்று கூறினார்கள். அவ்வாறு கூறிய தேவர்களை நான்முகன் பார்த்துச் சினந்தான். தேவர்கள் அஞ்சினார்கள் நான்முகன்

இக்குழந்தை எங்கும் நிறைந்துள்ள கடவுளே என்று ஐயமில்லாமல் உணர்ந்தான். அவன் தலையற்ற குழந்தையைப் பார்த்து, ''ஓ அருட்கடலே! என்றும் உள்ளவராய் உலகங்களையெல்லாம் உண்டாக்கவல்ல தலைவராய், அடியேங்களுடைய தீவினைகளையெல்லாம் ஒழித்துத் துன்பங்களையெல்லாம் அழித்தொழிக்க வல்ல இறையவராய் ஒன்றும் பலவுமான வடிவமுடையராய் மனம் வாக்கு முதலியவைகளுக்கு எட்டாத பொருளாக விருக்கின்ற தேவரீர் இவ்வாறு தலையில்லாமற் பிறந்திருப்பதற்குக் காரணம் என்ன? அக்காரணத்தைக் கவலைக் கடலில் மூழ்கிக் கிடக்கின்ற அடியேங்கட்குத் தெரியப்படுத்தி யருளவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனன். திருமால் உண்மையை உணர்ந்துகொள்ளவில்லை. அவர் நான்முகனைப் பார்த்து, ''ஓ வாணி தலைவனே! உடலுக்குள்ள உறுப்புக்களில் முதன்மை பெற்றுத் திகழ்வது தலையாகும். தலையில்லாமல் பிறந்த குழந்தை உயிரோடிருக்குமோ'' என்று கூறினர். இதனைக் கேட்ட நான்முகன் சினங்கொண்டான். அவன் திருமாலைப் பார்த்து, ''நீர் தகாத மொழிகளைப் பேசுகிறீர். ஆணவ மலத்தில் அழுந்தித் தீராத மயக்கத்தினையுடைய சிறியோர்களாகிய நம்மைப் போல் முழுமுதற் பொருளாகிய கடவுளையும் எண்ணலாமோ! எங்கும் நிறைந்துள்ள பரம்பொருள் இக் குழந்தையாகும். முழுமுதல் தன்மையற்ற உம்மைப்போல் இக்குழந்தையையும் எண்ணிக் கொண்டீரோ? முன்பு சிவபிரானுடைய வில்லுக்கு நீர் நாணாக இருந்த காலத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் எல்லாரும் சிதலாக வந்து அந்நாணினை அறுத்தனர். அப்பொழுது அந்த நாணாக இருந்த நீர் உம்முடைய தலை அறுந்துபோக இறந்து போனீர்; அதைப்போலவும் உலகத்தில் தலையிழந்தவர்கள் உயிர் பிழைத்து வாழ மாட்டார்கள் என்பது போலவும் எல்லா உலகங்களையும் தோற்றுவித் தழிக்கவல்ல கடவுளாகிய இப்பரம்பொருளையுங் கூறலாமோ? கடவுளுடைய வடிவத்தில் ஓர் உறுப்பு இல்லாவிட்டால் அதனல் என்ன குறைவுண்டாகும்? உருவம் வேண்டும் வேண்டாம் என்னும் முறைமை கடவுளுக்கில்லை. தம்மை அண்டினேருடைய துன்பங்களைப் போக்கவல்ல

இவருடைய இயல்பை எவரும் உணரமாட்டார்கள். தேவர்களெல்லாந் தொழத் தலைமை பெற்றிருக்கின்ற நீரும் உணர்ந்து கொள்ளவில்லை. ஆசானுடைய பெருமையைப் பக்குவமற்றவர்கள் அறிவார்களோ?'' என்று கூறினன்.

தலையற்ற குழந்தையின் மொழி

நான்முகன் நவின்றவைகளை யெல்லாம் தலையற்ற குழந்தையாகவுள்ள கடவுள் கேட்டார். காதில்லாமலே கேட்ட அவர் வாயில்லாமலே மறுமொழி கூறலானர். "ஓ நான்முகனே! முன்காலத்திலே நாம் படைப்புத் தொழிலை உனக்குத் தந்தபோது நீர்ப்பெருக்கு ஒன்றில் உன்னல் யாம் எவ்வாறு காணப்பட்டோமோ அவ்வாறே இப்போது இறைவியிடத்தில் உன்னற் காணப்பட்டோம். ஆனல் தலையில்லாமல் காணப்பட்டதற்குக் காரணம் யாதெனில் அதனையுங் கூறுகின்றேம் கேள். எப்போதும் தீமைகளைச் செய்து வருகின்ற சிந்தூரனைக் கொல்லவும், உங்கட்கு அவன் செய்து வருகின்ற துன்பங்களைப் போக்கவும், மறைநெறிகளை மேலோங்கச் செய்யவும், உமாதேவிக்குப் பணிபுரியவும், நான்முகனுடைய வரத்தின் புகழ் பொய்க்காதிருக்கவும், இவ்வாறு இங்குத் தோன்றினம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர். அதனைப் பிருகற்பதிதேவர் கேட்டுத், "தாங்கள் எல்லா உலகங்களையும் காத்தருளத் தோன்றினீர்களாயின் தேவரீருடைய மேலான திருவடிவத்தை யாவருங் காணுமாறு காட்டி எங்களுடைய உள்ளத்திலிருக்கிற மயக்கத்தைப் போக்கி மகிழ்ச்சியை விளைவித்தருளவேண்டும்'' என்று சொல்லி வேண்டிக் கொண்டனர் ஆனைமுகக் கடவுள் மீண்டும் பிருகற்பதியைப் பார்த்து, "ஓ தேவ குருவே! முன்னளில் மயேசுரன் என்னும் அரசன் உன்னை மிகுந்த அன்போடு வணங்கியபோது நீ அவனுடைய தலைக்குக் கொடுத்த வரத்தினுல் பிறகு அவன் ஆனைமுக அசுரனுகப் பிறந்தான். சிவபிரானுடைய சூலத்தினுல் தலையறுபட்டுச் சாரூப பதவியைப் பெற்றிருக்கின்ருன். அவனுடைய தலையைச் சிவபெருமான் பாதுகாத்து வைத்திருக்கின்ருர். அல்லாமலும் அது நீண்ட

தும்பிக்கையோடு அழகாக இருக்கின்றது. அத் தலையைக் கொண்டுவந்து இந்த உடலிற் பொருத்துவீர்களாயின் யாம் ஆனைமுகக் கடவுளாவோம்'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

### நாரதர் கேள்வி

நாரதர் குழந்தையைப் பார்த்துத், ' தாங்கள் உமாதேவியிடந் தோன்றியது மெய்யேயாகும். தங்களுடைய தலையானது இடையில் அறுபட்டதாகக் காணப்படுகிறது. அது யாவரால் நேர்ந்தது என்பதனை எங்கட்குணர்த்தியருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். குழந்தை நாரதரைப் பார்த்து, ''ஓ தேவமுனியே! நாம் இறைவியினுடைய வயிற்றில் சூலாயிருக்கும்போது எட்டாந் திங்களில் சிந்தூரனுல் நம்முடைய தலை அறுக்கப்பட்டது. அத் தலை போடப்பட்ட இடத்திலிருக்கிற கற்களனைத்தும் நம்முடைய வடிவத்தினை அடையும் பொருட்டும் அதனை வழிபடுவோர் நற்கதி பெறும் பொருட்டுமான சீரியநிலை அமைந்துள்ளது. நாம் தலையறுபட்டு ஆனைமுகத்தினையடையும் பொருட்டு உருவிலி வாக்காகச் சிந்தூரனுக்குச் செய்தி தெரிவித்தோம். ஆகவே இந்நிலையை நாம்தான் நமக்குத் தேடிக்கொண்டோம். இனிமேற் சிந்தூரனைக் கொன்று உங்கட்கு நன்மையை விளைவிப்போம்'' என்று கூறியது.

### ஆனைமுகக் கடவுள்

எல்லாவற்றையும் நாரத முனிவர் கேட்டு மிகுந்த உவகையடைந்தார். மீளவுந் தெய்வக் குழந்தையைப் பணிந்தெழுந்து, ''பெருமானே! அந்த யானையின் தலையானது எங்களுடைய தலையினுல் தாங்கத் தக்கதன்று. அதனைக் கொண்டு வந்து தேவரீருடைய திருவுடலில் சேர்க்கத்தக்க ஆற்றல் அடியேங்கட்கு இல்லை. தேவரீரே அதனை வரச் செய்து பொருத்திக் கொள்ளுதல் வேண்டும்'' என்று கூறினர். அவ்வளவில் தலையற்ற அத் தெய்வக் குழந்தையானது மயேசுரன் என்கிற யானையின் தலை அங்கு

வரச்செய்து தம்முடைய திருவுடலிற் சேர்த்துக்கொண்டு ஆனைமுகக் கடவுளாக விளங்கியது. அக் கடவுளை அனைவருந் தொழுது போற்றினர். தத்தமக்கு வேண்டிய சிறப்புக்களைப் பெற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடங்கட்குச் சென்றனர்.

### விநாயக சதுர்த்தி

ஆனைமுகக் கடவுள் தோன்றியருளிய நாள் ஆவணித் திங்களின் பூர்வ பட்சத்துச் சதுர்த்தியாதலால் அந்நாளில் ஆனைமுகக் கடவுளை வழிபடுவோர் அளவற்ற பயனை யடைவார்கள்.

### நாரதர் தொண்டு

நாரத முனிவர் நிலவுலகத்திலிருக்கிற சிந்தூரனிடத் திற்குப் போய் அவனைக் கண்டார். அவன் இருக்கை முதலியன கொடுத்து நாரதரைப் போற்றி வழிபட்டான். பிறகு அவரைப் பார்த்துப், "புதுமையான செய்திகள் இருந்தால் கூறியருள வேண்டும்" என்று சொல்லி வேண்டிக் கொண்டான். நாரத முனிவர் சிந்தூரனைப் பார்த்து, "ஓ சிந்தூரனே ! திருக்கைலையில் உமாதேவியாருடைய வயிற்றில் தலையில்லாத குழந்தையொன்று பிறந்தது. அது சிவபிரான் வைத்திருந்த யானைத் தலையைத் தன்னுடைய உடலிற் பொருத்திக்கொண்டு உயிர் பிழைத்தெழுந்தது. அக் குழந்தை அளவிடற்கரிய ஆற்றலுடையது. சிறந்த அறிவினையுடையது. அக் குழந்தைக்கு ஒப்பானவர் எவரு மிலர். முதலில் அக் குழந்தை தலையற்ற முண்டமாகப் பிறந்தது எக்காரணத்தினாலோ தெரியவில்லை" என்று கூறினார். நாரதர் நவின்றவற்றைச் சிந்தூரன் கேட்டான். அக் குழந்தைதான் தனக்குப் பகையாகத் தோன்றியது என்று ஐயமில்லாமல் உணர்ந்தான். அச்சத்தினால் சிறிது நேரம் மூர்ச்சையடைந்து கிடந்தான். பிறகு நாரத முனிவரைப் பார்த்து, "முனிவரே ! நீர் இப்பொழுது கூறிய குழந்தை எனக்குப் பகையாகத் தோன்றியிருக்கிறது. ஆனைமுகத்தையுடைய அக் குழந்தையை நான் விரைவிற்

கொல்ல வேண்டும். இன்றேல் அக் குழந்தை என்னைக் கொன்று விடும். இஃது முற்றிலும் உண்மை. அக் குழந்தையின் தந்தையாகிய பரமசிவனே அதனைக் காப்பாற்றி வைத்திருந்தாலும் நான் அதனைக் கொன்று விடுகிறேன்'' என்று சொன்னான். நாரதர் சிந்தூரனிடம் விடைபெற்றுக் கொண்டு உமாதேவியிடஞ் சென்றார். ''ஆனைமுகங் கொண்டுள்ள கடவுளைக் கொல்லுதற்குச் சிந்தூரன் வருகின்றான்'' என்று கூறிவிட்டு அவ்விடம் விட்டுச் சென்றார்.

## சிந்தூரன் போருக்குச் செல்லுதல்

சிந்தூரன் தனக்குப் பகையாகத் தோன்றியிருப்பவனை அழித்து விடவேண்டும் என்று மிகுந்த சீற்றங் கொண்டான். உடனே புறப்பட்டுக் கைலைமால் வரையை அடைந்தான். மண்ணும் விண்ணும் நடுங்குமாறு பெருமுழக்கஞ் செய்தான். ''எனக்குப் பகைவனாகத் தோன்றியிருப்பவன் எவனோ அவன் உடனே என் எதிரில் வரக் கடவன். யானை முகத்தோடு கூடியிருக்கிற அவனைக் கொல்வதற்கு யான் அரிமாவைப் போல வந்திருக்கிறேன். திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் கூட என்னை எதிர்க்கவில்லை. உலகங்களையெல்லாம் ஓர் இமைப்போதில் சாம்பராக்கியிருக்கிறேன்'' என்று கூறிப் பேராரவாரஞ் செய்தான். இவ்வாறு மதங்கொண்டு நின்ற சிந்தூரனுக்கு முன்னே ஆனைமுகக் கடவுள் தோன்றினார். சிந்தூரனைப் பார்த்து, ''அடா தீயவனே ! உன்னைத் தொலைப்பதற்குப் பிறந்துள்ள வீரன் நாமே. திருமால் நான்முகன் முதலிய தேவர்களைப் போல எம்மை நினையாதே. எம்மை எதிர்த்தவர்களனைவரும் உடனுக்குடன் அழிந்து தொலைந்திருக்கின்றனர். உலகங்களையெல்லாம் ஆக்கலும் அழித்தலும் எம்முடைய செய்கையேயல்லாமல் மற்றவர்களுடைய செய்கையன்று. உன்னால் அழிக்கப்பட்ட உலகங்களையெல்லாம் ஒரு நொடிப் பொழுதில் படைப்போம். மற்றவர்களைப் போல் எம்மை நினையாதே ; மற்றவர்கட்கு மறலியைப் போன்ற உன்னை இப்பொழுதே அழித்தொழிப்போம், காண்பாயாக'' என்று கூறினார்.

## சிந்தூரன் அழிவு

ஆனைமுகக் கடவுளைப் பார்த்த சிந்தூரன் இச் சிறுவனே நம்முடைய பெரும்பகைவன் என்று எண்ணினான். ஆனை முகக் கடவுளைச் சிறு குழந்தையென்று எண்ணினான். "ஓ குழந்தாய்! வீணாக ஏன் மரண்டொழிகிறாய்? உன்னைக் கொல்ல எனக்கு விருப்பமில்லை. நீ மிகுந்த அழகுடையவனாக இருக்கின்றாய். உன் தாயிடத்திற்குப் போய்ப் பால் குடித்துவிட்டு விளையாடுவாயாக" என்று கூறினான். ஆனைமுகக் கடவுள் சிந்தூரனைப் பார்த்து, "அறிவற்றவனே! நம்மைக் குழந்தையென்று எண்ணாதே. உன்னைக் கொல்ல வந்துள்ள நமனாக எண்ணிக் கொள்" என்று கூறினார். தம்முடைய தலையானது அண்ட கோளகையை எட்டும் படியாக நீண்டு வளர்ந்தார். பெரிய மலைகளைப் போன்ற தோள்களோடும், தலை, கண், காது, முகம் முதலிய உறுப்புக்கள் ஆயிரக்கணக்காகவும் அமைந்து விளங்கப் பெருவடிவங் கொண்டு நின்றார். பெருவடிவங் கொண்டு நின்ற ஆனைமுகக் கடவுளைப் பார்த்துச் சிந்தூரன் அச்சங்கொண்டு கலங்கினான். ஆனைமுகக்கடவுள் தம்முடைய பெருவடிவத்திற்குள்ளேயே உலகப் படைப்புகள் எல்லாவற்றையுங் காட்டினார். திடீரென்று தம்முடைய நீண்ட துதிக்கையினால் சிந்தூரனை வாரியெடுத்துக் குழைத்துத் தம்முடைய மத்தகத்தில் பூசிக் கொண்டார். இவ்வாறு சிந்தூரனுடைய உடலானது ஆனைமுகக் கடவுளின் மத்தகத்திற்குச் சாந்தாகியது. அவனுடைய உயிரானது அக் கடவுளுடைய திருவடிகளை யடைந்து பேரின்பம் எய்தியது. விண்ணில் ஒலிக் கருவிகள் முழங்கின. தேவர்கள் மலர் மாரி பெய்தார்கள். கந்தருவர்கள் இன்னிசை பாடினார்கள். முனிவர்கள் மறையோதினார்கள். ஆனைமுகக் கடவுள் தமது மாபெரும் வடிவத்தை யடக்கி முன்போல் குழந்தையானார். திருமால் நான்முகன் முதலிய தேவர்கள் அந்த இடத்திற்கு வந்து ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டார்கள். சிவபிரான் ஆனைமுகக் கடவுளை உயர்ந்த நிலையில் வைத்தருளினார். ஆனைமுகக் கடவுள் அங்கிருந்து மறைந்தருளினார்.

## 71. விக்கின விநாயகர்

### சவுபரி முனிவர்

இமய மலையில் சவுபரி என்னும் பெயரையுடைய முனிவர் ஒருவர் இருந்தார். அம் முனிவர் தத்துவங்களையெல்லாம் உணர்ந்தவர். மறைகளையும் ஆகமங்களையுந் தகுந்தவர் கட்குப் போதிப்பவர். அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றுக்களையும் ஒழித்தவர். ஐவகை வேள்வி களையும் நாள்தோறுஞ் செய்பவர். சிவபிரானுடைய திருவடி களைத்தவிர வேறு எதனையும் எண்ணுதவர். பகைத்தவர்களை அழிக்கவும் போற்றியவர்களை வாழ்விக்கவுஞ் செய்ய வல்லவர். அவருடைய மனைவியின் பெயர் மனோரமை. அவள் குற்ற மற்ற கற்பினையுடையவள். ஒருநாள் சவுபரி முனிவர் நீராடுதற்பொருட்டு ஆற்றுக்குச் சென்றார். முனிவருடைய மனைவி தவக்குடிலில் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து கொண்டிருந்தாள். அச் சமயத்தில் கிரவுஞ்சன் என்னும் பெயரையுடைய கந்தருவராசன் விண்வழியாகச் சென்று கொண்டிருந்தான். அவன் ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை இடைவிடாது வழிபடுபவன். விண் வழியாகச் சென்று கொண்டிருந்த அவன் முனிவருடைய மனைவியைப் பார்த்தான். உடனே நிலத்தில் இறங்கினான். அவனுக்குக் காமநோய் உண்டாகியது. முனிவருடைய மனைவியின் கையைப் பற்றினான். மனோரமை திடுக்கிட்டாள். பூனை வாயில் அகப்பட்டுக்கொண்ட கிளியைப்போல் நடுநடுங்கினாள். அளவு கடந்த சீற்றங்கொண்டாள். அவனைப் பார்த்து, "அடா தீயவனே! என்னுடைய கையைப் பற்றினையே. இஃது ஒழுங்கா? என்னுடைய கையை உடனே விடாமற் போவை யானால் உன்னை இப்பொழுதே நீறாக்கி விடுவேன்'' என்றாள். இச் சமயத்தில் நீராடச் சென்றிருந்த முனிவருந் திரும்பி வந்தார்.

### முனிவர் வசவுரை

தம்முடைய மனைவியின் கையைக் கிரவுஞ்சன் பற்றியிருத் தலைக் கண்டார். உடனே அளவற்ற சினங்கொண்டு "அடா

மூர்க்கனே! எவ்வகையான குற்றமுஞ் செய்யாத இவளை நீ கையைப் பற்றியிழுக்கவேண்டிய காரணம் என்னை ? இவ்வாறு கையைப் பிடித்திழுத்த குற்றத்தினுல் நீ மண்ணைப் பறித்து வளையில் ஒளிக்கின்ற பெருச்சாளியாகக் கடவாய்'' என்று தீ மொழி வழங்கினுர். இதனைக் கேட்ட கந்தருவன் மிகுந்த அச்சமடைத்தான். அவன் முனிவரைப் பார்த்து, ''அடிகாள்! யான் கிரவுஞ்சன் என்னும் அரசன் யான் விண் வழியாகச் செல்லுகிற பொழுது இவ்வம்மையாருடைய அழகைக் கண்டு மோகங்கொண்டு நிலத்திலே இறங்கி இவ்வாறு கையைப் பிடித்தேன். கையைப் பற்றியதேயல்லாமல் வேறு எத்தகைய தீவினையுஞ் செய்தவனல்லேன். அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்துத் தேவரீர் அடியேனுக்குக் கொடுத்த வசவுரையை நீக்கியருளுதல் வேண்டும். அடியேன் தேவரீரிடம் அடைக்கலம் புகுந்தேன். இனிமேல் அடியேனுக்குத் தேவரீரை யல்லாமல் வேறு துணையில்லை'' என்று கூறி வேண்டிக் கொண்டான்.

### கிரவுஞ்சன் பெருச்சாளியாதல்

சவுபரி முனிவர் உள்ளம் இரங்கினுர். அவர் கிரௌஞ்சனைப் பார்த்து, ''ஓ கிரவுஞ்சனே! தீயினுடைய சூடு குளிர்ந்தாலும், நீரினுடைய குளிர்ச்சி வெம்மையானுலும் நம்முடைய வாக்கு ஒருகாலும் பொய்யாக மாட்டாது. நீ தகாத காரியத்தைச் செய்யத் துணிந்தாயானுலும் உடனே நம்மிடம் அடைக்கலம் புகுந்தபடியினுல் யாம் உனக்கு அருளோடு வசவுரைத் தீர்வு கூறுகின்ரேம். திருமாலைக் காளையாக ஊர்ந்தருளிய சிவபிரானுடைய பிள்ளையாகிய ஆனைமுகக் கடவுளானவர் இன்னுஞ் சிறிது காலத்தில் பராசுவ முனிவருடைய இல்லத்தில் தோன்றியருளுவர். அப்பொழுது நீ அவருக்கு ஊர்தியாகித் திருமால் முதலிய தேவர்களுக்குங் கிடைத்தற்கரிய சிறப்பினைப் பெற்று எல்லோரும் வந்து பணியும்படியான முதன்மையோடு வீடுபேற்றினையும் பெறுவை'' என்று கூறியருளினுர். அவ்வளவில் கிரவுஞ்சன் மற்றுமொரு மேருமலை உண்டாகிவிட்டதென்று சொல்லும்

படியான பெருத்த உடலையுடைய பெருச்சாளியாகி உலக மெங்குஞ் சுற்றிக்கொண்டு திரியலானுன்.

நாரதர் கலகம்

தேவேந்திரன் விண்ணுலகத்தில் அரசியற்றிக் கொண் டிருந்தான். ஒருநாள் நாரதமுனிவர் அவனிடத்திற்குச் சென்ருர். தேவேந்திரன் நாரதரை வரவேற்றுப் போற்றினுன். நாரதர் விண்ணவர் கோனைப் பார்த்து. "ஓ தேவர் கோனே! நிலவுலகத்தில் ஒரு புதுமையைக் கண்டேன். அதனை உன்னிடம் உரைக்கும் பொருட்டே இங்கு வந்தேன். இமயமலைக்கும் விந்தமலைக்கும் இடையில் ஏமவதி என்னும் பெயருடைய ஒரு நகரம் இருக்கிறது. அந்நகரத்தை அபிநந்தனன் என்னும் பெயருடையவன் அரசாட்சி செய் கின்ருன். அவன் இப்பொழுது ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கி இருக்கிருன். அந்த வேள்விக்கு உன்னை ஏற்றுக் கொள்ளவில்லை. விண்ணுலக இன்பங்கள் தனக்கு கிடைக்க வேண்டுமென்று எண்ணியிருக்கிருன். அவ்வேள்விக்கு வேள்வியைச் செய்விப்போர் வந்திருக்கிருர்கள். இப்பொழுது நீ அவனை வெற்றிகொள்ளாமற் போவாயானுல், அவன் செய்யத் தொடங்கியிருக்கும் வேள்வியின் முதல் நாளில் தானே உன்னுடைய பதவியை இழந்து போவாய். அதனுல் உனக்கு எல்லாவகையான துன்பங்களும் உண்டாகும். ஆகவே விரைவில் அவ்வேள்வியை அழிப்பதற்கான முயற்சி யைச் செய்யத் தொடங்குவாயாக" என்று கூறிவிட்டு நாரதர் தாம் போகவேண்டிய இடத்திற்குப் போய் விட்டார்.

காலரூபி

நாரதர் சென்ற பிறகு தேவர்கோன் இதற்கு யாது செய்யலாம் என்று எண்ணமிட்டான். அவ்வேள்வியை அழித்தொழிக்க வல்லவன் உலகமனைத்தையுங் கலக்கியழிக்கத் தக்க காலரூபி ஒருவனே என்று முடிவு செய்தான். அக் காலரூபியை உள்ளத்தில் எண்ணினுன். அவ்வளவில் காலரூபி தேவர்கோன் முன்வந்து நின்ருன். தேவர்கோன்

காலரூபியைப் பார்த்து, "ஓ காலரூபியே! நீ இப்பொழுதே அளவற்ற வடிவங்களோடு நிலவுலகத்திற்குச் சென்று அபிநந்தனன் என்னும் அரசனை அழித்து அவன் செய்கிற வேள்வியையும் ஒழித்துத் தீர்க்கக் கடவாய்" என்று கூறினன். அவ்வளவில் காலரூபியானவன் பல வடிவங்களை யெடுத்துக்கொண்டு மிகுந்த சினத்தோடு நிலவுலகத் திற்குச் சென்றான். மிகுந்த சினத்தோடு அபிநந்தன ராசனுடைய வேள்விச் சாலைக்குள் நுழைந்தான். அபிநந்தன ராசனையும் வேள்விக்கு வந்திருந்தவர்களையும் அழித் தொழித்தான். தேவர் உணவுக்காகத் தொகுத்து வைக்கப் பட்டிருந்த பொருள்களையெல்லாம் வாரியுண்டான். வேள்விக் குழியை இடித்துத் தள்ளினன். அதில் புழுதிகளை நிரப்பினன். வேள்விச்சாலை முழுவதையுந் தூளாக்கினன். அவ்விடத்தி லிருந்து வெளியே புறப்பட்டான். ஆங்காங்குச் செய்யப் பெறுகிற வேள்விகளையெல்லாம் அழித்தான். செல்லு மிடங்களிலெல்லாந் துன்பத்தையே செய்துகொண்டு திரிந் தான். திக்குகள் தோறும் போய் மறை நெறிகளையெல்லாம் மாறுபடச் செய்தான். இவ்வாறு விக்கினங்களை நாள்தோறுஞ் செய்து கொண்டு திரிந்தான். இப்படி இவன் இயற்றுகின்ற இன்னல்களால் முனிவர்கள் பெருந்தொல்லைக்கு உள்ளானார்கள். பல முனிவர்கள் ஓரிடத்தில் கூடித் தங்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டுமென்று கடவுளைத் தொழுது போற்றினர்கள்.

## ஆனைமுகக் கடவுள் அருள்

ஆனைமுகக் கடவுள் அம்முனிவர்களுக்கெதிரில் ஆசிரியத் திருக்கோலத்தோடு எழுந்தருளினர். அவர்களைப் பார்த்து, "ஓ முனிவர்களே! உங்கள் உள்ளத்தில் உள்ள அச்சங்களை யும் துன்பங்களையும் ஒழியுங்கள் எல்லாருக்குந் துன்பத்தை யுண்டாக்கிக் கொண்டு வருகிற விக்கினனை அடக்கவும் மறை நெறிகளை வளர்க்கவும், அடியார்களுக்கு அருள் செய்யவும் மூவுலகங்களையுங் காப்பாற்றுதற்கும் யாம் வரேணிய ராசனுடைய இல்லத்தில் பிறக்கப் போகின்றோம்" என்று

திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாக்கை முனிவர்கள் கேட்டுத் தங்களுடைய துன்பமொழிந்து இன்பத்தை யடைந்தார்கள்.

வரேணியன் என்னும் மன்னன்

முன் காலத்தில் வரேணியன் என்னும் பெயரையுடைய அரசன் இருந்தான். அவன் மிகுந்த தவங்களைச் செய்தவன். தேவர்களும் வழிபடத்தக்க தகுதியுடையவன். அவனுடைய புகழ் திக்குகளிலெல்லாம் பரவி யிருந்தது. அவனுடைய மனைவியின் பெயர் புட்பகை. இவர்களுக்கு நெடுங்காலமாக மக்கட்பேறு உண்டாகவில்லை. மக்கட்பேற்றை விரும்பி அளவற்ற தானங்களையும் தருமங்களையும் நாள்தோறுஞ் செய்து கொண்டிருந்தார்கள். ஆனைமுகக் கடவுளுடைய திருவருளால் புட்பகையினுடைய வயிற்றில் கருவுண்டாகியது. பத்தாந் திங்களில் ஒரு மகனைப் பெற்றுள். அம்மகனை ஆனைமுகக் கடவுள் அங்கிருந்தவர்கள் அறியாதவாறு மறைத்துத் தாமேயொரு குழந்தையாகி யிருந்தார். அக்குழந்தை மிகுந்த அழகோடும் ஆனைமுகத்தோடும் மழு முதலிய படைக்கலன்களை யேந்திய நான்கு திருக்கைகளோடும் நீண்ட தும்பிக்கையோடும் பெருத்த வயிற்றோடும் விளங்கியது. அங்கிருந்தவர்கள் அக் குழந்தையைப் பார்த்து அஞ்சியோடி விட்டார்கள். புட்பகையாகிய தாய் மட்டும் ஓடிப் போகாதவளாய் அக்குழந்தையைப் பார்த்து உள்ளம் வருந்திக் கொண்டிருந்தாள். "அந்தோ மகப்பேற்றை விரும்பி அளவற்ற நல்வினைகளைச் செய்தோமே; அவ்வாறு செய்தும் இத்தகைய பிள்ளை பிறந்திருக்கிறதே" என்று எண்ணமிட்டு ஏங்கினள். இதற்கு யாது செய்வதென்று ஓலமிட்டு அழுதாள். மனைவி அழுதலை வரேணியராசன் அறிந்தான்; உடனே வந்து பிள்ளையைப் பார்த்தான். எதிரில் இருக்கும் ஆனைமுகக் கடவுளாகிய குழந்தையின் தெய்வத் தன்மையை அவன் சிறிதும் உணர்ந்து கொள்ளவில்லை. இப் பிள்ளையால் நமக்குத் துன்பம் உண்டாகும் என்று எண்ணி அஞ்சினன். உடனே சில வீரர்களைக் கூப்பிட்டான். அவர்களைப் பார்த்து, "இப் பிள்ளையை இவ்விரவில்தானே கொண்டுபோய்க் குளக்

கரையில் வைத்துவிட்டு வாருங்கள்'' என்று கட்டளையிட்டான். வீரர்கள் அரசனுடைய கட்டளையைத் தடுக்க முடியாமல் உடனே அக்குழந்தையை எடுத்துக் கொண்டுபோய்ப் பராசுவ முனிவருடைய இருப்பிடத்திற்கு அண்மையில் உள்ள குளக் கரையில் தழைகளை ஒடித்துப்போட்டு அதன்மீது குழந்தை யைக் கிடத்திவிட்டு அரசனிடஞ் சென்று செய்தியறிவித் தார்கள்.

**ஆனைமுகக் கடவுள் வளர்தல்**

ஆனைமுகக் கடவுள் தம்முடைய உடலில் இருந்து சிறிது ஒளியை எழுப்பினர். அதனுல் கோடிக் கதிரவர்கள் தோன்றினற்போல் மூவுலகங்களினும் ஒளி மிகுதியாயிற்று. தேவர்கள் வியப்படையுமாறு இருள் நீங்கியது. ஏழு கடல் களும் ஒலி செய்யாமலிருந்தன. இரவு நீங்கியது என்று எண்ணி அளவற்ற விலங்குகள் இரை தேடுவதற்கு வெளியே புறப்பட்டன. பொழில்கள் தோறும் உறங்கிக் கொண்டிருந்த பறவைகளெல்லாம் திக்குகள்தோறும் பறந்து சென்றன. திங்களினெளியும் உடுக்களின் ஒளியும் மழுங்கிவிட்டன நீரில் இருந்த குமுதங்களெல்லாம் இதழ்கள் மூடிக் கொண்டன. பராசுவ முனிவர் தம்முடைய படுக்கையைவிட்டு எழுந்தார். நாம் கடன் கழிக்கவேண்டிய காலம் கழிந்து போய்விட்டதே என்று கலக்கங் கொண்டார். தண்டு கமண்டலத்தோடு குளக்கரைக்குச் சென்ருர். அங்கு தழையின்மீது ஆனைமுகக் கடவுள் எழுந்தருளியிருத்தலைக் கண்டார். உடனே பேரின்ப வெள்ளத்தில் மூழ்கினர். அவருடைய உடல் மயிர்க்கூச் செறிந்தது. இரு விழிகளினு மிருந்து இன்பக் கண்ணீரைச் சொரிந்தார். அண்மையிற் சென்று குழந்தையினுடைய உறுப்புக்களையெல்லாம் பார்த்துப் பார்த்து மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். களிப்பென்னுங் கடலுக்குக் கரை காணுதவராகத் திகைத்தார். நாம் செய்த தவப்பயனலன்ருே நான்மறைகட்கு மெட்டாத வித்தகராகிய ஆனைமுகக் கடவுள் நமக்கு அருள்செய்யும் பொருட்டு இவ்வாறு எழுந்தருளியிருக்கின்ருர். அந்தோ. இப்பெருமா னுடைய பெருமையை உணராதவர்கள் இங்கே கொண்டு

வந்து வைத்துவிட்டார்கள். பார்த்தவுடன் மனம் வாக்குக் காயங்கட்கு மகிழ்ச்சியை விளைவிக்கவல்ல இவரை ஈன்றவர் கட்கு ஒப்பானவர்கள் எங்குமிரார். இவரை அவர்கள் இவ்வாறு விட்டுச் சென்றது நாம் முன் செய்திருக்கின்ற தவப் பயனே யன்றி வேறில்லை என்று இப்படிப் பலவாறு எண்ணிக்கொண்டு அக்குழந்தையைத் தம்முடைய கையி லேந்தி இருப்பிடத்திற்கு மீண்டார். அச்சமயத்தில் அருணன் தோன்றினன். பராசுவ முனிவர் முன்னே தோன்றிய ஒளி குழந்தையின் ஒளியே என்று உணர்ந்து கொண்டார். தம்முடைய இருப்பிடத்தை யடைந்ததும் தம்முடைய மனைவி யாகிய வீரிய வற்சலையைக் கூப்பிட்டுப் "பெண்ணே! வருத்த மில்லாமல் நாம் பெற்ற இக் குழந்தையை வாங்கிக் கொள் வாயாக" என்று சொன்னர். வீரிய வற்சலை குழந்தையைப் பார்த்து மிகுந்த வியப்படைந்தாள். அவளுடைய முகம் மலர்ந்தது; கொங்கைகள் விம்மின; தோள்கள் பதறின; கண்கள் துடித்தன; அவள் தன் கணவராகிய முனிவரைப் பார்த்து, "என்னுருயிர்த் தலைவரே! தேவரீர்க்கு இவ்வரிய குழந்தை எவ்வாறு கிடைத்தது? யானைமுகத்தையுடைய இக் குழந்தையின் வடிவம் ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவத்தைப்போல் இருக்கின்றபடியால் இதுவே எல்லா வகையான பெருமைகளையும் கொடுப்பதற்குக் காரணமான வடிவமாகும். இதுவே பெருமை பொருந்திய தவங்களால் உண்டாகும் பயன். இதுவே யோகம் முதலியவற்றுல் எண்ணப்படுகிற பொருள் இதுவே எல்லா ஒளிகளையும் உண்டு செய்வதற்கு மூல காரணமாகும். இதுவே மறை முதலிய நூல்களில் கூறப்பட்டிருக்கின்ற பொருள். இதுவே பெரியவற்றிற் கெல்லாம் பெரிதென்று பேசப்பெறும். அழிவற்றதும் ஆகும்" என்று பலவாறு புகழ்ந்து பாராட்டிக் குழந்தையைப் பெற்றுக் கொண்டாள். குழந்தையைக் கையில் வாங்கிய அளவில் அவளுடைய கொங்கைகளில் பால் சுரந்தது. அதனை அக்குழந்தைக்கு ஊட்டினுள். பலநாள் அரிய தவங்களைச் செய்த புட்பகையானவள் அக்குழந்தையைப் பெற்றும் அதனை விரும்பாது துறந்தாள். வீரிய வற்சலையோ அக்குழந்தையை வளர்க்கும் பேற்றைப் பெற்ருள்.

### கிரவுஞ்சப் பெருச்சாளி

ஆனைமுகக் கடவுள் பர்ாசுவ முனிவருடைய இருப்பிடத்தில் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டிருந்தார். முன்பு சவுபரி முனிவருடைய வசவுரையினால் பெருச்சாளி வடிவத்தை யடைந்த கிரவுஞ்சப் பெருச்சாளியானது ஒருநாள் ஆனைமுகக் கடவுள் வளர்ந்து கொண்டிருக்கும் முனிவருடைய இருப்பிடத்திற்கு அண்மையில் வந்து பலவகையான தொல்லைகளை உண்டாக்கிக்கொண்டு திரிந்தது. பராசுவ முனிவரால் அப்பெருச்சாளியின் தொல்லை பொறுக்க முடியவில்லை. அதனால் அவர் மிகுந்த கவலை யடைந்தார். ஆனைமுகக் கடவுள் முனிவருடைய கவலையை உணர்ந்தார். அவரைப் பார்த்து, ''நாம் அப்பெருச்சாளியை நன்கு புடைத்து அதனுடைய தொல்லையை ஒழிப்போம்'' என்று முனிவருக்குத் தெளிவுரை கூறினார் தம்முடைய பாசக் கயிற்றைப் பெருச்சாளியின்மீது வீசினார். அக் கயிற்றைக்கண்ட பெருச்சாளி நிலத்தைக் கிழித்துக்கொண்டு பாதாள உலகத்திற்குச் சென்றது. கீழுலகம் ஏழினையுங் கலக்கிவிட்டு மேலெழும்பியது. விண்ணுலகம் உருத்திர லோகம் முதலானவற்றைக் கலக்கிக்கொண்டு சிவலோகம் வரையிற் சென்றது. அப்பெருச்சாளி செல்லுமிடங்கட்கெல்லாம் அப்பாசக் கயிறுந் தொடர்ந்து சென்றது. அப் பெருச்சாளியினுடைய ஆற்றலெல்லாம் அகலுமாறு அதனைப் பிடித்துக் கட்டி ஆனைமுகக் கடவுளுக்கு முன்னே கொண்டு வந்து நிறுத்தியது.

### பெருச்சாளியின் வேண்டுகோள்

பெருச்சாளியானது தலையெடுத்து ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, ''பேராற்றல் படைத்த பெருமானே! அடியேனைக் கொடியவன் என்று எண்ணிக் கொலை செய்யவேண்டாம். தேவரீரிடம் அடைக்கலம் புகுந்த அடியேனுடைய வரலாற்றைச் சிறிது கேட்டருள்க. அடியேன் முன்பு கந்தருவ மன்னனாக இருந்தேன். என்னுடைய பெயரைக் கிரவுஞ்சன் என்று இயம்புவார்கள். சவுபரி முனிவருடைய மனைவியாகிய

மனோரமை என்பவளுடைய அழகைக் கண்டு மோகித்து அவளுடைய கையைப் பிடித்தேன். அதனாற் சினங்கொண்ட அவர் இவ்வாறு பெருச்சாளியாமாறு வசவுரை வழங்கினார். பிறகு நான் அவரிடம் அடைக்கலம் புகுந்தேன். அதனால் அவருக்கு அடியேன்பால் அருளுண்டாகியது. இனிமேல் நீ பராசுவ முனிவருடைய இருப்பிடத்தில் பிறக்கப்போகிற ஆனைமுகக் கடவுளுக்கு ஊர்தியாகி எல்லா மேன்மைகளையும் பெறுவாயாக என்று திருவருள் புரிந்தார். அவ்வருளின் படியே இப்பொழுது தேவரீரை அடைக்கலமாகச் சேர்ந்தேன். ஆகையால் தேவரீர் அடியேனைக் காத்தருளவேண்டும்'' என்று கூறி வேண்டிக் கொண்டது.

### பெருச்சாளிக் கருளல்

பெருச்சாளி கூறியதைக் கேட்ட ஆனைமுகக் கடவுள் அதனைப் பார்த்து, ''ஆற்றல் மிகுந்த பெருச்சாளியே! நாம் உன்னுடைய வரலாற்றை இதற்கு முன்னரே அறிவோம். ஆகவே உன்னைக் கொல்லாமற் பிடித்துக் கட்டிக்கொண்டு வரும்படியாகக் கயிற்றை விடுத்தோம். இனிமேல் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. இன்றுமுதல் நமக்கு ஊர்தியாக இருக்கக் கடவாய்'' என்று கூறி அதனுடைய முதுகின்மேல் அமர்ந்து அதனைத் திக்கனைத்துஞ் செலுத்தித் திருவிளையாடல் புரிந்தார்.

### காலரூபியைத் தொலைத்தல்

பராசுவமுனிவர் ஆனைமுகக் கடவுளைப் பணிந்து, "பேராற்றல் படைத்தவனாகிய காலரூபி என்பவன் உலகங்களை யெல்லாங் கலக்குகின்றனன். அவனுடைய தொல்லையால் எல்லா உலகங்களும் கலங்கி நடுங்குகின்றன. அவனைத் தேவரீர் கொன்று உலகங்களில் மறைநெறிகளை வளர்த்தருள வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே செய்வதாகக் கூறியருளினார். காலரூபி என்னும் பெயருடைய விக்கினன் உலகத்தில் வேள்வி முதலிய நற்செயல்கள் நிகழாமல் இடையூறு செய்து கொண்டிருந்த

படியால், இந்திரன் முதலிய தேவர்களுக்கு உணவு கிடைக்காமற் போய்விட்டது. முனிவர்களுந் தேவர்களும் ஒன்ருகக் கூடி நான்முகனிடத்திற்குச் சென்று காலரூபி என்னும் விக்கினனுடைய தொல்லையைக் குறித்து முறையிட்டுக் கொண்டார்கள். நான்முகன் தன்னை வந்து வணங்கியவர்களைப் பார்த்து, "ஆனை முகக் கடவுள் உங்களுடைய துன்பங்களையொழித்தற்பொருட்டுப் பராசுவமுனிவருடைய இருப்பிடத்திற் குழந்தையாகி வளருகின்ருர். அவரிடத்திற் சென்று முறையிட்டுக் கொள்ளுங்கள்" என்று கூறினுன். அதனைக் கேட்டோர் அனைவரும் மகிழ்ச்சியடைந்து பராசுவ முனிவருடைய இருப்பிடத்திற்கு வந்தார்கள். பராசுவ முனிவர் தம்முடைய இருப்பிடத்திற்கு வந்தவர்களை வரவேற்றுப் போற்றினுர். வந்தவர்கள் தாங்கள் அங்கு வந்த காரணத்தைப் பராசுவமுனிவரிடங் கூறினுர்கள். பிறகு ஆனைமுகக்கடவுளை வணங்கித் தங்களுடைய துன்பத்தைப் போக்கி யருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள்..

ஆனைமுகக் கடவுள் தேவர்கட்குத் திருவருள் புரிந்தார். தம்மைப் புடைசூழ்ந்து வருமாறு அவர்கட்குக் கட்டளையிட்டார். தாம் பெருச்சாளியூர்தியைச் செலுத்திக்கொண்டு விக்கினன் இருக்குமிடத்திற்குச் சென்ருர். தம்முடைய கையிலிருக்கிற அங்குசத்தைப் பார்த்து, "நீ விக்கினனைப் பிடித்துக்கொண்டு வரக்கடவை" என்று கட்டளையிட்டார். அவ்வளவில் அவ்வங்குசமானது எல்லா உலகங்களும் அதிரும்படியாகச் சென்று விக்கினனைச் சூழ்ந்து வளைத்து இழுத்துக் கொண்டு வந்து ஆனைமுகக் கடவுள் முன்னர் விட்டது. அவ்விக்கினன் பெரு வடிவத்தோடு ஆனைமுகக் கடவுளுக்கு முன்னுல் நின்ருன். ஆனைமுகக் கடவுள் விக்கினனைச் சினத்தோடு பார்த்தார். அப் பார்வையைப் பார்த்த விக்கினன் அஞ்சினுன். இவன் நம்மை எளிதாக விடமாட்டான். இவனேடு கொடிய போர் செய்ய வேண்டுமென்று எண்ணினுன். நீர் வடிவங்கொண்டு அலைவீசி எல்லா உலகங்களும் மூழ்கிப் போமாறு நின்ருன். அதனைக் கண்டு

தேவர்கள் அஞ்சினூர்கள். முனிவர்கள் இனிமேல் நமக்குப் போக்கிடம் யாதென்று வாடினூர்கள். அந்நீர்ப் பெருக்கினை அடக்க விரும்பிய ஆனைமுகக் கடவுள் புன்னகை செய்து தம் முடைய ஒரு கையை நீட்டினூர். விக்கினன் தண்ணீர் வடிவை மாற்றிக் காகவடிவங் கொண்டு ஒரு மரத்தின்மீது நின்று எல்லா உலகங்களும் உதிரும்படியாகச் சிறகடித்துப் பேரொலி செய்தான்.

ஆனைமுகக் கடவுள் தம்முடைய கையிலிருந்த தாமரை மலரை அவன்மீது செலுத்தினூர். அதனைக் கண்ட விக்கினன் காகவடிவம் மாறி வடவைத் தீயைப்போல வடிவங்கொண்டு மண்ணுலகம் விண்ணுலகம் கடல் மலை முதலானவற்றை யெல்லாம் நீருகும்படி எரித்தான். ஆனைமுகக் கடவுள் மழை வடிவாகிப் பொழிந்து அத்தீயை அவித்தார். பிறகு விக்கினன் ஊழிக் காலத்திலுண்டாகிற பெருங்காற்றும் மழையுமாக வடிவெடுத்துச் சுழன்று சொரிந்தான். ஆனைமுகக் கடவுள் முகில்களையேவி அம்மழையை உறிஞ்சி விடச் செய்தார். தாமே மலைவடிவங்கொண்டு காற்றைத் தடுத்தார். விக்கினன் பல வச்சிரப்படைகளின் வடிவத்தைக் கொண்டு மலைவடிவத்தோடு போர் செய்தான். ஆனைமுகக் கடவுள் ஒரு வேற்படையைப் புதிதாகப் படைத்து அதனைப் பார்த்து, "நீ போய் விக்கினனுடைய உயிரை வாங்கக் கடவாய்" என்று ஏவினூர். அப்படை விக்கினனோடு அளவற்ற போரைச் செய்தது. அப்படையோடு போரிடக் கூடிய ஆற்றல் விக்கினனுக்கு இல்லை. ஆகவே அவன் அஞ்சித் தன்னுடைய இயற்கை வடிவத்தைக் கொண்டான். ஆனைமுகக் கடவுளுடைய அடிகளிற் பணிந்து இரு கைகளையும் தலைமேற் கூப்பி, "எல்லா வகையான ஆற்றலும் அமையப் பெற்ற கடவுளே! அடியேன் தேவரீரிடம் அடைக்கலம் புகுந்தேன். தாங்கள் விட்ட வேற்படை அடியேனை அழித் தொழிக்காமல் காப்பாற்றியருளுதல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். ஆனைமுகக் கடவுள் தம்முடைய சினத்தை மாற்றி விக்கினன் மீது அருள் கொண்டார். சும்மா வருமாறு வேற்படைக்குக் கட்டளையிட்டார். அவ்

வளவில் விக்கினன் அச்சமகன்று ஆனைமுகக் கடவுளுக்கு அண்மையில் வந்து, "ஓ அருட் கடலே! முத்தொழிலுக்குங் காரணமாகிய முதலே! அடியேன் அறிவில்லாமல் தேவரீருக்குச் செய்த குற்றத்தினைப் பொறுத்தருளுதல் வேண்டும். முன்னர் அடியேனைத் தேவேந்திரன் ஏவினன். அதனல் அடியேன் பொல்லாத காரியங்களைப் புரியத் தொடங்கினேன். அஃதன்றித் தேவரீரை எதிர்த்துப் போரிடவு மானேன். இனிமேல் அடியேனைத் தங்களுடைய அடியார்களில் ஒருவனுக்கிக் கொள்ளுதல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். அவனுடைய தீய பண்புகள் முழுவதும் மறைந்துவிட்டன.

### ஆனைமுகக் கடவுள் அருள்

அடியார்க்கருள் புரியும் ஆனைமுகக் கடவுள் தம்மை அடுத்த விக்கினனுடைய தவறுகளையெல்லாம் பொறுத் தருளினர். காலரூபியாகிய விக்கினனைப் பார்த்து, "ஓ காலரூபியே! நீ இதுகாறும் செய்துவந்த கொடுமையினல் யாம் உன்னை அழித்தொழிப்பதற்கே நினைத்தோம். இப்பொழுது நீ நம்மிடம் அடைக்கலம் புகுந்தபடியால் உன்னை உயிரோடு விட்டோம். இனிமேல் நமக்கு மகிழ்ச்சி யுண்டாகுமாறு நடந்துகொள்க. நம்மை எண்ணுகிறவர்களிடத்திலும் பணிகின்றவர்களிடத்திலும் புகழ்கின்றவர்களிடத்திலும் ஒருபோதும் நெருங்கற்க. நம்மை வணங்காதவர்கள், போற்ருதவர்கள், நினையாதவர்கள், நம் வரலாறுகளைக் கேளாதவர்கள், அடியார்கட்குத் தீமை செய்கின்றவர்கள், பொல்லாதவர்கள் ஆகியோரிடத்தில் நீ உன்னுடைய அதிகாரத்தைச் செலுத்துக. நாம் கூறிய அறிவுரைகளைக் கேட்பையாயின் பிழைப்பாய். இன்றேல் அழிந்தொழிய வேண்டியதுதான்" என்று கூறினர்.

விக்கினன் மீண்டும் ஆனைமுகக் கடவுளைப் பணிந்தெழுந்தான். "பெருமானே! அடியேன் தேவரீருடைய கட்டளையை ஒருபோதுங் கடந்து நடவேன். அடியேனுடைய பெயரையும் தேவரீருடைய திருப்பெயரோடு சேர்த்துக் கொள்ளுதல்

வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். இதனைக் கேட்ட ஆனைமுகக் கடவுள் மகிழ்ந்தார். "இதுமுதல் எல்லாரும் உன்னுடைய பெயர் முன்னே வரும்படியாக நம்மை விக்கினராச விநாயகர் என்று கூறக் கடவர். அவ்வாறு கூறி நம்மைப் போற்றுவோர்களை நீ அணுகாதிரு'' என்று கூறினார். இதனைக் கேட்ட விக்கினன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். ஆனைமுகக் கடவுளை வழிபட்டு விடைபெற்றுக் கொண்டு சென்றான். தேவர்கள் பூமாரி பெய்தார்கள். தேவ மாதாக்கள் ஆனைமுகக் கடவுளை வழிபட்டார்கள். இவற்றையெல்லாம் வரேணியராசன் கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். தன்னுடைய மனைவியாகிய புட்பகையுடனே வந்து ஆனைமுகக் கடவுளைப் பன்முறை பணிந்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டு சென்றான். முனிவர்கள் தேவர்கள் முதலியோரும் தத்தமக்கு வேண்டிய நன்மைகளைப் பெற்றுக் கொண்டு சென்றார்கள். ஆனைமுகக் கடவுள் பராசரமுனிவருடைய இருப்பிடத்திற்கு வந்து அவருக்கும் அவருடைய மனைவிக்கும் அருள்புரிந்து தம்முடைய உலகத்தை யடைந்தார்.

## 72. மயூரேச விநாயகர்

### இரண்டு அசுரர்கள்

முன்னொரு கற்பத்தில் நான்முகனானவன் சிவபிரானுடைய திருவருளினால் திருமாலினுடைய உந்தித் தாமரையில் தோன்றினான். மறை முதலிய நூல்களையெல்லாம் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளக் கேட்டான். அந்நூல்களில் கூறிய முறைப்படி எல்லா உலகங்களையும் படைத்தான். மறை முதலிய நூல்கள் எழுதப்பட்டிருக்கிற சுவடியை நாள் தோறும் வழிபட்டு வந்தான். நான்முகனுடைய படைப்பிலுண்டாகிய தேவர்களும் அசுரர்களும் ஒரு காலத்தில் மாறுபாடு கொண்டு நீண்டநாள் போர் செய்தார்கள். பிறகு தேவர்கள் அசுரர்களோடு போர் செய்ய ஆற்றலற்றவர்களானார்கள். பிறகு தமக்குள் ஒரு முடிவு செய்து மறையின் மொழிகளைப் படைகளாக்கி அப்படைகளை நான்முகனுடைய

கணைகளோடுஞ் சேர்த்து அசுரர்கள் மீது செலுத்தினார்கள். அதனால் அவ்வசுரர்கள் ஆற்றலிழந்தார்கள். பெருமையையும் படைக்கலங்களையும் இழந்து போர்க்களத்திலிருந்து ஓடினார்கள். தோல்வியினால் மிகுந்த வாட்டத்தை யடைந்த அவர்கள் தங்களுடைய பகைவர்களை எப்பொழுது வெற்றி கொள்ளப் போகிறோம் என்று நெஞ்சில் வெஞ்சினங் கொண்டிருந்தார்கள். சில நாட்கள் சென்றன. ஓர் அவுணன் சங்கைப் போன்ற வடிவுடையவனாய், மிகுந்த பேராற்றல் பொருந்தியவனாய், அளவற்ற மேன்மைகளைப் பெற்றவனாய்ச் சங்காசுரன் என்னும் பெயரோடு விளங்கி இருந்தான். அவனுடைய இளவலாகிய கமலாசுரன் என்பவன், தன்னுடைய பேராற்றலாலும் பெற்றுள்ள மேன்மைகளாலும் தன்னுடைய தமையனைவிடப் பல மடங்கு சிறந்தவனாக விளங்கியிருந்தான். கமலாசுரன் அவ்வாறு சிறப்புடையவனாக விருந்தும் தன்னுடைய தமையன் கட்டளைப்படி நடந்துகொண்டிருந்தான்.

### மறைகளைக் கைப்பற்றுதல்

தேவர்களால் தோல்வியடைந்த அசுரர்கள் முன்கூறிய இரண்டு அசுரர்களிடமும் போய், "நண்பர்களே! நீங்களும் நாங்களும் ஒரு குலமல்லவோ? எங்கட்குண்டாகியுள்ள இழிவுந் துன்பமும் உங்கட்கில்லையோ? முன்பு தேவர்கள் எங்களோடு போர் செய்து தோற்கடித்தார்களாகையால் அவர்களை எவ்வாறேனும் வெற்றி கொள்ளுதல் வேண்டும். அவர்கட்கு மறைகளே படைக்கலங்களாக இருக்கின்றன. அந்நூல்களோ நான்முகனிடத்தில் இருக்கின்றன. அவற்றை மட்டும் முன்னதாகக் கைப்பற்றவேண்டும்" என்று கூறினார்கள். அசுரர்கள் கூறியவற்றையெல்லாஞ் சங்காசுரன் கேட்டான். தன் தம்பியாகிய கமலாசுரனைப் பார்த்து, "நீ அம்மறைகளை இங்கே வருமாறு செய்யக் கடவாய்" என்று கட்டளையிட்டான். கமலாசுரன் தன்னுடைய மாயையினால் நான்முகன் இருக்குமிடத்திற்குச் சென்றான். அப்பொழுது நான்முகன் மறை நூல்களைத் தனக்கு முன் வைத்துக் கொண்டு சிவபிரானை எண்ணி அறிதுயிலில் அமர்ந்திருந்தான்.

மறைகளைக் கைப்பற்றச் சென்ற கமலாசுரன் அவற்றைக் கைப்பற்றி வந்து தன்னுடைய முன்னவனிடத்திலே தந்தான். அவன் அந்நூல்களைக் கொண்டுபோய்க் கடலில் மறைத்துக் காவல் செய்தான். மறைகள் முழுவதுங் கட்டுக் காவலில் அகப்பட்டுக் கொண்டமையால் மூவுலகங்களினும் மறைநெறியொழுக்கங்கள் மறைந்தொழிந்தன. எல்லாரும் வறுமை, துன்பம் முதலியவற்றிலகப்பட்டுத் தீவினைகளை மிகுதியாகச் செய்து கொண்டிருந்தார்கள்.

### சிவபிரானிடம் முறையிட்டுக் கொள்ளுதல்

நான்முகன் நாட்கள் பல சென்ற பிறகு அறிதுயிலில் இருந்து விழித்தான். தன் முன்னிருந்த மறைகளைக் காணுமற் றிகைத்தான். பின்னர் மறைகள் எவ்வாறு மறைந்தன என்பதைத் தன்னுடைய அறிவுப் பார்வையாற் கண்டுணர்ந்தான். சிவபிரான் அருளிய மறை நூலே போய் விட்டபடியால் நாம் இனிமேல் செய்யத்தக்கது யாதிருக்கிறது? இனிமேல் நம்முடைய உயிரை வைத்துக்கொண்டிருந்து பலனென்ன? இனிமேல் நம்முடைய படைப்புத் தொழில் எவ்வாறு நடக்கும் என்று உள்ளம் வருந்தினுன். உடனே புறப்பட்டுத் திருமாலிடஞ் சென்ருன். அப்பொழுது திருமால் அறிதுயிலில் இருந்தார். ஆகவே, நான்முகன் திருக் கைலைக்குச் சென்ருன். சிவபிரானுடைய திருவடிகளிற் பணிந்தான். மறைகள் களவுபோன செய்திகளைக் கூறி முறையிட்டுக் கொண்டான். சிவபிரான் நான்முகனைப் பார்த்துத், "திருமால் இன்னுஞ் சில நாட்களில் அறிதுயில் விட்டெழுந்திருப்பார். அவர் சங்காசுரனைக் கொன்று மறை நூல்களை மீட்பார்" என்று கூறினுர். நான்முகன் அம் மொழிகளைக் கேட்டு மயங்கினுன். சிவபிரானைப் பார்த்து, "அத்திருமால் அறிதுயிலில் இருந்து எழுந்திருப்பது எந்நாளில்? எங்களுடைய துன்பம் ஒழிவது எப்போது?" என்று சொல்லி வருந்தினுன். அவ்வாறு வருந்துகிற நான்முகனைச் சிவபிரான் பார்த்து, "ஓ நான்முகனே! இனிமேல் நீ எதற்கும் அஞ்சவேண்டாம். நாம் நவில்வதைக் கருத்தொடு கேள்; நீ கூறிய சங்காசுரனை அல்லாமல்

கமலாசுரன் ஒருவன் இருக்கிறன். அவனே எல்லா உலகங்களையும் உண்ணத்தக்க ஆற்றலுடையவன். தன்னுடைய மாயையாலும் மேன்மையாலும் முனிவர்கள் தேவர்கள் பெரியோர்கள் முதலானவர்களைப் பகைத்துத் துன்பஞ் செய்யக் கூடியவன். அவனைக் கொல்வதற்கு ஆயிரம் உருத்திரர்கள் ஒருங்கே கூடிமுலும் பதிமுயிரம் திருமால்கள் ஒன்ருகச் சேர்ந்தாலும், நூருயிரம் நான்முகர்கள் ஒன்ருகப் பகைத்தாலும் ஒரு காலத்தினும் அவனைக் கொல்ல மாட்டார்கள். எல்லாருடைய துன்பத்தையும் போக்கி அருள் செய்யத்தக்கவர் விக்கினராச கணபதியேயாகும். ஆகவே, நீ அவரிடத்திற் சென்று அடைக்கலம் புகுவாயாஞல் மறைமுதலிய நூல்களை வழங்கியருள்வார். கமலாசுரனையும் அழித்து ஒழிப்பார். எல்லா உலகங்கட்கும் இன்பத்தைச் செய்வார். ஆகவே உன்னுடைய துன்பத்தைப் போக்கக் கடவாய்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

நான்முகன் வழிபாடு

நான்முகன் தன்னுடைய உலகத்திற்குச் சென்ருன். தாமரை இருக்கை (பதுமாசனம்) என்னும் இருக்கையில் அமர்ந்து ஆனைமுகக் கடவுளை உள்ளத்தில் எண்ணி வழிபட்டான். அவருடைய ஓர் எழுத்து மறையை உரைத்துக் கொண்டு அறிதுயிலில் இருந்தான். நான்முகன்மீது ஆனைமுகக் கடவுள் இரக்கங்கொண்டார். பரசு, கமலம், பாசம், அங்குசம் என்னும் படைகளைத் தாங்கியிருக்கிற நான்கு திருக்கைகளோடும் முக்கண்களோடும், இரு பக்கங்களினுஞ் சித்திபுத்தி என்னும் மனைவிமாரோடும் எழுந்தருளினுர். நான்முகன் இருக்கையை விட்டெழுந்து இன்பக் கண்ணீர் சொரிந்தான். அடியற்ற மரம்போல் நிலத்தில் விழுந்து வணங்கினுன். ஆனைமுகக் கடவுள் அந் நான்முகனைத் தம்முடைய திருக்கைகளால் எடுத்தருளினுர். நான்முகனைப் பார்த்து, ''நான்முகனே! வேதாகம புராணங்கள் என்று சொல்லப் பெறுகிற அவை மூன்றும் நம்முடைய திருமுகத்தில் மூன்று கண்களாக இருந்து விளங்குகின்றன. அவை மறைந்துபோய்விட்டதாக நீ எண்ணவேண்டாம்.

அவற்றைக் குறித்து எத்தகைய கவலையுங் கொள்ள வேண்டாம் முன்போலவே அவை உலகத்தில் விளங்கு மாறு செய்வோம்; அசுரர்களையும் அழிப்போம்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அந்தணனுதல்

இவ்வாறியம்பிய ஆனைமுகக் கடவுள் பிறகு ஓர் அந்தணனாகத் திருக்கோலம் பூண்டார். வேதாகம புராணங்களை எழுதியிருக்கின்ற ஒரு நூலை யுண்டாக்கினார். அதனை யெடுத்துக்கொண்டு ஆயிரம் மாணவர்கள் தம்மைப் புடை சூழ்ந்துவர விண்ணுலகில் இருந்து இறங்கி மண்ணுல கத்திற்கு வந்தார். ஆனைமுக அந்தணருடைய வரவை முனிவர்களுடைய இருப்பிடங்களில் இருந்த முனிவர்கள் உணர்ந்தார்கள். அவருடைய ஒளியின் தோற்றத்தைக் கொண்டு வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனைமுக அந்தணர் தம்முடைய திருக்கூட்டத்தோடு முனிவர்களுடைய இருப்பிடத்தை யடைந்தார். முனிவர்க ளெல்லாரும் ''நாம் இனிமேல் உய்ந்தோம் உய்ந்தோம்'' என்று கூறி மகிழ்ந்தார்கள். ஆனைமுக அந்தணருடைய அடிகளிலே விழுந்து பணிந்தார்கள். பிறகு ஆனைமுக அந்தணரைப் பார்த்துத் ''தங்களுடைய வரவால் நாங்கள் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தோம். தங்களுடைய ஊர் எது? இவ்விடத்திற்கு எழுந்தருளிய காரணம் என்ன?'' என்று உசாவினார்கள்.

மல்லாலர்

அந்தணராக வந்த ஆனைமுகக் கடவுள் முனிவர்களைப் பார்த்து ''ஓ முனிவர்களே! உலகில் மறைகள் மறைந் திருத்தலை யுணர்ந்து நாம் எல்லா மறைகளும் எழுதப் பட்டிருக்கிற நூலைக்கொண்டு வந்தோம். இவற்றை நீங்கள் வைத்துக் கொண்டு எல்லா வகையான செயல்களையும் முன்போலவே செய்வீர்களாக. நம்முடைய பெயரை மல்லாலர் என்று எல்லா நூல்களும் இயம்பும். உலகினரும் அவ்வாறு தான் கூறுவார்கள். நமக்கோர் இருப்பிடந் தந்து

உங்களுடைய கவலை யொழித்திருப்பீர்களாக'' என்று சொன்னார். இதனைக் கதவுமர் முதலிய முனிவர்கள் கேட்டு மகிழ்ந்தார்கள். நாம் அளவற்ற தவங்களைச் செய்து பெற வேண்டிய பயனை இவ்வந்தணர் எளிதாகவே தந்தருளினார் என்று எண்ணினார்கள். அவர் தங்கியிருப்பதற்குத் தகுந்த இடத்தை அமைத்துக் கொடுத்தார்கள். துன்பங்களிலிருந்து விடுபட்டார்கள். சில முனிவர்ககள் இவர் பரம்பொருளே என்று எண்ணிப் போற்றினார்கள். சிலர் அவற்றை அடியேங்கட்குத் திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். சிலர் அவர் நான்மறைகளையும் முறையாகக் கூறக் கேட்டு மகிழ்ந்தார்கள். சிலர் மறையினுடைய உண்மைப் பொருளைக் கேட்டு ஐயத்தைப் போக்கிக்கொண்டார்கள். சிலர் தாங்கள் கேட்டவற்றை மற்றவர்கட்கு உரைத்தார்கள்.

### அசுரன் போருக்கு வருதல்

மல்லாலரால் மறைகள் யாண்டும் விளங்குதலைக் கமலாசுரன் உணர்ந்தான். அவன் தன்னுடைய தமையனாகிய சங்காசுரனிடம் போய், ''நாம் மறை முதலியவற்றைக் கைப்பற்றியது வீணாயிற்று. முனிவர்களுடைய இருப்பிடத்திற்கு ஓர் அந்தணன் அவற்றைக்கொண்டு வந்தான். அதனால் குல தருமங்கள் யாண்டும் வளர்ந்து வருகின்றன. வேள்வி, நோன்பு முதலியன நிகழ்வதால் தேவர்கள் அனைவரும் மகிழ்ந்திருக்கிறார்கள். ஆகவே இனிமேல் அவர்கள் நம்மை எவ்வாறு மதிப்பார்கள் ? சிறியோர்களுங் கண்டு இகழத்தக்க பழிப்புக்கு ஆளாகி விட்டோம்'' என்று சொன்னான் இதனைக் கேட்ட சங்காசுரன் நகைத்தான். ''இந்திரன், நான்முகன், திருமால் முதலியோரும் நமக்கு ஒப்பாக மாட்டார்கள் ; அவ்வாறாக ஓர் எளிய அந்தணனோ நமக்கு ஒப்பாகப் போகிறான்? நீ விரைவாகப் போய் அவ்வந்தணனைக் கொன்று அவன் வைத்திருக்கிற மறைநூல்களைக் கைப்பற்றிக் கொள்வாயாக'' என்று சொன்னான். உடனே கமலாசுரன் பெரும்படைகளைத் திரட்டிக்கொண்டு போருக்குப் புறப்

பட்டான். அவன் ஆனைமுகக் கடவுளாகிய மல்லால அந்தணன் இருக்கும் முனிவர்களுடைய இருப்பிடத்தை நோக்கி வந்தான்.

அப்பொழுது அம் முனிவரிருப்பிடத்திலுள்ள முனிவர்கள் எல்லாருங் கேட்குமாறு விண்ணொலியானது, "போர் செய்வதற்குக் கமலாசுரன் வருகின்றான். விழிப்போடிருங்கள்" என்று பேசியது. இதனைக்கேட்டு முனிவர்களெல்லாரும் அஞ்சினார்கள். மல்லாலரிடத்திற்கு வந்து அவரைப் பணிந்தார்கள்; அவரைப் பார்த்து, "அடிகாள்! எவ்வளவேனும் இரக்கமில்லாமல் எல்லா வுலகங்கட்குந் துன்பஞ்செய்து கொண்டு வருகின்ற கமலாசுரன் என்பவன் போர் செய்வதற்கு நால்வகைப் படைகளோடும் இவ்விடத்திற்கு வருகிறான். அக் கொடியோனுடைய வருகையைக் கேட்டு நாங்கள் மிகுந்த அச்சத்தை யடைகிறோம். இவ்விடத்தைவிட்டு ஓடிப்போவதற்கும் வழியைக் காணோம். அவனைக் கொல்லக் கூடியவர்கள் யார்?" என்று கூறி வருந்திப் புலம்பினார்கள்.

### மல்லாலர் போருக்குப் புறப்படல்

முனிவர்கள் மொழிந்தவற்றைக் கேட்ட ஆனைமுகக் கடவுளாகிய மல்லாலர் முனிவர்களைப் பார்த்து, "முனிவர்களே! நீங்களெல்லாரும் என் பிறகே வந்திருக்கக் கடவீர்கள். என்னை ஓர் எளிய அந்தணன் என்று எண்ணாதீர்கள். என்னுடைய ஆற்றலைப் பாருங்கள்" என்று சொன்னார். தம்முடைய மாயையினால் அளவற்ற படைகளை ஒரு நொடிப் பொழுதில் உண்டாக்கினார். அப் புதுமையைக் கண்ட தேவர்களும் முனிவர்களும் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தார்கள். இவ்வாறு ஆனைமுகக் கடவுள் பெரும்படையை உண்டாக்கிய செய்தியைக் கமலாசுரனுடைய தூதர்களில் ஒருவன் பார்த்து மிகுந்த வியப்படைந்து இப் புதுமையைக் கமலாசுரனிடந் தெரியப்படுத்தினான். கமலாசுரன் தன்னுடைய தூதன் கூறியதை ஒரு பொருளாக மதிக்கவில்லை. அவன் அத் தூதனைப் பார்த்து, "இதுவரையில் எவரும் என்னோடெதிர்த்துப் போர் செய்ததில்லை. இப்பொழுது ஓர்

எளிய அந்தணனே என்னேடு போர் செய்வான்? அவனை ஒரு தீக்கணையினுலே அழித்து விடுறேன் பார்'' என்று சொன்னுன். தன்னுடைய படையை விரைவாக நடத்திக் கொண்டு சென்றுன். கமலாசுரனுடைய படைக்கும் ஆனைமுகக் கடவுளாகிய மல்லாலருடைய படைக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. இரண்டு பக்கங்களினும் கணக்கற்ற வீரர்கள் மாண்டொழிந்தார்கள். போர்க்களத்திற் பிணங்கள் மலை மலையாகக் குவிந்தன.

போரிடுதல்

இரு திறத்துப் படைகளும் கணக்கில்லாமல் அழிந்தொழிந்தபின் கமலாசுரனுக்கும் ஆனைமுகக் கடவுளுக்குங் கடுமையான போர் மூண்டது கமலாசுரன் தேவர்களும் அஞ்சி நடுங்கத்தக்க தடிப்படை ஒன்றை எடுத்துக் கொண்டு மல்லாலரோடு போரிட்டான். மல்லாலர் தாமும் ஒரு தடிப் படையை எடுத்துக்கொண்டு அசுரனேடு நெடுநேரம் பெரும் போர் செய்தார் அசுரன் மல்லாலருடைய மார்பின்மீது ஒரு கதையைச் செலுத்தினுன். அதனைக் கண்ட மல்லாலர் தம்முடைய கதையை வீடுத்து அதனைத் தூளாக்கினுர். பிறகு கமலாசுரன் திருமாலின் உருளைப் படையும் வாய் புதைத்து ஏவல் செய்யத்தக்க ஆழிப்படையை எடுத்து அதற்குச் செய்ய வேண்டிய வழிபாட்டைச் செய்து மிகு விரைவாக ஆனை முகக் கடவுள்மீது செலுத்தினுன். அப்படை மிகு சீற்றத்தையுடையதாய்ச் சீறிக்கொண்டு வந்தது. அதனை ஆனைமுகக் கடவுளுடைய திருக்கையில் இருந்த ஆழிப்படையானது ஒரு கவளமாக விழுங்கி விட்டது. பிறகு கமலாசுரன் தன்னுடைய சத்திப் படையைச் செலுத்தினுன். அதனை ஆனைமுகக் கடவுள் தம்முடைய அங்குசப் படையினுல் அடக்கினுர். கமலாசுரன் மழுப்படையைச் செலுத்தினுன். தம்முடைய மழுப்படையால் ஆனைமுகக் கடவுள் அம்மழுப் படையைத் துணித்தார். பிறகு கமலாசுரன் பாசத்தை எடுத்து வீசினுன். ஆனைமுகக் கடவுள் அப்பாசத்தைப் பல துண்டுகளாக அறுத்தெறிந்தார்.

இவ்வாறு தனக்கு அருமையாகக் கிடைத்திருந்த படைகளையெல்லாம் அசுரன் ஆனைமுகக் கடவுள்மீது செலுத்தி இழந்துபோன பிறகு அவனுக்குச் சீற்றம் மிகுதியாகியது. இனிமேல் இவனைத் தெய்வப் படைக்கலங்களால் தாம் அழிக்கவேண்டுமென்று எண்ணினான். வருணக் கணையை எடுத்து வழிபாடு செய்து செலுத்தினான். அக்கணை வெளிப்பட்டவுடன் உலகமெல்லாம் அழிந்தொழியுங்காலத்தில் சிவபிரானுடைய திருவருளால் உலகங்களை அழித்தொழித்தற்குத் தண்ணீர்ப் பெருக்குண்டாதலைப்போல யாண்டுந் தண்ணீர்ப் பெருக்குண்டாகியது. அஃது அலைகளை வீசிக் கொண்டு மிகு விரைவாக வந்தது அதனை ஆனைமுகக் கடவுள் கண்டு பிரளயப் பெருக்கையும் வற்றச் செய்யவல்ல தீக்கணையைச் செலுத்தினார். அக்கணை யாண்டும் நிறைந்திருந்த தண்ணீர்ப்பெருக்கை ஒரு நொடிப் பொழுதிற்குள் உறிஞ்சி விட்டது. இதனைக் கண்ட கமலாசுரன் பெருஞ் சினங்கொண்டு காற்றுக் கணையைச் செலுத்தினான். காற்றுக் கணை தீக்கணையினுடைய ஆற்றலை யடக்கியது. ஆனைமுகக் கடவுள் மிகு விரைவாகப் பாம்புக்கணையை எடுத்துச் செலுத்தினார். பாம்புக் கணை பலவாகிக் காற்றுக்கணையை விழுங்கிவிட்டது. இவ்வாறு வெகுநேரம் ஆனைமுகக் கடவுளுக்கும் கமலாசுரனுக்கும் போர் நடைபெற்றது. இதற்கு முடிவே யில்லாமல் வெகுநேரம் நடைபெற்ற பிறகு கமலாசுரன் தோல்வி யடைந்தான். தோல்வியடைந்தவன் மிகு சூழ்ச்சியாக மறைந்து சென்று கடலின் நடுவில் வாழ்ந்து கொண்டிருக்கிற தன்னுடைய தமையனாகிய சங்காசுரனிடம் போய் அவனைப் பணிந்து நின்றான். கமலாசுரன் தோல்வி யடைந்து வந்திருத்தலைக் கண்ட சங்காசுரன் தன்னுடைய தம்பியைப் பார்த்து, "நீ போருக்குச் சென்றபோது இருந்த முகமகிழ்ச்சி இப்பொழுது போய்விட்டது. உன்னுடைய உடல் முழுவதும் நொறுங்கி வந்திருக்கின்றாய் ஆண்மையிற் சிறந்த நம்முடைய படைகளையெல்லாம் புறமுதுகு காட்டி யோடச் செய்துவிட்டாய்; பகைவர்கட்குப் புறங்காட்டி வருவது வீரர்கட்கு அழகாகுமோ? எவராலுஞ் சாகாத வரம்பெற்ற நீ ஓர் அந்தணனுடைய போருக்குத் தோற்றுப் போனாய்

என்ருல் உலகத்தார் நகைக்க மாட்டார்களா? பேராற்றல் படைத்தவனுகிய உன்னுடைய உடலிலிருந்து இரத்தத் துளிகள் சிந்திஞல் ஒவ்வொரு துளிக்கும் உன்னையொத்த வீரர்கள் அளவற்ற பேர் உண்டாகும்படியான பெருமையை நீ பெற்றிருக்கிருய். இவ்வுலகில் உன்னைக் கொல்ல வல்லவர்கள் யாரிருக்கிருர்கள்? உன்னுடைய அறிவு மயக்கத்தால் உன்னுடைய பேராற்றல் உனக்கே தெரியவில்லை. நீ பெற்றிருக்கிற மேன்மைகளை நான் பெற்றிருப்பேனுயின் எதிர்த்த பகைவர்களை உயிரோடு விட்டு விட்டுத் திரும்பி விடுவேனே? போனது போகட்டும் நாளைக்காவது பகைவனை வென்று வா'' என்று சொல்லி யனுப்பினுன்.

### ஆனைமுகக் கடவுள் திரும்பல்

மல்லாலராகிய ஆனைமுகக் கடவுளும் போர்க்களத்தை விட்டுத் திரும்பித் தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார். முனிவர்கள் மல்லாலரை வரவேற்றுப் பாராட்டிப் போற்றிஞர்கள். மல்லாலர் மறுநாள் பகைவனை அழித்தொழிப்பதாகக் கூறிஞர்.

### மயிலுண்டாக்கல்

அங்கிருந்த முனிவர்களில் ஒருவராகிய காற்கியர் என்பவர் ஆனைமுகக் கடவுளைப் பணிந்து, ''நாளைக்குத் தேவரீர் போருக்குப் போகும்போது ஓர் ஊர்தியில் ஏறிக் கொண்டு செல்லுதல் வேண்டும். இன்று தேவரீர் ஒரு வேள்வி செய்தால் அவ்வேள்வியிலிருந்து மலைபோல ஒரு மயிலுண்டாகும். அம் மயிலின் மீது தேவரீர் ஏறிக்கொண்டு போர்க்களத்திற்குச் சென்று அவ்வசுரனை அழித்தொழிக்க வேண்டும்'' என்று சொல்லி வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுள் அதற்கு உடன்பட்டார். முனிவர்கள் உடனே ஒரு பெரு வேள்வியைச் செய்வதற்கு வேண்டிய பொருள்களையெல்லாந் தேடிக் குவித்தார்கள். ஆனைமுகக் கடவுள் வேள்வியைச் செய்யத் தொடங்கினுர். தம்முடைய தேவியர்களாகிய சித்தி புத்திகளை எண்ணிஞர். உடனே

அவர்கள் விரைந்து வந்து ஆனைமுகக் கடவுளுக்குப் பக்கத்தில் அமர்ந்தார்கள். ஆனைமுகக் கடவுள் மறை முறைப்படி வேள்வியைத் தொடங்கினர். தீயை வளர்த்துத் தேவருணவு முதலியவற்றைக் கொடுத்தார். வேள்விக் குழியிலிருந்து நீண்ட தோகையோடு ஒரு பெரிய மயில் உண்டாகியது. அம்மயில் திங்களும் நாண்மீன் கூட்டங்களும் உதிருமாறு "கூகா" என்று கூவிப் பேரொலி செய்தது.

அவ்வொலியைக் கேட்டு, அனைவரும் மிகுந்த அச்சமடைந்தனர். பிறகு அம்மயில் ஆனைமுகக் கடவுளுக்கு ஊர்தியாகுமாறு தோன்றியிருப்பதால், அதனுல் எத்தகைய தொல்லையும் உண்டாகாதென்று உணர்ந்து மகிழ்ந்தார்கள். அம்மயில் தன்னுடைய அடிகளைப் பெயர்த்து, நிலத்திலே மாறிமாறி வைக்குந்தோறும் நிலத்தைத் தாங்கியிருக்கும் ஆதிசேடனுடைய படம் பொருந்திய முடிகளெல்லாம் நெரிந்தன. ஏழு கடல்களும் கரைபுரண்டன. எண்வகை மலைக் கூட்டங்களும் அதிர்ந்தன. அது தன்னுடைய தோகையை விரித்து ஆடிக்கொண்டிருக்கையில் ஆனைமுகக் கடவுள், அனைவரும் "வெற்றி வெற்றி" என்றுகூற அம் மயிலின்மீது ஏறியருளினர். விண்ணில் ஐவகை ஒலிக்கருவிகளும் முழங்கின. தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். அம்மலர் மாரியால் நிலம் மறைவுபட்டது. முனிவர்களெல்லாரும் ஆனைமுகக் கடவுளை, "மயூரேசர்" என்று பாராட்டிப் போற்றினர்கள்.

### மறுநாட் போர்

மறுநாள் கமலாசுரன் பெரும்படையோடு போர் செய்வதற்கு வந்தான். ஆனைமுகக் கடவுளும் போருக்குப் புறப்பட்டார். அச்சமயத்தில் புத்தி தேவியார் தாம் போருக்குச் செல்வதாக ஆனைமுகக் கடவுளிடம் வேண்டிக்கொண்டார். ஆனைமுகக் கடவுளும் 'அவ்வாறே செல்வாயாக' என்று உடன்பாடு கொடுத்தார். புத்திதேவியார் கமலாசுரனேடு போருக்குச் சென்றார். கமலாசுரன் படைக்கும் புத்திதேவியாருடைய படைக்கும் பெரும் போர் நடைபெற்றது. புத்தி

தேவியின் படையை அசுரவீரர்கள் மிகுதியாக வாட்டினூர்கள். இரு பக்கத்தினும் பிணங்கள் மலைபோற் குவிந்தன. பூதப் படைகள் அவுணப் படைக்கஞ்சி ஓடின. இதனைக் கண்டு புத்தி தேவியார் மிகுதியாகச் சினங்கொண்டார்.

இலாபன்

புத்தி தேவியாருடைய சினத்தினின்றும் ஒரு வீரன் தோன்றினூன். அவனுடைய உயரம் விண்ணையளாவி விளங்கியது. அவனுடைய தோள்கள் மலையைப்போல் விளங்கின. அவன் உலகங்களை எல்லாம் கவளமாக விழுங்கத் தக்க சினமுடையவனூக இருந்தான். அவனுடைய படைக் கலங்கள் உலகங்களையெல்லாம் பொடிப்படுத்தக் கூடியனவாக விளங்கின. அவ்வீரன் புத்தி தேவியினுடைய திருவடிகளை வணங்கினூன். அவன் புத்தி தேவியைப் பார்த்துத், "தாயே! என்னுடைய தந்தை யார்? அவர் எங்கே யிருக்கின்றூர்?" என்று உசாவினூன். புத்தி தேவியார் அவ்வீரனைப் பார்த்து, "மைந்தனே! இதற்குப் பக்கத்தில் முனிவர்களுடைய இருப்பிடம் இருக்கிறது. அதற்குச் சுந்தர ஆசிரமம் என்று பெயர். அங்கு உன்னுடைய தந்தை எழுந்தருளியிருக்கிறூர்," என்று கூறினூர். உடனே அவ்வீரன் சுந்தர ஆசிரமத் திற்குச் சென்றூன். தன்னுடைய தந்தையாகிய ஆனைமுகக் கடவுளைக் கண்டு திருவடிகளில் விழுந்து வணங்கினூன். ஆனைமுகக் கடவுள் அவன்மீது தம்முடைய அருட்பார்வை யைச் செலுத்தினூர். பிறகு அங்கிருந்த முனிவர்களைப் பார்த்து, "ஓ முனிவர்களே! இவன் நம்முடைய மகனூவன். இவனூல் உங்கட்கு எல்லா வகையான இலாபங்களும் கிடைக்குமாகையால் இவனுக்கு இலாபன் என்று பெயர் வழங்கக் கடவது" என்று கூறியருளினூர். உடனே முனிவர்க ளனைவரும் இலாபனைப் பணிந்தார்கள். பிறகு இலாபன் போர்க்களத்திற்குச் சென்றூன். ஆனைமுகக் கடவுளும் அவனைப் பின்பற்றிச் சென்றூர். கமலாசுரன் இலாபனைக் கண்டு, "ஓ பிள்ளாய்! நீயேன் வீணூக உயிரைக் கொடுப்ப தற்கு இங்கு வந்திருக்கிறூய்? உன்னை இப்பொழுதே விட்டு விடுகிறேன். வந்த விடத்திற்கே நீ திரும்பிப் போய்ச்

சேரக்கடவாய்'' என்று சொன்னான். இலாபனுனவன் கமலா சுரனுடைய சொற்களைப் பொருட்படுத்தாது அவன்மீது அளவற்ற கணைகளைச் சொரிந்தான். இலாபனுடைய கணை களால் எண்ணற்ற அவுணப் படை வீரர்கள் மாய்ந்தொழிந் தனர். அவுணப்படை முழுதும் அழிந்துவிட்டது. இதனைக் கண்ட கமலாசுரன் மிகுந்த சினங்கொண்டு இலாபனை எதிர்த்துப் போரிடத் தொடங்கினான். இருவருக்கும் போர் மூண்டது. கமலாசுரன் இலாபன்மீது மோகனக் கணையைச் செலுத்தினான். இதனால் பூதப்படை வீரர்கள் மயங்கிக் கிடந்தனர். பிறகு இலாபன் எல்லாருடைய மயக்கத்தையும் போக்கினான். அப்போது அங்கிருந்த ஆனைமுகக் கடவுளும் இலாபனுடைய அன்பை ஆராயவேண்டி மயங்கினாற்போற் கிடந்து பிறகு தெளிந்தவர்போற் காட்டி யருளினார். கமலாசுரனுக்கும் இலாபனுக்கும் ஆறு நாட்கள் வரை போர் நடந்தது. போரில் இளைத்தவனாகிய கமலாசுரன் புறங் கொடுத்து மறைந்துகொண்டான்.

### கமலாசுரனுக்கும் ஆனைமுகக் கடவுளுக்கும் போர்

இலாபனோடு போர் செய்து ஒளிந்துகொண்ட கமலாசுரன் தன்னுடைய சோர்வு நீங்கிய பிறகு நால்வகைப் படை களையுந் திரட்டிக்கொண்டு மீண்டும் போரிட வந்தான். ஆனைமுகக் கடவுளும் வேள்வியில் தோன்றிய மயில் மீதேறிக் கொண்டு போர் செய்ய வந்தார். கமலாசுரன் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, ''குருவிமேல் வந்த காளாய்! பறவை மீதேறிக் கொண்டு வந்தா என்னோடு போரிட்டு வெற்றி யடையப் போகிறாய்? முன்பு போர் செய்தவர்களை யெல்லாம் ஒரு மோகனக் கணையினால் வென்றேன். உன்னையும் யான் ஒருவனே என்னுடைய கையிலுள்ள கணையினால் பிளப்பேன் அல்லது தேவர்களெல்லாரும் வருந்துமாறு நீருக்கி விடுவேன். நீ இதுவரையில் என்னுடைய ஆற்றலை உணர்ந்துகொள்ள வில்லை உனக்கு ஆற்றல் இருக்குமாயின் என்னோடு போர் செய்ய வருவாயாக'' என்று சொன்னான். இவற்றை யெல்லாங் கேட்ட ஆனைமுகக் கடவுள், 'ஓ அறிவற்றவனே!

நாம் தேவர்களையும் முனிவர்களையும் பாதுகாக்கும் பொருட்டுத் தோன்றியிருக்கிறோம். இதனை நீ சிறிதும் உணர்ந்துகொள்ள வில்லை; முன்பு உன்னைப் போன்ற கொடியவர்கள் பலரைக் கொன்றொழித்திருக்கிறோம். நீ முதல் நாள் செய்த போரில் தோல்வியடைந்து ஓடிப்போனாய். இப்பொழுது அதனை மறந்துவிட்டுப் பேசுகிறாய். மேலும் இன்று நம்முடைய மகனிடம் அடிபட்டு ஓடிப்போய் மீண்டும் வந்திருக்கிறாய். இத்தகைய இழிந்தவனாகிய உனக்கு வாய் வேறா?'' என்று கூறித் தம்முடைய தடிப்படையினால் அவனை அடித்தார். கமலாசுரன் இருப்புலக்கையை எடுத்து ஆனைமுகக் கடவுள் மீது தாக்கினான். உடனே அவ்விருப்புலக்கையானது பொடிப்பொடியாகப் போய்விட்டது. அதனைக் கமலாசுரன் பார்த்து மிகுந்த வியப்படைந்தான். கமலாசுரன்மீது ஆனைமுகக் கடவுள் தோமரத்தைச் செலுத்தினார் அதனைக் கமலாசுரன் கேடகத்தினாலும் படைகளினாலுந் தடுத்து விட்டான். பிறகு அவன்மீது சூலப் படையைச் செலுத்தினார். அவனுஞ் சூலப் படையைச் செலுத்தினான். இருவரும் இவ்வாறு நெடுநேரம் போரிட்டனர். போர்க்களமெங்கும் உதிரப் பெருக்கு மிகுதியாயிற்று. கழுகுகள், நாய்கள், பேய்கள் முதலியன கூட்டங் கூடி, ஊனைப் பிடுங்கித் தின்று கூத்தாடலாயின.

கமலாசுரன் பெரும்போர் செய்தலை இலாபன் பார்த்தான். சிங்கவேறுபோற் சீறியெழுந்தான். தன்னுடைய கையினால் கமலாசுரனுடைய குதிரையின் முகத்திற் குத்தினான். அக்குத்தினால் குதிரை விழுந்து மாண்டது. இதன் பிறகு கமலாசுரன் விண்ணில் எழுந்து மறைந்து நின்று கணைகளைச் சொரிந்தான். அவன் கணைகளை மிகுதியாகச் சொரிந்தபடியினால் யாண்டும் இருள் மூடிக்கொண்டது. அதனால் பூதப்படைகள் சுழற்சியடைந்து வருந்தின.

ஆனைமுகக் கடவுள் மிகுந்த சினங்கொண்டு, "அட அறிவற்றவனே! எதிரே நின்று போர் செய்வதற்குத் திறமை யில்லாமல் விண்ணில் மறைந்து நின்று போர் செய்கிறாயா?

உன்னை இப்பொழுதே தொலைக்கிறேன் பார்" என்று கூறித் தம்முடைய கையிலிருந்த கயிற்றைச் செலுத்தினார். அக் கயிறு கமலாசுரனுடைய மாயையைப் போக்கி அவனைக் கட்டிக்கொண்டு வந்து ஆனைமுகக் கடவுளின் திருமுன்பு விட்டது.

பல அசுரர்கள் தோன்றுதல்

தன்முன் நின்ற கமலாசுரனை ஆனைமுகக்கடவுள் பார்த்து, "அடா தீயோனே! வீரமுடையோர் போரில் ஆற்றல் குன்றினால் தம்முடைய உயிரைப் போரில் விடுவார்களே யல்லாமல் உன்போல் பேடி மாதிரி மறைந்து நின்று போர் செய்யமாட்டார்கள். இனியேனும் நீ துன்பம் நீங்கிப் பிழைக்கவேண்டுமானால் நம்மிடம் அடைக்கலம் புகுவாயாக" என்று சொன்னார். இதனைக் கேட்ட கமலாசுரன் சினங் கொண்டு மீண்டும் போருக்கெழுந்தான். தடிப்படையைச் சுழற்றி ஆனைமுகக் கடவுளுடைய மார்பில் எறிந்தான். அதனைக் கடவுள் தம்முடைய கையிலிருந்த தடிப் படையினால் தாக்கிப் பொடி செய்தார். பிறகு அதனையே அவனுடைய மார்பு பிளக்குமாறு வீசினார். அவனுடைய மார்பு பிளந்து மலையருவிபோல் உதிரம் பெருகி நிலத்திற் பாய்ந்தது. அப்பொழுது அவ்வுதிரத்திலிருந்து ஒவ்வொரு துளிக்கும் அவனுக்கிணையான வீரர்கள் அளவற்ற பேர் உண்டானார்கள். அவர்களெல்லாரும் ஆனைமுகக் கடவுளை யெதிர்த்துக் கொடும் போர் புரியலானார்கள். இப்புதுமையைத் தேவர் களும் முனிவர்களும் கண்டு அஞ்சினார்கள். கமலாசுரனுடைய உதிரத்திலிருந்து தோன்றிய வீரர்களைக் கொன்றாலும் அவர்களுடைய உதிரத்திலிருந்தும் அளவற்ற அவுணர்கள் உண்டாகிக் கொடும்போர் புரியலானார்கள். இதனால் அவுணர்களின் கூட்டம் அளவு கடந்ததாகப் பெருகிவிட்டது.

உதிரம் பருகும் பூதவீரர்கள்

அளவற்ற அவுணர் உண்டாவதைக் கண்ட இலாபன் தன்னுடைய தாயார்களாகிய சித்திபுத்திகளை எண்ணினான்.

அவர்கள் தங்களுடைய மகனின் கருத்தை யறிந்தார்கள். போர்க்களத்திற்கு வந்து போர் நடக்கும் புதுமையைப் பார்த்தார்கள். ஒன்பது கோடிப் பூத வீரர்களை உண்டாக்கி அவுணர்கள்மீது செலுத்தினார்கள். அப்பூத வீரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோர் அண்டங்களைத் தம்முடைய வயிற்றுக்குள் அடக்கக்கூடிய ஆற்றல் பொருந்தியவர்கள். அவர்கள் அவுண வீரர்களுடைய கூட்டத்திற்குட் புகுந்து அவர்களுடைய உதிரம் நிலத்திலே விழாதபடி குடித்தார்கள். அவுண வீரர்களையெல்லாம் எடுத்து விழுங்கினார்கள். இதனால் எல்லா அவுணர்களுந் தொலைந்து போகக் கமலாசுரன் ஒருவன் மட்டும் எஞ்சியவனானான்.

### கமலாசுரன் வீடுபேறு

பிறகு கமலாசுரன், "நாம் இவனைக் குருவி மீதேறி வந்த காளையென்று இகழ்ந்தோம். இவன் நம்மோடு அளவற்ற போரைச் செய்ததுமல்லாமல் நம்முடைய மேன்மைகளையெல்லாம் அழித்தான். நம்முடைய புகழையும் ஒழித்தான். இவன் பேராற்றல் பொருந்தியவனாக இருக்க வேண்டும். இவனை ஏய்த்துவிட்டு ஓடிவிடலாம் என்றால் இயலாது. இவன் எவ்வகையிலும் நம்மைக் கொலை செய்யாமல் விடான்" என்று எண்ணினான். பிறகு சிறிது மனத்திடங்கொண்டவனாய்த் தன்னுடைய வில்லை வளைத்து ஆனைமுகக் கடவுள்மீது அளவற்ற கணைகளைச் செலுத்தினான். அக்கணைகளை யெல்லாம் ஆனைமுகக் கடவுள் பொடியாக்கினார். தம்முடைய சூலப்படையினால் அவனுடைய கழுத்திலொரு குத்தும் வயிற்றிலொரு குத்தும் இடுப்பிலொரு குத்துங் குத்தினார். இம்மூன்று குத்துக்களாலும் கமலாசுரன் நிலத்திலே சாய்ந்தான்; அப்பொழுதே இறந்தான். அவனுடைய உயிர் ஆனைமுகக்கடவுளுடைய திருவடிகளை யடைந்தது. ஆனைமுகக் கடவுள் பேரருள் பொருந்திய அருட்பெருமானாகையால், அவ்வசுரனுடைய குற்றங்களை ஒரு பொருட்படுத்தாமல் பகைவனாகிய அவனுக்கும் வீடுபேற்றை வழங்கியருளினார். கமலாசுரன் இறந்ததைக் கண்டு தேவர்களும் முனிவர்களும் இன்பக்

கூத்தாடினார்கள். பூதவீரர்கள் குரவைக் கூத்தாடினார்கள். நான்முகன் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டான்.

## 73. பிந்திய மயூரேச விநாயகர்

### சக்கிரபாணி என்னும் அரசன்

மைதல நாட்டில் கண்டக நகரம் என்னும் பட்டணத்தில் சக்கிரபாணி என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் திருமாலுக்கு ஒப்பானவன். ஒற்றை யாழி செலுத்தி முறைப்படி அரசாட்சி செய்துகொண்டிருந் தான். அவனுடைய மனைவியின் பெயர் உக்கிரை. அவ் வரசனுக்குத் தர்மபுத்தி, சாம்பன் என்னும் பெயருடைய அமைச்சர்கள் இருவர் இருந்தனர். அவ்வரசனுக்கு நெடுங் காலம் மக்கட் பேறுண்டாகவில்லை. அதனால் அவன் மிகுந்த மனவருத்தமடைந்தவனாய்த் தவம் தானம், தருமம், நோன்பு, வேள்வி ஆகியவற்றை அளவில்லாமற் செய்தான். அவனுக்குப் பிள்ளைகள் பிறந்தும் பிறந்தவுடனேயே இறந்து கொண்டிருந்தார்கள்.

### சவுனக முனிவர் வருகை

மக்கள் பிறந்தவுடன் இறத்தலைக் கண்ட அரசன் மிகுந்த வருத்தத்தை யடைந்தான். அரசியற் சுமையை அமைச்சர்களிடத்தில் வைத்துவிட்டுக் காட்டிற்குப்போய்த் தவஞ்செய்ய எண்ணினான். செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டுக் காட்டிற்குப் புறப்படத் தொடங்கினான். அச்சமயத்தில் சவுனக முனிவர் தற்செயலாக அங்கேவந்தார். அவர் அரசனைப் பார்த்துக், 'கதிரவ நோன்பைக் கடைப் பிடித்தால் நன்மக்கட் பேற்றை யடையலா''மென்று கூறி அந்நோன்பைச் செய்யவேண்டிய முறையையுங் கூறினார். அரசன் முனிவருக்குப் பொன்னும் பொருளுங் கொடுத்தான். முனிவர் அவற்றை வேண்டாவென்று கூறிவிட்டுத் தம் வழியே சென்றார். அரசனும் அவனுடைய மனைவியும்

மனக்கவலை நீங்கினார்கள். முனிவர் கூறிய முறைப்படி நோன்பைக் கடைப்பிடித்தார்கள். அவ்வரசன் மலடன் என்பதைக் கதிரவன் உணர்ந்தான். அவ்வரசனுடைய மனைவியாகிய உக்கிரையினுடைய கனவில் அவளுடைய கணவனைப் போல் வடிவமெடுத்துக் கொண்டு தழுவினான். அதனால் அவள் கருப்பந்தரிக்குமாறு செய்து சென்றான்.

## மக்கட் பேறு

உக்கிரையானவள் கனவின் நிலையை உணராமல் தன்னுடைய கணவனே தழுவியதாக எண்ணினாள். மறுநாள் தன்னுடைய கணவனைப் பார்த்துக், "காமமானது கடலைப் போல உண்டானாலும் ஒரு நோன்பைச் செய்பவர்கள் அந்நோன்புக் கிடையில் மாதர்களைத் தழுவினால் அந்நோன்பு பயனற்றுப் போகாதோ?" என்று கேட்டாள். நடந்ததை உணராத அரசன், "நீ இவ்வாறு இயம்புவதற்குப் பொருள் யாது?" என்று உசாவினான். அதற்கு அவள், "இரவு என்னைத் தழுவியதைத்தான் கூறுகிறேன்" என்று சொன்னாள். இதனைக் கேட்ட அரசன் தனக்குள்ளே சிறிதுநேரம் எண்ணிப் பார்த்துவிட்டுப் பிறகு மனைவியை நோக்கி, "மாதே நமக்கு நன்மக்கட் பேறுண்டாகுமாறு நோன்புக்குரிய கடவுளே என் வடிவெடுத்து உன்னோடு கலந்து சென்றதாகத் தெரிகிறது. இதற்குச் சிறிதும் ஐயமில்லை. இனிமேல் நம்முடைய மனக்கவலை ஒழியும்" என்று சொன்னான்.

உக்கிரை பத்தாந் திங்களில் சிந்து நதிக்கரையில் இருக்கும்போது ஒரு புதல்வனைப் பெற்றாள். அப் புதல்வன் பிறக்கும்போதே சிவந்த சடைகளும் மூன்று கண்களும் உடையவனாகவும், கையிற் படைக்கலங்களைத் தாங்கிய வனாகவும், மிகுந்த ஒளியை வீசுகின்ற உடலையுடையவனாகவும், நடலொலியும் நடுங்கத்தக்க பேரொலி உடையவனாகவும் இருந்தான். அம்மகனை உக்கிரை பார்த்து அஞ்சி மூர்ச்சை யடைந்தாள். அவளுடைய பக்கத்திலிருந்த தோழிமார்கள்

அச்சமடைந்து ஓடிப்போனுர்கள். வருணன் அந்தணனைப் போல வடிவங்கொண்டு அங்கு வந்தான். உக்கிரையினுடைய மூர்ச்சையைத் தெளிவித்தான். குழந்தையைக் கையி லெடுத்துக் கொண்டு அவனை அரசனிடம் அழைத்துச் சென்றுன். அரசனைப் பார்த்து, "இப்புதல்வன் சிந்துநதிக் கரையிற் பிறந்தானுகையால் இவனுக்குச் சிந்துவென்று பெயரிட வேண்டு"மென்று கூறிச் சென்றுன். அரசன் பிறந்த நாட்குறிப்பு முதலியன எழுதிச் செய்யவேண்டிய சடங்கு களைச் செய்து, அந்தணர், அருந்தவத்தோர் முதலியவர் கட்குத் தானங்கள் வழங்கினுன்.

சிந்துவின் தவம்

சிந்துவானவன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தான். செய்தற்கரிய விளையாடல்கள் பலவற்றைச் செய்தான். அசுரகுரு சிந்துவினிடம் வந்து அருமறைகளை அவனுக்குரைத்தான். "நீ சிவபிரானை நோக்கித் தவஞ் செய்து சிறந்த மேன்மைகளைப் பெற்றுத் தேவர்களை யெல்லாம் அடக்கி அசுரர்கட்கு நன்மைகள் செய்து சிறப்புடன் வாழ்ந்திருப்பாயாக" என்று வாழ்த்துரை கூறிவிட்டுச் சென்றுன். சிந்துவானவன் காட்டிற்குப் போய் வலக்காற் பெருவிரலை நிலத்தில் ஊன்றி இடக்காலை அவ்வலக்கால் முழந்தாளின்மீது முடக்கி வைத்து மார்புக்கு நேராக இருகைகளையுங் கூப்பி ஐம்புலன்களையும் அடக்கிச் சிவபிரானைக் குறித்துக் கதிரவனைப் பார்த்த வண்ணமே இரண்டாயிரம் ஆண்டுகள் தவஞ்செய்தான். சிவபிரான் சிந்துவின் தவத்திற் கிரங்கிக் காட்சி கொடுத்தார். "வேண்டிய வரங்களைப் பெற்றுக் கொள்வாயாக" என்று கூறினுர். சிந்து சிவபிரானை வணங்கினுன். "அடியேனுடைய உடல் எண்பத்து நான்கு நூருயிரம் யோனி பேதங்களாலும் அழிவில்லாமல் நெடுநாளிருக்கவேண்டும். மூவுலகங்களையும் ஒரே குடை நிழலில் ஆளவேண்டும். நான்முகன் முதலிய தேவர்களும், அசுரர்களும் நிலவுகிலுள்ள அரசர்களும் என்னை வணங்கி, யானிட்ட பணிகளைச் செய்து கொண்டிருக்க வேண்டும்" என்றிப்படிப் பல மேன்மைகளைக் கேட்டான்.

சிவபெருமான், "ஆனைமுகப் பெருமான் தோன்றினாலன்றி உனக்கு அழிவுண்டாகமாட்டாது" என்று கூறி அவன் கேட்ட சிறப்புகளை வழங்கிச் சென்றார்.

### சிந்துவின் அரசாட்சி

சிவபிரானிடம் அளவற்ற சிறப்புகளைப் பெற்ற சிந்து ராசன் தன்னுடைய கண்டக நகரத்திற்கு வந்து சேர்ந்தான். சிறந்த வரங்களைப் பெற்று வந்த சிந்துவைப் பார்த்து அவன் தந்தையாகிய சக்கிரபாணி மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். தன்னுடைய அரசுரிமையை அவனிடத்தில் ஒப்புவித்தான். சிந்துவானவன் மித்திரன் கவுத்துவன் என்னும் பெயரினை யுடைய இருவரைத் தனக்கு அமைச்சர்க ளாக்கிக்கொண்டு எல்லா உலகங்களையும் வென்று தன்னடிப் படுத்துமாறு படையெடுத்துச் சென்றான். வணங்காத மன்னர்களுடைய உயிரை வாங்கினான். வணங்கினோரிடத்திற் றிறை வாங்கினான். நிலவுலகம் முழுவதிலும் தன்னுடைய ஆணையைச் செலுத்தினான். கதம்பாசுரன், சம்பாசுரன், கனலாசுரன், கோலாசுரன் என்னும் நால்வரையுந் தன்னுடைய நால்வகைப் படைகட்கும் படைத்தலைவர்களாக்கினான். அவர்கட்குச் செய்ய வேண்டிய சிறப்புகளைச் செய்தான். தனக்கு அடங்காமல் எதிர்த்து வந்த கம்பாசுரன், நிசும்பாசுரன், காலாசுரன், பிரகண்டாசுரன், விருத்திராசுரன் என்பவர்களோடு நெடுநாள் போர் செய்து அவர்களை அடக்கினான். பிறகு அவர்கட்குச் செய்ய வேண்டிய சிறப்புகளைச் செய்து அழைத்துக்கொண்டு சென்றான். சண்டாசுரன் என்பவனோடு போரிட்டு அவனைக் கொன்றான். அவனுடைய மகனுக்கு முடி சூட்டினான். இவ்வாறு அவுணமன்னர்கள் அனைவரையும் வென்றான். பிறகு விண்ணுலகத்திற்குச் சென்று தேவர்களோடு போரிட்டான். இந்திரன் போர் செய்ய முடியாமல் ஓடி ஒளிந்தான். பிறகு சிந்து அவ்விடத்திலும் தன்னுடைய அவுணர்களை நிறுத்தி அரசாட்சி செய்யச் செய்தான். தான் நிலவுலகத்தை அடைந்தான்.

### திருமால் முதலியவர்களைப் பிடித்து அடக்கல்

சிந்து மன்னனுடைய செய்தியை உணர்ந்து கொள்ளாத திருமால் தேவலோகத்தினை வென்று இந்திரனிடம் ஒப்புவிக்க எண்ணினர். அங்கு அரசு செய்திருந்த அவுணர்களோடு போரிட்டார். செய்தியை உணர்ந்த சிந்து தேவலோகத்திற்குப் போய்ப் போரிட்டு இந்திரன் திருமால் நான்முகன் முதலிய தேவர்களையெல்லாஞ் சிறைப்பிடித்து வந்து தன்னுடைய நகரத்தில் காவல் செய்தான். சிறையில் அகப்பட்டுக்கொண்ட தேவர்கள் தங்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டுமென்று ஆனைமுகக் கடவுளை வணங்கி அக் கடவுளுக்குரிய நோன்புகளையும் கடைப்பிடித்தார்கள். சிந்துரனுடைய தொல்லைக்குட்பட்ட முனிவர்கள் தங்களுடைய தொல்லையை ஒழித்தருளவேண்டுமென்று ஆனைமுகக்கடவுளை நோக்கித் தவம் புரிந்தார்கள்.

### பிந்திய மயூரேசர் தோற்றம்

தேவர்கள் முனிவர்கள் முதலியோருடைய துன்பங்களைப் போக்கி அருள் செய்ய எண்ணிய ஆனைமுகக் கடவுள் உமாதேவியிடத்தில் பேரொளி பொருந்திய குழந்தையாகத் தோன்றினர். அப்பிள்ளையின் பேரொளி உமாதேவியினுடைய கண்களையுங் கூசுமாறு செய்தது. அதனைக் கண்டு உமாதேவியார் அஞ்சினர். அப்பொழுது ஆனைமுகக் கடவுள் அளவற்ற கண்களும், அளவற்ற வாய்களும், அளவற்ற காதுகளும், அளவற்ற கைகளும், அளவற்ற கால்களும் உடையவராய்ப் பெருவடிவங்கொண்டு நின்றார். அப்பெருவடிவத்தைக் கண்ட உமாதேவியார் அஞ்சி, ''நான் வளர்க்கத்தக்க சிறு குழந்தையாக வேண்டு''மென்று வேண்டிக் கொண்டார். ஆனைமுகக் கடவுளும் அவ்வாறே சிறு குழந்தையாக அம்மையார் முன் தோன்றினர். அம்மையார் ஆனைமுகக் கடவுளை அன்பு பாராட்டி வளர்க்கலானர். ஆனைமுகக் கடவுள் தோன்றிய சமயத்தில் விண்ணில் ஐவகையான ஒலிக் கருவிகளும் முழங்கின. தேவர்கள் மலர்மாரி பெய்தார்கள். நான்கு திக்குகளினும் இளந்

தென்றல் வீசியது. தேவர்களுடைய வலத் தோள்களும் வலக்கண்களுந் துடித்தன. சிந்துராசனுடைய கண்டக நகரத்திற் குருதி மழை பொழிந்தது. அவனுடைய அரண் மனையிலுங் கோபுரத்திலும் பகற் காலத்தில் ஆந்தைகள் கூவின. சிந்து மன்னனுடைய இடத்தோளும் இடக் கண்ணுந் துடித்தன. தீக்குறிகளைக் கண்டு சிந்துராசன் கலங்கினன். தேவர்கள் மனங் களித்தார்கள். ஆனைமுகக் கடவுள் வளர்ந்து கொண்டிருந்தார்.

பொன்னுடை போர்த்துதல்

ஒருநாள் கிருச்சமத முனிவர் என்பவர் ஆனைமுகக் கடவுள் வளர்ந்து கொண்டிருக்குமிடத்திற்கு வந்து ஆனைமுகக் கடவுளைப் பணிந்து பொன்னுடை ஒன்றைப் போர்த்தி விட்டுச் சென்றார். பல முனிவர்கள் ஆனைமுகக் கடவுள் வளருமிடத்திற்கு வந்து போற்றி வழிபட்டுச் சென்றார்கள். ஒருநாள் மரீசி முனி வந்து ஆனைமுகக் கடவுளை வணங்கினர். அப்பொழுது பல முனிவர்கள் மரீசி முனிவரைப் பணிந்து, "எங்கட்கு எத்தகைய துன்பமும் நேராதிருக்குமாறு அருள் செய்யவேண்டும்" என்றுவேண்டிக் கொண்டார்கள். மரீசி முனிவர் அம் முனிவர்களைப் பார்த்து, "ஆனைமுகக் கடவுள் இருக்கும்போது உங்கட்கு எத்தகைய துன்பமும் உண்டாகாது. ஆயினும் நீங்கள் அக்கடவுளை இப்பாடல்களாற் போற்றுவீர்களாக" என்று சொல்லிப் பாதுகாப்பளிக்கும் வணக்கப் பாடல்களை அவர்கட் குரைத்துச் சென்றார்.

## விநாயக கவசம்

*வளர்சிகையைப் பராபரமாய் வயங்குவிநா*
*யகர்காக்க வாய்ந்த சென்னி*
*அளவுபடா அதிகசவுந் தரதேக*
*மதோற்கடர்தாம் அமர்ந்து காக்க*
*விளரறநெற் றியைஎன்றும் விளங்கியகா*
*சிபர்காக்க புருவந் தம்மைத்*

தளர்வின்மகோ தரர்காக்க தடவிழிகள்
பாலசந் திரனுர் காக்க. (௧)

கவின்வளரு மதரங்கச முகர் காக்க
தாலங்கணக் கிரீடர் காக்க
நவில்சிபுகம் கிரிசைசுதர் காக்கநனி
வாக்கைவிநா யகர்தாங் காக்க
அவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ்
செவிபாச பாணி காக்க
தவிர்தலுரு திளங்கொடிபோல் வளர்மணிநா
சியைச்சிந்தி தார்த்தர் காக்க. (௨)

காமருபூ முகந்தன்னைக் குணேசர்நனி
காக்ககளங் கணேசர் காக்க
வாமமுறு மிருதோளும் வயங்குகந்த
பூர்வசர்தாம் மகிழ்ந்து காக்க
ஏமமுறு மணிமுலைவிக் கினவிநா
சன்காக்க இதயந் தன்னைத்
தோமகலுங் கணநாதர் காக்கவகட்
டினைத்துலங்கே ரம்பர் காக்க. (௩)

பக்கமிரண் டையுந்தரா தரர்காக்கப்
பிருட்டத்தைப் பாவ நீக்கும்
விக்கினக ரன்காக்க விளங்கிலிங்கம்
வியாளபூ டணர்தாங் காக்க
தக்கதுய்யந் தன்னைவக் கிரதுண்டர்
காக்கசக னத்தை யல்லல்
உக்கண பன்காக்க ஊருவைமங்
களமூர்த்தி உவந்து காக்க. (௪)

தாழ்முழந்தாள் மகாபுத்தி காக்கஇரு
பதமேக தந்தர் காக்க
வாழ்கரங்கிப் பிரப்பிரசா தனர்காக்க
முன்கையை வணங்குவார் நோய்
ஆழ்தரச்செய் ஆசாபூ ரகர்காக்க
விரல்பதும அத்தர் காக்க

கேழ்கிளரு நகங்கள்விநா யகர்காக்க
கிழக்கினிற்புத் தீசர் காக்க. (௫)

அக்கினியில் சித்தீசர் காக்கவுமா
புத்திரர்தென் னுசை காக்க
மிக்கவிரு தியிற்கணே சுரர்காக்க
விக்கினவர்த் தனர்மேற் கென்னும்
திக்கதனில் காக்கவா யுவிற்கசகன்
னன்காக்கத் திகழு தீசி
தக்கநிதி பன்காக்க வடகிழக்கில்
ஈசநந் தனரே காக்க. (௬)

ஏகதந்தர் பகல்முழுதுங் காக்கவிர
வினுஞ்சந்தி யிரண்டன் மாட்டும்
ஓகையில்விக் கினகிருது காக்கவிராக்
கதர்பூதம் உறுவே தாளம்
மோகினிபேய் இவையாதி உயிர்த்திறத்தால்
வருந்துயரு முடிவி லாத
வேகமுறு பிணிபலவும் விலக்குபுபா
சாங்குசர்தாம் விரைந்து காக்க. (எ)

மதிஞானந் தவந்தான மானமொளி
புகழ்குலம்வண் சரீர முற்றும்
பதிவான தனந்தானி யங்கிரக
மனைவிமைந்தர் பயினட் பாதிக்
கதியாவுங் கலந்துசர்வா யுதர்காக்க
காமர்பவுத் திரர்முன் னுன
விதியாருஞ் சுற்றமெலாம் மயூரேசர்
எஞ்ஞான்றும் விரும்பிக் காக்க. (அ)

வென்றிசீ விதங்கபிலர் காக்ககரி
யாதியெலாம் விகடர் காக்க
என்றிவ்வா றிதுதனைமுக் காலமுமோ
திடினும்பால் இடையூ ருென்றும்

ஒன்றுரு முனிவரர்காள் அறிமின்கள்
யாரொருவர் ஓதி னாலும்
மன்றவாங் கவர்தேகம் பிணியறவச்
சிரதேக மாகி மன்னும். (க)

முனிவர்கள் மரீசிமுனிவர் உரைப்படியே இப்பாடல்களை நாள்தோறுங் கூறிப் போற்றிவந்தார்கள்.

### சிந்துராசன் கலக்கம்

ஆனைமுகக் கடவுள் தோன்றியபோது ஏற்பட்ட தீக்குறிகளைக் கண்டு சிந்துராசன் அச்சங்கொண்டான். தன்னுடைய தூதுவர்களைப் பல திக்குகளுக்கும் அனுப்பி, "யாண்டேனும் புதுமையான நிகழ்ச்சிகள் உண்டாகியுள்ளனவா பார்த்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான். தூதர்கள் பல திக்குகளினுஞ் சுற்றிப் பார்த்தனர். தண்டகக் காட்டில் சிவபிரான் எழுந்தருளியிருத்தலையும் கண்டு சிந்துவிடம் இந்தச் செய்தியை உரைத்தனர். இதனைக்கேட்ட சிந்து அஞ்சினான். முன்பு சிவபிரான் மொழிந்தபடி ஆனைமுகக் கடவுளே நம்மைக் கொல்வதற்குத் தோன்றியுள்ளார் போலும் என்று எண்ணினான். அச்சமயத்தில் "தோன்றியுள்ள பிள்ளையாரால் உனக்கு அழிவுண்டாகும்" என்று வானொலி ஒன்று உண்டாகியது. இதனைக் கேட்ட சிந்து அஞ்சினான். அக்குழந்தையோடு போரிட்டு அதனைக் கொன்றுவிடவேண்டுமென்று எண்ணிப் புறப்பட்டான். அமைச்சர்கள் சிந்துராசனைத் தடுத்துக், "குழந்தையின்மீது போருக்குச் செல்வது நமக்கு இழிவாகும். அக்குழந்தையை வஞ்சகமாகக் கொன்றுவிடலாம்" என்று அறிவுரை கூறினார்கள். சிந்து, அமைச்சர்களுடைய அறிவுரையைக் கேட்டு அவ்வாறே செய்ய இணங்கினான்.

### சிந்து அசுரர்களை அனுப்புதல்

மாயையிலும் போர்செய்வதிலும் வல்லவர்களான சில அசுரர்களை அழைத்து, "நீங்கள் எவ்வகையான சூழ்ச்சியினாலாவது எனக்குப் பகையாகத் தோன்றியுள்ள ஆனைமுகக் கடவுளான குழந்தையைக் கொன்று விடுங்கள்" என்று

கட்டளையிட்டனுப்பினன். அவர்கட்கு மிகுதியான பரிசுகளையும் வழங்கினன். அசுரர்கள் பலர் தங்கட்குண்டாகப் போகும் அழிவினை உணராமல் ஆனைமுகக் கடவுளைக் கொலை செய்வதற்குச் சென்றார்கள்.

## 74. விநாயகர் திருவிளையாடல்

கிருத்திராசுரன் (க)

கிருத்திராசுரன் என்பவன் ஒரு கழுகு வடிவத்தை எடுத்துக்கொண்டு தன்னுடைய சிறகின் காற்றினால் பல பெரிய மலைகளையும் மரங்களையும் நிலத்தில் தள்ளிக்கொண்டு பெரிய முகில்களெல்லாஞ் சிதறுமாறு விண்ணிற் பறந்து சென்றான். நீராட்டி இல்முன் வைக்கப்பட்டிருந்த ஆனைமுகக் கடவுளாகிய குழந்தையைச் சரேலென்று நிலத்திற் பாய்ந்து எடுத்துக்கொண்டு சென்றான். முனிவர்கள் இதனைக் கண்டு அஞ்சினார்கள். பூதகணங்கள் ஆனைமுகக் கடவுளை மீட்டுக் கொண்டு வருவதற்காக விண்ணிற் பாய்ந்தார்கள். ஆனைமுகக் குழந்தை தன்னை யெடுத்துக்கொண்டு சென்ற கழுகின் கழுத்தைக் கையாற் பிடித்து நெரித்துவிட்டு உமாதேவியின் மடிக்கு வந்து சேர்ந்தது. கழுத்து நெரிக்கப்பட்ட கிருத்திராசுரன் நிலத்தில் விழுந்தான். அவனுடைய உடலில் இருந்து உதிரப்பெருக்கு மிகுந்தோடியது. அவ்வுதிரப்பெருக்கில் மலைகள் மூழ்கிப் போயின. அவன் நிலத்தில் விழுந்த பொழுது பத்து யோசனை அகலத்திற்கு மரஞ் செடி கொடிகள் அழிந்து போயின.

கேமாசுரனுங் குசலாசுரனும் (உ)

இதன் பிறகு இரண்டாவது திங்களில் கேமாசுரன் எனவும் குசலாசுரன் எனவும் பெயருடைய இரண்டசுரர்கள் ஆனைமுகக் குழந்தையைக் கொல்ல வந்தார்கள். அவர்கள் பன்னிரண்டு யோசனை உயரமுள்ளவர்கள். அவர்கள் பெருச்சாளியாக வடிவம் எடுத்தார்கள். ஒருவரோடொருவர் போரிட்டுக்கொண்டு ஆனைமுகக் குழந்தைமீது வந்து

விழுந்தார்கள். ஆனைமுகக் கடவுள் பெரும்பூனையாக வடிவமெடுத்து இருவரையுங் கடித்துக்கொன்றுவிட்டார்.

குரூராசுரன்　　(௩)

பிறகு மூன்றுந் திங்களில் மிகுந்த ஆற்றலும் பதினைந்து யோசனை உயரமும் உள்ள குரூராசுரன் என்பவன் பூனை உருவங்கொண்டு ஆனைமுகக் குழந்தை திருமுன் வந்தான். ஆனைமுகக் குழந்தை நான்கு மறைகளையும் நினைத்தருளியது. உடனே நான்மறைகள் நாயாக,வந்து பூனையாக வடிவெடுத்து வந்த அசுரனைக் கடித்துக் கொன்றுவிட்டன.

பலாசுரன்　　(௪)

நான்காந் திங்களில் பலாசுரன் என்பவன் முனிமகனைப் போல் உருவமெடுத்துக்கொண்டு வந்தான். ஆனைமுகக் குழந்தையிடம் வந்து, "நாம் விளையாடலாம் வா" என்று அழைத்தான். ஆனைமுகக் குழந்தை விளையாட்டாகவே அவனைக் கொன்றுவிட்டது. அவன் இறந்தபிறகு தன்னுடைய உண்மை வடிவத்தோடு இருபது யோசனை அகலத்திற்கு நிலத்தில் விழுந்தான்.

வியோமாசுரன்　　(௫)

ஐந்தாம் திங்களில் வியோமாசுரன் என்பவன் ஒரு பெரிய மாமரமாக உருக்கொண்டு நின்றான். முனிமக்கள் சிலர் அம்மரத்தின் காய்கனிகளைப் பறித்துத் தின்று அவ்விடத்திலேயே இறந்து போனார்கள். அதனால் அச்சிறுவர்களின் தாய்மார்கள் மிகுந்த துன்பப்பட்டார்கள். ஆனைமுகக் குழந்தை அம் மாமரத்திடஞ் சென்று நின்றது. அதில் தேன் கூடுகட்டியிருக்கிற பொந்து ஒன்றைக் கண்டு அதில் நுழைந்தது. உடனே அப் பொந்து மூடிக்கொண்டது. இதனைப் பார்த்து முனிவர்கள அஞ்சினார்கள். இஃது ஏதோ மாயை என்று கலங்கி ஓடினார்கள். ஆனைமுகக் குழந்தை அம்மரத்துக்குள்ளிருந்தவாறே அதனை அலைத்துப் பிளந்தது. முன்பு தூணிலிருந்து வெளிவந்த நரமடங்கலைப் போல்

வெளியே வந்தது. அதனடியில் இறந்துகிடந்த முனிச்சிறுர் கட்கெல்லாம் உயிர்கொடுத் தெழுப்பியது. இதனைக் கண்டு எல்லோரும் வியப்படைந்தார்கள்.

சதமயிடபக்கணி (சு)

ஆறுந் திங்களில் நாள் ஒன்றுக்கு நூறு எருமைகளைத் தின்பதால் சதமயிடபக்கணி என்னும் பெயர்பெற்ற ஓர் அசுரமாதானவள் இந்திராணியைப்போல் வடிவங்கொண்டு உமையவளிடத்திற்கு வந்தாள். உமாதேவியைப் பார்த்துத், "தாயே நான் இந்திராணி. என்னுடைய காதலர் சிறையில் அடைப்பட்டிருக்கிறுர். யான் தப்பியோடி வந்து தேவரீரை அடைக்கலம் புகுந்தேன். தேவரீர் என்னைப் பாதுகாக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். அசுரமாதின் நடிப்பை உமாதேவி உண்மையென்று நம்பினுள். உணவு முதலியன வழங்கி இருக்கச் செய்தாள். அவள் சிலநாள் இருந்தாள். ஒருநாள் சமயம் பார்த்து ஆனைமுகக் குழந்தையை எடுத்துக்கொண்டு விண் வழியாகச் சென்றுள். ஆனைமுகக் கடவுள் அவளுடைய காதைப்பிடித்திழுத்து நிலத்தில் தள்ளிக் கொன்றுவிட்டு உமாதேவியாரிடத்திற்கு வந்து சேர்ந்தார்.

கமடாசுரன் (எ)

ஏழாந் திங்களில் கமடாசுரன் என்பவன் ஆமை வடிவங் கொண்டு ஆனைமுகக் கடவுள் இருக்குமிடத்திற்கு வந்தான். ஆனைமுகக் கடவுள் தம்முடைய திருவடியினுல் அவனைத் துவைத்துக் கொன்றுர்.

கற்பகாசுரன் (அ)

எட்டாந் திங்களில் கற்பகாசுரன் என்பவன் ஒரு குதிரை வடிவங்கொண்டு ஆனைமுகக் கடவுள் திருமுன் வந்தான். ஆனைமுகக் கடவுள் அக்குதிரையின்மீது ஏறிக்கொண்டு எல்லா உலகங்களினுஞ் சுற்றினுர். பிறகு நிலத்தில் இறங்கினுர். ஆனைமுகக் குழந்தை செலுத்திய அதிர்ச்சி

யினால் அக்குதிரை குடலறுபட்டு நிலத்தில் விழுந்து மாண்டது. அவனுடைய உண்மை வடிவம் இருபத்தைந்து யோசனை வரையிற் பரவிக்கிடந்தது.

துந்துபி　　(௯)

ஒன்பதாந் திங்களில் துந்துபி என்னும் அசுரன் நஞ்சினை நாவற்கனிகளாகச் செய்துகொண்டு ஆனைமுகக் கடவுளிடத்திற்கு வந்தான். ஆனைமுகக் கடவுள் அமுதங் கலந்து செய்த கொழுக்கட்டையோடு அவனிடம் வந்தார். அவன் கொடுத்த நச்சு நாவற்கனியை உண்டார். தம்மிடமிருந்த அமுதக் கொழுக்கட்டையை அவ்வசுரனுக்குக் கொடுத்தார். இதனையுண்ட அவன் மாண்டான்.

அசகாசுரன்　　(௧0)

பத்தாந் திங்களில் விண்ணை முட்டிய தலையை உடையவனும் திருமால் முதலிய தேவர்களும் அஞ்சத்தக்க ஆற்றலுடையவனாகவுமிருந்த அசகாசுரன் என்பவன் ஒரு பெரிய பாம்புருக்கொண்டு வந்தான். ஆனைமுகக் கடவுளாகிய குழந்தையை எடுத்து விழுங்கினான். ஆனைமுகக் கடவுள் அவனுடைய வயிற்றைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டார். அவ்வசுரன் நூறு யோசனை அகலம் மலைபோல் விழுந்து இறந்தான். அவனுடைய வயிற்றில் இருந்து பெருகிய உதிரம் ஆறாகவோடிக் கடலில் விழுந்தது.

சமலாசுரன்　　(௧௧)

பதினோராந் திங்களில் சமலாசுரன் என்பவன் எட்டுக் கால்களையும் இரண்டு தலைகளையும் தீயைப் போன்ற விழிகளையும், பிறைபோல் வளைந்த கோரைப் பற்களையுமுடைய சரபப் பறவையாகத் தன் சிறகை விரித்துக்கொண்டு வந்தான். அவனுடைய சிறைக் காற்றினால் மலை முதலியன நிலை கலங்கிச் சுழன்றன. அதனை முனிவர்களின் மனைவியர் கண்டு நடுநடுங்கி ஓடிப்போனார்கள். உமாதேவியார் அச் சரபத்தைப்பற்றிச் சிவபிரானிடங் கூறுதற்குச் சென்றார்.

ஆனால், குழந்தையாகிய ஆனைமுகக் கடவுளோ அச்சரபத்தைக் கண்டு அச்சமடையாமல் அதனுடைய கால்களைப் பற்றியிழுத்து ஒரு பாறையின்மீது மோதிக்கொன்றார். இதனைக் கண்ட முனிவர்கள் மிகுந்த வியப்படைந்தார்கள்.

வீமாசுரன் (கஉ)

பன்னிரண்டாந் திங்களில் வீமாசுரன் என்பவன் ஒரு தெய்வத் தச்சனாக வடிவமெடுத்துக்கொண்டு சலாசுரன், சிலாசுரன் என்னும் இரண்டு அசுரர்களைச் சிலம்பாகச் செய்து ஆனைமுகக் கடவுளிடங் கொண்டுவந்து வைத்து வணங்கினான். ஆனைமுகக் கடவுள் வேறோர் எண்ணத்தை மேற்கொண்டவராய் அவனோடு இனிமையாக உரையாடி அவனை மகிழ்வித்தார். அச்சிலம்புகளை எடுத்துத் திருவடிகளில் அணிந்துகொண்டு திருக்கூத்தாடினார். அப்பொழுது முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும் மற்றுமுள்ளோர்களும் கூத்தாடினார்கள். அசையாப் பொருள்களும் அசைந்து கூத்தாடின. சிலம்புகளாகவிருந்த இரண்டு அசுரர்களும் அக்கூத்தின் வேகத்தைப் பொறுக்கமுடியாமல் வருந்தினார்கள். தங்களுடைய ஆண்மை முழுவதையும் இழந்தார்கள். ஆனைமுகக் கடவுள் தம்முடைய திருவடிகளை வீசி உதறினார். இச்சிலம்புகள் வீமாசுரன்மேல் விழுந்து அவனைக் கொன்றதோடு சிலம்பாகவிருந்த அசுரர்களும் தங்கள் உண்மை வடிவத்தோடு மலைபோல் விழுந்து இறந்தார்கள்.

ஆவிசயன் (கங)

அப்பன்னிரண்டாம் திங்களிலேயே ஆவிசயன் என்னும் பெயரினையுடைய அசுரன் ஒருவன் ஒரு மத யானையைப் போல் வடிவங்கொண்டு ஆனைமுகக் கடவுள் இருக்கிற இடத்திற்கு வந்தான். அதனைக் கண்டு முனிச்சிறார்களெல்லாம் அஞ்சி யோடினார்கள். ஆனைமுகக் கடவுள் தம்முடைய கையிலிருந்த அங்குசப்படையால் அந்த யானையின் கன்னத்தில் குத்தினார். அதன் மீதேறிப் பல விடங்கட்குஞ்

செலுத்தினர். அந்த யானை ஆனைமுகக் கடவுளின் ஆற்றலுக்குத் தாங்காது வருந்தியது. இடியைப்போற் பிளிறிக் கீழே விழுந்து இறந்தது.

கூடாசுரன் (கச)

கூடாசுரன் என்பவன் இரண்டாவது ஆண்டில் ஆனைமுகக் கடவுள் குழந்தையாக வளர்ந்து கொண்டிருக்கிற காட்டிற்கு வந்தான். ஒரு தடாகத்தில் கொடிய நஞ்சைக் கலந்தான். தான் விண்ணில் மறைந்து பார்த்துக்கொண்டிருந்தான். அத் தடாகத்தில் படிந்துவருங் காற்றினல் அக் காட்டிலுள்ள மரங்களெல்லாம் தீய்ந்துபோயின. அங்கு விளையாடல் செய்திருந்த முனிச்சிருர்கள் மாய்ந்துபோயினர். இதனை யுணர்ந்த ஆனைமுகக் கடவுள் தம்முடைய அருட் பார்வையை அத் தடாகத்தின்மீது செலுத்தினர். அதில் கலந்திருந்த நஞ்சு அமுதாகியது. காய்ந்துபோன மரங்களெல்லாந் தளிர்த்தன. முனிச்சிருர்கள் உயிர் பெற்றெழுந்தார்கள். பிறகு, ஆனைமுகக் கடவுள் தமது நெற்றி விழியினல் விண்ணைப் பார்த்தார். அங்கு மறைந்திருந்த கூடாசுரன் நீருனன்.

விகிர்தாசுரன் (கரு)

மூன்ருமாண்டில் விகிர்தாசுரன் என்பவன் ஒரு மகர மீனக வடிவெடுத்து ஒரு தடாகத்திற்கு வந்தான். ஆனைமுகக் கடவுளும் முனிச்சிருர்களும் அங்கு மலர் கொய்து விளையாடல் செய்துகொண்டிருந்தனர். அப்போது மகர மீனயிருந்த விகிர்தாசுரன் தடாகத்தை அலைத்தான். ஆனைமுகக் கடவுள் அதனை இறுகப் பிடித்துக் கையாலெடுத்துக் கரையில் எறிந்தார். அவ்வசுரன் தன்னுடைய உண்மை வடிவத்தோடு விழுந்து இறந்தான்.

இடும்பாசுரன் (கசு)

ஆனைமுகக் கடவுள் சென்ற வழியில் இடும்பாசுரன் என்பவன் விண்ணையளாவிய பெருமலையாக வளர்ந்து

நின்முன். அதனைக்கண்ட ஆனைமுகக் கடவுள் பெருமூச் செறிந்தார். அவ்வளவில் அம்மலையானது பெருங்காற்றி லகப்பட்ட பஞ்சைப்போலப் பறந்தது. அதனைக்கண்டு முனிச் சிறுர்கள் வியந்தனர்.

சதாசிவ மூர்த்தி (கஎ)

திருவிளையாடல் செய்திருந்த ஆனைமுகக் கடவுளாகிய குழந்தை ஒருநாள் பால் குடித்தற்காக உமாதேவியிடம் ஓடியது. உமாதேவியார் அப்பொழுது சிவபூசை செய்திருந் தமையின் பால் கொடுக்க மறுத்துக் குழந்தையைத் தடுத்தனர். அப்போது குழந்தை அம்மையார் பாவனை செய்திருந்த வடிவந் தானேயாகி அம்மையார்க்குக் காட்சி கொடுத்தது. இதனைக்கண்ட அம்மையார் அஞ்சிப் பிழை பொறுக்க வேண்டினர். அவ்வடிவை வணங்கிப் போற்றினர்.

கருத்தமாசுரன் (கஅ)

ஒருநாள் கருத்தமாசுரன் என்பவன் வேடிக்கை காட்டு வதில் வல்லவனைப்போல நடித்து அங்கு வந்து முனிச் சிறுவர்களை விழுங்கியும் வெளிப்படுத்தியும் பல வேடிக்கை களைக் காட்டினுன். பிறகு ஆனைமுகக் குழந்தையை எடுத்து விழுங்கிவிட்டு வெளிப்படுத்தாமலே ஓடத் தொடங்கினுன். ஆனைமுகக் கடவுளோ உமாதேவியாருடைய திருமுகத்தி னின்று வெளிப்பட்டார். அவ்வசுரனைக் கன்னத்திலடித்துக் கொன்றுர்.

கடகாசுரன் (கசு)

ஐந்தாம் ஆண்டில் கடகாசுரன் என்பவன் ஓர் ஒட்டகமாக வடிவங்கொண்டு வந்தான். அவன் வருகையை ஆனைமுகக் கடவுள் அறிந்தார். அவன் காத தொலையில் வரும்போதே இருப்பிடத்திலிருந்து எதிர்கொண்டு போய் அவனைக் கொன்றுர்.

சாயாசுரன் (உ0)

மற்றொரு நாள் சாயைப் பிடிப்பதில் வல்லவனான சாயாசுரன் என்பவன் ஆனைமுகக் கடவுளுடைய சாயையைப் பிடிப்பதற்கு வந்தான். அதனை ஆனைமுகக் கடவுள் அறிந்து சினத்துடன் பார்த்தார். உடனே அவன் இறந்து சாம்ப ரானான்.

சஞ்சலாசுரன் (உக)

மற்றொரு நாள் சஞ்சலாசுரன் என்பவன் முனிச்சிறுவர்க ளோடு தானும் ஒரு சிறுவனாய் ஆனைமுகக் கடவுளோடு பந்தாடி விளையாடுதற்கு வந்தான். ஆனைமுகக் கடவுள் பந்தாட்ட விளையாட்டிலேயே அவனுடைய ஆற்றலைப் போக்கி இறுதியிற் கொன்றார்.

பல வடிவங்கள் (உஉ)

ஒருநாள் ஆனைமுகக் கடவுள் முனிவர்களுடைய இருப்பிடந்தோறும் ஒரே சமயத்திற் சென்று பல குறும்புகள் செய்து விளையாடிக் கொண்டிருந்தார். முனிமாதர்கள் சினந்து குழந்தையைப் பிடித்துக் கொண்டுபோய் உமாதேவி யாரிடத்தில் ஒப்புவித்துவிட்டு இருப்பிடத்திற்குத் திரும்பினர். அவர்கள் மீண்டுந் தங்களுடைய இருப்பிடங்கட்குள் நுழை வதன்முன் அக்கடவுள் அங்குக் குறும்பாடல் செய்துகொண் டிருத்தலைக் கண்டு திகைத்தனர். அவர்கள் ஆனைமுகப் பெரு மானின் பெருமையை உணர்ந்து அது முதல் போற்றிப் பாராட்டி அப்பம், கொழுக்கட்டை முதலிய சிற்றுணவுகள் செய்து படைத்து வழிபட்டனர். அம் மாதர்கட்கு ஆனைமுகக் குழந்தை மகிழ்ந்து அருள்புரிந்தது.

படைக்கலங்கள் வருதல்

ஆறும் ஆண்டில் விசுவகர்மன், பரசு, தாமரை மலர், பாசம், அங்குசம் என்னும் படைக்கலங்களைச் செய்துகொண்டு ஆனைமுகக் கடவுளிடம் வந்தான். அவற்றை அவர்முன் வைத்து வணங்கினான். அவற்றை அணிந்து கொள்ள வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். ஆனைமுகக்

கடவுள் அவற்றை ஏற்றுக்கொண்டு அவனுக்கு அருள் செய்து அனுப்பினர்.

விருகாசுரன் (உரு)

விருகாசுரன் என்பவன் செந்நாயாக வடிவங்கொண்டு ஆனைமுகக் கடவுளுக்கு எதிரே வந்தான். ஆனைமுகக் கடவுள் விசுவகர்மன் கொண்டு வந்த படைக்கலங்களின் தன்மையை ஆராய்ந்து பார்ப்பவர்போல் அங்குசத்தை எடுத்து அதன்மீதெறிந்து அதனைக் கொன்றருளினர்.

மயிலூர்தி (உச)

வினதை என்பவள் காசிபரைத் தழுவி ஒரு முட்டையைப் பெற்று வைத்திருந்தாள். ஆனைமுகக் கடவுள் அம் முட்டையைக் கீறினர். அதிலிருந்து ஒரு பெரிய மயில் மலையைப் போல் வெளிப்பட்டது. ஆனைமுகக் கடவுள் அதனைத் தமக்கு ஊர்தியாகக் கொண்டருளினர்.

ஆழி (உரு)

ஆனைமுகக் கடவுள் ஓரேதுவினல் நாகருலகஞ் சென்றார். ஆனைமுகக் கடவுளுடைய தன்மையை அறியாமல் வாசுகி அவரை எதிர்த்தான். அவனை எடுத்து ஆனைமுகக் கடவுள் விரலாழியாக அணிந்து கொண்டார்.

பாம்பணிகள் (உசு)

வாசுகியின் செய்தியை உணர்ந்த ஆதிசேடன் படைகளைக் கூட்டிக்கொண்டு வந்து ஆனைமுகக் கடவுளை எதிர்த்தான். ஆனைமுகக் கடவுள் மயிலைவிட்டுப் போரிடச் செய்தார். பாம்புப் படைகள் தோல்வியடைந்தன. ஆனைமுகக் கடவுள் ஆதிசேடனை இடுப்புக் கயிருக அணிந்து கொண்டார். மற்றைய பாம்புகளைப் பல வகையான அணிகலன்களாக அணிந்து கொண்டார்

கோராசுரன் (உஎ)

ஆனைமுகக் கடவுள் நாகலோகஞ் சென்றிருந்தபோது கோராசுரன் என்பவன் கொக்காகி ஆனைமுகக் கடவுளைக்

கொலை செய்ய வந்தான். ஆனைமுகக் கடவுளோடு முன்பு விளையாடிக் கொண்டிருந்த முனிச்சிறுர்கள் ஆனைமுகக் கடவுளைக் காணுமல் காடெங்குந் தேடிக்கொண்டிருந்தார்கள். கோராசுரன் அச் சிறுவர்கள் ஆனைமுகக் கடவுளுடைய நண்பர்கள் என்று அறிந்தான். அவர்களையெல்லாம் எடுத்து விழுங்கினுன். ஆனைமுகக் கடவுளுடைய வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்; நாகலோகத்திலிருந்து வரும் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து வாயைத் திறந்துகொண்டு சென்றுன். ஆனைமுகக் கடவுள் தம்முடைய பாசத்தினுல் அவனை இரண்டு துண்டாக வெட்டினுர். அவனுடைய வயிற்றை அருளோடு பார்த்தார். முனிச் சிறுவர்களெல் லாரும் உயிர்பெற்று வந்து ஆனைமுகக் கடவுளை வணங் கினுர்கள்.

காரளன் விகாரன்　　(உ௮)

பத்தாம் ஆண்டில் காரளன் விகாரன் என்னும் இரண்டு அசுரர்கள் காட்டுப் பன்றியாகவும், காட்டெருமையாகவும் வடிவங்கொண்டு ஆனைமுகக் கடவுள் விளையாடிக் கொண் டிருக்குமிடத்திற்கு வந்து ஆரவாரஞ் செய்தார்கள். ஆனைமுகக் கடவுள் அவர்கள்மீது தம்முடைய பாசத்தை விட்டுக் கொன்றுர்.

ஊர்த்தன்　　(உகூ)

ஊர்த்தன் என்னும் ஓர் அவுணன் புலி வடிவங்கொண்டு வந்தான். முனிச் சிறுவர்களைப் பிடித்துத் தின்றுன். ஆனைமுகக் கடவுளை நோக்கிச் சென்றுன். ஆனைமுகக் கடவுள் அவனுடைய மூக்கையுங் காதுகளையும் அறுத் தெறிந்தார். பற்களை உதிர்த்தெறிந்தார். "இதனைப் போய் உன்னை யனுப்பியவனிடங் கூறுவாயாக" என்று சொல்லி யனுப்பினுர்.

சிந்து படைகளனுப்புதல்

ஆனைமுகக் கடவுளால் மூக்கு முதலியன அறுபட்ட அவுணன் சிந்துவிடம் போய்ச் செய்தியைக் கூறினுன். சிந்து

சினங்கொண்டு போருக்கெழுந்தான். பிறகு படைகளைத் திரட்டியனுப்பினான். அவுணப்படைக்கும் பூதப் படைக்கும் பெரும்போர் மூண்டது. நிகழ்ந்தபோரில் அனலாசுரன் மடிந்தான்.

### தூதனுப்புதல்

பிறகு ஆனைமுகக் கடவுள் சிந்துவோடு போரிட்டு அவனை யொழிக்க விரும்பினார். நந்தி தேவரை யனுப்பி நல்லுரைகள் கூறச் செய்தார். சிந்து அவ்வுரைகளையெல்லாங் கேட்க வில்லை. சிந்து தன்னுடைய பேராற்றலையே பெரிதாக மதித்துப் பேசினான். நந்தி தேவருக்கு மிகுந்த சினமுண்டாகியது. அவர் சிந்துவைப் பார்த்து, "அடா அறிவில்லாதவனே! நான் தூதனாக வந்தபடியால் உன்னைக் கொல்லாமல் விட்டேன். "கூறுவதை அவன் கேட்காவிட்டால் அவனைக் கொன்றுவிட்டுவா" என்று கூறியிருந்தால் உன்னையும் இங்கிருப்பவர்களையும் என் கையினாற் பிசைந்து சேருக்கியிருப்பேன்; உன்னுடைய படைகளையெல்லாம் எரித்தொழித்திருப்பேன்" என்று கூறி ஒரு பெருமூச்சு விட்டார். அம்மூச்சுக் காற்றினால் மண்டபத்தினுடைய உத்திரம் பிளந்தது. அண்மையி லிருந்தவர்களெல்லாரும் இடியிடித்ததோ என்று நடுங்கினார்கள்; சிலர் விழுந்தார்கள்; சிலர் மயங்கினார்கள். சிந்துராசன் அஞ்சித் திகைத்தான். மூன்றரை நாழிகைவரை மூர்ச்சை யடைந்திருந்தான். நந்தி தேவர் திரும்பி ஆனைமுகக் கடவுளிடம் போய்ச் சேர்ந்தார்.

### சிந்துராசன் போரிட்டு மாளல்

பிறகு சிந்துராசன் ஆனைமுகக் கடவுள்மீது படை எடுத்துச் சென்றான். பூதப் படைகட்கும் அவுணப் படைகட்கும் பல நாட்கள் போர் நடந்தது. சிந்துராசனுடைய படைத் தலைவர்கள் ஒவ்வொருவராக மாண்டொழிந்தனர். சிந்துராசன் இரண்டொருமுறை அரண்மனையை அடைந்து வருந்தினான். பிறகு ஆனைமுகக் கடவுளோடு போரிட்டு மாள்வதே தகுதியென்று முடிவு செய்தான். தனித்தவனாகப் போர்க்களத்திற்குச் சென்றான். தூதன் ஒருவனை அழைத்து,

"நீ அந்த ஆனைமுகனிடஞ் சென்று நான் தனித்தவனாக அவனோடு நேரிடையாகப் போரிட வந்திருப்பதாகக் கூறிவா" என்று சொன்னான். அத் தூதுவனும் அவ்வாறே சென்று தெரியப்படுத்தினான். ஆனைமுகக் கடவுள் மயிலூர்தியின் மீது ஏறிக்கொண்டு போர்க்களத்தையடைந்தார். சிந்துராசன் மிகுந்த சினங்கொண்டு போர் செய்யத்தொடங்கினான். தான் பிறந்த போதே உண்டான ஆழிப்படையை எடுத்து அதனை வழிபட்டுப் போற்றி எல்லா உலகங்களும் கலங்குமாறு கரகர வென்று சுழற்றி வீசினான். அப்படை வெளிப்பட்ட அளவில் அளவற்ற பெருமைகளைக் காட்டிக் கொண்டு மூவுலகங்களும் நடுங்குமாறு அனலைச் சொரிந்து பகைத்துக்கொண்டு வந்தது. ஆனைமுகக் கடவுள் அதனைப் பார்த்து ஒரு பொருட்படுத்தாமல் நகைத்துக் கொண்டிருந்தார். அப்படை ஆனைமுகக் கடவுளை நெருங்கியதும் மும்முறை வலம் வந்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து அடைக்கலமாகியது. அதனைச் சிந்துராசன் பார்த்தான், "நல்ல காரியம்" என்று கூறி நகைத்தான். மானமும் வீரமும் அவனுடைய உள்ளத்தை வருத்தின. பெருஞ் சினங்கொண்டான். பிறந்த போதே உண்டான மற்றொரு படையாகிய சூலத்தை யெடுத்து மனத்தினாலேயே பூசை செய்து, "இப்பொழுதே என்னுடைய பகையை வென்று வெற்றியைக் கொடுப்பாயாக" என்று சொல்லிச் செலுத்தினான். ஆனைமுகக் கடவுள் தம்முடைய பாசத்தைச் செலுத்தினார். தெய்வத் தன்மை பொருந்திய அந்த இரண்டு படைகளும் பல பெருமைகளைக் காட்டி விரைவாக எதிர்த்தன; கொடிய போரைச் செய்தன.

ஆனைமுகக் கடவுள் விட்ட பாசம் நாம் இச்சூலத்தோடு நீண்ட நேரம் போரிடுவது தக்கது அன்று என்று முடிவு செய்தது. ஒரு நொடிப் பொழுதில் அச்சூலப் படையினைப் பொடியாக்கியது. சிந்துராசனுடைய மார்பைப் பிளந்து கீழே வீழ்த்தியது. தன்னிடத்திலும் சூலத் திடத்திலும் உண்டாகிய கணைகள் முதலியவற்றைத் திருப்பிக் கொண்டு, தங்கள் கொடுமையினால் மாறுபட்ட உலகங்களையெல்லாம் ஒழுங்கு பெறச் செய்தது. பகைவர்களாகிய அவுணர்களைத் தவிர மற்றைய உயிர்த்தொகைகள் அனைத்தையும் எழுப்பியது.

மீளவும் தன்னைச் செலுத்திய ஆனைமுகக் கடவுளுடைய கையிற்சென்று அமர்ந்தது. தேவர்கள் மலர் மாரி பெய்தார்கள். விண்ணில் ஐவகை ஒலிக் கருவிகளும் முழங்கின. முனிவர்களனைவரும் மறை முதலியவைகளால் போற்றினார்கள்.

சக்கரபாணி

சிந்துராசனுடைய தந்தையாகிய சக்கரபாணி தன்மகன் இறந்ததைக் கேட்டு மிகுந்த துன்பமடைந்து வருந்தினான். போர்க்களத்திற்கு வந்தான். அங்குக் கிடந்த சிந்துராசன் முதலியவர்களுடைய உடலை யெரித்தான். எல்லாருக்கும் செய்யவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்து முடித்தான். பிறகு ஆனைமுகக் கடவுளிடம் வந்து அவரை வணங்கினான். ஆனைமுகக் கடவுள் அரசனைப் பார்த்து, "நீ எண்ணிய வரங்களைக் கேள்; கொடுக்கிறோம்" என்று சொன்னார். அரசன் அதனைக் கேட்டு, "அடியேன் தேவரீருடைய திருவடிகளைத் தொழுதும் கண்டும் உயிர் வாழ்ந்தேன். என்னுடைய மகனோ தேவரீரை இகழ்ந்தும் பகைத்தும் போர் செய்தும் பேரின்ப மயமான வீடுபேற்றை யடைந்தான். எனக்கு இதைவிட மேலான சிறப்பு யாது வேண்டியதாக விருக்கிறது" என்று சொன்னான். பிறகு ஆனைமுகக் கடவுளையும் மற்றவர்களையுந் தன்னுடைய நகரத்திற்கு அழைத்துக்கொண்டு போய்ப் பூசை செய்து போற்றினான். சிந்துராசனால் சிறைப்பட்டிருந்தவர்களெல்லாருந் தத்தம் இடத்தை யடைந்து இனிது வாழ்ந்திருந்தார்கள். சக்கரபாணி மன்னன் அறநூன் முறைப்படி அரசாட்சியைச் செலுத்தினான். அதனால் நான்மறைகளுந் தழைத்தோங்கின. மூவுலகங்களுந் துன்பமில்லாமல் வாழ்ந்தன.

## 75. பாலசந்திர விநாயகர்

முன்பு கூறப்பட்டது

மற்றொரு சமயத்தில் ஆனைமுகக் கடவுள் பாலசந்திர விநாயகர் என்னும் பெயரோடு தோன்றி, நமனுடைய வீரியத்

திலிருந்து பிறந்த அனலாசுரனுடைய உயிரைப் போக்குமாறு ஓர் அந்தணச் சிறுவனைப்போலத் திருவுருக் கொண்டு அவ்வசுரனை விழுங்கித் தேவர்களைக் காத்தார். அனலாசுரனை விழுங்கிய வெப்பத்தை எண்பத் தெண்ணுயிரம் முனிவர்கள் செய்த அறுகு வழிபாட்டைக் கொண்டு போக்கிக்கொண்டார். இவ்வாறு முன்பு கூறப்பட்டுள்ளது.

## 76. தூமகேது விநாயகர்

### தூமாசுரன்

விந்தியம் என்னும் நாட்டிலே மசிபாதினி என்னும் நகரத்திலே தூமாசுரன் என்னும் பெயரினையுடைய ஓர் அசுரன் இருந்தான். இவன் அசுரர்கட் கெல்லாந் தலைவன். கருமையான நிறம் உடையவன்; நால்வகைப் படைகளையுடையவன். தேவர்களனைவரும் அஞ்சும்படியான ஆண்மையுடையவன். சிவபிரானுடைய திருவடிகளில் மிகுந்த அன்புடையவன். இவன் அசுரனாக விருந்தும் நல்லியல்புகளெல்லாம் அமையப் பெற்றவனாக இருந்தான். இவன் தன்னுடைய மக்களோடும் அமைச்சர்களோடும் அரசாட்சியை இனிது நடத்திக்கொண் டிருந்தான்.

### பிருகு முனிவர்

பெருமையிற் சிறந்த பிருகு முனிவர் தம் மாணவர்களோடு ஒருநாள் தூமாசுரனுடைய அவைக்கு வந்தார். தூமாசுரன் பிருகு முனிவரையும் அவருடைய மாணவர்களையும் வரவேற்க வேண்டிய சிறப்போடு வரவேற்றுப் போற்றினான். பிறகு முனிவரைப் பார்த்துத், ''தாங்கள் இவ்விடத்திற்கு எழுந்தருளியபடியால் நான் நல்வினையுடையவனானேன். நான் அசுரனாகவிருந்தும் என்னிடம் எல்லா வகையான நன்மைகளும் சிறந்து விளங்குவதற்குக் காரணம் என்னை ?'' என்று உசாவினான். பிருகுமுனிவர் தூமாசுரனைப் பார்த்து, ''ஓ அரசனே ! நீ முன்பிறப்பில் விகுதி என்னும் பெயருடைய அரசனாக விருந்தாய். அறநூல்களையெல்லாம் முறையாக

உணர்ந்து நீதிநெறி தவருமல் அரசாட்சியைச் செய்து கொண்டிருந்தாய். வேள்விகள் செய்யத் தொடங்கித் தொண்ணூற் ருென்பது வேள்விகளைச் செய்து முடித்தாய். பிறகு நூருவது வேள்வியையுஞ் செய்யத் தொடங்கினுய். இதனைத் தேவேந்திரன் உணர்ந்தான். இவன் இந்த நூருவது வேள்வியையுஞ் செய்து முடிப்பானுயின் நம்முடைய பதவிக்கு வந்துவிடுவான் என்று அஞ்சினுன். நூருவது வேள்வியைத் தடுக்கும் வழியைக் குறித்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

**நாரதர்**

இச்சமயத்தில் நாரதர் அங்கே தோன்றினுர். அவரைக் கண்ட இந்திரன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தான். இவரைக் கொண்டு நம்முடைய காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று முடிவு செய்தான். தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றியருளுமாறு நாரதரை வேண்டிக் கொண்டான். நீ எப்பிறப்பிலோ செய்த தீவினையால் நாரத முனிவர் இந்திரனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினுர். அந்தணனுக வடிவங்கொண்டு நீ செய்து கொண்டிருக்கும் வேள்விச் சாலைக்கு வந்தார். அவர் அந்தணன் என்றே எண்ணி நீ எதிர்கொண்டு வழிபட்டாய். ''வந்த காரணம் யாது?'' என்று உசாவினுய். அந்தணனுக வந்த நாரதர் உன்னைப் பார்த்து, ''ஓ அரசனே! என்னுடைய பெயரை எல்லோரும் சிவசன்மா என்று கூறுவார்கள். நாம் உன்னிடத்தில் வந்த காரியம் யாதெனில் உன்னுடைய மனைவிமீது விருப்பங்கொண்டு வந்தோம். ஆகையால் நீ அவளை எமக்குக் கொடுத்தல் வேண்டும்'' என்று கேட்டார். போலி யந்தணனுகிய நாரதர் புகன்றதைக் கேட்டு நீ மனம் வருந்தினுய். ''இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியைக் கொடுத்தல் மரபன்று. மனைவியைக் கேட்டலை விட்டுவிடும். வேறு எதுவேண்டுமானுலுங் கொடுக்கிறேன்'' என்று கூறினுய். நாரதர் வேறெதற்கும் இணங்கவில்லை. மிகுந்த சினங்கொண்டு அசுரனுகுமாறு உனக்கு வசவுரை வழங்கி விட்டுச் சென்ருர். அவர் சென்ற பிறகு இந்திரனுடைய

வஞ்சனையினால் நாரதர்தாம் இவ்வாறுவந்து வசவுரை வழங்கிச் சென்றார் என்பதை நீ உணர்ந்துகொண்டாய். பிறகு நீ வழக்கம் போற் காரியங்களைச் செய்து கொண்டிருந்து இறந்தாய். நாரதருடைய வசவுரையினால் இப்பிறப்பில் அசுரனாகப் பிறந்தாய்'' என்று கூறிவிட்டுப் பிருகு முனிவர் தம்முடைய இருப்பிடத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

### மாதவராசன்

தூமாசுரன் அரசியற்றிக் கொண்டிருக்கும் அந்நகரத்தில் மாதவராசன் என்னும் பெயருடையவன் ஒருவன் இருந்தான். அவன் அரசர் குலத்தில் பிறந்தவன். மேலான செல்வமும் புகழும் உடையவன். அவனுடைய மனைவியின் பெயர் சுமுதை. இவர்கள் இருவரும் இல்லறத்தை இனிது நடத்திக் கொண்டிருந்தார்கள். இவர்கட்கு நெடுங்காலமாக மக்கட் பேறுண்டாகவில்லை. மக்கட் பேற்றைக் கருதி அவ்விருவருஞ் செய்த தான தருமங்களெல்லாம் வீணாயின. மாதவராசன் ஒருநாள் தன்னுடைய மனைவியைப் பார்த்து, ''ஓ பெண்ணே! செல்வம் முதலிய சிறப்புக்கள் இருப்பதாற் பயன் என்ன? ஒவ்வொருவரும் முதன்மையாக அடையவேண்டியது மறு பிறவியில் நற்கதியிற் சேர்க்கத் தக்க மக்கட் பேற்றையேயாம். மக்கட் பேறில்லாத வாழ்வினால் என்ன பயனுண்டாகும்? உலகத்தார் உன்னை மலடி என்று கூறுவார்கள். இதனைக் கேட்ட உனக்கு நாணமாக இல்லையா? இவ்வுலகில் நீயும் ஒரு பெண்ணாக ஏன் பிறந்தாய்? உன்னுடைய முகத்தைக் காணும்போதெல்லாம் என்னுடைய உள்ளம் கொதிக்கின்றது. நீ இவ்வாறு இங்கே இருப்பதைவிடக் காட்டிற்கேனும் செல்லக்கூடாதா? நீ வீண் உடலை ஏன் சுமந்து கொண்டிருக்கிறாய்? இனிமேல் நீ என் முன்னே வராதே'' என்று பலவாறு வெறுத்துப் பேசினான். பிறகு தனக்குத் தானே பலவாறு புலம்பிக் கொண்டிருந்தான்.

### சுமுதை தவஞ் செய்தல்

கணவன் கூறியதையெல்லாம் சுமுதை கேட்டாள். அவளுக்கு மிகுந்த கலக்கமும் வருத்தமும் உண்டாயின.

மூர்ச்சையாகிக் கீழே விழுந்தாள். வெகு நேரம் பொறுத்து மூர்ச்சை தெளிந்து எழுந்தாள். காட்டிற்குச் சென்று தவஞ் செய்வதே தக்கது என்று முடிவு செய்தாள். புறப் பட்டுக் காட்டிற்குச் சென்றாள். சுமுதை சென்ற காட்டில் யாங்கணுந் தீய விலங்குகள் சுற்றித் திரிந்து கொண்டிருந்தன. சுமுதை அவற்றிற்கு அஞ்சாமல் ஓரிடத்தில் அமர்ந்து திருமாலை நினைத்து உணவு முதலியவற்றை வெறுத்து மிகுந்த மனவுறுதியோடு தவஞ்செய்து கொண்டிருந்தாள். எல்லாந் தாமாகவே விளங்கும் ஆனைமுகக் கடவுள் சுமுதையி னுடைய தவத்திற்கு மகிழ்ந்தார். சுமுதை மனத்தில் எண்ணிய வாறே உருவைப்படை முதலியவற்றோடு காட்சி தந்தார். சுமுதை காட்சி தந்த கடவுளைப் போற்றி வழிபட்டாள். தன்னுடைய உள்ளத்திலிருந்த குறைகளையெல்லாங் கூறி முறையிட்டுக் கொண்டாள். ஆற்றல் பொருந்திய ஒரு மகனைத் தந்தருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். திருமால்போல் வந்த ஆனைமுகக் கடவுள், "நீ எம்மையே மகனாக அடைவாய் இனிமேல் எதற்கும் வருத்தப்படாதே" என்று அருள் புரிந்தார்.

### சுமுதை ஊருக்குத் திரும்புதல்

பிறகு சுமுதை ஊருக்குத் திரும்பித் தன்னுடைய நகரத்தை யடைந்தாள். முன்பு அவளை வெறுத்த கணவன் இப்பொழுது வரவேற்றுப் பாராட்டிப் போற்றினான். அவ ளோடு இனிது வாழ்ந்திருந்தான். நாளடைவில் சுமுதை கருப்பங் கொண்டாள்.

### தூமாசுரன் கலக்கம்

அந்நாளில் அந்நகரத்தில் அரசாட்சி செய்து கொண் டிருந்த தூமாசுரன் நாரதர் கொடுத்திருந்த வசவுரையின் பலனால் அசுரத் தன்மைக்குரிய காரியங்களைச் செய்யத் தொடங்கினான். மற்றவர்களுடைய நாடுகளையுங் கவர்ந்து தான் ஆட்சி செய்யவிரும்பினான். படைகளைத் திரட்டிக் கொண்டு புறப்பட்டான். அப்பொழுது உருவற்ற விண்ணொலி

யானது, "ஓ தூமாசுரனே! நீ செங்கோல் முறை தவறிக் கொடுங்கோல் முறையிற் புகுந்தாய். உன்னைத் தொலைப்ப தற்குத் திருமாலே வந்து சுமுதை வயிற்றில் கருவாகி வளர்கின்றார்" என்று கூறியது. இதனைக்கேட்டு தூமாசுரன் கலங்கினான். சுமுதை வயிற்றிலுள்ள கருவை அழிக்க வெண்ணினான். பிறகு சுமுதையையே கொலை செய்யுமாறு ஏற்பாடு செய்தான். ஆனால் சுமுதை அத்தொல்லைகளிலிருந் தெல்லாம் உயிர் பிழைத்தாள். பிறகு ஆனைமுகக் கடவுள் சிறு குழந்தையாக வந்து சுமுதையையும் அவளுடைய கணவனையும் பாதுகாத்துக் கொண்டிருந்தார். இச்செய்தியை உணர்ந்த தூமாசுரன் பெரும் படையைத் திரட்டிக் கொண்டு போர்செய்ய வந்தான். சுமுதை, மாதவராசன், குழந்தை ஆகிய ஆனைமுகக் கடவுள் ஆகியவர்கள்மீது அளவற்ற கணைகளை விடுத்தான். ஆனைமுகக் கடவுள் தம்முடைய திருவாயிலிருந்து புகைப்படலங்களைக் கணக்கு வழக்கில் லாமல் வெளிப்படுத்தினார். அப்புகைப் படலங்கள் வெளிப் பட்ட அளவில் எல்லாத் திக்குகளையும் இருள்போல மூடிக் கொண்டன. தூமாசுரனும் அவனுடைய படைகளும் ஒரு வரை யொருவர் பார்க்க முடியவில்லை. அவர்கள் மயங்கி வீழ்ந்து மாண்டார்கள். தூமாசுரனை அழித்தருளியபடியால் அன்று முதல் தூமகேது விநாயகர் என்னும் பெயர் வழங்கத் தொடங்கியது. மாதவராசன் மனைவி சுமுதை நாளடைவில் ஒரு மகனைப் பெற்றாள். அக்குழந்தை திருமாலினுடைய கூறுகத் தோன்றியபடியால் அழகும் ஆண்மையும் உடைய தாக விளங்கியது. மாதவராசன் அக்குழந்தைக்குச் செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்தான். நாளடைவில் அக்குழந்தை அரசனாகியது.

## 77. கணேச விநாயகர்

முன்பு கூறப்பட்டது

பலியென்னும் ஓர் அசுரன் தன்னுடைய முப்புரங் களோடுஞ் சென்று மூவுலகங்களையும் அழித்தான். அவனுடைய கொடுமையைப் பொறுக்க முடியாமல் தேவர்கள்

முதலாயினோர் வருந்தினர். அப்போது சிவபிரான் ஆனைமுகக் கடவுளை எண்ணினார். அப்பொழுது ஆனைமுகக் கடவுள் சிவபிரான் திருமுகத்தில் ஐந்து முகத்தோடு தோன்றி முப்புரங்களையும் நீருக்கவல்ல மேன்மையை வழங்கினார். அப்பொழுது அவருடைய பெயர் கணேசரென்று வழங்கியது. அவ்வரலாறு முன்பு கூறப்பட்டது.

## 78. கணபதி விநாயகர்

### சிவபெருமானும் உமாதேவியும்

ஒரு காலத்தில் சிவபெருமான் திருக்கைலையில் எழுந்தருளிய தம்முடைய திருவோலக்கத்தை விட்டுப் புறப்பட்டு உமாதேவியாரோடு பொழில்கள் மண்டபங்கள் முதலிய இடங்களில் உலாச் செய்து வந்தார். பிறகு அவர் பலவகையான ஓவியங்கள் எழுதப் பெற்றிருந்த ஒரு மண்டபத்திற்குச் சென்றார். அங்கு எழுதப்பட்டிருந்த ஓவியங்களை உமாதேவியாரோடு பார்த்துக்கொண்டு வந்தார். ஓர் இடத்தில் ஆண் யானையும் பெண் யானையும் சேர்க்கை செய்வதாக ஓர் ஓவியம் எழுதப்பட்டிருந்தது. உமாதேவியார் பெண் யானையைப் பார்த்துக்கொண்டு நின்றார். சிவபிரான் ஆண் யானையைப் பார்த்துக்கொண்டு நின்றார்.

### ஆனைமுகக் கடவுள் தோற்றம்

அவர்கள் அவ்வாறு பார்த்துக்கொண்டு நின்ற சமயத்தில் ஓங்கார வடிவினராகிய ஆனைமுகக் கடவுள் அளவற்ற பேரொளியோடு தோன்றிச் சிவபிரானையும் உமாதேவியாரையும் பணிந்தார். இருவரும் மிகுந்த மகிழ்ச்சியோடு ஆனைமுகக் கடவுளைக் கையிலெடுத்துப் பாராட்டினர். பிறகு ஆனைமுகக் கடவுளைப் பார்த்துச் சிவபிரான், "ஓ மகனே! நீ என்னைவிட வேறாகாமல் என்னோடு ஒன்றாகவே இருப்பவனாவாய். உன்னை யார் வணங்குகின்றார்களோ அவர்கட்கு எல்லா வகையான இடையூறுகளையுந் தீர்த்து அவர்கள் விரும்பிய காரியங்களை விரைவில் முடித்தருள்வாயாக. கணங்கட்கெல்லாம் தலைமை பெற்றிருந்து அருள்

செய்வாயாக! அதனுல் உன்னைக் கணபதி யென்று எல்லாரும் கூறுவார்களாக. ஒரு செயலைச் செய்யத் தொடங்கும்போது எல்லோரும் முதலில் உன்னைப் போற்றுதல் வேண்டும். அவ்வாறு முதலிற் போற்ருதவர்கட்கு இடையூறுகளைப் புரிவாயாக. மேலும் அசுரர்கட்கெல்லாம் அரசனுய் அனைவரும் அஞ்சத் தக்க கொடியவனுய், தேவர்கட்கெல்லாந் துன்பத்தை விளைவிக்கின்றவனுய், கசமுகன் என்னும் பெயரையுடையவனுய் ஓர் அசுரன் இருக்கின்றனன். அவனை நீ விரைவில் கொன்ெருழித்துத் தேவர்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டும்'' என்று சொன்னுர். கணபதியையும் அழைத்துக் கொண்டு இருவரும் அங்கிருந்து புறப்பட்டனர். சிவபெருமான் கணபதியைக் கைலாச வாசலின் முன்னே வைத்துவிட்டுத் தாம் உள்ளே சென்ருர். நந்தி தேவர் முதலிய அனைவரும் ஆனைமுகக் கடவுளாகிய கணபதியைப் பணிந்து போற்றினர்.

### சூதாட்டம்

ஒருநாள் சிவபிரானும் உமாதேவியுஞ் சூதாடத் தொடங்கினர். இருவரும் அப்பொழுது அங்கிருந்த திருமாலை வெற்றி தோல்வி கூறும் நடுவராக வைத்துவிட்டுச் சூதாடலாயினர். சூதின் இறுதியில் சிவபிரான் தோற்ருர். உமாதேவியார் வென்ருர். ஆயினும் திருமாலைப் பார்த்து, ''நாம் வென்றதாகக் கூறுவாயாக'' என்று குறிப்புக் காட்டினுர். திருமால், சிவபிரான் குறிப்புப் படியே சிவபிரான்தான் வென்றதாகப் பொய்யுரை புகன்ருர். இதனைக் கேட்டதும் உமாதேவியார்க்கு மிகுந்த சினம் உண்டாகியது ''நீ கண் கெட்ட மலைப்பாம்பாகுக'' என்று வசவுரை வழங்கினுர். சிவபிரான் அவ்வசவுரைக்கு இறுதி மொழிந்தார்.

### கசமுகனை யழித்தல்

இந்திரன் முதலிய தேவர்கள் கசமுகாசுரன் முதலிய அசுரர்கள் செய்யுந் தொல்லையால் அளவு கடந்த துன்பமடைந்தார்கள். அதனைப் போக்கிக்கொள்ள எண்ணினுர்கள். கயிலாச வாசலில் இருக்கும் ஆனைமுகக் கடவுளிடம் வந்து

வழிபட்டுப் போற்றினர்கள். தங்களுடைய துன்பத்தைப் போக்கி யருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். ஆனைமுகக் கடவுள் தேவர்களுடைய துன்பத்தைப் போக்க எண்ணினர். படைகளோடு போருக்குப் புறப்பட்டார். ஆனைமுகக் கடவுள் போரிட வந்ததைக் கண்டு கசமுகாசுரன் தானும் தன் படைகளோடு வந்து எதிர்த்துப் போரிடத் தொடங்கினன். தன்னுடைய மேருமலையைப் போன்ற வில்லை வளைத்துக் கணைகளை மழையாகப் பொழிந்தான். ஆனைமுகக் கடவுள் அவற்றையெல்லாந் தம்முடைய வில்லால் பொடிபடுத்தினர். இருவருக்கும் நீண்ட நேரம் கொடிய போர் நடந்தது. ஆனைமுகக் கடவுள் கசமுகனுடைய பேராண்மையைக் கண்டு மிகுந்த வியப்படைந்தார். தம்முடைய வலப்புறக் கோட்டின் முனையை ஒடித்து அவன்மீது வீசினர். அது வெளிப்பட்ட அளவில் எல்லா உலகங்களும் அஞ்சுமாறு ஆரவாரத்தோடு சென்று கசமுகாசுரனுடைய மார்பைப் பிளந்தது. பிறகு கடலுக்குப் போய் நீராடி விட்டு ஆனைமுகக் கடவுளிடம் வந்து சேர்ந்தது. அக் கொம்பினை ஆனைமுகக் கடவுள் ஓர் ஆயுதமாகத் திருக்கையில் தாங்கி யருளினர். தேவர்கள் பூமாரி பெய்தார்கள். முனிவர்கள் மறைமொழிகளாற் புகழ்ந்து பாடினர்கள். மார்பு பிளக்கப் பட்டுக் கீழே விழுந்த கசமுகாசுரன், மலையைப் போன்ற பெரிய பெருச்சாளியாகிக் கண்டவர்கள் அஞ்சத்தக்க கோர வடிவத்தோடு எல்லா உலகங்களையும் நாசம் பண்ணும்படியாக வந்தான். அக் கோர வடிவத்தைப் பார்த்துத் தேவரும் முனிவரும் அஞ்சியோடினர்கள். பெருச்சாளியின் தன்மையைக் கண்ட ஆனைமுகக் கடவுள் அதனைப் பிடித்து அதன்மீது ஏறியருளினர்.

பெருச்சாளி யூர்தி

ஆனைமுகக் கடவுளுடைய திருவுடல் தன்னுடைய உடலிற்பட்ட அளவில் அவ்வசுரனுடைய ஆணவவிருள் அகன்று மெய்யறிவு உண்டாகியது. தேவர்கள் முதலானோர் பெருச்சாளி யூர்தியிலேறி யருளிய ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டார்கள். கசமுகன் மார்பு பிளக்கப்பட்டுக்

கீழே விழுந்த இடத்தில் ஆனைமுகக் கடவுள் சிவலிங்கம் ஒன்றை அமைத்து வழிபாடு செய்தார். அந்த இடத்தினுடைய பெயர் கணபதீச்சுரம் என்று வழங்கலாகியது.

### அசுரர்கள் மறைதல்

கசமுகாசுரன் அளவற்ற படைகளோடு போர்க்களத்தில் இறந்தான் என்று அசுரராசன் அறிந்தான். தான் ஒரு பறவை வடிவங்கொண்டு மேருமலைக்குப் போய் ஒரு குகையில் ஒளித்துக் கொண்டான். அசுர குருவாகிய சுக்கிரன் விண் வழியாக மறைந்து போனான். இந்திரன் முதலிய தேவர்கள், கணபதியிடத்தில் விடைபெற்றுக் கொண்டு தத்தம் இருப்பிடங்கட்குப் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு ஆனைமுகக் கடவுள் வடதீவுக்குப் போய் உமாதேவியாருடைய வசவுரையினால் குருட்டு மலைப் பாம்பாக விருந்த திருமாலின் வசவுரையைப் போக்கி அவரையுந் தம்மோடு அழைத்துக்கொண்டு திருக்கைலையை அடைந்தார். தேவர்கள் முதலியோர் "கசமுகாசுரனிடஞ் செய்துவந்த குட்டு, தோப்புக்கரணம் முதலியவற்றைத் தங்களிடம் செய்கிறோம்" என்று வேண்டிக் கொண்டார்கள். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே செய்யுமாறு உடன்பாடு தந்தருளினார்.

### கசமுகாசுரன் வரலாறு

சவுனகா முனிவர் கசமுகாசுரன் வரலாற்றை அறிய விரும்பிச் சூத புராணிகரை வேண்டிக்கொள்ள அவர் அவனுடைய வரலாற்றைப் பின்வருமாறு கூறத் தொடங்கி, "ஒரு காலத்தில் தேவேந்திரன் அசுரேந்திரனோடு போர் செய்து அவனைத் தோற்கடித்தான். அதனால் மனம் வருந்திய அசுரேந்திரன் சுக்கிரனிடம் போய், "நம்முடைய குலத்தில் தேவேந்திரனை வெற்றி கொள்ளத் தக்கவர்கள் ஒருவரும் இல்லையே" என்று சொல்லி வருந்தினான். சுக்கிரன் அசுரனைப் பார்த்து, "வசிட்ட முனிவருடைய மரபிலே மரகதர் என்னும் பெயருடைய ஒரு முனிவர் வீடுபேற்றை விரும்பித் தவஞ்செய்து கொண்டிருக்கிறார்.

அவரை வசப்படுத்திச் சேருமாறு உன்னுடைய குலப்பெண் ஒருத்தியை அனுப்பிவை. அவள் வயிற்றிலிருந்து யானை முகத்துடனே ஒருவன் பிறப்பான். அவன் தேவேந்திரனை அடக்கி உங்களுடைய குலந் தழைத்தோங்குமாறு செய்வான்'' என்று சொன்னான். அசுரேந்திரன் விபுதை என்னும் ஒரு பெண்ணை அழைத்துத் தன்னுடைய நோக்கத்தை அவளிடங் கூறினான். அதற்கு அவள் இசைந்தாள். தவஞ்செய்து கொண்டிருக்கிற மரகத முனிவரிடஞ் சென்றாள். அவர் செய்யும் அரிய தவத்தைப் பார்த்து வியந்தாள். அவருடைய வசவுரைக்கு ஆளாகாமல் காரியத்தை நிறைவேற்றுவதற்கு வழி தவஞ் செய்தலே என்று முடிவு செய்தாள். தான் மரகத முனிவரைச் சேரவேண்டுமென்று தவஞ் செய்தாள்.

ஒருநாள் மரகத முனிவர் தம்முடைய தவத்தைவிட்டுக் கண்களை விழித்துப் பார்த்தார். அப்பொழுது அவ்விடத்தில் ஆண் யானையும் பெண் யானையும் புணர்ச்சி செய்துகொண்டிருந்தன. அதனைக் கண்ட முனிவர் தாமுங் காம விகாரங் கொண்டு மயங்கினார். இதுதான் தக்க சமயமென்று அவருக்கு முன்னால் சென்றாள். மரகதமுனிவர் விபுதையைப் பார்த்து, ''நீ யார்'' என்று உசாவினார். அவள் தான் அவரை மணாளராக அடைய வேண்டுமென்னும் நோக்கத்தோடு தவஞ் செய்துகொண்டிருக்குஞ் செய்தியைக் கூறினாள். முனிவர் தம்முடைய எண்ணம் கைகூடியதென்று மகிழ்ந்தார். அவளைப் பெண்ணானை யாகுமாறு கட்டளையிட்டுத் தாம் ஆணானையானார். இருவரும் தழுவினர். அப்பொழுது இரண்டு கொம்பையுடையவனாய், நீண்ட துதிக்கையை உடையவனாய், முகில் முழக்கம் போன்ற குரலை யுடையவனாய்க் கசமுகாசுரன் பிறந்தான். அவன் பிறந்த பொழுதே எல்லா உலகங்களையும் அள்ளி உண்ணத்தக்க ஆற்றலுடையவனாய்ப் பெரிய கத்தியொன்றை வீசிக்கொண்டு கண்டவிடங்களிலெல்லாந் திரியத் தொடங்கினான். விபுதையாகிய பெண் யானையுடைய மயிர்க்கால்களில் இருந்து எல்லா வகையான படைக்கலங்களையும் உடையவர்களாய்க் கணக்கற்ற அவுணவீரர்கள் தோன்றி ஆரவாரஞ் செய்தார்கள்.

மரகத முனிவர் தமக்குப் பிள்ளைகள் பிறந்ததைக் கண்டு அஞ்சினார். அந்தோ இந்த உலகத்திற்குப் பெருந் தொல்லையை உண்டாக்கினோமேயென்று கலங்கினார். "நீ என்ன குலம்?" என்று விபுதையை வினவினார். குலத்தைத் தெரிந்துகொண்டு அவளை அனுப்பிவிட்டார். பிறகு வழக்கம் போல் தவத்திலமர்ந்தார்.

கசமுகாசுரனும் அவனுடைய கூட்டத்தினரும் தேவர்கள் முதலிய எல்லா உயிர்த் தொகைகளையுங் கொன்று தின்று கொண்டு திரிந்தார்கள். சுக்கிரன் அவனுக்கு மேலும் பல அறிவுரைகளைக் கூறித் தவஞ்செய்து பெருமையடையுமாறும் இந்திரன் முதலிய தேவர்களையெல்லாம் வெற்றி கொள்ளு மாறும் போதித்தான். கசமுகாசுரன் சிவபிரானை எண்ணி நாலாயிரம் ஆண்டுகள் தவஞ்செய்தான். சிவபிரான் அவனுக்குக் காட்சி தந்து பல மேன்மைகளைக் கொடுத் தருளினார்.

தேவதச்சன் எல்லாச் சிறப்புக்களும் அமைந்ததாக ஒரு நகரத்தைப் படைத்து அதற்கு மதங்க நகரம் என்று பெயரிட்டுக் கசமுகாசுரனுக்குக் கொடுத்தான். கசமுகாசுரன் அந் நகரத்தில் அமர்ந்து தன்னுடைய கொடுங்கோலாட்சியை மனம்போன போக்கில் நடத்திக் கொண்டிருந்தான். நவநிதி களும் பஞ்சதருக்களும் அவனுக்குப் பணிசெய்திருந்தன. தேவர்களும் அவனுடைய ஏவலின் வழி நின்றார்கள். அசுரேந்திரன் கசமுகாசுரனுக்கு அமைச்சனானான். கசமுகா சுரன் பல பெண்களைத் திருமணஞ் செய்துகொண்டு இனிது வாழ்ந்திருந்தான். ஒருநாள் தன்னை வணங்க வருகிற தேவர்களைப் பார்த்து, "இன்று முதலாக நீங்கள் வணங்க வருகின்ற பொழுதெல்லாம் இரு கைகளையும் மூடிப்பிடித்து மூன்றுமுறை தலையில் குட்டிக்கொண்டு பிறகு அக்கைகளை மாறிக் காதுகளைப் பிடித்துக்கொண்டு தோப்புக்கரணம் போடவேண்டும்" என்று கட்டளையிட்டான். தேவர்களும் அவனுடைய கட்டளைப்படியே செய்து கொண்டிருந்தார்கள். அவனுடைய வரலாறு இதுவாகும்" என்று சொல்லி முடித்தார்

## 79. மகோற்கட விநாயகர்

### இரவுத்திரகேது

அங்க நாட்டிலே காத்திரம் என்னும் பட்டணத்திலே அந்தணன் ஒருவன் இருந்தான். அவனுடைய பெயர் இரவுத்திரகேது. அவனுடைய மனைவியின் பெயர் சாரதை. அவ்வந்தணன் வேள்விகளைச் செய்கின்றவனாய் மறை நெறியில் தவறாது நல்லொழுக்கத்திலே நின்றான். அவ் வந்தணனுக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறந்தார்கள். இரவுத்திரகேது அவர்களுக்குத் தேவாந்தகன் என்றும் நராந்தகன் என்றும் பெயரிட்டான். செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாஞ் செய்து நாளொரு மேனியும் பொழு தொரு வண்ணமுமாக வளர்த்தான். ஒருநாள் நாரத முனிவர் அங்கு வந்தார். அவர் அப்பிள்ளைகளுக்குச் சிவபெருமா னுடைய திருவைந்தெழுத்தை உரைத்து அதனை உருவேற்ற வேண்டிய முறையையுந் தெரிவித்தார். மேலும் அவர்களைப் பார்த்து, "நீங்கள் இம்மறையை உருவேற்றி வருவீர்களாயின் உங்கட்கு எத்தகைய தீங்கும் உண்டாகமாட்டாது. எத்தகைய காரியமும் வெற்றியடையும். தேவர்கள் அனைவரும் உங்களைப் பணிவார்கள்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

### தவஞ் செய்தல்

நாரதர் கூறிய நல்லுரைகளைப்பெற்ற பிள்ளைகளிருவருந் தவஞ் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார்கள். தாய் தந்தையர்களுடைய உடன்பாடு பெற்றுக்கொண்டு ஒரு காட்டிற்குச் சென்றார்கள். ஓரிடத்தில் சிவன் கோயில் தடாகம் சோலை முதலியன இருக்கக் கண்டார்கள். அங்கு இறைவழிபாடு செய்துகொண்டு, ஒரு காற்பெருவிரலை நிலத்தில் ஊன்றி, ஐம்புலன்களையும் அடக்கி நான்கு பக்கங் களினுந் தீயை வளர்த்து ஆயிரம் ஆண்டுகள் ஒருபொழுது உணவுண்டு தவஞ் செய்தார்கள். ஆயிரம் ஆண்டுகள் தண்டுகளை உண்டார்கள். ஆயிரம் ஆண்டுகள் கிழங்குகளை

அருந்தினார்கள். ஆயிரம் ஆண்டுகள் இலைகளை உண்டார்கள். ஆயிரம் ஆண்டுகள் கனிகளை யுண்டார்கள். ஆயிரம் ஆண்டுகள் காய்கறிகளைத் தின்றார்கள். ஆயிரம் ஆண்டுகள் சருகுகளைத் தின்றார்கள். ஆயிரம் ஆண்டுகள் காற்றை யுண்டார்கள். ஆயிரம் ஆண்டுகள் எத்தகைய உணவுமின்றி யிருந்தார்கள். இவ்வாறு பதினாயிரம் ஆண்டுகள் கதிரவனைப் பார்த்துக்கொண்டு அருமையான தவத்தைச் செய்தார்கள். சிவபிரான் அவர்களுடைய தவத்திற்கிரங்கி அருள் செய்ய எண்ணினார். காளையூர்தியின்மீது உமாதேவியோடு காட்சி தந்தார்.

வரம் பெறுதல்

இருவருஞ் சிவபிரானைப் பணிந்து போற்றினார்கள். சிவபிரான், "வேண்டிய வரங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறியருளினார். இருவருஞ் சிவபிரானைப் பார்த்து, "பெருமானே! இருவகைப் பொழுதினாலும் (இரவு பகல்) இருவகைத் திணையினாலும் அடியேங்கள் மாளாமலிருக்க வேண்டும். நான்முகன் திருமால் முதலிய தேவர்கள் நாங்களிட்ட பணிகளைச் செய்தல் வேண்டும். இவ்வாறு எங்கட்கு அருள்புரிய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் அவர்களைப் பார்த்து, "ஆனைமுகக் கடவுளுடைய திருக்கையாலன்றி மற்றவர்களால் உங்கட்கு அழிவில்லை" என்று கூறியருளியதோடு அவர்கள் வேண்டிய பிற வரங்களையும் கொடுத்து மறைந்தருளினார். பிறகு அவர்களிருவருந் தங்களுடைய ஊரை யடைந்து தாய் தந்தையர்களிடம் தாங்கள் தவஞ்செய்து வரம்பெற்ற செய்தியைக் கூறி மகிழ்ந்திருந்தார்கள்.

அரசாட்சி

பிறகு இருவரும் தாங்கள் அரசாட்சியை மேற்கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தார்கள். மூத்தவனான தேவாந்தகன் நராந்தகனைப் பார்த்து, "நீ இந்நிலவுலகத்தையும் பாதாள உலகத்தையும் உன் வழிப்படுத்தி அரசாட்சி செய்துகொண்டிரு. நான் தெய்வலோகம் முழுவதையும்

வழிப்படுத்தித் தேவர்களையெல்லாம் ஏவல் கொள்ளுகிறேன்'' என்று கூறித் தாய்தந்தையரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு விண்வழியாகத் தேவலோகத்திற்குச் சென்றான். பொழிலிறுத்தலில் ஈடுபட்டுத் தேவேந்திரன் தன்னோடு போரிட வருமாறு செய்தான்.

### இந்திரன் தோல்வி கொண்டோடல்

தேவேந்திரன் ஐராவதத்தில் ஏறிக் கொண்டு வந்து தேவாந்தகனோடு போரிடத் தொடங்கினான். இந்திரனுடைய படைகளையெல்லாங் கொன்று குவித்தான். இந்திரன் வெள்ளை யானையைச் செலுத்திக்கொண்டு வந்து தேவாந்தகனுடைய மார்பில் வச்சிரப்படையினால் இடிபோலப் புடைத்தான். வச்சிரப்படை பொடிப்பொடியாகிச் சிதறிப் போய்விட்டது. தேவாந்தகன் ஓர் அறையினால் வெள்ளை யானையை அடக்கியதோடு மற்றோரறையினால் இந்திரனுடைய பற்களெல்லாம் உதிருமாறு செய்தான். இந்திரனால் அவ்வடியைப் பொறுக்க முடியவில்லை. மூர்ச்சையாகிக் கீழே விழுந்தான். பின்னர்த் தெளிந்தெழுந்தான். இனிமேல் நாம் இங்கு இருப்போமானால் இத்தீயோன் நம்மை அரைக்கணத்திற் கொலை செய்வான் என்று அஞ்சினான்; ஒளிந்து மகாமேரு மலைக்கு ஓடினான். ஒரு குகையை அடைந்து அதில் தங்கித் தவஞ் செய்யலானான். இந்திராணி முதலியவர்கள் இச்செய்தியை உணர்ந்து தாங்களும் பலவிடங்களினுமோடி மறைந்து கொண்டார்கள். விண்ணுலக மனைத்துங் கலங்கின. தேவாந்தகன் இந்திரனுடைய வெள்ளை யானையில்தான் ஏறிக்கொண்டு இந்திரனுடைய இருப்பிடத்திற்குச் சென்று தேவலோக ஆட்சியை மேற்கொண்டான். இந்திரனால் பாதுகாக்கப்பட்ட எல்லோரையுந் தான் பாதுகாப்பதாக வாக்குறுதியளித்துவிண்ணக ஆட்சியை மேற்கொண்டான்.

### நராந்தகன்

தேவாந்தகனுடைய தம்பியாகிய நராந்தகனும் நிலவுலகத்திலிருக்கின்ற அரசர்களில் எதிர்த்து வந்தவர்களை

எமபுரத்திற்கு அனுப்பினுன். பணிந்து வந்தவர்களிடம் பகுதி வாங்கிக்கொண்டு ஆதரித்தான். ஆனுல், தன்னை வணங்கிய ஆதிசேடனிடத்தில் அருள் செய்யாமல் அவனைச் சிறையிலிட்டான். அவனுடைய அரண்மனையிலிருந்த பொருள்களையெல்லாங் கொள்ளையிட்டான். அவ்வுலகத்தை ஆளுமாறு வேறு ஒருவனுக்கு அதிகாரம் கொடுத்தான்.

### திருமணம்

தந்தையாகிய இரவுத்திரகேது தன்னுடைய மக்களின் பேராற்றலைக் கண்டு பெருமை கொண்டான். அழகிற் சிறந்து விளங்கிய பெண்களைத் திருமணஞ் செய்துவைத்தான். இருவரும் அப்பெண்களோடு வாழ்ந்து கொடிய புதல்வர்கள் பலரைப் பெற்று மகிழ்ச்சியோடு வாழ்ந்திருந்தார்கள்.

### மகோற்கடர்

அவுணர்குலம் மேலோங்கித் தேவர்கள் துன்புறுவதை அதிதி கண்டு மனம் வருந்தினுள். காசிபரைப் பணிந்து தேவர்களுடைய துன்பத்தைப் போக்குமாறு நன்மகப்பேற்றை யடைய வேண்டுமென்று வேண்டிக்கொண்டாள். காசிபர் அதிதியைப் பார்த்துக் கடவுள் வழிபாடு செய்து ஆனைமுகக் கடவுளையே புதல்வராகப் பெறவேண்டுமென்று அறிவுரைகள் கூறி அதற்குரிய மறைகளையும் போதித்தார். அதிதியும் அவ்வாறே வழிபாடுகளைச் செய்து ஆனைமுகக் கடவுள் தனக்கு மகனுக வரவேண்டுமென்று தவஞ்செய்தாள். ஆனைமுகக் கடவுள் அதிதியின் தவத்திற்கு மகிழ்ந்தார். கண்டோர் கண்கள் குருடடையத்தக்க பேரொளியோடும், பத்துத் திருக்கைகளோடும், திருநுதலில் கத்தூரிப் பொட்டோடும் மூன்ளும் பிறைத்திங்களோடும் அரிமா ஊர்தியில் அவள் முன் தோன்றினுர். அதிதி கண்விழித்துப் பார்த்தாள். ஆனைமுகக் கடவுளுடைய அஞ்சத்தக்க வடிவத்தையும் ஒளியையுங் கண்டு அஞ்சினுள். திரும்பவுங் கண்களை மூடிக் கொண்டு, "பெருமானே! தேவரீருடைய ஒளியைப் பார்க்க அடியேனுடைய கண்கள் கூசுகின்றன. அமைதியான வடிவத்தோடு காட்சி கொடுத்தருளவேண்டும்" என்று வேண்டிக்

கொண்டாள். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே காட்சி கொடுத்தார். அதிதி இரு கைகளையும் குவித்து வணங்கி, "என்னுடைய ஐயனே! தேவர்கட்குத் துன்பஞ் செய்து கொண்டு தேவாந்தகனும் நராந்தகனும் கொடுங்கோலாட்சி செய்கிறார்கள். அவர்களை யழித்து மூவுலகத்தார்களுடைய துன்பங்களையும் போக்குமாறு தேவரீர் ஒரு பிள்ளையாகத் தோன்றியருள வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே தோன்றுவதாகக் கூறி மறைந்தார். அதிதி ஆனைமுகக் கடவுள் காட்சி கொடுத்த செய்தியைத் தன் கணவரிடங் கூறினாள். மேலும் ஆனைமுகக் கடவுளை வழிபட்டுக்கொண்டிருந்தாள். மற்றொரு நாள் ஆனைமுகக் கடவுள் ஆயிரம் தலைகள், ஆயிரம் நெற்றிகள், ஆயிரம் முகங்கள், ஆயிரஞ் செவிகள், ஆயிரம் வாய்கள், ஆயிரம் மூக்குகள், ஆயிரந் தோள்கள், ஆயிரந் தாள்கள் முதலியவைகளோடு அரிமா ஊர்தியில் அதிதி முன் தோன்றினார். அதிதி ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, "நான் முன் வேண்டிக் கொண்டதை நிறைவேற்றியருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். ஆனைமுகக் கடவுள் அதிதியைப் பார்த்து, "அதனை நிறைவேற்றும் பொருட்டே இப்பொழுது இங்ஙனம் தோன்றியருளினம்" என்றார். இதனைக்கேட்ட அதிதி மேலும் அவரைப் பணிந்து, "இவ்வளவு பெரிய வடிவத்தோடு எனக்கு மகனாக வந்தால் அடியேன் தேவரீரை எவ்வாறு தூக்கிப் பாலூட்டி வளர்க்க முடியும்? ஆகவே பொதுவான குழந்தையைப்போல் வந்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டாள். ஆனைமுகக் கடவுள் அதற்கு இணங்கினார். அவ்வாறே அன்று பிறந்த சிறு குழந்தையானார். அக் குழந்தையை அதிதி மிகுந்த அன்பு பாராட்டி வளர்த்தாள். அவருக்கு மகோற்கடர் என்னும் பெயருண்டாகியது. ஆனைமுகக் கடவுள் இவ்வாறு குழந்தையாகி வளரலானார்.

**முனிவர்கள் கண்டு போதல்**

ஆனைமுகக் கடவுள் காசிபருடைய இருப்பிடத்தில் பிறந்து வளருகிற செய்தியை வசிட்டர் வாமதேவர் முதலிய

முனிவர்கள் நாரத முனிவரால் அறிந்தார்கள். காசிபருடைய இருப்பிடத்திற்கு வந்தார்கள்; காசிபர் அம்முனிவர்களை வரவேற்றுப் பாராட்டினர். அவர்கள் குழந்தையைக் கண்ணுங் கருத்துமாகக் காக்க வேண்டுமென்று கூறித் தத்த மிருப்பிட மடைந்தனர்.

## 80. விநாயகர் திருவிளையாடல் (2)

(க)

**விரசை**

மகோற்கடர் பிறந்த பிறகு நராந்தகனுடைய நகரத்தில் குருதி மழை பொழிந்தது. அதனைக் கண்டு நராந்தகன் அஞ்சினன். காலக்கணிதர்களைக் கூவி, "இங்ஙனங் குருதி மழை பொழிதலுக்குக் காரணமென்ன? இதனால் நன்மையா தீமையா?" என்று உசாவினன். அவர்கள் காசிபமுனிவர் இருப்பிடத்தில் ஆனைமுகக் கடவுள் குழந்தையாகத் தோன்றி யிருத்தலையும் அக்குழந்தையால் ஏற்படப்போகிற அழிவையும் உரைத்துச் சென்றார்கள். அதனால் அச்சமடைந்த நராந் தகன் அக்குழந்தையை எவ்வாறேனுங் கொன்றொழிக்க வேண்டுமென்று எண்ணியவனாய் ஓர் அவுணமாதை அழைத்து, "நீ அக் குழந்தையைக் கொன்று வருவாயாக" என்று கட்டளையிட்டனுப்பினன். அவள் ஓர் அந்தணமா தாகக் கோலந்தாங்கி காசிபர் இருப்பிடத்திற்குச் சென்றாள். அப்பொழுது ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரியத்தில் ஈடுபட் டிருந்தனர். அவள் அக் குழந்தையை எடுத்து விழுங்கி விட்டுத் திரும்பினாள். அப்பொழுது அவளுடைய வயிற்றி லிருந்த மகோற்கடர் நெற்றிக் கண்ணைச் சிறிது திறந்து பார்த்தார். அவளுடைய வயிற்றில் வடவைத் தீயைப்போல் எரிச்சலுண்டாகியது. அவள் தண்ணீரைக் குடித்தாள். பிறகு விண்ணில் எழுந்தாள். மகோற்கடர் காற் பெருவிர லினால் அழுத்தினர். அவள் அசைவற்று நிலத்தில் விழுந் தாள். மகோற்கடர் அவளுடைய வயிற்றைப் பிளந்து கொண்டு வெளியே வந்தார். இதனைக் கண்டு காசிபர் அதிதி முதலியோர் வியப்பும் திகைப்பு மடைந்தனர். அவள் மாண்டுபோன செய்தியை நராந்தகன் கேள்விப்பட்டு

மிகுந்த இறும்பூதடைந்தான். மீண்டும் இரண்டாவதாண்டில் மகோற்கடரைக் கொல்லுமாறு உதத்தன், துந்துபி என்னும் இரண்டு அசுரர்களை அனுப்பினான்.

உதத்தன், துந்துபி (உ)

உதத்தன், துந்துபி என்னும் இரண்டு அசுரர்களும் கிளிப்பிள்ளை வடிவம் எடுத்துக்கொண்டு காசிபர் இருப்பிடத்திற்கு வந்து மரங்களின் மீதிருந்தார்கள். பலவாறு திரிந்தார்கள். மகோற்கடர் அவர்களை அறிந்துகொண்டு கொல்ல எண்ணினார். அதிதியைப் பார்த்து, "அம்மா! அக் கிளிப் பிள்ளைகளை எனக்குப் பிடித்துக்கொடு" என்று கேட்டார். இதனைக்கேட்ட அதிதி, "பறக்கின்ற கிளி என்னுடைய கையில் அகப்படுமா?" என்று கேட்டாள். மகோற்கடர் அதிதியினுடைய மடியிலிருந்து குதித்தெழுந்தார். பருந்து வடிவம் கொண்டு விண்ணி லெழுந்தார். தம்மைக் கண்டு அஞ்சி யோடுகிற கிளிகள் இரண்டையுந் துரத்திப் பிடித்தார். சிறகுகளையெல்லாம் பிய்ந்தெறிந்தார். உடல்களைப் பிளந்து நிலத்தில் எறிந்தார். பிறகு குழந்தையாகி வந்து தாயினுடைய மடியில் அமர்ந்தார்.

சித்திரன் (௩)

ஒருநாள் அதிதியானவள் மகோற்கடரைத் தூக்கிக் கொண்டு சோமவதி என்னுந் தடாகத்திற்குப் போய், மகோற்கடரைக் கரையில் விட்டுவிட்டுத் தான் நீராடிக் கொண்டிருந்தாள். மகோற்கடர் அதிதிக்குத் தெரியாதவாறு தண்ணீரில் இறங்கினார். ஒரு பெரிய முதலை மகோற்கடரைப் பிடித்துக்கொண்டது. கரையிலிருந்தவர்கள் ஓலமிட்டார்கள். அதிதி கழுத்தளவு தண்ணீர் வரை போய்ப் பார்த்துவிட்டு நின்றுவிட்டாள். முதலை மகோற்கடரை வாயில் கௌவியபடி அங்குமிங்குந் திரிந்தது. பிறகு அடியிற்சென்று ஒளித்தது. சிறிது நேரத்தில் மகோற்கடர் அம்முதலையின் முதுகிலேறிய வாறு தண்ணீரின் மேலே தோன்றினார். அம்முதலையைப் பல பக்கங்கட்கும் விரட்டித் திருவிளையாடல் செய்தார். அதிதி, "அப்பா! என் கண்மணியே, திருவிளையாடல் போதும்

விரைவாக அம்முதலையைக் கொன்றுவிட்டுக் கரைக்கு வந்துவிடுவாயாக'' என்று சொல்லி வேண்டிக் கொண்டாள். மகோற்கடர் அம்முதலையைக் கரைமீதேற்றினர். அது கரைமீதேறிய அளவில் உயிரை விட்டது. அதன் உடலில் இருந்து ஒரு சிறந்த ஆடவன் வெளிப்பட்டான். அவன் ஆனைமுகக் கடவுளாகிய மகோற்கடரைப் பன்முறை பணிந் தெழுந்தான். இரு கைகளையும் தலைமேற் குவித்துக் கொண்டு, ''என்னுடைய ஐயனே! அடியேன் முன்பு கந்தருவர்கட்கெல்லாம் அரசனாக விருந்தேன். ஒருநாள் அடியேன் திருமணத்தைச் செய்து முடிக்கத் தொடங்கினேன். திருமணத்திற்குப் பிருகுமுனிவர் வந்தார். அவர் வந்த சமயத்தில் நான் திருமணவேலையின் நினைவாகவே இருந்த படியால் அம்முனிவரை எதிர்கொண்டழைத்து வழிபாடு செய்யாமலிருந்துவிட்டேன். அம்முனிவர் மிகுந்த சினங் கொண்டு, 'நீ பெரியோர்கட்குச் செய்யவேண்டிய வழிபாடுகளை முறையாகச் செய்யாமலிருந்தபடியால் முதலையாகக் கடவாய்' என்று வசவுரை வழங்கினர். பின்னர், யான்வேண்டிக் கொண்டபடியினால் 'ஆனைமுகக் கடவுள் குழந்தையாகத் தோன்றுவார். அப்பொழுது அவருடைய திருக்கை பட்ட அளவில் இந்த வசவுரைப் பலன் முடிவு பெறு'மென்று வசவுரை நீக்கம் செய்தருளினர். அவ்வாறே இன்று தேவரீருடைய திருக்கைபட்டுப் பழைய உருவம் பெற்றேன்'' என்று கூறி விடைபெற்றுக்கொண்டு விமானமீதேறி விண் வழியாகச் சென்றான்.

(ச)

**ஒளித்து வைத்தது**

மகோற்கடருக்கு நான்காவது அகவை நடந்து கொண் டிருந்தது. கைலாயத்திற்குச் செல்லுகின்ற, ஆகா, ஊகூ, தும்புரு என்னும் மூன்று கந்தருவர் காசிப முனிவருடைய இருப்பிடத்திற்கு வந்தார்கள். காசிபமுனிவர் அவர்களை வரவேற்றுப் போற்றினர். அவர்கள் நீராடிவிட்டுச் சிவபூசை செய்யத் தொடங்கினர்கள். தாங்கள் நாடோறும் வழி படுகின்ற ஆனைமுகக் கடவுள், சிவபெருமான், உமாதேவி, திருமால், கதிரவன் என்னும் ஐந்து தெய்வங்களின் உருவங்

களையும் ஓர் அழகிய பலகையின் மீது வைத்துவிட்டுக் கண்களை மூடி அவைகளை எண்ணிக் கொண்டிருந்தார்கள். முனிச் சிறுவர்களோடு விளையாடிக் கொண்டிருந்த மகோற்கடர் அந்த இடத்திற்கு வந்தார். உருவங்கள் ஐந்தையும் பார்த்தார். அவைகள் மறைந்து போகுமாறு ஒரு திருவிளையாடல் செய்தார். கந்தருவர்கள் கண்விழித்துத் தெய்வத் திருவுருவங்களைப் பார்த்தார்கள். உருவங்கள் காணப்படவில்லை. திடுக்கிட்டு மயங்கினார்கள். அச்செய்தியைக் காசிபமுனிவருக்குத் தெரிவித்தார்கள். அவர் பணி புரிவோர்களையெல்லாம் உசாவினார். அவர்கள் நாங்களறியோமென்றார்கள். பின்னர்க் காசிபர், தம்முடைய கையிலே பிரம்பொன்றை எடுத்துக்கொண்டு "கந்தருவர்களுடைய தெய்வ உருவங்களை நீ எடுத்திருக்கிறாய். அவைகளை எங்கே வைத்துள்ளாய்? கூறுவாயாக" என்று சொல்லி மிரட்டினார். மகோற்கடர் நகை செய்தார். தம்முடைய வாயை நன்றாகத் திறந்து காட்டினார். "அவற்றை இங்கேதான் ஒளித்து வைத்திருக்கிறேன்" என்று சொன்னார். அவர் திறந்து காட்டிய வாயைக் காசிபர் பார்த்தார் அவ்வாயிலே, உமாதேவி, சிவபெருமான், திருக்கயிலாயம், திருமால், வைகுந்தம், நான்முகன், சத்தியலோகம், இந்திரன், அமராபதி, அவுணர், நாகர், இயக்கர், மனிதர் ஆகியவர்களோடு அவர்கள் வாழ்கின்ற எண்ணிறந்த ஊர்களும், அளவற்ற ஆறுகளும், அளவற்ற காடுகளும், அளவற்ற மலைகளும், அளவற்ற கடல்களும், அளவற்ற பூம்பொழில்களும், பதினான்கு உலகங்களும், எட்டுத் திக்குப்பாலகர்களும் இன்னும் அளவற்ற பொருள்களும் விளங்குதலைக் கண்டார். மனம்வருந்தியிருந்த கந்தருவர்கள் மூவரும் அப்புதுமையைக் கண்டு அளவற்ற வியப்படைந்து மகோற்கடருடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினார்கள். மகோற்கடர் அவர்களுடைய வழிபடு மூர்த்திகளை எடுத்து அவர்களிடங் கொடுத்தருளினார்.

ஐந்து அரக்கர்கள் (ரு)

ஆனைமுகக் கடவுளாகிய மகோற்கடருக்கு அகவை ஐந்து நடக்கும்போது காசிபர் தம் மகனாகிய மகோற்கடருக்குப்

பூணூல் சடங்கு நடத்தத் தொடங்கினர். அதன் பொருட்டுத் தேவர் அரக்கர் முதலிய அனைவரையும் அழைத்தார். எல்லோரும் வந்து பூணூலணி விழாவைச் சிறப்புற நடத்தினர். அங்கு வந்திருந்த முனிவர்கள் அனைவரும் பிள்ளையார்மீது மறைமொழிப் பொருளாகிய மங்கல அரிசியைத் தூவினர்கள். அச்சமயத்தில் மகோற்கடரைக் கொல்லும் பொருட்டு நராந்தகனல் அனுப்பப்பட்ட அரக்கர்கள் ஐவர் அங்கு வந்திருந்தனர். அவர்கள் மிகக் கொடியவர்கள். திருமாலும் அவர்களைக் கண்டால் அஞ்சத்தக்க வடிவமுடையவர்கள். அவர்கள் முனிவர்களைப் போலக் கோலம்பூண்டு அங்கு வந்திருந்தார்கள். அவர்கள் மங்கல அரிசியில் கணைகளை மறைமொழியாற்றலால் மறைமுகமாகப் பதித்திருந்தார்கள். மற்ற முனிவர்களைப் போலவே இந்த அரக்க முனிவர்களும் மகோற்கடர்மீது கணைபொதி மங்கல அரிசியைத் தூவினர்கள். அவ்வளவில் அதில் மறைக்கப்பட்டிருந்த கணைகளெல்லாம் வெளிப்பட்டன. தத்தம் வடிவங்களோடு வெளிப்பட்ட அவை ஆனைமுகக் கடவுள்மீது விழுவதற்கு அஞ்சி யாவருங் காணுமாறு திருவடிகளில் விழுந்து வணங்கின. ஆனைமுகக் கடவுள் அவற்றைத் தம்முடைய திருக்கைகளிலே ஏந்தினர். பொய்க்கோல அரக்க முனிவர்கள் ஐவர் மீதும் உண்மையான மங்கல அரிசிகள் ஐந்தைத் தூவினர். அவை உடனே கணைகளாகி ஐவரையுங் கொன்று வீழ்த்தின. பிறகு தேவர்களனைவரும் மகோற்கடருக்குப் பலவகையான நன்கொடைகளை வழங்கினர்.

(சு)

**இந்திரனுடைய ஆணவம்**

திடீரென்று இந்திரனுக்கு மனமயக்கமும் ஆணவமும் மிகுதியாகியது. எல்லோரும் மகோற்கடரை வணங்கும்போது, அவன்மட்டும் நாம் இச் சிறுபிள்ளையை வணங்குதல் கூடாது. தேவர்கட்கெல்லாம் அரசனாகவுள்ள நம்மைத்தான் எல்லோரும் வணங்கவேண்டியது முறையென்று மாறுபாடாகப் பேசி இறுமாப்புக் கொண்டிருந்தான். காசிபர் அவனுக்கு நல்லுரைகள் கூறியும் அவன் அவ்வுரைகளையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவன் மகோற்கடருடைய

ஆற்றலைப் பலவாறு ஆராய்ந்து பார்த்தான். அவனுக்கு நல்லறிவு புகட்ட எண்ணிய ஆனைமுகக் கடவுள் உலகவடிவம் (விசுவரூபம்) எடுத்தார். அவ்வடிவத்திற்குக் கணக்கற்ற தலைகளும், கணக்கற்ற முடிகளும், கணக்கற்ற முகங்களும், கணக்கற்ற விழிகளும், கணக்கற்ற காதுகளும், கணக்கற்ற வாய்களும், கணக்கற்ற தோள்களும், கணக்கற்ற கைகளும், கணக்கற்ற விரல்களும், கணக்கற்ற மார்புகளும், கணக்கற்ற வயிறுகளுங் காணப்பட்டன. பிற உறுப்புக்களும் கணக்கில்லாமல் விளங்கின. அவருடைய திருவடிகள் கீழேழு உலகங்கட்கு அப்பாற் போயிறங்கின. அவருடைய காதுகள் எல்லாம் எட்டுத்திக்குகட்கும் அப்பாற்போய் விளங்கின. அவருடைய மயிர்க்கால்கள்தோறும் அளவற்ற உலகங்கள் தொங்கின. பல கதிரவர்கள் ஒரே சமயத்தில் தோன்றினாற் போல் அவருடைய உடலில் இருந்து பேரொளி உண்டாகியது. அந்த ஒளியிலே கணக்கில்லாத திருமால்கள், கணக்கில்லாத நான்முகர்கள், கணக்கில்லாத இந்திரர்கள், கணக்கில்லாத தேவர்கள், கணக்கில்லாத முனிவர்கள், கணக்கில்லாத வித்தியாதரர்கள் மற்றுமுள்ளவர்களெல்லாம் போற்றி வழிபாடு செய்துகொண்டிருந்தனர். இப் பெருவடிவத்தை இந்திரன் கண்டு மயக்கங்கொண்டான். மயிர்க்கால்களில் தொங்குகின்ற அளவற்ற உலகங்களில் ஓர் உலகத்துக்குள் நுழைந்து அதற்குள் பதினான்கு உலகங்களையும், திருமால் நான்முகன் இந்திரன் முதலிய தேவர்களையும் கணக்கில்லாமற் கண்டு தனக்கு நேர்ந்திருக்கிற அறிவு மயக்கத்தை யொழித்தான். அவனுக்கு நல்லறிவு உண்டாகியது. நுழைந்து உலகத்துக்குள்ளிருந்து வெளிவருதற்கு முடிவு செய்தான். ஆனால் அவனால் வெளிப்பட முடியவில்லை. அங்கிருந்தபடியே ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை மனத்திலெண்ணி மிகுந்த பேரன்போடு போற்றினான். தன்னுடைய தவறுகளையெல்லாம் பொறுக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். பலவாறு பணிந்து போற்றினான். மகோற்கடரிடம் விடை பெற்றுக்கெண்டு தன்னுடைய இருப்பிடமாகிய மகாமேரு மலையை நோக்கிச் சென்றான். எல்லோரும் தத்தம் இருப்பிடத்தை யடைந்தார்கள்.

### மகோற்கடர் காசிக்குச் செல்லுதல்

மகோற்கடர் தம்முடைய ஆருவது அகவையில் பல உலகங்கட்கும் போய்ப் பலவகையான திருவிளையாடல்களைச் செய்துகொண்டிருந்தார். அந்நாளில் நராந்தகனுக்கு நல்லவனாக நடந்துகொண்டு காசியில் ஓர் அரசன் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அவன் தன்னுடைய மகனுக்குத் திருமணஞ் செய்ய எண்ணினான். திருமண வேள்வி செய்தற்குத் தன்னுடைய ஆசானாகிய காசிப முனிவரை அழைக்க எண்ணினான். தானே புறப்பட்டுக் காசிப முனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றான். காசிப முனிவர் காசியரசனுடைய வரவுக்கு மகிழ்ந்தார் வந்த காரியம் யாதென்று உசாவினார். காசியரசன் தன்னுடைய மகனுக்குத் திருமணஞ் செய்யவேண்டுமெனவும் அதற்குக் காசிபரே வரவேண்டுமென்றும் வேண்டிக்கொண்டான். காசிபர் தாம் நோன்பு மேற்கொண்டிருப்பதாகவும் புதல்வனாகிய மகோற்கடனை அழைத்துச் செல்லலாம் என்றுங் காசியரசனிடங் கூறினார். மகோற்கடரை யழைத்து, "இவன் காசியரசன். இவனோடு காசிக்குப் போய்த் திருமணத்தை முடித்துவா" என்று கட்டளையிட்டார். மகோற்கடருஞ் செல்லத் துணிந்தார். அதிதி "என் மகன் துடுக்குடையவன்; குறும்புகள் செய்பவன்; இவனை நீ பாதுகாப்பாக அழைத்துக்கொண்டு போய்ப் பாதுகாப்பாகவே கொண்டுவந்து சேர்த்தல் வேண்டும்" என்று சொன்னாள்.

### தூமாட்சன்

காசிராசன் மகோற்கடரை அழைத்துக் கொண்டு புறப்பட்டான். இருவரும் ஏறிய தேர் கண்டக மலைக்கு அண்மையில் வந்தது. அம்மலைச் சாரலில் தூமாட்சன் என்பவன் பதினாயிரம் ஆண்டுகளாகப் புகையையே உணவாகப் புசித்துக்கொண்டு தவஞ் செய்திருந்தான். அவன் தவம் ஓர் ஆயுதத்தைப் பெறவேண்டும் என்னும் நோக்கத்தோடு கூடியதாகவிருந்தது. அத்தூமாட்சன் தேவாந்தகனுக்கும் நராந்தகனுக்குந் தகப்பனான இரவுத்திரகேதுவுக்கு இளையவன்.

அவன் படைக்கலத்தைப் பெறவேண்டிய நாள் அற்றை நாளாகவே அமைந்திருந்தது. கதிரவன் தன்னுடைய இருப்பிடத்திலிருந்துகொண்டே அவனுடைய தவத்திற்கிரங்கி ஒரு படைக்கலம் அனுப்பினுன். அப்படைக்கலம் விண்ணிட மெல்லாம் அளவற்ற ஒளியை வீசிக்கொண்டு நிலத்தை நோக்கி வந்தது. அதனை மகோற்கடர் பார்த்தார். அதனுடைய ஆற்றலை அறிவோம் என்று எண்ணினுர். திடீரென்று தேரிலிருந்து விண்ணிற் பாய்ந்தார். கருடன் பாம்பைப் பிடிப்பதுபோல அப்படைக் கலத்தைத் தம்முடைய கைகளாற் பற்றினுர். மீளவுந்தேரில் வந்திருந்து கொண்டு தூமாட்சன்மீது செலுத்தினுர். அது வெளிப்பட்ட அளவில் பேராற்றலோடு சென்று தூமாட்சனுடைய தலையை அறுத்துத் கீழே தள்ளியது. அவனுடைய உடல் ஐநூறு பனை அகலத் திற்கு விழுந்தது. இப்புதுமையைக் காசிராசன் பார்த்து அச்சமும் இன்பமும் அடைந்தான். மகோற்கடருடைய பெருமையை நன்கு உணர்ந்து கொள்ளாத அவன், "நராந்தகனுக்கு இதுவரையில் நல்லவனுக நடந்துகொண்டு வந்தோமே; இனிமேல் எத்தகைய தீமை நேரிடப் போகிறதோ'' என்று அச்சங்கொண்டான். தூமாட்சனுடைய மக்கள் வந்து காசிராசனை எதிர்த்தார்கள். மகோற்கடர் தம்முடைய மூச்சுக் காற்ருலேயே அவர்கள் இறந்து பறந் தோடச்செய்தார். இச்செய்தியை நராந்தகன் அறிந்து தன்னுடைய வீரர்களை அனுப்பினுன். ஆனைமுகக் கடவுளாகிய மகோற்கடர் அவர்களையெல்லாங் கொன்ருெழித்தார். காசி ராசன் மகோற்கடரோடு காசிமாநகரை அடைந்தான். காசிமா நகரமக்கள் மகோற்கடரைக் கண்டு அளவற்ற இன்பமடைந் தார்கள். மகோற்கடர் காசிராசனுடைய அரண்மனையில் தங்கியிருந்தார். காசிமாநகரத் தெருவில் மகோற்கடர் செல்லும்போது நராந்தகனுல் ஏவப்பட்ட இரண்டவுணர்கள் அவரைக்கொல்லும் பொருட்டு வேள்வியாசானுடைய மக்களைப் போல் மகோற்கடர் முன் சென்ருர்கள். மகோற்கடர் அவர் களைத் தழுவிக் கொள்ளுபவர்போல் அவர்கள் எதிரே சென்று அவர்களைக் கொன்ருெழித்தார்.

### பதங்கன் விதுலன்

பதங்கன் விதுலன் என்னும் இரண்டவுணர்கள் சண்ட மாருதம்போல் உருக்கொண்டு நகரத்து மாட மாளிகை கூடகோபுரம் முதலியவற்றைக் கீழே தள்ளிப் பல வகையான தீமைகளைச் செய்தார்கள். மகோறகடர் தம் மரைக்கணுள்ள ஆதிசேடனை எடுத்து வெளியே விட்டார். அவ் வாதிசேடன் பெருங் காற்றையெல்லாம் விழுங்கித் தொலைத்தான். மகோற்கடர் அவ்வீரர்கள் இருவரையும் பிடித்து நிலத்தில் அறைந்து கொன்றார். நகரத்து மாட மாளிகைகளையும் முன்போல் அழகுடன் விளங்கச் செய்தார். இவற்றை யெல்லாம் பார்த்த காசிராசன் அச்சமுந் திகைப்பு மடைந் தான். மாளிகைக்குள் நுழையாதவாறு தடைசெய்த ஓர் அவுணனையும் ஆனைமுகக் கடவுள் கொன்றார். காசிராசனுக்கு வேள்வியாசிரியராக விளங்கிய தருமதத்தர் என்பவர் (இவர் நான்முகனுடைய கூறு) தம்முடைய பெண்களாகிய சித்தி புத்திகளை ஆனைமுகக் கடவுளுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார். ஆனைமுகக் கடவுள் மேலும் நராந்தகன் தம்மைக் கொலை செய்யுமாறு அனுப்பிய அவுணர்கள் பலரையுங் கொன்றார்.

### மூன்று அவுணர்கள்

விதாரணன், சுவாலகமுகன், வியாக்கிரமுகன் என்னும் பெயரையுடைய மூன்று அசுரர்கள் காசிப்பட்டணத்தை அழிக்குமாறு வந்தார்கள். விதாரணன் பெருங் காற்றானான். சுவாலாமுகன் நெருப்பானான். அவர்கள் பட்டணத்தின் கோபுரவாசலைப் பிளந்துகொண்டு உள்ளே சென்றார்கள். வியாக்கிரமுகன் வாசலில் ஓடிவருகிறவர்களையெல்லாம் விழுங்குமாறு மேலுதடு விண்ணையும் கீழுதடு மண்ணையும் பொருந்த வாயைப் பிளந்துகொண்டு நின்றான். இவ்வாறு மூவருங் கூடிச் செய்த கொடுமையால் நகரங் குட்டிச் சுவராகியது. நகரத்திலுள்ளவர்கள் விழித்தெழுந்தார்கள். அச்சங்கொண்டு பல திக்குகளினும் ஓடினார்கள். காசி நகரம் முழுவதும் அலைக் கழிக்கப்பட்டது. சில தூதர்கள் விரைந்து சென்று அரசனை யெழுப்பினார்கள். அரசன் மகோற்கடரை

எழுப்பினுன். மகோற்கடர் ஒன்றும் உணராதவரைப்போல எழுந்து அரசனுக்குத் தெளிவுரை கூறினுர். நீரேனத்தில் இருந்த தண்ணீரைத் தம்முடைய திருக்கையிலெடுத்து வடவைத் தீயையும் பெருங் காற்றையுந் தொலைத்தார். இரண்டு அவுணர்களையுங் கொன்ருர். வாசலில் இருந்த வியாக்கிரனையும் வதைத்தார். தம்முடைய திருக்கண்களாற் பார்த்து, அழிவுபட்ட நகரத்தை முன்போற் செய்தார். அரசன் மகோற்கடருடைய ஆற்றலைக் கண்டு மிகவும் வியந்தான்.

புருசுண்டி முனிவர்

ஒருநாள் அரசனும் அரசியும் மகோற்கடருக்குச் சிறப்பாக விருந்து நடத்தினுர்கள். அரசனும் மகோற்கடரும் உண்டு கொண்டிருக்கும்போது அரசன் மகோற்கடரையும் அவருடைய உண்கலத்தையும் பார்த்தான். அப்பொழுது அவர்மீது தானணிந்த அணிகலன்களல்லாம் மேலுஞ் சில அணிகலன்கள் விளங்கக் கண்டான். உண்கலத்திலோ தன்னுடைய மனைவி படைத்த உண்பொருள்களல்லாமல் மேலுஞ் சில இனிமையான உண்பொருள்கள் இருப்பதைப் பார்த்தான். இஃதென்ன புதுமையென்று திகைத்தான். மகோற்கடரைத் தொழுது, “பெருமானே! நானணிந்த அணிகலன்களன்றி வேறு அணிகளுங் காணப்படுவதோடு உண்கலத்தினுஞ் சில புதுமையான பொருள்கள் உள்ளனவே அவை எவ்வாறு வந்தன?” என்று உசாவினுன்.

மகோற்கடர் அரசனைப் பார்த்து, “அரசனே! காரணம் கூறுகிருேம் கேள்: நம்முடைய அன்பர்களிலே ஒருவன் தண்டகக் காட்டிலே இருக்கிருன். அவனுடைய பெயர் புருசுண்டி என்று கூறுவார்கள். அவன் தேவர்களும் வழி படத்தக்க பெருமையுடையவன். அவன் இன்று ஆனைமுகக் கடவுளுடைய நோன்பை மேற்கொண்டான். மிகுந்த அன்போடு பூசை செய்து இவ்வணிகலன்களையும் உணவையும் நமக்குப் படைத்தான். பேரன்போடு அவன் படைத்தவை நம்மை அடையலாயின. அவனுடைய பெருமைகளை எவராலும் இயம்ப முடியாது. நீ கண்ட புதுமைக்கு இதுதான்

காரணம்'' என்று கூறினர். இதனைக் கேட்ட அரசன் அப் புருசுண்டியைப் போற்றி வழிபட வெண்ணினன். தன்னுடைய எண்ணத்தை மகோற்கடருக்குத் தெரியப்படுத்தினன். மகோற்கடர் அரசனைப் பார்த்து, ''நீயே சென்று அம் முனிவனைக் கண்டு வணங்கி நாம் அழைத்துக்கொண்டுவரச் சொன்னதாகச் சொல்லி அழைத்துக்கொண்டு வருவாயாக'' என்று கூறினர். அரசன் தண்டகவனத்தை யடைந்து புருசுண்டி முனிவரைக் கண்டு வணங்கி நின்றான். புருசுண்டி முனிவர் அரசனைப் பார்த்து, ''நீ யார்?'' என்று உசாவினர். தான் காசியரசன் எனவும், மகோற்கடராகக் காசியில் எழுந் தருளியிருக்கும் ஆனைமுகக் கடவுள் அழைத்துக் கொண்டுவரச் சொன்னதாகவுந் தெரியப்படுத்தினன். முனிவர் அரசனைப் பல கேள்விகள் கேட்டார். அரசன் அவருடைய கேள்விகட் கெல்லாம் தக்கவாறு மறுமொழி கூறினன். புருசுண்டி முனிவர் பிறகு புதுமையான முறையில் காசியை அடைந்தார். ஆனைமுகக் கடவுளைக் கண்டு வணங்கினர். பிறகு இரண் டொருநாள் காசியில் இருந்து அரசனுடைய வழிபாட்டை யேற்றுக்கொண்டு தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார்.

### மேகன்

ஒருநாள் காசியரசன் கொலுவிருக்கை மண்டபத்தில் அமர்ந்திருந்தான். அப்பொழுது எல்லா மாயைகளினும் வல்லவனாகிய மேகன் என்னும் ஓர் அவுணன் காலக் கணிதனாக வடிவங்கொண்டு கையிற் செபமாலையும் புத்தகமு மாக அரசன்முன் போய் நின்றான். அரசன் அந்த மாயக் காலக் கணிதனைப் பார்த்து, ''ஐயா, நீர் யார்? இங்குவரக் காரணம் யாது? உம்முடைய கையிலிருப்பது என்ன நூல்?'' என்று அன்போடு கேட்டான். காலக் கணிதனாகக் கோலங் கொண்டு வந்த அவுணன் அரசனைப் பார்த்து, ''அரசே! நான் கந்தருவ லோகத்திலிருக்கிற காலக் கணிதன். நம் முடைய கையிலிருப்பது காலக் கணித நூல். நாம் எவ்வகை யான பயனையும் விரும்பி இவ்விடத்திற்கு வரவில்லை. உமக்கு நன்மையான காரியங்கள் சிலவற்றைக் கூறுமாறு வந்தோம்.

அஃதென்ன வென்பீராயின்; கூறுகிறோம். அதனை நீர் ஊக்கத்தோடும் நினைவோடும் கேட்டல் வேண்டும். நமக்கு எப்பொழுதும் முக்கால உணர்ச்சியும் இருந்து கொண்டே யிருக்கும். நெருப்பை மின்மினிப் பூச்சியென்று எண்ணி அதனைத் தனது கூட்டிலே வைத்துக்கொண்டு அழிந்து போகிற குருவியைப்போல நீர் ஓர் அந்தணச் சிறுவனைக் கொண்டுவந்து இந்நகரத்தில் வைத்துக்கொண்டிருக்கிறீர். அவனால் பல இடையூறுகள் நேர்ந்ததைப் பார்த்திருக்கிறீர். அச்சிறுவன் விக்கினராசனுகையால் உமக்குப் பல விக்கினங்கள் வந்துகொண்டேயிருக்கும். உம்முடைய நல்வினைப் பயனால் இதுவரையில் வந்த இடையூறுகள் ஒழிந்துபோயின. இனி மேல் அவ்வாறு ஒழிந்துபோக மாட்டாது. ஆகவே, அச் சிறுவனை மிகுவிரைவாக இந் நகரத்தைவிட்டுக் காட்டிலே கொண்டுபோய் விட்டுவிடுவீராயின் உமக்கு எல்லா நலமும் ஏற்படும்'' என்று கூறினான். அவன் கூறியதைக் கேட்ட காசிராசன் அவனுடைய வஞ்சனையை உணர்ந்துகொண்டான். இவன் மகோற்கடரால் தொலையப் போகிறான் என்பதை உணர்ந்துகொண்ட அரசன் அப் போலிக் காலக் கணிதனைப் பார்த்து, ''ஆயின் நீரே அவனைப் பிடித்துக்கொண்டுபோய்க் காட்டில் விட்டுவிடுவீராக'' என்று சொன்னான். சில ஏவலர்களை யழைத்து ''மகோற்கடரை இவருக்குக் காட்டுவீர் களாக'' என்று சொன்னான். ஏவலர்களும் அவ்வாறே அழைத்துக்கொண்டுபோய்க் காட்டினார்கள்.

மகோற்கடர் காலக்கணிதனிடம் வந்தார். அவரைக் கண்ட அளவிலேயே காலக்கணிதன் அச்சங்கொண்டான். மகோற்கடர் அவனிடஞ் சிறிது உரையாடினார். பிறகு அவனுக்கு நன்கொடை வழங்குவார் போன்று தமது மார்பி லணிந்திருந்த முத்துமாலையைக் கழற்றி அத்தீயோனுடைய கழுத்திலே போட்டார். அம் முத்துமாலையில் இருந்து தீச்சுவாலை யுண்டாகி அவ் வஞ்சகனைச் சுட்டு நீருக்கியது. அப் புதுமையைப் பார்த்தவர்கள் மிகுந்த வியப்படைந் தார்கள்.

கூபன் கந்தன்

பிறகு கூபன் எனவுங் கந்தன் எனவும் பெயருள்ள இரண்டவுணர்கள் மகோற்கடரைக் கொல்ல வந்தார்கள். அவர்கள் பாழுங் கிணருகவுந் தவளையாகவும் உருவெடுத் திருந்தார்கள். மகோற்கடர் அதனை யுணர்ந்தார். மற்றைச் சிறுவர்களை அழைத்துக்கொண்டு விளையாடச் செல்லுகிற வரைப்போல் அக்கிணற்றிடஞ் சென்ருர். அங்குச் சிறிது நேரம் எல்லாரும் விளையாடிக்கொண் டிருந்தார்கள். பிறகு எல்லாரும் அக்கிணற்றின் ஆழத்தை அறிய முயன்ருர்கள். முடியாமற் போகவே இறுதியில் மகோற்கடர் அக்கிணற்றில் குதித்தார். அப்பொழுதே கிணருக இருந்த அவுணன் விரிந்து பெரிய கடலானுன். அதற்குள்ளே தவளையாக இருந்தவன் பெரிய மலைபோன்ற தவளையாகி உலாவினுன். மகோற்கடர் சிறிதுநேரம் நீரில் விளையாடிக் கொண்டிருந்தார் பிறகு தவளையினுடைய கால்களில் ஒன்றைப் பிடித்திழுத்துக் கரைமீது வீசினுர். இருவரும் இறந்தொழிந்தார்கள். இத் திருவிளையாடலை அரசன் முதலானேர் கேட்டு மகிழ்ச்சி யடைந்தார்கள்.

மூன்று அசுரர்கள்

மகோற்கடரைக் கொல்லவரும் அவுணர்கள் அனைவரும் மாண்டொழிதலை நராந்தகன் உணர்ந்தான். மிகுந்த வருத்தமுஞ் சினமும் அடைந்தான். தன்னுறவினர்களாகிய அம்பாசுரன், அந்தகாசுரன், துங்காசுரன் என்னும் மூவரை யழைத்து மகோற்கடர்மீது ஏவினுன். அவர்கள் இருளாகவும், மலையாகவும், அம்பாகவும் காசிநகரத்தை மூடிக்கொண்டு மாயைப் போர் செய்தார்கள். மகோற்கடர் பெரும் பறவை யாகி அவ்வசுரர்கள் மூவரையுங் கொன்ருெழித்தார்.

பிரமரை

முற்கூறிய மூவர்க்குந் தாயாகிய பிரமரை தன் மக்கள் மாண்டொழிந்ததை யறிந்து மகோற்கடரைக் கொலை புரிய எண்ணினுள். அதிதியைப் போல் வடிவெடுத்துக்கொண்டு காசி நகரத்திற்கு வந்தாள். காசிராசன் முதலானேர் அவள் அதிதியே என்று எண்ணி வணக்க வழிபாடுகள் செய்தனர்.

அதிதியை மகோற்கடர் பார்த்து, "அம்மா! எனக்குத் தின்ப தற்கு யாது கொண்டு வந்தாய்?" என்று கேட்டார். பொய்க் கோல அதிதி நஞ்சு கலந்திருந்த சிற்றுண்டிகளைச் செய்து கொண்டுவந்திருந்தாள். அவற்றை எடுத்து மகோற்கட ரிடங் கொடுத்தாள். மகோற்கடர் அவற்றை மிகுவிரைவாக வாங்கி யுண்டார். அவ்வளவில் அவளும் அவளோடு கூட வந்திருந்த அரக்கியரும் நஞ்சு தலைக்கேறி மாண்டொழிந் தனர். அதிதியாக வந்தவள் அரக்கியென்று அரசன் முதலி யோர் உணர்ந்து மகோற்கடரைப் பாராட்டினார்கள்.

### எங்குந் தாமேயானது

ஒருநாள் அக் காசி நகரத்தில் உள்ளார் அனைவரும் மகோற்கடருக்கு உணவு படைத்து மகிழ வேண்டுமென்று எண்ணினார்கள். தங்களுடைய எண்ணத்தைக் காசிராச னுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவன் மகோற்கடருக்கு ஊரார் அனைவரும் உணவிடுதலை விரும்பாது மறுத்தான். ஆனால், மகோற்கடர் எல்லாருடைய வீட்டிலும் வந்து சாப்பிடுவதாகக் கூறினார். எல்லாருஞ் சமையலை முடித்து வைத்துக்கொண்டு மகோற்கடரை எதிர்பார்த்தார்கள். மகோற்கடர் ஏழை எளியவர்கள் முதலிய எல்லோருடைய இல்லங்கட்குஞ் சென்று உணவு உண்டு எல்லாருக்கும் மனநிறைவை உண்டாக்கினார். அன்று காசிராசனோடுமிருந்து உணவு உட்கொண்டு காசிராசனுக்கும் களிப்பையுண் டாக்கினார்.

### நராந்தகன் போருக்கு வருதல்

தன்னால் அனுப்பப்படுகிற அனைவரும் மீளாமற் போகிற செய்தியை அறிந்து வருமாறு நராந்தகன் இரண்டு தூதர்களை அனுப்பினான். அவர்கள் காசி நகரத்திற்கு வந்து மகோற் கடரைப் பார்த்தார்கள். மிக எளிமையாக நினைத்தார்கள். இச் சிறுவனை நாமே பிடித்துக் கொண்டுபோய் நராந்தகனிடம் விடலாமென்று முடிவு செய்து மகோற்கடரைப் பிடிக்கச் சென்றார்கள். மகோற்கடர் அவர்கள் இருவரையும் பிடித்து அடித்துக் கொல்ல முயன்றார். அவர்கள் இருவரும் மகோற்

கடரிடம் உயிர்ப்பிச்சை பெற்று நராந்தகனிடஞ் சென்று மகோற்கடரைப் பற்றிய செய்திகளையெல்லாஞ் சொன்னார்கள். நராந்தகன் அமைச்சர்களைக் கலந்து ஆராய்ந்தான். காசிப் பட்டணத்தின்மீது படையெடுத்துக் கொண்டு வந்து மகோற் கடரைத் தொலைப்பதென்று முடிவு செய்தான். உடனே பெரும்படையைத் திரட்டிக் கொண்டு காசி நகரத்திற்கு வந்து சேர்ந்தான். நராந்தகனுடைய படைவீரர்கள் காசிப் பட்டணத்தைப் பலவாறு வருத்திக்கொண்டு திரிந்தார்கள். சில தூதர்கள் விரைவாகக் காசிராசனிடஞ் சென்று நராந் தகன் படையெடுத்துக்கொண்டு வந்திருக்கிற செய்தியைத் தெரியப்படுத்தினார்கள்.

காசிராசன் கட்டளை

நராந்தகன் படையெடுத்து வந்த செய்தியைக் காசிராசன் அறிந்து சினங்கொண்டான். படைகளைத் திரட்டுமாறு கட்டளையிட்டான். படைகள் திரண்டதும் நராந்தகனோடு போரிடப் புறப்பட்டான். காசிராசன் படைக்கும் நராந்தகன் படைக்கும் போர் மூண்டது. காசிராசனுடைய படைகள் வீறு கொண்டெழுந்து போரிட்டபடியால் நராந்தகன் படையிலுள் ளார் முதுகுகாட்டியோடத் தொடங்கினார்கள். இதனை நராந்தகன் கண்டு, ''நம்முடைய படைகளின் ஆற்றல் நன்று நன்று'' என்று சினநகை புரிந்தான். ஓடுகிற படைகளை ஓடாமல் தடுத்துத் திருப்பிக்கொண்டுவந்து தானே போரிடத் தொடங்கினான். காசிராசன் நராந்தகனை எதிர்த்துப் போரிட் டான். வெகுநேரம் கடுமையான போர் நடைபெற்றது.

காசிராசன் பிடிபடுதல்

நராந்தகன் காசிராசனுடைய படைக்குட் புகுந்து காசி ராசனை அவனுடைய மக்களோடும் அமைச்சர்களோடும் கைப்பிடியாகப் பிடித்துச் சிறையிலிட்டான். பிறகு காசி நகரத்திற்குள் நுழைந்தான். இச் செய்திகளையறிந்த தூதுவர்கள் காசிராசன் மனைவியிடங் கூறினார்கள். அவள் உள்ளம் வருந்தினாள். உடனே மகோற்கடரிடஞ் சென்றாள். அவளுடைய குறிப்பினையுணர்ந்த மகோற்கடர் ''அஞ்ச

வேண்டா'' என்று தெளிவுரை கூறினர். உடனே போருக்குப் புறப்பட்டார்.

### மகோற்கடர் போர்

மகோற்கடருடைய முகத்திலிருந்து பல வீரர்கள் தோன்றினார்கள். அவர்கள் ஐந்து, பத்து, ஆறு என்னும் எண்ணிக்கைகளைக் கொண்ட முகமுடையவர்களாக விளங்கினார்கள். அவர்களுள் குரூரன் என்னும் பெயரினையுடைய ஒரு வீரன் தன்னைப் போருக்கனுப்ப வேண்டுமென்று மகோற்கடரிடம் வேண்டிக்கொண்டான். அவர் அவ்வீரனைப் பார்த்து, "ஓ வீரனே! இதோ எதிரில் இருக்கிற படைகளையெல்லாம் உண்டு அப்படைக்கு நடுவே யிருக்கிற காசிராசனையும் அவன் மக்களையும் அமைச்சர்களையுங் கொண்டு வருவாயாக'' என்று கட்டளையிட்டார். குரூரன் நராந்தகனுடைய படைக்கெதிரே சென்றான். அவனோடு தோன்றிய மற்றைய வீரர்களும் அவனைச் சூழ்ந்து சென்றார்கள். குரூரன் நராந்தகனுடைய படைக்குள் நுழைந்தான். சிலரை ஆரவாரத்தினாற் கொன்றான்; சிலரை உறுக்கிய பார்வையினாற் கொன்றான்; சிலரைக் கால்களினால் இடறிக் கொன்றான்: சிலரை நிலத்தில் அறைந்து கொன்றான்; சிலரைத் தேரின்மீது எறிந்து கொன்றான்; சிலரைக் குதிரைமீது அறைந்து கொன்றான்; தேர்களையெடுத்துத் தேர்கள்மீ தறைந்தான்; யானைகளையெடுத்து யானைகள் மீதறைந்தான்; குதிரைகளையெடுத்துக் குதிரைகள் மீதறைந்தான்; காலாட்களையெடுத்துக் காலாட்களோடு மோதினான்; இவ்வாறு நால்வகைப் படைகளையுஞ் சின்னபின்னமாகுமாறு கொன்றான்; அளவற்ற வீரர்களை வாரியுண்டான். இன்னும் வீரர்கள் உளரோ என்று நாற்புறமும் பார்த்துப் பெருநகை புரிந்தான்.

### நராந்தகன் போர்

குரூரனுடைய செய்கைகளை நராந்தகன் கண்டான். தன்னுடைய தேரைக் குரூரனுக்கு முன்னால் நடத்திக் கொண்டு வந்தான். "இதோ உன் ஆண்மையை அடக்கி உன்னை எமலோகத்திற்குக் குடியேற்றுகிறேன்'' என்று

சொன்னான். வில்லை வளைத்துக் கணக்கற்ற கணைகளைச் செலுத்தினான். நராந்தகன் செலுத்திய கணைகளெல்லாம் பயனற்றுப் போயின. இதனை நராந்தகன் கண்டு உள்ளம் வருந்தினான். ஒரு வேற்படையை எடுத்து வீசினான். அவ் வேற்படை அஞ்சத்தக்கவாறு வந்தது. அஃது அண்மையில் வந்தபோது குரூரன் ஒரு பெருமூச்சு விட்டான். அம்மூச்சினால் அவ்வேற்படை பொடியாகப் போய்விட்டது. பிறகு நராந்தகன் ஒரு கதாயுதத்தைச் செலுத்தினான். அக்கதாயுதம் எல்லாரும் அஞ்சத்தக்கவாறு வந்தது. குரூரன் தன்னுடைய மார்பைக் காட்டினான். கதாயுதம் மார்பிற் பட்டுக் கல்லின்மீது அறைந்த காளானைப்போல் நொறுங்கிப் போயது. பிறகு நராந்தகன் ஒரு முசலத்தை ஏவினான். குரூரன் அம்முசலத்தைத் தன்னுடைய கையாற் பிடித்து நராந்தகனுடைய தேரின்மீது வீசினான். நராந்தகனுடைய தேர் நொறுங்கிப் போயது. பிறகு நராந்தகன் வேறொரு தேரின்மீது ஏறினான். சூலப் படையை எடுத்துச் செலுத்தினான். குரூரன் அதனை விரலால் தட்டினான். அது நிலத்தைக் கிழித்துக்கொண்டு பாதலத் திற்குச் சென்றது. பிறகு நராந்தகன் ஓர் உருளைப்படையை எடுத்துச் செலுத்தினான். அதனைக் குரூரன் தன்மீது தாங்கிக் கொண்டான். பிறகு நராந்தகன் ஒரு மழுப்படையைச் செலுத்தினான்; குரூரன் அதனை இமைப்பொழுதில் குழைத்துக் கசக்கினான். பிறகு நராந்தகன் நெருங்கி வந்து வாட்படை யினால் குரூரனை வெட்டினான். அவ் வாள் இருதுண்டமாகி நிலத்தில் விழுந்தது. குரூரன், நராந்தகனுடைய தேரைத் தன்னுடைய காலால் எட்டியுதைத்தான். அவ்வளவில் தேர் நிலைகுலைந்து அழிந்தொழிந்தது. பிறகு நாரந்தகன் குரூரன் மீது வருணன் கணையைச் செலுத்தினான். குரூரன் அதனை விழுங்கிவிட்டான். நராந்தகன் செலுத்திய மற்றைக் கணை களும் குரூரனிடத்தில் பயன்படாமற் போயின.

### சிறை மீட்டல்

பிறகு நராந்தகன் பாசுபதக் கணையை எடுத்துக் குரூரன் மீது செலுத்த முயன்றான். அவ்வளவில் குரூரன் நராந்தகனைத் தேரோடு தூக்கி விண்ணில் வீசினான். அவன் மண்ணுக்குத்

திரும்புவதற்குள் காசிராசன் முதலியோரை மீட்டுக்கொண்டு வந்து ஆனைமுகக் கடவுளைப் பணிந்தான். ஆனைமுகக் கடவுள் அவனுக்கும் மற்றவர்கட்கும் அருள்புரிந்தார்.

**நராந்தகன் அழிந்தொழிதல்**

விண்ணிலிருந்து மண்ணில் வந்து விழுந்த நராந்தகன் சிறிதுநேரம் மூர்ச்சையாகிக் கிடந்தான். பிறகு மூர்ச்சை தெளிந்து எழுந்தான். 'மகோற்கடன் அனுப்பிய ஒரு வீரனிடமே நம்முடைய ஆண்மை அழிந்து போய்விட்டது. உண்மையில் அந்த மகோற்கடன் சிறுபிள்ளையல்லன். பார்வைக்குக் குழந்தைபோல் காணப்படுகிறான். அவனை எதிர்த்துப் போரிடுதல் நமக்கு அருமையாகும். மாயப் போர் செய்து வஞ்சனையாகத்தான் வெல்லவேண்டும்' என்று முடிவு செய்தான். மாயப் போர் செய்யத் தொடங்கினான். அளவற்ற முகில்களாகி இடிகளையும் மின்னல்களையும் பெருக்கி ஊழிக் காலத்தைப்போற் பெருமழை பொழிந்து நின்றான். மகோற் கடர் இது நராந்தகனுடைய வஞ்சகவேலை என்று உணர்ந்து கொண்டார். சில கணைகளைத் தொடுத்து மழையைக் கெடுத்தார். மேலும் நராந்தகன் செய்த மாயப் போர்களை யெல்லாம் மகோற்கடர் உடனுக்குடன் கெட்டொழியச் செய்தார். 'நராந்தகன் நம்மால் இவனை வெல்ல முடியாது; நம்முடைய தமையனுக்குச் செய்தி தெரிவிப்போம்' என்று முடிவுசெய்து தூதர்கள் சிலரை அனுப்பினான். பிறகு 'நாம் சும்மா இருக்கக்கூடாது; தமையன் வருமளவும் போர் செய்துகொண்டிருப்போம்' என்று முடிவு செய்து ஒரு பெரிய வில்லை வளைத்துக் கணைகளைத் தொடுத்துக்கொண்டிருந்தான். மகோற்கடர் தாமும் அவ்வாறே மலையைப் போன்ற ஒரு பெரிய வில்லை வளைத்துக் கணைகளைத் தொடுத்து நராந்தகனுடைய கணைகளையெல்லாம் அழித்துக்கொண்டிருந்தார். மகோற் கடருடைய கணைகள் நராந்தகனுடைய உடலைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து அவனுடைய தேர்கள், தேரோட்டிகள், காலாட்படைகள், குதிரைகள், முடிகள், விற்கள், அம்புகள், அணிகலன்கள் முதலியவற்றை அழித்து அவனுடைய தோள்கள் இரண்டையும் அறுத்து, ஒருதோளை அவனுடைய

தந்தைக்கு முன்னும் மற்ருெரு தோளை அவனுடைய தமையனுக்கு முன்னுங் கொண்டுபோய்த் தள்ளின. நராந்தக னுடைய அறுபட்ட தோள்கள் அவனுடைய தவ வலிமையால் மறுபடியும் உண்டாயின. ஆகவே அவன் மேலுங் கொடுமை யாகப் போர் செய்யத் தொடங்கினுன். தன்னுடைய ஆண்மைகளை மகோற்கடரிடஞ் சொன்னுன். மகோற்கடர் மேலுங் கணைகளைச் செலுத்தித் தலையை அறுத்தார். அத் தலையை அவனுடைய தந்தையின்முன் விழச் செய்தார். அறுபட்ட இடத்தில் மற்ருெரு தலை முளைத்தது. அத்தலையை அறுத்து அதனை விண்ணுலகத்திலிருந்து அரசாட்சி செய்கின்ற தேவாந்தகன் முன்னர் விழச்செய்தார். அடுத்தடுத்து முளைக்குந் தலைகளையெல்லாம் அறுத்தறுத்து உலகம் முழுவதும் நராந்தகனுடைய தலையாகச் செய்தார். பிறகு இவனைப் படைக்கலங்களால் கொல்ல முடியாதென்று முடிவு செய்த மகோற்கடர் மாபெரும் வடிவத்தைக்கொண்டு நின்ருர். நராந்தகன் தானும் அவ்வாறே பேருருக்கொண்டு பெருநகை செய்து நின்ருன். மகோற்கடர் அவனுடைய மார்பைத் தம்முடைய திருவடியின் பெருவிரலின் நகத்தினுற் கீறிப் பிளந்து உயிரை விண்ணுலகேற்றி உடலை நிலத்தின்மீது தள்ளிப் பூவைத் தேய்ப்பதைப்போலத் தேய்த்தருளினுர். இதனைக் கண்ட தேவர்கள் மலர்மாரி பெய்து ஆரவாரஞ் செய்தார்கள்.

**தேவாந்தகன் போர்**

விண்ணுலகத்தின்கண் அரசாட்சி செய்திருந்த தேவாந் தகன் தன்முன் விழுந்த தலையைப் பார்த்தான். இது நம் முடைய தம்பியின் தலையாயிற்றே என்று எண்ணினுன். தான் மண்ணுலகத்திற்குப் புறப்பட வேண்டுமென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் நராந்தகனுல் அனுப்பப்பட்ட தூதர்கள் அங்கு வந்து செய்தி கூறினுர்கள். அவனுடைய தந்தையும் நராந்தகனுடைய தலையோடு அங்கு வந்தான். தேவாந்தகன் தன்னுடைய தந்தைக்குத் தெளி வுரைகள் கூறி அனுப்பினுன். உடனே படைகளைத் திரட்டிக் கொண்டு நிலவுலகத்தை நோக்கி வந்துகொண்டிருந்தான்.

அப்பொழுது சில தூதர்கள் அங்கு வந்து நராந்தகன் மாண்டொழிந்த செய்தியைக் கூறினார்கள். அதனைக் கேட்ட தேவாந்தகன் பலவாறு வருந்திப் புலம்பினான். பிறகு தம்பி போரிட்டு மாண்டொழிந்த போர்க்களத்திற்கு வந்துசேர்ந்தான். இச்செய்தியைத் தூதர்கள் காசிராசனுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவன் மகோற்கடருக்குத் தெரியப்படுத்தினான். மகோற்கடர் அவனை அஞ்ச வேண்டாவென்று கூறித் தாம் போருக்குப் புறப்பட்டார். சித்தி புத்திகளும் உடன் சென்றனர். மகோற்கடர் போர்க்களத்தை யடைந்ததும் கணக்கற்ற படைகளைப் படைத்தார். இருபக்கத்துப் படைகளும் எதிர்த்துக் கடுமையாகப் போரிடலாயின. இறுதியில் மகோற்கடர் தாம் தேவாந்தகனை எதிர்த்துப் போரிடலானார். தேவாந்தகன் மகோற்கடரைப் பார்த்து, "ஓ சிறுவனே! மேலான தவத்தினால் சிறந்த வரங்களைப் பெற்றிருந்த என்னுடைய தம்பியைக் கொன்றாய். அதனால் நீ எனக்குப் பகைவனானாய். நான்முகன், திருமால், உருத்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் ஒன்றாகக் கூடி அளவற்ற நாள் என்னோடு போரிட்டாலும் பெருவீரனாகிய என்னை ஒரு காலத்திலும் வெல்ல மாட்டார்கள். உன்னுடைய வீரர்களெல்லாம் விரைவில் அழிந்தொழியப் போகிறார்கள். நீ சாவாமற் பிழைத்திருக்க வேண்டுமானால் நான் கூறுவதைக் கேள். நான் உன்னை உயிரோடு விட்டுவிடுகிறேன். நீ வீணாக எனக்குத் தொந்தரவு கொடுக்காமல் என்னையடுத்து வாழ்ந்து கொண்டிரு" என்று மகோற்கடருக்கு அறிவுரைகள் பல கூறினான். மகோற்கடர் தேவாந்தகனைப் பார்த்து, "ஓ அவுணராசனே! தேவலோகம் முழுவதற்குந் துன்பத்தை யுண்டாக்கிக் கொண்டிருந்த நீயும், நிலவுலகம் முழுவதினுங் கொடுங்கோல் செலுத்திக்கொண்டிருந்த உன்னுடைய தம்பியும் தோன்றிய நாள் முதற்கொண்டு நேற்றுவரையில் உடன்பிறந்தவர்களாக வாழ்ந்து கொண்டிருந்தீர்கள். அத்தகைய உங்களிருவரில் ஒருவனை விண்ணுலகத்தில் தேவனாக இருக்க வைத்தோம். அவனுக்கு உடன் பிறந்தவனைப் பிரிந்துவிட்டோம் என்று வருத்தமிருக்குமன்றோ? ஆகவே அவனுக்கு அவ்விடத்திலும் நீயே உடன்பிறந்தானாக இருக்கு

மாறு உன்னையும் அனுப்புகிறேம். அஞ்ச வேண்டா'' என்று கூறினர்.

மகோற்கடர் கூறியவற்றைக் கேட்ட தேவாந்தகன் மிகுந்த சினங்கொண்டான். வில்லை வளைத்துக் கணைகள் பலவற்றை மகோற்கடர்மீது செலுத்தினன். மகோற்கடர் தாமுங் கணைகளைச் செலுத்தி அவனுடைய கணைகளையெல்லாம் அழித்தார். தேவாந்தகனுடைய தேர் முதலியவற்றையெல்லாம் அழித்தொழித்தார். பிறகு தேவாந்தகன் குதிரை மீது ஏறிக்கொண்டு வந்தான். ஒரு வாட்படையைக் "கறகற" வென்று மகோற்கடருடைய மார்பின்மீது வீசினன். மகோற்கடர் மழுப்படையினல் அவனுடைய வாளையும் அவனேறி வந்த குதிரையையும் நிலத்தில் வீழ்த்தினர். பிறகு தேவாந்தகன் வருணக்கணை, காற்றுக் கணை, கருடக் கணை, எமன் கணை, திருமால் கணை என்னும் ஐவகைக் கணைகளையும் வில்லிற் பூட்டி மகோற்கடர்மீது செலுத்தினன். மகோற்கடர் அக்கணைகட்கு மாருன தீக்கணை, பாம்புக்கணை, காளைக்கணை, நான்முகன் கணை, சரபக்கணை ஆகியவற்றைச் செலுத்தினர். அக்கணைகள் ஒன்ருேடொன்று போரிட்டன. பிறகு தேவாந்தகன் பாசுபதக் கணையை மகோற்கடர்மீது செலுத்தினன். அதனைக்கண்ட மகோற்கடர் தாமும் பாசுபதக் கணையைச் செலுத்தினர். இரண்டு கணைகளும் நீண்ட நேரங் கொடிய போர் செய்து பிறகு தம்மைச் செலுத்தியவர்களிடமே போய்ச் சேர்ந்தன.

## தேவாந்தகன் அழிவு

பிறகு தேவாந்தகன் மாயப் போர் செய்தான். அப்போரையும் மகோற்கடர் ஒழித்தருளினர். பிறகு மகோற்கடர் தேவாந்தகனை அழித்தொழிக்கத் திருவுளங் கொண்டார். சிவபிரான் வழங்கியிருக்கும் வரத்தின் தன்மையை எண்ணிப் பார்த்தார். காலை நேரத்தில் யானைமுகத்தை மேற்கொண்டார். தம்முடைய தந்தங்களில் ஒன்றை ஒடித்தார். தேவாந்தகன் அதனைப் பார்த்ததும் ஓடி வந்து அக்கொம்பினைப் பறித்தான். அப்போது மகோற்கடர் அக்

கொம்பினுல் அவனுடைய தலையிற் குத்தினுர். உடனே அவனுடைய தலை பிளந்தது. அவனுடைய உயிர் ஆனைமுகக் கடவுளுடைய திருவடிகளை யடைந்தது. தேவாந்தகன் இவ்வாறு அழிந்தொழிந்த அளவில் தேவர்கள் இன்பக் கூத்தாடி உள்ளங் களித்தார்கள். பிறகு ஆனைமுகக் கடவுள் ஆனைமுகத்தை மாற்றி முன்போலவே மனித முக மகோற்கட ராஞர். காசிராசன் மகோற்கடரையும் மற்றுமுள்ளவர்களையுந் தன்னுடைய அரண்மனைக்கு அழைத்துக்கொண்டு சென்றுன்.

திருமணம்

பிறகு காசிராசனுடைய மகனுக்கும் மகத நாட்டு மன்னன் மகளுக்குந் திருமணம் நிகழ்ந்தது. அம்மணம் நிறைவேறிய பிறகு காசிராசன் மகோற்கடரைக் காசிப முனிவரிடம் அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்த்தான். பிறகு மகோற்கடர் அங்கு சில நாளிருந்து பிறகு தம்முடைய உலகத்தை யடைந்தார்.

## 81. உடுண்டி விநாயகர்

பிரமாசுரன்

கைவர்த்தம் என்னும் நாட்டில் பன்மகம் என்னும் பட்டணத்தில் பிரமாசுரன் என்னும் பெயரையுடைய ஓர் அசுரன் இருந்தான். அவன் சிவபெருமானைக் குறித்துப் பல நாள் அரிய தவத்தைச் செய்தான். சிவபெருமான் அவனுடைய தவத்திற்கு அருள் சுரந்து காட்சி கொடுத்தார். பிரமாசுரன் சிவபிரானைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தான். சிவபெருமான் அவனைப் பார்த்து, ''நீ விரும்பிய வரங்களைப் பெற்றுக் கொள்வாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். அசுரன் சிவபெருமானைப் பார்த்து, ''நான் என்னுடைய கையை எவருடைய தலைமீது வைத்தாலும் அவர்கள் உடனே வெந்து சாம்பராகும்படியான வரத்தை எனக்குக் கொடுத்தருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபிரான்

அவன் விரும்பியவாறே வரத்தைக் கொடுத்தருளினர். வரத்தைப் பெற்றவுடன் அதனை ஆராய்ந்து பார்க்கத் தொடங்கினன். சிவபெருமானுடைய திருமுடி மீதே கையை வைத்துப் பார்க்க முயன்றான். சிவபெருமான் தாம் கொடுத்த வரத்தைத் தாமே அழிப்பது முறையன்றென்று எண்ணினர். அவனுடைய கண்ணுக்கு அகப்படாமல் மறைந்தார். அசுரன் பல விடங்களினுந் தேடிப்பார்த்தான்.

திருமால் சூழ்ச்சி

பிரமாசுரனுடைய தன்மையைத் திருமால் உணர்ந்தார். இக்கொடியோன் உலகங்களை யெல்லாம் அழித்தொழித்து விடுவான். இவனை நாம் சூழ்ச்சியினால் தொலைக்க வேண்டும் என்று முடிவு செய்தார். பேரழகு பொருந்திய மோகினியாக வடிவம் எடுத்தார். பிரமாசுரன் முன்பு சென்றார். பிரமாசுரன் மோகினியினுடைய அழகைப்பார்த்து மனமுருகினன். மோகினியைப் பார்த்துப், 'பெண்கள் தலைவியே! உன்னுடைய பெயர் யாது? நீ இருக்குமிடம் மண்ணுலகமோ அன்றி விண்ணுலகமோ? அல்லது நான்முகன் உலகோ? சிறிது திருவாய் மலர்ந்து அதனை எனக்குக் கூறவேண்டும்; என்னுடைய நல்தவப்பயனால் இங்கு எழுந்தருளினாய். உன்னுடைய அழகிய வடிவத்தையும் நிலையையுங் கண்ட பிறகு என்னுடைய உள்ளம் பொறுக்கவில்லை. செல்வச் சிறப்புடைய விண்ணுலகத்தினும் கடல் சூழ்ந்த மண்ணுலகத்தினும் ஆதிசேடன் வாழும் பாதல உலகத்தினும் உன்னைப் போன்ற பேரழகிகளைக் காண முடியுமோ? நான் கூறுபவைகட்கு நீ மறுமொழி கூறாயோ? உன்னைக் கண்ட அளவில் மனநிலை கலங்கிப் பொறிகள் தியங்கி வருந்துகின்றேன். இனிமேல் நான் பிழைத்திருக்கும் வழியைக் காட்ட வேண்டும். அவ்வாறு காட்டாமலிருந்தால் தீராத பழி உனக்கு உண்டாகும். வெகு விரைவாக அருள்புரிந்து உன்னுடைய இணக்கத்தை வழங்க வேண்டும். நீ இட்ட ஏவல்களைச் செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேன். நீ விரும்பிய எல்லாவற்றையும் இப்பொழுதே கொடுக்க வல்லேன். காம

நோயினால் உயிரை விடுவதற்கு முன்பு அருள்செய்து என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று பலவாறு இரந்து நின்றான்.

சூழ்ச்சியால் கொல்லுதல்

பிரமாசுரன் பிதற்றிய பிதற்றல்களையெல்லாம் திருமாலாகிய மோகினி கேட்டுப் புன்னகை புரிந்தாள். சிறிது மனமிரங்கியவள் போல் அவனைக் கடைக்கண்ணாற் பார்த்தாள். ''ஓ அரசனே! நான் கூத்தாடுகிற பெண். நீரோ எல்லாரையும் வெற்றி கொள்ள வல்ல வீரர். நான் எதிலும் பற்றில்லாமல் என் விருப்பம்போற் செல்லுகின்றபோது என்னிடம் வந்து காமக்காழ்ப்பினால் கருத்தழிந்து பித்தனைப் போலப் பிதற்றி வழக்காடுவது நேர்மையாகுமோ? ஆயினும் கூத்து நூலில் கூறிய முறைப்படி எனக்கெதிரே நின்று நான் செய்யும் அவிநயத்தைப் போலக் கூத்தியற்ற வல்லவர் எவரோ அவர்களைத்தான் நான் தழுவுவேனே யல்லாமல் மற்றவர்களைத் தழுவ மாட்டேன். இஃது என்னுடைய உறுதியான முடிவாகும்'' என்று கூறினாள். இவ்வாறு மோகினி வஞ்சகமாகக் கூறியதை அசுரன் உணர்ந்து கொள்ளவில்லை. அவன் மோகினியைப் பார்த்து, ''முகிலை நிகர்த்த கரிய கூந்தலையுடைய பெண்ணே! நீ எவ்வாறு அவிநயம் பிடிக்கின்றாயோ அவ்வண்ணமே நானும் உனக்கெதிர் நின்று பிடிக்கிறேன். அதன் பிறகாவது அருள் செய்ய வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டான். மோகினியானவள், ''அவ்வாறே ஆகட்டும்'' என்று சொன்னாள். தன்னுடைய கைகளைக் குவித்துக் கொண்டு அசுரனுக்கு முன்பு நின்றாள். அசுரனுந் தன்னுடைய கைகளைக் குவித்துக்கொண்டு மோகினிக்கு முன்னே நின்றான். மோகினி தன்னுடைய கைகளில் ஒன்றைத் தலைமீது வைத்தாள். அசுரன் தான் பெற்றிருக்கிற வரத்தை மறந்து தானும் அவ்வாறே கையைத் தலைமீது வைத்தான். அவ்வளவில் அவன் வெந்து சாம்பரானான். மோகினி வடிவங் கொண்டு வந்த திருமால் மகிழ்ச்சிக்கடலில் மூழ்கினார்.

### துராசதன்

பிரமாசுரன் அழிந்தொழிந்ததை அவனுடைய மகனுகிய துராசதன் என்பவன் உணர்ந்தான். குல குருவாகிய சுக்கிரனிடஞ் சென்று தன்னுடைய தந்தைக்கு நேர்ந்த கதியைக் கூறி வருந்தினுன். 'என்னுடைய தந்தையைக் கொன்ற திருமால் முதலிய எல்லாத் தேவர்களேயும் அடக்கி அவர்கட்கெல்லாம் யானே தலேவனுகி மூவுலகங்களேயும் வெற்றியோடு ஆளும்படியாகத் தேவரீர் அருள் செய்ய வேண்டு''மென்று வேண்டிக் கொண்டான். சுக்கிரன் உள்ளம் இரங்கினுன். ''நீ அஞ்சுதல் வேண்டாம்'' என்று கூறினுன். அவனுக்குத் தூய்மைச் சடங்கு (தீட்சை) செய்து சிவபெருமானுடைய திருவைந்தெழுத்துக்களேயும் உரைத்து, ''நீ இம் மறையினுல் பெரிய தவங்களேச் செய்து அரிய மேன்மைகளேப் பெறுவாயாக'' என்று கூறினுன்.

### துராசதன் வரம் பெறுதல்

சிவபிரானே நோக்கித் துராசதன் ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். சிவபெருமான் துராசதனுக்கு உமாதேவியாரோடு காட்சி தந்தார். ''நீ வேண்டிய வரங்களேப் பெற்றுக் கொள்'' என்று திருவாய் மலர்ந்தருளினுர். துராசதன் இறைவனேப் பார்த்து, ''நான் எதனுலும் இறவாதிருக்கவும், தேவர்கள் முதலிய எல்லோரும் எனக்கு ஏவல் செய்யவும், மூவுலகங்களேயும் நான் அரசாட்சி செய்யவும், தேவரீருடைய திருவடிகளில் குறையாத அன்பு வைத்திருக்கவும் அருள் செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான். சிவபிரான் அவனேப் பார்த்து, ''எங்கும் நிறைந்திருக்கின்ற நம்முடைய சத்தியே உமையினிடத்தில் ஆனே முகக் கடவுளாக வந்து உன்னுடைய தலேயில் தாளே வைத்து அடக்குவதைத் தவிர மற்றெல்லா வரங்களேயுந் தந்தோம்'' என்று உரைத்தருளினுர். பிறகு அவ்விடமிருந்து மறைந்தார்.

### துராசதன் ஆட்சி

சிவபிரானிடத்தில் சிறப்புக்களேப் பெற்ற துராசதன் மிகுந்த இறுமாப்போடு முகுந்தை என்னும் பட்டணத்திற்குச்

சென்றான். இவன் இவ்வாறு வரங்கள் பெற்றமையை அவுணர்கள் அறிந்து அவனிடம் வந்து கூடினார்கள். துராசதன் நால்வகைப் படைகளையும் சேர்த்துக்கொண்டு நிலவுலகத்தை நோக்கிப் புறப்பட்டான். பலர் துராசதனோடு போர் புரிந்து மாண்டார்கள். பலர் அவனுக்கு அடங்கித் திறைப் பொருள் செலுத்துபவர்களானார்கள். நிலவுலகை வென்றபின் துராசதன் விண்ணுலகத்திற்குச் சென்றான். இவனுடைய வருகையை உணர்ந்த தேவேந்திரன் தன்னுடைய சுற்றத்தார்களோடு புறப்பட்டுக் காசி நகரத்திற்கு வந்து சேர்ந்தான். துராசதன் அவ்வுலகத்தை யாளுமாறு அரக்கன் ஒருவனை ஏற்படுத்தினான். பிறகு சத்தியலோகத்திற்குச் சென்றான். சத்தியலோகத்திலிருந்த நான்முகன் அஞ்சித் தானுங் காசி நகரத்தை யடைந்தான். துராசதன் அங்கும் ஓர் அரக்கனை ஏற்படுத்திவிட்டு வைகுந்தத்திற்குச் சென்றான். வைகுந்தத்தில் இருந்த திருமாலும் அஞ்சிக் காசியை அடைந்தார். துராசதன் அங்கும் ஓர் அரக்கனை ஏற்படுத்தினான். மற்றைய உலகங்கட்குஞ் சென்று எல்லா விடங்களினும் அரக்கர்களுடைய ஆட்சியை ஏற்படுத்தினான். பிறகு முகுந்தை நகரத்திற்குத் திரும்பி வந்து தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். ஒருநாள் அமைச்சர்களைப் பார்த்து, "எல்லா உலகங்களும் நம்முடைய ஆணைக்குட்பட்டு விட்டன" என்று சொன்னான். இதனைக்கேட்ட அமைச்சர்கள், "தேவேந்திரன் முதலிய தேவர்கள் காசி நகரத்தில் வந்திருக்கிறார்கள். அந் நகரத்தையும் வெற்றி கொண்டால்தான் எல்லா இடங்களும் நம்முடைய ஆணைக்குட்பட்டு விட்டதாகக் கூறலாம்" என்று சொன்னார்கள். அப்பொழுதே துராசதன் படைகளைத் திரட்டிக் கொண்டு காசி நகரத்தின்மீது சென்றான். அக்கொடியவனுடைய வரவைத் தேவர்கள் உணர்ந்தார்கள். எல்லாரும் விசுவநாதக் கடவுளிடம் அடைக்கலம் புகுந்தார்கள். விசுவநாதப் பெருமான் துராசதனுக்குக் கொடுத்த வரங்களை எண்ணினார். அவனை அடக்கத் தக்க காலம் இன்னமும் வரவில்லையென்று முடிவு செய்தார். தேவர்களையும் அழைத்துக் கொண்டு திருக்கேதாரம் என்னும் பதியை அடைந்தார்.

துராசதன் காசி நகரத்திற்குள் நுழைந்தான். தேவர்க ளனைவரும் மாயமாக மறைந்துபோன செய்தியை உணர்ந்து நகைத்தான். மிகுந்த களிப்போடு அவ்விடமே பலநாள் தங்கி யிருந்தான். துராசதன் எல்லாவுலகங்களினுங் கொடுங் கோலைச் செலுத்திய படியினால் தேவர்கள் மிகுந்த துன்பத்தை யடைந்தார்கள். தேவர்கள் ஒருநாள் நான்முகனிடஞ் சென்று தங்களுடைய வருத்தங்களைக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள். நான்முகன் ஆனைமுகக் கடவுள் தோன்றினால் தான் எல்லாருடைய துன்பமும் ஒழியுமென்று தேவர்கட்குக் கூறினான். ''ஆனைமுகக் கடவுள் தோன்றுமாறு உமாதேவியை வேண்டிக் கொள்வீர்களாக'' என்று சொன்னான்.

### தேவர்கள் வேண்டுகோள்

நான்முகன் நவின்றதைக் கேட்ட தேவர்கள் உமாதேவி யைப் பணிந்து போற்றினார்கள். மறைகளாலும் ஆகமங்க ளாலும் புகழ்ந்து பாடினார்கள். தங்களுடைய துன்பங்களை யெல்லாம் விரிவாகக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள். தேவர்களுடைய முறையீட்டைக் கேட்ட தேவி திருவுளம் இரங்கினாள்.

### வக்கிரதுண்டர் தோற்றம்

உமாதேவியாருடைய திருமுகத்திலிருந்து கோடிக் கதிரவர்கள் ஒரே சமயத்தில் தோன்றினாற்போல் அளவற்ற ஒளிகளையுடைய உடலும், திங்களை யணிந்த சடைமுடியும், துதிக்கைகளோடு கூடிய ஐந்து திருமுகங்களும், பத்துக் கைகளும், அக் கைகள்தோறும் படைகளும், பூணூல் அணிந்த மார்பும், அளவற்ற பாம்பணிகளும், அளவற்ற மணியணிகளும் உடையவராய் ஆனைமுகக் கடவுள் தோன்றி யருளினார். உமாதேவியார் ஆனைமுகக் கடவுளுக்கு வக்கிர துண்டர் என்று திருப்பெயர் சூட்டினார். யாவரும் இறும்பூ தெய்துமாறு பூசனை புரிந்தார். அரிமா ஊர்தியை ஆனைமுகக் கடவுளுக்குக் கொடுத்தார். "அரக்கர்களால் வருந்துகின்ற தேவர்களைக் காப்பாற்ற வேண்டு''மென்று வேண்டிக்

கொண்டார். திருமால் முதலிய எல்லாத் தேவர்களும் ஆனைமுகக் கடவுளைப் பணிந்து போற்றினார்கள்.

### வக்கிரதுண்டர் போருக்குப் புறப்படுதல்

உமாதேவியாருடைய வேண்டுகோளையும் தேவர்களுடைய துன்பத்தையுங் கண்ட வக்கிரதுண்டர் துராசதனோடு போரிட்டு அவனைத் தொலைக்க எண்ணினார். அரிமா ஊர்தியில் ஏறிக்கொண்டு பூதப்படைகள் புடைசூழக் காசி நகரை நோக்கிப் புறப்பட்டார். அவர்பின் விசுவநாதர், உமாதேவியார், திருமால், நான்முகன் முதலிய தேவர்களும் முனிவர் முதலியோரும் புறப்பட்டனர். தேவர்களனைவரும் போரிட வந்திருத்தலைத் துராசதன் கேட்டான். மிகுந்த சினங்கொண்டு தன்னுடைய படைகள் எல்லாவற்றையும் புறப்படுமாறு கட்டளையிட்டான். பெரும்படையோடு காசி நகரத்திற்கு வெளியே வந்தான்.

### தேவர்கட்கும் அசுரர்கட்கும் போர்

பூதப்படைகளும் அவுணப்படைகளும் ஒன்றோடொன்று முட்டிக்கொண்டு போரிடத் தொடங்கின. போர்க்களம் முழுவதும் பிணங்கள் மலைபோலக் குவிந்தன. விண்ணகமெங்கும் கழுகுகளும் பருந்துகளும் பந்தரிட்டுலாவின. எங்கும் உதிரப்பெருக்கு மிகுதியாயிற்று. பூதப்படைகளின் ஆற்றல் மேலோங்கியது. அவுணப் படைகளின் ஆற்றல் குறைந்து நிலை கலங்கியது. இதனைக் கண்ட துராசதன் பூதப்படைகள்மீது பாய்ந்தான். வில்லை வளைத்து ஆயிரக் கணக்காகக் கணைகளைச் செலுத்தினான். பிறகு வக்கிர துண்டரை எதிர்த்தான். வக்கிரதுண்டர் துராசதனைப் பார்த்து, "ஓ அவுணனே! அரிய தவத்தைச் செய்து சிவபிரானிடமிருந்து மேலான வரங்களைப் பெற்றிருக்கிறாய். அவற்றைக் காப்பாற்றிக்கொள்ளும் வழியைத் தேடாமல் ஒழிப்பதற்கே வழியைத் தேடுகிறாய். இனிமேலாயினும் அச்சிறப்புகளைக் காப்பாற்றிக்கொள்ளும்படியான வழியைத் தேடுவாயாக. விண்ணுலகத்தை முன்போலத் தேவர்களிடம் விட்டுவிடு. நீ நம்மிடம் அடைக்கலம் புகுந்து நல்வழியில்

இருக்கக்கடவாய்; அவ்வாறிருப்பாயானல் இன்னும் அளவற்ற காலம் இன்பங்களை நுகர்ந்து கொண்டு இனிது வாழ்ந்து இருக்கலாம். இன்றேல் மிகுந்த துன்பத்திற்கு உள்ளாவாய்'' என்று சொன்னர்.

வக்கிரதுண்டர் கூறிய மொழிகளைத் துராசதன் கேட்டான். அவனுக்கு மிகுந்த சினம் உண்டாகியது. ''பிள்ளாய்! நீ கூறிய மொழிகள் மிக அழகாக இருக்கின்றன. ஆற்றலிற் சிறந்த திருமால் முதலியோர் என்முன் நிற்பதற்கு அஞ்சி யோடிப்போயினர். பெரியோர்களிடத்திற் பழக்கமில்லாதவ ஞகையால் நீ இவ்வாறு பேசினய். 'இளங்கன்று பயமறியாது' என்பது உன்னிடத்தில் சரியாக இருக்கிறது. அளவற்ற தவங்களைச் செய்து சிவபெருமானிடத்திலே மேலான மேன்மைகளைப் பெற்றிருக்கிற என்னை வெல்வது உன்னல் இயலாது. தப்பிப் பிழைக்க எண்ணுவாயேல் உன்னை விட்டு விடுகின்றேன். இப்பொழுதே உன்னுடைய தாய் தந்தையர் களிடம் போய்ச் சேரக்கடவாய்'' என்று கூறினன்.

இதனைக் கேட்ட வக்கிரதுண்டர் சின நகை புரிந்தார். மேலும் அவனைப் பார்த்து, ''அறிவில்லாதவனே! சிவபெருமா னிடத்திலே மேன்மைகளைப் பெற்றிருக்கிரும் என்று ஆணவங் கொள்ளவேண்டா. அவர் கொடுக்கின்ற வரத்தி ஞலேயே கெட்டுப் போனவர்கள் பலர் இருக்கிருர்கள்; அவர்களுள் நீயும் ஒருவன் ஆனய்'' என்று சொன்னர். தன்னுடைய அரிமா ஊர்தியை அவனுக்கு நேராகச் செலுத்திக்கொண்டு சென்ருர். கையில் இருந்த மழுப் படையினல் அவனுடைய மார்பில் தாக்கினர். அத் தாக்கு தலால் அவனுடைய உடலுக்கு எத்தகைய ஊறும் உண்டாக வில்லை. துராசதன் இடியேற்றைப்போல முழங்கினன். வக்கிரதுண்டர்மீது தன்னுடைய வாட்படையைச் சுழற்றி வீசினன். அதனை வக்கிர துண்டர் தம்முடைய மழுப்படை யினல் விலக்கினர். அவனுடைய நெற்றியில் தம்முடைய கையினல் குத்தினர். அக்குத்தினல் அவனுடைய நெற்றி பிளந்து உதிரம் பெருகியது. துராசதன் மூர்ச்சையாகிச்

சிறிது நேரம் உயிர் நீங்கினவனைப் போல் இருந்தான். பிறகு இருப்பிடத்தை யடைந்து தனது சோர்வைப் போக்கிக்கொண்டிருந்தான். வக்கிரதுண்டரும் போர்க்களத்தில் இறந்து கிடந்த பூதங்களையெல்லாம் எழுப்பிக்கொண்டு தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார்.

இரண்டாம்நாட் போர்

துராசதன் தன்னுடைய அமைச்சர்களை யழைத்து, "யானை முகத்தோடு போர் செய்ய வந்தவனைச் சிறுவன் என்று எண்ணினேன். அவன் செய்கின்ற போரைப் பார்க்கும் போது அவனுக்கு ஒப்பாயினோர் எவருமிலர். ஆற்றலிற் பெரியவனாயினும் படைகளில் சிறியவனாக இருக்கின்றான். நாமோ ஆற்றலிலும் படையிலும் அவனிலும் அதிகம் பெற்றவர்களாக இருக்கின்றோம். ஒருவேளை அவனுக்கு நாம் தோல்வியடைந்து போகவும் கூடும். ஆகவே நாளைக்கு நம்முடைய படைகள் முழுவதையும் போருக்குக் கொண்டு போக வேண்டும்'' என்று சொன்னான். அமைச்சர்கள் எல்லா விடங்கட்குந் தூதர்களை யனுப்பிப் படைகளைப் பொழுது விடிவதற்குள் திரட்டினார்கள். மறுநாள் துராசதன் கூலிப் படை, நாட்டுப் படை, காட்டுப் படை, துணைப் படை, கைப் படை, மூலப் படை என்னும் அறுவகைப் படைகளும் பிறரும் தன்னைச் சூழ்ந்துவரப்போர்க்களத்திற்கு வந்தான். ஆனைமுகக் கடவுளும் பூதப்படைகளோடு போர்க்களத்திற்கு வந்தார். துராசதனுடைய பெரும்படையைப் பார்த்தார். இவை யனைத்தையும் ஒரு நொடிப்பொழுதில் நாமே வெல்வோமென்று முடிவு செய்தார். தம்மைச் சூழ்ந்துள்ள தேவர்களும் மருளுமாறு சில வடிவம் அரிமா ஊர்தியோடு பத்துக் கைகளும், சில வடிவம் மயிலூர்தியோடு ஆறு கைகளும், சில வடிவம் பெருச்சாளி யூர்தியோடு நான்கு கைகளும், சில வடிவம் மான் ஊர்தியோடு இரண்டு கைகளும் இப்படிப் பற்பல வடிவங்களாக ஐம்பத்தாறு வகையான வடிவங் கொண்டு துராசதனுடைய படைக் கடலுக்குட் புகுந்து போர் விளையாடலைச் செய்தருளினார். அப்பொழுது அப் படை வீரர்கள் அளவற்ற பேர் விண்ணுலகத்தை யடைந்தார்கள்.

அளவற்றபேர் ஆவிசோர்ந்து வீழ்ந்தார்கள். அளவற்றபேர் கீழ்உலகத்தில் மறைந்தார்கள். அளவற்றபேர் பல திக்கு களிலும் ஓடிப் பதுங்கினர்கள். இவ்வாறு தன்னுடைய படைக ளழிவதைத் துராசதன் பார்த்தான். மிகுந்த சினங்கொண்டு தீக்கணையை எடுத்துச் செலுத்தினன். அப்படை தீப் பிழம்புகளை வீசிக்கொண்டு பூதப் படைகள் நடுங்குமாறு எதிர்த்து வந்தது. அதனைப் பார்த்த வக்கிரதுண்டர் வருணக் கணையை எடுத்துச் செலுத்தினர். அஃது அளவற்ற மின்னல் களையும் இடிகளையும் பெருக்கி ஏழு முகில்களும் ஒருங்கு கூடி மழை பொழிவதைப் போல மழை பொழிந்து தீக்கணையின் ஆற்றலை அடக்கியது. துராசதன் காற்றுக் கணையைச் செலுத் தினன். அக்கணை பெருங்காற்ருக வந்தது. வக்கிர துண்டர் மலைக் கணையைச் செலுத்தினர். அக்கணை காற்றுக் கணையின் ஆற்றலைத் தொலைத்தது. பிறகு துராசதன் உருத்திரக் கணையைச் செலுத்தினன். அக்கணை பூதப்படையிற் புகுந்து பூதப்படையைச் சிதற வடித்தது. வக்கிரதுண்டரும் உருத்திரக் கணையைச் செலுத்தினர். இரண்டுகணைகளும் ஒன்ருேடொன் றெதிர்த்து அளவற்ற போர்களைச் செய்தன. அதனுல் உலகங்களெல்லாம் நிலைகுலைந்தன. ஏழு கடல்களும் வற்றிப் போயின. நிலவுலகத்திலுள்ள அசையும் பொருள் அசையாப் பொருள் எல்லாம் நீருயின. வெகுநேரம் இரண்டும் போர் செய்து பின்னர்ப் போர்க்களத்தில் மாண்டு கிடப்பவர்களை யெல்லாம் எழுப்பிக்கொண்டு செலுத்தியவர்களை யடைந்தன.

### துராசதன் அழிவு

அரிய தவத்தினுல் பெற்ற கணைகளும் பயன்படாதொழிந் தமையைப் பார்த்துத் துராசதன் ஏக்கமடைந்தான். பிறகு மாயப்போர் செய்யத் தொடங்கினன். அவற்றையெல்லாம் வக்கிரதுண்டர் அழித்தருளினர். துராசதன் ‘இச் சிறுவனை வெல்ல நம்மால் இயலாது, மறைந்தோடிப் போதலே தக்க’தென்று எண்ணினன். அவனுடைய எண்ணத்தை ஆனைமுகக்கடவுள் அறிந்தார். சிவபிரான் அவனுக்குக் கொடுத்துள்ள வரத்தையும் நினைத்தார். விண்ணையளாவு

மாறு மாபெரும் வடிவங் கொண்டு அவனுக்கு முன்னால் வந்தார். அவனுடைய தலையில் ஒரு திருவடியை ஊன்றினார். அவனைப் பார்த்து, "ஓ அவுணனே! நீ சிவபெருமானிடத்தில் அழியா வரம் பெற்றிருக்கிறபடியினால் இக்காசிப்பட்டணத்தின் மேற்கு வாயிலில் எக்காலத்தினும் நம்முடைய அடியின் கீழிருந்து இவ்விடத்தில் தீமைகளைச் செய்கின்ற பொல்லா தவர்களை அடக்கிக்கொண்டிருப்பாயாக" என்று திருவருள் புரிந்தார். மேலான தவங்களைச் செய்து அரிய மேன்மை களைப் பெற்றிருந்த துராசதன் தன்னுடைய தலையில் ஆனைமுகக்கடவுள் திருவடியை வைக்கப்பெற்றபடியினால் எல்லாவகையான பந்தங்களிலிருந்தும் நீங்கி மெய்யறிவைப் பெற்று உண்மையறிவின்ப வடிவனாகி மற்றவர்களுடைய தீமைகளையெல்லாம் போக்கிக் கொண்டிருந்தான். தேவர்கள் கற்பகமலர்மாரி பெய்தார்கள். விண்ணில் ஐவகை ஒலிக் கருவிகளும் முழங்கின. முனிவர்கள் போற்றிப் புகழ்ந் தார்கள். சிவபிரான் முன்போலவே உமாதேவியாரோடு காசிநகரத்துத் திருக்கோயிலில் நான்முகன் முதலியோர் வணங்கும்படியாக எழுந்தருளினார். மூவுலகங்களினும் நேரிட் டிருந்த தீமைகளெல்லாம் ஒழிந்தன. மறைநெறிகள் எங்குந் தழைத் தோங்கின. வேள்வி முதலியவை நடைபெற லாயின. தேவர்கட்கு வேள்வியுணவுங் கிடைத்தது. வன்னி, மந்தாரை, அறுகு முதலியவற்றால் ஆனைமுகக் கடவுளைத் தேவர்களும் முனிவர்களும் வழிபட்டார்கள். வக்கிர துண்ட விநாயகருக்கு உடுண்டி விநாயகர் என்று திருப்பெய ரிட்டார்கள். அது முதல் காசிநகரம் உடுண்டி நகரம் என்னும் மற்றொரு பெயரையும் பெற்றது. விசுவநாதப் பெருமான் திருமுன்னர் ஐந்து திருமுகங்களையுடைய வக்கிரதுண்ட விநாயகர் அமர்ந்தருளினார்.

### திவோதாசன்

முன் காலத்தில் பாற்பம் என்னும் பெயருடைய ஒரு கற்பம் இருந்தது. அக்கற்பத்திலே சுவாயம்புமனு என்னும் பெயருடைய ஒரு பேராழி மன்னன் வாழ்ந்திருந்தான். அவன் இறந்து போன பிறகு அறுபதினாயிரம் ஆண்டுகள்

மழை பெய்யவில்லை. அதனால் எல்லா நாடுகளுங் காடாகி அழிந்தொழிந்தன. அதனால் நான்முகன் மனம் இரங்கினான். இவ்வுலகத்தைப் பாதுகாப்பதற்கு ஓர் அரசனை ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணினான். அதன்பொருட்டு நிலவுலகம் முழுவதுந் தேடிக்கொண்டு சென்றான். அப்பொழுது காசி மாநகரத்தில் இரிபுஞ்சயன் என்னும் பெயரினையுடைய அரச குலத்தினன் ஒருவன் அரிய தவத்தினைச் செய்துகொண் டிருத்தலைக் கண்டான். அவன் பக்கத்திற் சென்று அவனுடைய தவத்தைப் புகழ்ந்தான். அவனைப் பார்த்து, "ஓ அரசனே! நிலவுலகில் அரசாட்சி செய்வாரில்லாமல் எல்லா நாடுகளும் அழிந்தொழிந்தன. எல்லாப் பொருள்களும் ஒழிந்துபோயின. ஆகவே நீ உனது செங்கோலைக் கொண்டு அரசாட்சி புரிதல் வேண்டும். உனக்கு ஆதிசேடன் தன்னுடைய மகளாகிய அங்கமோகினியைத் திருமணஞ் செய்து கொடுப்பான். தேவர்கள் கற்பக மரத்தில் இருந்து பல ஆடையணிகலன்களைக் கொடுப்பார்கள். அப்போது நீ எல்லாவகையான நலன்களோடும் இன்புற்றிருத்தல் கூடும். எல்லாரும் உன்னைத் 'திவோதாசன்' என்று பெயரிட் டழைப்பார்கள்" என்று கூறி அப்பொழுதே அவனுடைய தலையில் அரசாட்சிக்குரிய முடியைச் சூட்டினான்.

**இரிபுஞ்சயன் வேண்டுகோள்**

இரிபுஞ்சயன் நான்முகனைத் தொழுது, "தேவர்கள் காசிமாநகரை விட்டு அப்பாற்போனால் அல்லாமல் நான் உலக அரசாட்சிக்கு உடன்பட மாட்டேன்" என்று சொன்னான். அதற்கு நான்முகன் "அவ்வாறே செய்கிறேன்" என்று ஒப்புக்கொண்டான். வழக்கப்படி விசுவநாதரைப் போற்றி வழிபடுவதற்கு அவருடைய கோவிலுக்குச் சென்றான். அப்பொழுது விசுவநாதர் உமாதேவி முதலிய எல்லாரோடும் மந்தரகிரியை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அம் மலையை அடைந்ததும் அங்குத் தவஞ் செய்துகொண்டிருந்த மரீசி முனிவரும் மந்தரகிரியும் இறைவனைப் போற்றி வழிபட் டார்கள். மரீசி முனிவர் தமக்குச் சிவலோக வாசந் தரவேண்டும் என்று இறைவனை வேண்டிக்கொண்டார்.

இறைவனும் அவ்வாறே கொடுத்தார். மந்தரகிரிக்கு யாது வேண்டுமென்று உசாவினர் அஃது "என்னிடத்தில் தாங்கள் காசியிலிருப்பதைப்போல் எழுந்தருளி யிருக்கவேண்டு" மென்று வேண்டிக் கொண்டது. நான்முகன் இரிபுஞ்சய னுடைய செய்தியைக் கூறி மந்தரமலையின் வேண்டு கோளின் படி செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். சிவபிரான் அவ்விடத்திலேயே எழுந்தருளியிருந்தார். இறைவ னோடு சென்ற தேவர்களும் அவ்விடமே தங்கினர்கள். அதனல் காசிமா நகரில் தேவர்களுடைய நடமாட்டம் இல்லாமற் போயிற்று. திவோதாசன் காசித் தலத்தில் இருந்து அரசாட்சியை மேற்கொண்டான். நான்முகன் கூறியவாறே அவனுடைய இன்ப வாழ்க்கை இனிது அமைந்தது. திவோதாசன் செங்கோல் முறைப்படி அரசாட்சி செய்து கொண்டிருந்தான். திவோதாசன் நன்முறையிற் செங்கோல் செலுத்தியபடியால் நாடெங்கும் மழைபொழிந்து செழிப்புற்றது. தேவர்கள் காசித்தலத்தை யடையாமல் மனம் வருந்தினர்கள். காசிக்கு எவ்வாறு செல்லலாம் என்று எண்ணமிட்டார்கள். தங்களுடைய எண்ணத்தைத் தேவ குருவிடம் தெரிவித்தார்கள். தேவகுரு, "காசியில் நடக்கும் நற்செயல்கள் தவறுமாயின் எல்லா மாறுபாடுகளும் நடக்கும். பிறகு தடையில்லாமற் போகலாம்" என்று கூறினர். திவோதாசனே எண்பதினயிரம் ஆண்டுகள் செங்கோல் கோணமல் அரசாட்சி செய்துகொண்டிருந்தான். விசுவநாதப் பெருமான் மந்தர மலையை வெறுத்தார். காசிப்பதியை அடைய விரும்பினர். தேவர்களை அனுப்பிக் காசிமா நகரில் மாறுபாடுகளைச் செய்யுமாறு பணித்தார். அவர்களால் இயல வில்லை.

### உடுண்டி விநாயகர்

பிறகு இறைவன் உடுண்டி விநாயகரே காசிமா நகரில் மாறுபாடுகளைச் செய்யத் தக்கவர் என்று எண்ணினர். அவ் விநாயகரிடத்தில் தம்முடைய எண்ணத்தைத் தெரிவித்தார். உடுண்டி விநாயகர் காசிப் பதியை அடைந்து பல மாறுபாடு களைச் செய்தார். திருமாலையுந் திருமகளையுங் கொண்டு

மறைநெறிமுறைகளையும் மறுத்தொதுக்கி மறநெறிகளை மேற் கொள்ளச் செய்தார். இதனால் காசிமா நகரில் அறநெறி கெட்டுச் செங்கோல் மாறியது. திருமால் தாஞ் செய்த காரியத்தைச் சிவபிரானுக்குத் தெரிவித்தார். திவோதாசன் காசிமா நகரத்து மாறுபாடுகள் முழுவதும் தேவர்களுடைய சூழ்ச்சியினாலேயே ஏற்பட்டனவென் றுணர்ந்தான். காசி நகரத்தை விசுவநாதப் பெருமானுக்கே உரிமையாக்கினான். அரசுரிமையைத் தன்னுடைய மகனிடத்தில் ஒப்புவித்தான். தன்னுடைய பொருளறையில் உள்ள பொருள்களிற் பாதி யெடுத்து விசுவநாதப் பெருமானுக்கு அழகிய திருக்கோயில் ஒன்றை அமைத்தான். விசுவநாதப் பெருமானை அக் கோயிலில் அமைத்து வழிபாடு செய்தான். சில காலஞ் சென்றபிறகு சிவபிரான் அவ்வரசனை அச் சிவலிங்கத்தோடு ஒன்றுபடுத்தி யருளினார். பிறகு எல்லாத் தேவர்களுங் காசியை அடைந்து வழக்கம்போல் வழிபாடு முதலியவற்றைச் செய்துகொண்டிருந்தார்கள்.

## 82. வல்லபை விநாயகர்

### மரீசி முனிவர்

மரீசி முனிவர் என்பவர் ஆனைமுகக் கடவுளுடைய முழு முதல் தன்மையை நான்முகனிடங் கேட்டறிந்தார். தாம் ஆனைமுகக் கடவுளை வழிபட்டு மேலான செல்வத்தை யடையவேண்டுமென்று எண்ணினார். இருபத்தோராயிரம் ஆண்டுகள் உணவில்லாமல் அருமையான தவத்தைச் செய்தார். ஆனைமுகக் கடவுள் மரீசி முனிவருடைய தவத்துக்கு இரங்கினார். பெருச்சாளியூர்தியின் மீதெழுந்தருளி வந்து காட்சி கொடுத்தார். மரீசி முனிவர் ஆனைமுகக் கடவுளைத் தொழுது போற்றினார். ஆனைமுகக் கடவுள் மரீசி முனிவரைப் பார்த்து, "உனக்கு வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். மரீசிமுனிவர் ஆனைமுகக் கடவுளைப் பார்த்து, "எனக்கு அரசியல் செல்வத்தைத் தர வேண்டும்; எல்லாரும் என்னுடைய ஆணையின் வழி ஒழுக வேண்டும்; எல்லாரும் என்னைப் போற்றி வழிபடவேண்டும்;

எப்பொழுதும் எனக்கு எத்தகைய இடையூறும் நேராதிருக்க வேண்டும். குற்றமற்ற புதல்வர்கள் பலர் எனக்கு உண்டாக வேண்டும். உன்னைத் தவிர நான் வேறு தெய்வத்தைப் போற்ருதிருக்கவேண்டும். உமது இடப்பாகத்தில் இருக்கிற சத்தியே எனக்கு மகளாகத் தோன்ற வேண்டும். அப் பெண்ணைத் திருமணஞ் செய்தருளுதல் வேண்டும்'' என்று இவ்வாறு பல வரங்களைக் கேட்டார். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே வழங்கியருளினர்.

### மரீசி முனிவர் இல்லறம்

பிறகு மரீசி முனிவர் தேவவல்லி என்னும் ஒரு பெண்ணைத் திருமணஞ் செய்துகொண்டு ஆயிரம் பிள்ளைகளையும் பெண்களையும் பெற்ருர். எல்லா வகையான செல்வச் சிறப்போடும் வாழ்ந்திருந்தார். இவ்வாறு மரீசி முனிவர் வாழ்ந்திருக்கும் நாளில் இறைவன் திருவருளால் யமுனையாற்றில் ஒரு தாமரை மலரில் சத்தியானவள் ஒரு கன்னியாகத் திருவுருக்கொண்டு வீற்றிருந்தாள். அவளை மரீசி முனிவர் கண்டு எடுத்துக் கொண்டு போய்த் தம்முடைய மகளாக வளர்த்தார். அப் பெண் தகுந்த அகவையை அடைந்தும் ஆனைமுகப் பெருமானை நோக்கித் தவஞ் செய்தாள். பெருமான் ஓர் அந்தணராக எழுந்தருளி வல்லபை என்னும் பெயருடைய அப்பெண்ணேடு சொற் போரிட்டார். பிறகு அந்தணக் கோலத்திலிருந்து மாறித் தம்முடைய உண்மை வடிவத்தைக் காட்டினர். அதனைக்கண்ட அளவில் வல்லபை பன்முறை பணிந்தெழுந்தாள்; தன்னுடைய குற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள்.

### திருமணம்

மரீசி முனிவர் ஆனைமுகக் கடவுள் எழுந்தருளிய செய்தியை உணர்ந்தார். திருமணத்திற்குச் செய்யவேண்டிய ஏற்பாடுகளையெல்லாஞ் செய்தார். மிகுந்த சிறப்போடு திருமணஞ் செய்து கொடுத்தார். இச்சமயத்தில் திருமாலும் திருமகளும் தம்முடைய பெண்களாகிய மோதை, பிரமோதை,

சுமகை, சுந்தரி, மனோரமை, மங்கலை, தேகினி, காந்தை, சாருகாசை, சுமத்திமை, நந்தினி, காமதை என்னும் பெயரினை யுடைய பெண்கள் பன்னிருவரையும் ஆனைமுகக் கடவுள் திருமுன் அழைத்து வந்து, "நாங்கள் அருமையாகப் பெற்ற இப்பெண்களைத் தேவரீர் திருமணஞ்செய்து எங்களை ஆட் கொள்ளவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். ஆனைமுகக் கடவுள் அவ்வாறே செய்தருளினார். திருமணத் திற்கு வந்திருந்தோர் அனைவரும் ஆனைமுகக் கடவுளிடத்தில் பல வரங்களைப் பெற்றார்கள். ஆனைமுகக் கடவுள் வல்லபை யையும், திருமால் பெண்கள் பன்னிருவரையும் தம்முடைய மருங்கில் இருக்க வைத்துக்கொண்டு தம்முடைய உலகமாகிய மணித் தீபத்தினை யடைந்து எழுந்தருளினார். ஆனைமுகக் கடவுள் இவ்வாறு பல பிறப்புகள் எடுத்துத் திருவிளையாடல் புரிந்தருளிய புராணத்தைப் படிப்போர் மெய்யறிவு பெறுவர்.

## 83. சோமகாந்தன் வீடுபேறு

**சோமகாந்தன் செய்தி**

இவ்வாறு பிருகுமுனிவர் கூறிய விநாயக புராணத்தைச் சோமகாந்தன் கேட்டு முடித்தான். பிறகு அவ்விடமே யிருந்து தான் கேட்ட புராணத்தை நாள்தோறும் வழி பட்டான். இவ்வாறு ஓராண்டு சென்றது. சோமகாந்தன் மீது ஆனைமுகக் கடவுள் அருள் சுரந்தார். தம்முடைய கணங்களை யழைத்து "நம்முடைய திருவடிக் கன்பனாகிய சோமகாந்தனை இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு வருவீர்களாக" என்று கட்டளையிட்டருளினார். தேவகணங்கள் எட்டுத் திக்குகளினும் ஒளிவீசுகின்ற ஒரு தெய்வ விமானத்தைக் கொண்டுவந்து பிருகுமுனிவருடைய இருப் பிடத்தில் இறக்கினார்கள். பிருகுமுனிவர் அரசனைப் பார்த்து, "அரசனே! ஆனைமுகக் கடவுள் உன்னுடைய அன்புக்கு இரங்கி விமானம் அனுப்பியிருக்கின்றார். நீ அதில் ஏறிச் சென்று பேரின்பத்தோடு வாழ்ந்திருப்பாயாக" என்று

கூறினர். அரசன் பிருகுமுனிவரைப் பணிந்து, "எனக்கு இத்தகைய பெருவாழ்வு கிடைத்தது தங்களுடைய அருளினலேயல்லது வேறன்று; தேவரீருடைய கட்டளைப்படி நடக்கக் காத்திருக்கிறேன்" என்று சொன்னன்.

### விமானமேறிப் புறப்படுதல்

தேவகணங்கள் அரசனைப் பார்த்து, "அரசனே! நீ நல்வினையிற் சிறந்தவன். நீ உன்னுடைய மனைவியோடும் இரண்டு அமைச்சர்களோடும் இவ்விமானத்தில் ஏறக் கடவாய்" என்று கூறினர். இதனைக்கேட்ட அரசன் மீளவும் பிருகுமுனிவரைப் பணிந்தான். அம்முனிவருடைய மாணவர்களையும் போற்றி வழிபட்டான். விமானத்தையும் அதனைக் கொணர்ந்த தேவகணங்களையும் வணங்கினன். மனைவியோடும் இரண்டு அமைச்சர்களோடும் அவ்விமானத்தில் ஏறினன். விமானம் மேலெழுந்து சென்றது. விமானஞ் சென்றுகொண்டிருக்கும்போது அரசனுடைய தேவநகரந் தோன்றியது. அரசியாகிய சுதன்மை அரசனைப் பார்த்து, "ஏமகண்டன் நம்முடைய வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பான். அவனைக் காணுமற் செல்வோமாயின் அவன் மிகுந்த துன்பமடைவான். ஆகவே நாம் அவனைப் பார்த்து விட்டுச் செல்வது நலமாகும்" என்று கூறினள். அதனைத் தேவகணங்கள் கேட்டு மனமிரங்கினர்கள். இருவரையும் பார்த்து, "உங்களுடைய மகனும் நாள்தோறும் ஆனைமுகக் கடவுளைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருக்கிருன். நீங்களும் அவனைக் காண விரும்புகிறீர்கள். ஆகவே விமானத்தைப் புறநகரிலே நிறுத்துகின்ருேம். நீங்கள் அவனை அழைத்துப் பார்ப்பீர்களாக" என்று கூறி விமானத்தைப் புறநகரில் நிறுத்தினர்கள்.

### ஏமகண்டன் வருதல்

அரசன் அமைச்சர்கள் இருவரையும் ஏமகண்டனிடத்திற்கு அனுப்பினன். அமைச்சர்களைத் தனியே கண்ட ஏமகண்டன் நம்முடைய தாய்தந்தையர்கள் என்னவா

ஞர்களோ என்று எண்ணமிட்டான். அமைச்சர்கள் ஏம கண்டனைப் பார்த்து, ''வருத்தப்படவேண்டா. உம்முடைய தாய்தந்தையர்கள் இதுவரை காட்டில் நலமே தங்கியிருந்து இப்பொழுது தேவரூபம் பெற்றிருக்கிருர்கள்'' என்று பிருகு முனிவர் புராணங் கூறியது முதலிய செய்திகளையெல்லாம் விரிவாகச் சொன்ஞர்கள். விமானமுள்ள இடத்திற்கு வருவாயாக என்று அழைத்தார்கள். இதனைக்கேட்டு ஏம கண்டன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்தான். உடனே புறப்பட்டு விமானமுள்ள இடத்துக்குச் சென்ருன். அந்நகர மக்களும் அவனேடு சென்ருர்கள். ஏமகண்டன் தாய்தந்தையரைப் பணிந்தான். ''இனிமேல் உங்களை ஒரு கணமேனும் விட்டுப் பிரியேன்'' என்று சொன்ஞன். நகர மக்களும் மற்று முள்ளவர்களும் மிகுத்த மனவருத்தத்தை யடைந்து, ''நாங்களும் ஆனைமுகக் கடவுளுடைய உலகத்திற்கு வருகின் ரேம். இவ்வுலக வாழ்க்கையால் வருவது துன்பமேயல்லாமல் என்ன இன்பம் இருக்கின்றது? தேவரீர் எங்களையும் அழைத்துக்கொண்டு செல்லாமல் இங்கு நிறுத்திவிட்டுச் சென்ருல் நாங்கள் ஓர் இமைப்பொழுதும் உயிரை வைத்துக் கொண்டிருக்க மாட்டோம். துன்பத்திற்கிடமான உலக வாழ்க்கையில் எங்களுக்கு யாதொரு பற்றுமில்லை''யென்று வருந்தி முறையிட்டார்கள்.

**தேவகணங்கள் செய்கை**

இவ்வாறு மகனும் நகர மக்களும் வருந்துதலைச் சோமகாந்த மன்னன் பார்த்தான். ''அன்பர்களே! ஆனைமுகக் கடவுளுடைய உலகத்திற்கு உங்களையும் அழைத்துக்கொண்டு செல்லும் அதிகாரம் என்னிடமில்லை. மேலான நிலைமையை அடைவது அவரவர் நல்வினைப் பயனைப் பொறுத்திருக்கிறது'' என்று சொன்ஞன். மக்களும் அரசனும் இவ்வாறு பேசி வருந்துதலைத் தேவகணங்கள் பார்த்தார்கள். அவர்கள் அரசனைப் பார்த்து, ''ஓ அரசனே! உன்னுடைய மகன் ஆனைமுகக் கடவுளைப் பூசை செய்து நற்கதியடைவதற்குத் தகுதியுடையவஞக இருக்கிருன். அவன் இவ்விமானத்தில் ஏறத்தக்கவன் என்பதற்கு ஐயமில்லை. ஆஞல், இந்நகரத்

தார்கள் ஆனைமுகக் கடவுளுடைய பெருமையைச் சிறிதுங் கேட்டவர்களல்லர். அதனை இவர்கட்குக் கூறுவதற்குங் காலமில்லை. ஆயினும் ஆனைமுகக் கடவுளுடைய பெருமைகளை முழுவதுங் கேட்ட மேலாகிய பயனைக் கொடுக்கத்தக்கதாகியும், தீவினை யெல்லாவற்றையும் போக்கி நன்மையைத் தரவல்லதாகியும் ஒரு காரியமிருக்கிறது. அஃதென்னவெனின் காசிப்பதியில் சத்தாவரணத்தில் ஐம்பத்தாறு ஆனைமுகக் கடவுளின் உருவங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. அம் மூர்த்திகளினுடைய திருப்பெயர்களைச் சொல்லுகிறோம். அவற்றை இந்நகரத்தார்கள் கேட்பார்களேயானால் உடனே தூய்மையும் நல்வினையும் பெற்று மேலான கதிக்கு உரியவர்களாவார்கள்'' என்று கூறி அப்பெயர்களைக் கூறினார்கள். இவற்றைக் கேட்டவுடனே ஏமகண்டன் முதலியோர்க்குந் தெய்வயாக்கைஉண்டாகியது. எல்லாரும் சோமகாந்தனோடு விமானத்திலேறி ஆனைமுகக்கடவுளுடைய உலகத்தையடைந்து வாழ்ந்திருந்தார்கள்.

## 84. வியாசர் அருள் பெறுதல்

### (கணேச கீதை)

(இதனை ஆனைமுகக் கடவுள் திருமாலுக் குரைத்தார். திருமால் நான்முகனுக் குரைத்தார். நான்முகன் வியாசருக் குரைத்தான். இவ்வருளுரையில் உள்ள அரிய பகுதிகள் சிலவற்றை அடியிற் காண்க.)

உருவ மருவ முபயமென
    வுரைக்கப் படுமூ வர்கள்தமக்கும்
கருவி கரண முதற்பலவுங்
    கண்டு புரந்து துடைத்துமறைத்
தருளு மூதலா யவருளமு
    மறியாப் பொருளாய்த் தனதருளான்
மருவு மொளியாய் எங்குநிறை
    வாய்மை எதுவோ அதுபிரமம். (க)

அந்தப் பிரம மெரியிரும்பை
யடுத்தாங் கறிவைத் தொடருருக்கொண்
டிந்த வுலகில் விநாயகரென்
றிணையில் பெயர்த னுண்மையினைப்
பந்த மகன்றோர் தெரிந்துகொளப்
பரித்து விளை யாட் டயர்ந்திருந்து
முந்து மலத்தா னொருவருமம்
முதல்வ ரியற்கை யுணர்ந்திலரால். (உ)

இருளு மொளிர விருண்டமல
மென்று மறியா மையைக்கொடுத்து
மருவி யிருத்த லாற்சனன
மரண மான பிரவாகம்
ஒருவர் தமக்கு மொழியாதவ்
வொருவ ரான விநாயகனார்
அருளின் வழியே உயர்யோகம்
அடையி னலது முனிவரனே. (௩)

வேறு

பக்குவம்புண் ணியமூல பாகஞ் சத்தி
பதிதலிரு வினையொப்புப் பயின்ற காலை
தொக்கமல பந்தமெலாங் கழித்த வான்மாச்
சுத்தமாய்ச் சுத்ததவ வத்தையினிற் சொன்ன
பத்துவிதப் புண்ணியமும் புரிந்து மேலாம்
பரத்தினொடு மொன்றாகா திரண்டு மாகா
தத்துவித மாயேகம் ஆகி யின்பாய
அபாவமாம் நிலையகச்சம் பந்த மாகும். (௪)

அருள்நிலையே முத்தியென வழுந்தி நிற்றல்
அகப்புறச்சம் பந்தமருள் உபகா ரத்தை
மருளறக்கண் டுடல்புறச்சம் பந்தம் அந்த
வாய்மையருட் டொழிலினைத்தான் செய்ய வெண்ணல்

பொருவில் பரம் நானென்றே மருளாற் காண்டல்
புறப்புறச்சம் பந்தமிவை நான்கி னுள்ளும்
இருளறுமா தவவகச்சம் பந்த மொன்றே
இணையிலுயர் யோகமென இயம்பும் நூலே. (௫)

வேறு

சிறந்த யோகம் நான்குள்ளும்
சிறந்த யோகம் தனைப்பெற்றோர்
பிறந்தும் இறந்தும் வருகின்ற
பெரிய சமுசா ரத்தடையார்
மறந்தும் நினைந்தும் வினையீட்டி
மாயா போகந் தனை நுகரார்
இறந்த எனதி யான்என்னும்
இருளிற் படார்க ளொருகாலும். (௬)

உலகில் உறங்கி உலகிறந்த
ஒருவான் பொருளில் விழித்தந்த
அலகில் பரமா நந்தமயம்
ஆன அமுதப் பெருங்கடலில்
கலவி முழுகித் திளைப்பார்கள்
கருணை நிறைந்த உளத்தினராய்
நிலவும் உலகம் ஒருமூன்றும்
நெடிது பரிபா லனஞ்செய்வார். (௭)

வேறு

சகலமுஞ் சொருப மாகையால் சகல
பூதமுஞ் சொருப மேயாக
இகலறக் காண்பார் சிவன்முத் தர்களாய்
இருப்பர்கள் உலகினுள் ளவர்க்குப்
புகலனுக் கிரகப் பொருட்டுல கத்தில்
புரையறச் சரிப்பர்கா மாதி
திகழுமிந் திரியம வென்றவர் ஓடும்
செம்பொனும் ஒப்பவே காண்பார். (௮)

தக்கயோ கத்தால் வசீகர மாய
தன்னிடத் தமர்சொரு பத்தை
மிக்கபா வனைகள் கடந்தபா வனையால்
வேறறக் கண்டுகொண் டிருக்கும்
பொக்கமி லுளத்தை உடையரோன் ருனும்
புரைபடார் வேறுதான் படார்கள்
பக்குறு படையால் அடிபடார் இழுக்கப்
படார்பரி சுத்தமிக் குடையார். (கூ)

பேறிகழ் வின்பம் பிணிவளர் மூப்புப்
பேதுறச் சாதலென் றுரைக்கும்
ஆறினு மோவா துயிர்களை யெல்லாம்
அமைவுறச் செலுத்தியுந் தனக்குக்
கூறிய விருப்பு வெறுப்பினை யில்லான்
கூடியெவ் வுயிரையு மயக்கும்
வீறிய மாயை மயக்கமும் இல்லான்
விளங்கிய அநாதியே அமலன். (க0)

இத்தகு பெருமான் இணையடி நிழலில்
இரண்டறக் கலந்துநான் அறலே
உத்தம யோகம் என்றுமுன் உரைத்த
யோகமே யோகம்அவ் வியோகச்
சித்தயோ கியரே யோகியர் அவர்கள்
தெளிந்தவே தாந்தமே முதலாம்
மெத்துசாத் திரத்தி னிரதமே நுகர்வார்
விளங்கிய கேட்டலா திகளால். (கக)

இதுதெரி யாத மூடர்கள் முனியே!
இறப்பொடு பிறப்பினை விளைத்து
முதுதுயர்ப் படுக்குங் கன்மமே விழைந்து
முற்றுறப் புரிந்துவிண் ணுதிக்
கதுவுபுன் போகம் சத்தியம் என்று
களித்தினி தார்ந்துணர் வழிந்து
பதியெனும் பிரமத் தியல்பறி யாது
பவந்தொறும் பன்முறை சுழல்வார். (கஉ)

அனைய தாகலின் வீட்டினை யாதரித் தவர்கள்
வினையெ லாந்தரும் விடயத்தின் மேவிய பொறியை
இனைவு ருவகை மீட்டிரும் பிரமமெஞ் ஞான்றும்
நினைதல் வேண்டுமெய்த் தவத்திடை நின்றமா முனியே. (கசு)

மீட்டி டாதுதன் மனத்தினை விழைபொறி வழியே
ஈட்ட மாகிய விடயத்தின் எய்துற விடுப்பின்
நாட்ட மாயதி லழுந்திடு நாடியங் கழுந்தில்
கோட்ட மேபுரி காமமாய்க் குரோதமு மாமே. (கச)

அதுவுண் டாகவஞ் ஞானமுண் டாமத னாலே
பதிய தாகிய பிரமத்திற் படர்வினை விறக்கும்
இதுவுண் டாகவே பிரமமெய்ஞ் ஞானமின் றாகி
வதியஞ் ஞானியாய் முன்புபோல் பிறப்பிடை வருவான். (கரு)

அன்ன தாகையால் மனம்பொறி வழிவிடா தடக்க
என்னை யாளுடைக் கணேசனார் இருபதத் தென்றும்
தன்ன தார்வமெ லாந்தரிப் பித்தலே வேண்டும்
இன்ன தாம்வழி பாட்டினால் இருஞ்சுக மாமே. (கசு)

நதியெ லாங்கட லடைவது போலநாள் தோறும்
பதியின் மாட்டுறுங் காமங்கள் அனைத்தையும் பாய்த்து
மதிய தேதிர புத்தி யானென தெனுமயக்க
விதியி லாதமெய்ஞ் ஞானியே வீட்டினை யடைவான். (கஎ)

ஞான நிட்டையை உடையவர் ஞானமே வடிவம்
ஆன மெய்ப்பெரும் பிரமமே ஆவர்பின் பிறவார்
வான முட்டிய தவத்தினோய் வழங்கும்யோ கத்தை
ஈனம் விட்டுயர் பிரமமா யிரந்தனை கேண்மோ. (கஅ)

இனைய தாகிய பிரமத்தை இறந்துயிர் போங்கால்
நினையின் வேறுரு நிலையது வாகவே நிற்பார்
வினையின் மீட்டுறுர் விண்டுவை வேதனை யாதி
தனைவி ராவினோர் தாங்களும் மீள்குவர் சரதம். (கசு)

தெய்வம் யாதனைச் சேர்ந்தெவர் போற்றினு மந்தத்
தெய்வ மாயிருந் தவர்க்கருள் வரங்களைச் செறிக்கும்
தெய்வந் தேர்வரும் பிரம மாகிய விநாயகனே
தெய்வம் யாவையும் வழிபடுந் தேவனு மவனே. (உ0)

## வேறு

இயம்பிய கணேச கிதை
　　இழுதையார் கேட்டா ராயின்
பயந்தரு பாவ முற்றும்
　　பாற்றிவான் கதியைச் சார்வர்
நயந்தரு சன்மார்க் கத்தார்
　　நன்றுறக் கேட்டா ராயின்
சயம்புவா கியக ணேசர்
　　தாளிணை நீழல் சார்வார். (உக)

## வாழ்த்து

அருள்பொழி கணேசன் செய்ய
　　அடிமலர் வாழ்க வன்னோன்
பொருவிலிப் புராண மோங்கிப்
　　பொலிகவீ துணர்ந்தெல் லோரும்
மருவுக பயன்கள் நான்கும்
　　மன்னுக உலக மெல்லாம்
திருவொடுஞ் சிறக்க வெங்கும்
　　செயிரிலாச் சைவ மென்றும்.

ஆனைமுகக் கடவுள் அடிமலர் வாழ்க.

விநாயக புராண வசனம்
முற்றும்

